ஸ்ரீ:

பேரருளாளன பெருநதேவிததாயாா திருவடிகளே சரணம.

ஆழவாரெம்பெருமானுா ஜீயா திருவடிகளே சரணம.



விசதவாக் சிகாமணிகளான மணவாளமாமுனிகளருளிச்செய்த

ஸகல ஸ்ரீஸூக்திகளையுங்கொண்ட

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை

## (முதல் ஸம்புடம்)

— இதில் அடங்கியுள்ள திவ்யக்ரந்தங்கள —



ஸ்ரீகாஞசீ. பிரதிவாதிபயஙகரம்

## அண்ணங்கராசாரியர்

பதிப்பு.


பராபவஹூ ஐப்பசித் திருமூல நன்னாள

1966

விலை 25 ரூ.



ஆழவாரெமபெருமானா ஜீயா திருவடிகளே சரணம.

# நம்பெருமாள் திருமுன்பே மணவாளமாமுனிகள்
# ஈடுகாலக்ஷேப சாத்துமுறை கோஷ்டி

ஸ்ரீபூப்யாம் ரங்கநாதே சடஜிதுபநிஷதவ்யாக்ரியாம் சரோதுகாமே
சேஷஸ் ஸநதோஷயிஷயாந வரவரமுநிதாம பராபயயோ வாதததேகரே
காஷாய ஸ்ரீதுலஸயமபுஜமணி ஸூசிகா யஜஞஸூதர தரிதணடை
பாநதம சுபரோாதவபுணடரம ஸமர ஹருதய ஸதா கோசமுதராஙகஹஸதம

ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்.

# மாமுனிகளின் திவ்யஸௌக்திகாம்பீர்யாநுபவம்.

எம்பெருமானார் ஸ்ரீ வைகுண்டகத்யத்தைத் தலைக்கட்டுமிடத்து *அம்ருத ஸாகராந்தர் நிமகந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத* என்றருளிச் செய்தார். ஸகல அவயவங்களும் அமுதககடலினுள்ளே ஆழ்ந்திருக்கப்பெறவேணுமென்பது இதன் பொருள் இவ்விருள்தருமாஞாலத்திலே இப்படியிருககப்பெறுகை ஸம்பவிக்குமாவென்று அடியேன் பலகால் ஆலோசிப்பதுண்டு. ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலாப்ரதமஸம்புட முத்ரணத்தை எவ்வகையான இடையூறுமின்றிக்கே இன்று தலைக்கட்டினவடியேன் மெய்யே அம்ருதஸாகராந்தர் நிமக்நஸர்வாவயவனுயிருக்கின்றேன் என்றைக்கோ பரமனடி சேர்ந்திருக்கவேண்டிய அடியேனை மணவாளமாமுனிகள் உயிர்பெறுத்திவைத்தருளினது அடியேனுக்கே உரிய இக்கைங்கர்யத்தை நிறைவேற்றிக்கொள்ளுதற்காகவே யென்று திண்ணமாகவெண்ணினேன்.

இத்தொண்டு புரியவேணுமென்று நேற்றை விசுவாவஸு பங்குனி விசாகத்தன்று பாரித்தேன் எந்தக் காரியத்திலும் அடியேனுக்கு ஜ்ஞான சிகீர்ஷா ப்ரயத்னங்கள் தொடர்ந்தே நிகழ்வது வழக்கமாதலால் அன்றே முயன்றேன். என்ன காரணமோ! நேற்றை ஆனிமாதம் வரையில் முயற்சி பலிககாமலேயிருந்தது. காரியத்தின் கனத்தையும் உடல்நலககுறையையும் சிந்திக்கச் சிந்திக்க உத்ஸாஹம் குன்றியது. நமது ஸம்ப்ரதாயத்தில் ஆனிமாதத் திருமூலத்திற்கு ஒரு சிறப்புண்டாதலால் அன்று அசிந்திதமாகவே ஓர் உத்ஸாஹமுண்டாயிற்று. அன்று பேரருளாளனுடைய பௌர்ணமிப் புறப்பாட்டில் 'அவிதர்க்கிதஸம்பவம்' என்னும்படியாய் அடியேனுடைய சிந்தைக்கே நிலமானதொரு மஹாநுக்ரஹத்தைப்பெற்று அந்நாளையே நன்னாளாகக்கொண்டு அன்றே தொடங்கினேன். ஓராண்டளவு சிரமப்பட்டு முடிக்கவேண்டிய இப்பெரிய காரியத்தை ஏற்றக் குறைவின்றி நூறு நாட்களில் முடிக்கப்பெற்ற பாக்கியத்தை என்னென்பேன். நாலைந்து அச்சுக்கூடங்களில் தொடர்ந்து வேலைநடத்த நேர்ந்தது. அச்சுக்காகிதங்களைத் திருத்துவதென்கிற பணியை இரவும் பகலும் புரியநேர்ந்தது. உடல்நிலையோ மிகவும் கிலேசமான நிலையே. அநாயாஸமாக முடிந்தபின்பு அதையெல்லாம் எழுதிப் பயனென்? பூர்வாசார்ய க்ரந்தமாலைகள் பலவற்றைப் பன்னாள் முன்னே பிரசுரித்திருந்தேனெனினும் அதெல்லாம் ஒரு தட்டாயும், இஃதொன்று தனித்தட்டாயும் கருதத்தக்கதாயிற்று.

*அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து* என்று ஆழ்வார் தாம் அருளிச்செய்த கணக்கிலே அறியாக்காலத்திலேயே அடியேன் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்தியமுதக்கடலில் ஆழங்காற்படப்பெற்றவன். அஸ்மத்குலகூடஸ்தர் அருளிச்

*

செய்த ஸ்ரீ வரவரமுநி சதகஸ்துதியைத் திருத்தகப்பனார் இளமையில் கற்பித்தபோது *ஸூராஹாராஸாரீகரணசண யத்ஸூக்தி லஹரீகரீயஸ்தாம் ஸ்தோதும் ப்ரபவதி ந வாசஸ்பதிரபி *த்ராக்ஷாமதிக்ஷிபதி நிந்ததி மாகரந்ததாராம் ஸூதாரஸ ஜரீம் அதரீகரோதி* இத்யாதி ச்லோகங்களைச் சிந்தனை செய்யும்போது 'இங்ஙனே அற்புதமாகப் போற்றப்படுகின்ற ஸ்ரீஸூக்திகளை எப்போது அநுபவிக்கப்பெறுவோம்!' என்று நெஞ்சிலே தோன்றிக் கொண்டிருந்தது அந்த பாக்யம் ஒரு காலவிசேஷத்தில்தானே ப்ராப்தமாகும். ப்ராப்தமான நன்னாள் முதலாக இன்றளவாக *உள்ளுந்தோறும் தித்திக்கும்* என்றல்லால் வேறொன்றும் சொல்லலாவதில்லை மாமுனிகளின் திவ்யஸூக்தி மாதுர்ய காம்பீர்யாதிகளைப்பற்றி அடியேன் பலகால் பல வியாஸங்கள் எழுதியிருப்பவை உலகம் பரவியேயுள்ளனவாதலால் இப்போது அபூர்வமாக என்ன எழுதவேண்டியிருக்கிறது ஸாரமாகவொன்றெழுதுகின்றேன்.

மாமுனிகளருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதிக்குத் தனியனிட்டவாசிரியர் *அல்லும்பகலுமனுபவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான் நல்ல மணவாளமாமுனிவன்* என்றார் இப்படியொரு தனியன் எந்த நூலுக்கும் தோன்றியதில்லை. ஸ்ரீஸூக்திகளை அல்லும்பகலும் அனுபவிக்கப்பெறுவார் ஆரேனுமுளரோ? நாடோறும் அதிகமாக அநுபவித்தால் இரண்டு மூன்று, நாலைந்துமணி காலம் அநுபவிக்கப்பெறலாம். ப்ரக்ருதம் இந்த க்ரந்தமாலை அச்சிடத்தொடங்கின நாள் முதலாக இடையிற்சென்ற நூற்றெட்டு நாட்களிலும் அல்லும்பகலும் இந்த திவ்யஸூக்தி மாலையின் அநுபவமேயன்றி வேறொன்றும் நானறியேனென்றிருந்தவடியேன் பேரின்ப வெள்ளம் பெருக நின்று விஜ்ஞாபிப்பது கேளீர்;

பகவத் பாஷ்யகாரர் மூலத்திற்கு வியாக்கியானமாக அருளிச்செய்த ஸ்ரீ பாஷ்ய தீபஸாரங்கள் இருந்தாலும் பகவத்கீதைக்கு வியாக்கியானமாகவருளிச்செய்த பாஷ்யம் அவருடைய வியாக்கியானத் திறமையை நன்கு விளக்கவல்லது. அபேக்ஷிதார்த்தங்களை அணுவளவும் விடாமலும், அநபேக்ஷிதார்த்தத்தை அல்பமும் புகவிடாமலும் அற்புதமாகவருளிச்செய்த திவ்யக்ரந்தம் கீதாபாஷ்யம் என்று பரீக்ஷகபரிப்ருடர்கள் சொல்லிப்போருவர்கள். மணிப்ரவாள ஸரணியில் வியாக்கியானங்கள் *பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை (வாதிகேஸரி) மணவாளயோகி முதலானோர் அருளிச்செய்தவையிருந்தாலும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் பண்ணத் தோன்றிய ரஹஸ்ய க்ரந்தங்களுக்கு வியாக்கியானங்கள் மணவாளமாமுனிகள் இட்டருளின ஸரணியை வேறு எந்த ஆசாரியரும் அணுமாத்ரமும் அநுகரிக்கவும் இயலாது திடீரென்று எந்த இடத்தையெடுத்து ஸேவித்தாலும் அந்த பங்க்தி ரசனைகள் *தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்தே* என்னும்படியாக இருக்குமேயல்லது, ஸாதாரணமென்னும்படியான ஸ்தலம் ஒன்றுகூட இராது ஸூத்ரம்போன்ற சூர்ணைகளுக்கு அவதாரிகையிட்டருளுமழகே அதிவிலக்ஷணமானது. மந்தமதிகளுக்கு மூலத்தில் தோற்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதும், மஹாமேதாவிகளுக்கும் தோன்றமாட்டாத ஆசங்கைகளை உத்க்ஷேபித்து அலைலையாக அகற்றுவதும், ஸகலஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலிருந்தும், ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகாதிகளிலிருந்தும், ஸாங்க்ய பௌத்தயாதவப்ரகாசாதிகளின் க்ரந்தங்களி

லிருந்தும், அஹிர் புத்ந்யஸம்ஹிதை, விஷ்வக்ஸேநஸம்ஹிதை, விஹகேந்த்ரஸம்ஹிதை, லக்ஷ்மீதந்த்ரம், . . ., என்னும் பல ஸம்ஹிதைகளிலிருந்தும் ப்ரமாணவசனங்களை அபரிமித மாக அடுக்குவதும் அஸிதரஸாதாரணங்களேயாகும்.

அநேகவித ஸௌகரியங்களுண்டான இக்காலத்திலும் அருமைப்பட்டிருக்கும் பல க்ரந்தங்கள் மாமுனிகளுக்கு எப்படித்தான் கிடைத்தனவோ! என்று ஊஹிக்கவும் முடிய வில்லை நான்கு ரஹஸ்யங்களினுடையவும் வியாக்கியானங்களில் ஸ்வாமி உதாஹரித்தருளி யிருக்கும் ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களுக்குத் தனித்தனியே அகராதியட்டவணை இதில் காட்டியிருக்கிறேன்: முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில் உதாஹரித்தருளின ப்ரமாண வசனங்கள் 189, தத்வத்ரயவியாக்கியானத்தில் உதாஹரித்தருளினப்ரமாணவசனங்கள் 542; ஸ்ரீவசநபூஷணவியாக்கியானத்தில் உதாஹரித்தருளினப்ரமாணவசனங்கள் 492; ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தில் உதாஹரித்தருளின ப்ரமாணவசனங்கள்555 ஆக ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்கள் மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களில் (1778) மேற்கோளாக எடுத் தாளப்பட்டுள்ளன இவற்றுக்கு இப்போது அகராதியட்டவணைமட்டும் ஸித்தப்படுத்தி யிருக்கிறேனிதில் இதில் இன்னும் மூன்று காரியங்கள் சேஷித்துள்ளன, 1. அந்த ப்ரமாணவசனங்களைப் பூர்த்தியாக எழுதுதல். 2. அவற்றுக்குப் பொருள் விளக்குதல். 3 அவற்றுக்கு ஆகரம் காட்டுதல். ஆக இம்மூன்றும் ஸ்ரீ வைஷ்ணவவுலகுககு மஹோபகாரகங்களாகும். மாமுனிகளின் திருவருளினாலேயே இவை நிறைவேறவேண்டும், நிறைவேறும்.

மாமுனிகளின் திவ்ய ஸூக்தி ஸுதாநிதியில் அடியேன் கண்டவொரு விலக்ஷண மான ப்ரக்ரியையை விஜ்ஞாபிக்கக கேளீர். மாமுனிகள் ஆங்காங்கு தாம் அருளிச் செய்கிற அர்த்த விசேஷங்கள் வேறுசில ஆசாரியர்களின் க்ரந்தங்களிலுமிருந்தால் அந்த ஸ்தலங்களை யெடுத்துக் காட்டியருளாமல் விடமாட்டார். இந்த ப்ரக்ரியை இதர ஆசாரியர்களிடத்தில் காணவரிது அவர்கள் பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டிடுவது ஸ்வல்பமாகவே யிருககும். இருந்தாலும் அர்த்தங்கள் இதர ஆசாரியர்களுடையனவாயிருக்கும். ஆனால் அது விப்ரலம்பமன்று; அதுவொரு நடை என்று கொள்ளவேண்டியதாகும். "கேசித் ஏவமாஹு:; அபரே ஏவமாஹு" என்று, பெயரைக் காட்டாமலும் ஆகரம் காட்டாமலும் (சிலர் சிலர் என்றே) எழுதிக்கொண்டு போவாருமுளர். மணவாளமாமுனிகளின் வியாக்கியான ப்ரக்ரியை இத்தகைத்தன்று தாம் அருளிச்செய்யும் விஷயங்களுக்கு வேறு ஆசாரியர் களின் ஸம்வாதமிருக்குமிடங்களில் "இன்ன ஆசார்யர் இன்னவிடத்திலே இன்னபடி யருளிச்செய்துள்ளார்" என்று அந்தந்த ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டியே தீருவர். இது மாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களுககுத் தனிச்சிறப்பு. 'இதுகாரணமாகவே *பொய்யிலாத மணவாளமாமுனி புந்திவாழி* என்கிற வாழ்த்து அமைந்தது. மாமுனி களின் வியாக்கியானங்களில் எங்கெந்த ஆசாரியர்களின் ப்ரஸ்தாவமுள்ளது என்பதை யாவரும் சிரமப்படாமல் தெரிந்துகொள்வதற்கு இதன் கீழே ஒரு பட்டிகை தருகிறேன்.

| | | |
|---|---|---|
| 1. ஆளவந்தார். | 11 பட்டர். | 22. வடக்குத் திருவீதிப் பிள்ளை |
| 2. பெரியநம்பி. | 12 ஸ்ரீ ஸேநாபதி ஜீயர். | 23. பெரியவாச்சான்பிள்ளை |
| 3. திருக்கோட்டியூர்நம்பி | 13 கிடாம்பிப்பெருமாள் | 24. ஆச்சான்பிள்ளை. |
| 4. எம்பெருமானார் | 14 முதலியாண்டான். | 25. நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர். |
| 5. எம்பார். | 15 பிள்ளை திருநறையூ ரரையர் | 26 அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். |
| 6 வங்கிப்புரத்து நம்பி. | 16. வடுகநம்பி | 27 வேதாந்தவாசிரியர் |
| 7. கூரத்தாழ்வான். | 17 எங்களாழ்வான். | 28 வில்லிபுத்தூர்ப்பகவர். |
| 8. திருவரங்கத்தமுதனார். | 18 நஞ்சீயர் | 29 வேதாசார்யபட்டர் |
| 9. உயயக்கொண்டார் (பிற்பட்டவர்) | 19 நம்பிள்ளை. | 30 வாதிகேஸரி ஜீயர் |
| 10 திருக்கண்ணமங்கை யாண்டான். | 20 நடாதூரம்மாள். | |
| | 21. ச்ருதப்ரகாசிகாபட்டர். | |

இவ்வாசிரியர்கள் முப்பதின்மரில், பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, வங்கிப் புரத்துநம்பி, எம்பார், (உடையவர்காலத்து) உய்யக்கொண்டார், திருக்கண்ணமங்கை யாண்டான், ஸ்ரீ ஸேநாபதி ஜீயர், கிடாம்பிப்பெருமாள், முதலியாண்டான், பிள்ளை திருநறையூரரையர், வடுகநம்பி வேதாசார்யபட்டர், வில்லிபுத்தூர்ப்பகவர் என்னும் பதின்மூவருடைய ப்ரஸ்தாவம் பெரும்பாலும் மூலத்திலிருந்துகொண்டும், சிறுபான்மை ப்ராஸங்கிகமாக வருவதுகொண்டும் அமைக்கப்பட்டது. இவ்வாசிரியர்கள்தாம் க்ரந்தங்களையருளிச்செய்திருந்து அவற்றிலிருந்து உதாஹரித்தருளின ஸ்ரீ ஸூக்தி ஏதுமில்லை. இவற்றைச் சிறிது விளககிக்காட்டுகிறேன்

1 **பெரியநம்பியின** ப்ரஸ்தாவம் ஸ்ரீ வசனபூஷணத்தில் (சூர்ணிகை) உய்யக்கொண்டாருடைய ஸ்ரீஸூக்தி மட்டும் ஓரிடத்திலுண்டு 234லும், ஆசார்ய ஹ்ருதயத்தில் 85லும் பட்டுமேயுள்ளது. மூலத்திலுள்ளது வியாக்கியானத்தில் விவரிக்கப்பட்டதத்தை இரண்டிடத்திலும் விஷயமொன்றே 2 **திருக்கோட்டியூர் நம்பியின** ப்ரஸ்தாவம்— முமுக்ஷூப்படி சரமச்லோகப்ரகரணத்தின் வியாக்கியானவதாரிகையிலே "இதிலர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளிற்று ...... இத்யாதி ஸ்ரீவசநபூஷணத்தில் (73.) *அஹமர்த்தத்துககு* இத்யாதி சூர்ணையின் வியாக்கியானத்திலே "திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீ பாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்துநின்று மஹாநிதியாகப்பெற்ற அர்த்தமிறே இது." என்றது 3. **எம்பாருடைய** ப்ரஸ்தாவம்—முமுக்ஷூப்படி முடிவில் "ஆஸ்திகனாய் இவ் வர்த்தத்தில் ருசிவிச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல் நாஸ்திகனாய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லையென்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை." என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியின் விவரணம் காண்க. இஃது ஓரிடமே எம்பாரைப் பற்றியது. 4. **வங்கிப் புரத்து நம்பியின்** ப்ரஸ்தாவமும் முமுக்ஷூப்படி முடிவில் *இதுதான் அநுவாத கோடியிலே யென்று வங்கிபுரத்துநம்பி வார்த்தை* என்ற மூலமும் வியாக்கியானமுமான ஓரிடமே. 5 (**உடையவர்காலத்து**) உய்யக்கொண்டாருடைய ப்ரஸ்தாவம் முமுக்ஷூப்படி முடிவில் *உய்யக்கொண்டாருககு உடையவரருளிச் செய்ததாக ஓரிடமும்; ஸ்ரீவசந பூஷணத்தில் (சூ 3) "இதிஹாஸபுராணயோ இதிஹாஸா பலீயாம்ஸ." என்று தொடங்கி தத்வ நிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும் ப்ரதிபாதிககப்பட்டது." என்று மற்றோரிடமும். (இந்த க்ரந்தம் இப்போது கிடைப்பதில்லை.)

6. திருக்கண்ணமங்கையாண்டான ப்ரஸதாவம், ஸ்ரீவசநபூஷணத்தில் (சூ 82) "திருக்கண்ணமங்கையாண்டான ஸவவ்யாபரத்தை விட்டான" என்றவிடத்து வியாக்கியானம ஓரிடமே 7 ஸ்ரீ ஸேநாபதி ஜீயா ப்ரஸதாவம், (முமுக்ஷுப்படி-41) *அத்ரபகவத் ஸேநாபதி *மிசரர்வாகயம்* எனறவிடத்து வியாககியானமோரிடமே 8 கிடாமபிபபெருமாள ப்ரஸதாவம், (ஸ்ரீவசனபூஷணம-385 ல) "பாஷயகாரர் காலத்திலே ஒருநாள பெருமாள் புறபபட்டருளுநதனையும பார்த்துப் பெரிய திருமண்டபத்துககுக கீழாக முதலிகளெல்லாரும திரளவிருந்தவளவிலே இவ்வர்த்தம ப்ரஸதுதமாகப் பினபு பிறந்த வார்த்தையை ஸமரிபபது" எனறவிடத்து வியாககியானத்தில் "கிடாமபிபபெருமாள இருநதவா" எனற ஓரிடமே 9 பிளளைதிருநறையூரரையா ப்ரஸ்தாவம், மேலே கிடாம்பிப்பெருமாள ப்ரஸதாவம் காட்டின விடமொன்றும், (ஸ்ரீவசநபூஷணத்திலேயே 84) பிளளை திருநறையூரரையர் உடம்பையுபேக்ஷித்த கதையின் விவரண ஸதலமொன்றுமாக இரணடிடம்

10, 11. முதலியாணடான, வடுகநமபிகளின ப்ரஸ்தாவம், (ஸ்ரீவசநபூ 411) *வடுக நம்பி ஆழ்வாரையும் ஆண்டானையும் இருகரையரென்பர்* எனறவிடத்தொன்றே 12 வேதாசாாய படடா ப்ரஸதாவம், (ஆசார்ய ஹ்ருதயம் 53) *புரவியேழொரு காலுடைய தேரிலே* இத்யாதி சூர்ணையின முடிவில 'வேதகுருபதேசம்" எனறவிடத்து வியாககியானம ஓரிடமே மூலததில் வேத தருவென்றதறகு வேதாசார்ய பட்டரெனறு விவரணமுளளது. வேதவ்யாஸபட்டரெனகிற சீராமப்பிளளையின் திருக்குமாரரிவர்.

13 விலலிபுததூாபபகவா ப்ரஸதாவம், (ஆசார்யஹ்ருதயம் 32) *ஸாதநஸாத்யங்களில முதலும முடிவும் வர்ணதாமிகள் தாஸவருத்திகளெனறு துறைவேறிடுவித்தது* எனறவிடத்து வியாககியானம ஞானஸாரத்தில் (13) பாட்டின ப்ரமாணயோஜனையும் காணக ஆக இப்பதினமூவர் தவிர சேஷிததுள்ள ஆசிரியர்கள பதினெழுவர். ஆளவநதார் முதலாக வாதிகேஸரி ஜீயரளவான இபபதினெழுவர் ஸ்ரீஸூக்திகள் உதாஹரிககபபட்டுளள விடங்களுககு விவரணம காட்டுகிறேன் காணமின

**ஆளவநதாா** = இவருடைய ஸ்ரீஸூக்திகள தததவத்ரயே 4 ஸ்ரீவசநபூஷணே 4 ஆசார்யஹ்ருதயே 2 ஆக பதது ஸதலங்களில அநதந்த சூர்ணிகைகளின லககம் வருமாறு.—(தத்வ) 3, 45, 70, 92 (இவற்றுள் 70-ல் ஸித்தித்ரயகாரிகை மற்றவறறில ஸ்தோதரரதந ஸூக்திகள (ஸ்ரீவசநபூஷணே) 182 259 323 380 (ஆசார்ய ஹ்ருதயே) 66, 87, 151

**எமபெருமானாா** = முமுக்ஷு 97 183 243 274 (தத்வத்ரயே) 3 10 15 18 34 35 37 40 41 45. 79 85 92 117 129 130 132 141 195. (ஸ்ரீவசநபூஷணே) 96 146 160 180 234 274 (ஆசார்யஹ்ருதயே) 36 65 66. 85 91 99. 153 155. 162 204 224 228 233

**கூரததாழவான** (தத்வதரயே) 45 79 148 185 194 195 (ஸ்ரீவசநபூஷணே) 73 203.

**திருவரஙகததமுதனாா** ஸ்ரீவசநபூஷணே. 426.

*

பட்டா (முமுக்ஷுப்படி) 2 46 (தத்வதரயே) 28 45 148 150 160 179 202 (ஸ்ரீவசநபூஷணே) 3 5 8 38 306 (ஆசார்) 1

**எங்களாழவான்** (தத்வத்ரயே) 103, 106, 109 ஸ்ரீ விஷ்ணுபுராண வ்யாககயாநாத்.

**நஞ்சீயர்** (தத்வத்ரயே) 142 கத்யவ்யாககயாநோதாஹரணம் (ஸ்ரீவசந) 69 192.

**நமபிள்ளை** (ஸ்ரீவசநபூ) 31 347 (ஆசார்.) 85

**நடாதூரமமாள்** = (ததவத்ரயே) 35 (ஸ்ரீவசந) 381

**சருதபரகாசிகாபட்டா** (தத்வத்ரய) 49. 89 103, 109 116 148 ச்ருதப்ரகாசிகையிலிருநதும், ஸுபாலோபநிஷத் வயாககியானததிலிருநதும, சுகபக்ஷீயத்திலிருந்தும்.

**வடககுததிருவீதிபபிள்ளை,** (ஸ்ரீவசனபூ) 443 (ஆசார்) 228

**பெரியவாசசானபிள்ளை** = (தத்வத்ரயே) 103 பெரியவாச்சானபிள்ளையென்று ஸ்பஷ்டநிர்தேசமுள்ளது இவவிடமொனறே பூருவர்களருளிசசெயததென்று சிலவிடங்களிலுண்டு

**ஆசசானபிள்ளை** = (முமுக்ஷு) 12 97 99 (த்வய = அவதாரிகை) (தத்வத்ரயே) அவதாரிகை 3 35 103. 124 142 149 181 (ஸ்ரீவசன) 11 49 332 (ஆசார்) 99

**நடுவில திருவீதிபபிள்ளைபட்டா** = (ததவதரயே) அவதாரிகை 120 151 160 (ஸ்ரீவசநபூ) 5 (ஆசார்) 85

**அழகிய மணவாளபபெருமாள நாயனா** = (முமுக்ஷு) 129 (தத்வத்ரயே) 46 (ஸ்ரீவசந) 159 (ஆசார்) 103, 113, 127—இநத மூன்றிடங்களிலும் பட்டோலையிலிருநது உதாஹரணம்.

**வேதாநதவாசிரியா** = (முமுக்ஷு) 6 ந்யாஸவிம்சதி ச்லோகம் (தத்வத்ரயே) 39, 82. ரஹஸ்யதரய ஸாராத 80 ததவமுகதாகலாபாத்

**வாதிகேஸரி ஜீயா** = (முமுக்ஷு) 75 த்வயபரகரணவதாரிகை (தத்வதரயே) 35 103 (ஸ்ரீவசன) 6 381

ஆக, ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான, அமுதனார், பட்டர், எங்களாழ்வான, நஞ்சீயா, நமபிள்ளை, நடாதூரமமாள, சருதப்ரகாசிகாபட்டா, வடககுத திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, ஆசசானபிள்ளை, நடுவில பிள்ளை, அழகிய மணவாளப்பெருமாள வேதாந்தவாசிரியர், வாதிகேஸரி ஜீயா—என்னுமிவ்வாசார்யாகளின ஸ்ரீஸூகதிகள (123) நூறறிருபததமூனறு ஸதலஙகளில கையாளபபட்டுள்ளன ஒனபது இடங்களில் ஸ்ரீஸூகதயுதாஹரணமினறிககே திருநாம பரஸதாவமாத்ரம் மூன்றிடங்களிலே திருநாமமும் எடாமல, ஆகரமும காட்டாமல ஸ்ரீஸூகதிமாதரோதாஹரணம

## மாமுனிகளின் திவ்யஸூக்திகாம்பீர்யாநுபவம்

ஸ்ரீவசனபூஷணம் 457ல "நல்ல புதல்வர் இதயாதியாலே அருளாளப்பெருமாளெம்பெருமானுரு மருளிச்செய்தார்" அதிலேயே (449ல) "அம்புததனைப் பார்த்திருப்பானற்று-என்றும் சொல்லக்கடவதிறே" என்று ஞானஸாரப் பாசுரத்தை யுதாஹரித்தவளவே ஆசிரியர் திருநாமமுமில்லை, நூலின் திருநாமமுமில்லை.

நான்கு ரஹஸ்ய வியாக்யானங்களிலும் ஸம்ஸ்க்ருத ப்ரமாண வசனங்கள் 1778 என்று ஏற்றத்தாழ்வின்றி யெடுத்துக் காட்டியது போல திவ்யப்ரபந்த மேற்கோள்களைப் பற்றியும் கணக்கு காண்மின்,

| | | | |
|---|---|---|---|
| 1. முமுக்ஷுப்படி வியாக்கியானத்தில . | 108 | 3 ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில | 276 |
| 2 தத்வத்ரய வியாக்கியானத்தில | 42 | 4 ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில | 1903 |

ஆக (2329) இரண்டாயிரத்து முந்நூற்றிருபத்தொன்பது அருளிச்செயற் சந்தைகள் நான்கு ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் கையாளப்பட்டிருக்கின்றனவென்று தேறிற்று இவற்றை உதாஹரிக்குமிடங்களில் (என்கிறபடியே) என்றெழுதிச் செல்லாமல், உதாஹரித்தவளவுக்குப் பொருளும் அருளிச்செய்து போருகிறார். இல்லையேல் எடுத்த சந்தைகள் பயன்படாதனவாகுமன்றே காலக்ஷேபரார்கள் வியாக்கியானங்களைத் தேடியெடுத்துப் பார்த்தன்றோ பொருளுணர வேண்டியதாகும் அந்த ப்ரயாஸத்திற்கு இடமில்லாதபடி தாமே சோம்பாமல் பொருள் விளக்கமும் செய்தருளவது மாமுனிகளுக்கு அஸாதாரணமான இயல்வு வ்யக்தமாகப் பொருள் தெரியக்கூடிய இடங்களில் (என்கிறபடியே) என்று விட்டிட்டாலும், நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு பொருள் விளக்கியே யருளுகிறார் ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் இதை மிகையாகக் காணலாம் இதில் குறிக்கொள்ளவேண்டிய பெரிய விசேஷமொன்று (அதாவது) தாம் எழுதியருளும் பொருளெல்லாம் பூர்வாசார்ய வியாக்கியான பங்க்தியாகவேயிருக்கு மத்தனையல்லது தாமாக எழுதுவதாயிராது நன்னூலில் *முன்னோர்மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல போற்றுவம்* என்றதற்கு இணங்கும்படி உபதேசரத்தினமாலையில் *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே * என்றருளிச் செய்தவர் மாமுனிகளொருவரேயன்றோ இது விசேஷமன்று, இதனில் விஞ்சிய விசேஷம் கேளீர்

மூலகாரர்களான பிள்ளைலோகாசார்யரும் திருத்தகப்பியாரும் தாங்கள் (மூலத்தில்) உதாஹரித்தருளுகிற பாசுரங்களுக்குப் பூர்வாசார்ய வியாக்கியானங்களில் காணாத பொருளையும் பாடத்தையும் திருவுள்ளம்பற்றியிருப்பதுண்டு, அவ்விடங்களில் "இங்கு பூர்வாசார்ய வியாக்கியானம் இங்ஙனன்றிக்கே யிருந்தாலும் ப்ரமாபதரான இவர் இப்படியருளிச் செய்கையாலே " என்று ஸாதிப்பதுண்டு. இப்படி ஒன்பது இடங்களில் காண்கிறோம் இரண்டிடங்களை மட்டும் காட்டுவோமிங்கு தத்வத்ரயத்தில் (180)ல எம்பெருமான் ஸம்ஹாரஹேதுக் கொண்டு ஸ்ருஷ்டிக்கு மென்றருளிச் செய்ய விரும்பி அதற்கு *முந்நீர் ஞாலம்படைத்த எம்முகில்வண்ணனே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை ப்ரமாணமாகக் காட்டினார் பிள்ளை லோகாசாரியார். அங்கு மாமுனிகள் தமது வியாக்கியானத்தில் ' *முகில்வண்ணனென்கிறவிது ஔதார்யகுண பரமாக வ்யாக்யாதாக்கள் பலரும் வ்யாக்யானம் பண்ணினார்களே யாகிலும், விக்ரஹ பரமாக இவர் அருளிச்செய்கையாலே இங்ஙனுமொரு யோஜனை யுண்டென்று கொள்ளவேணும், ஒன்றுக்குப் பல யோஜனையுமுண்டாயிறே யிருப்பது" என்றருளிச் செய்தார் மற்றோரிடம்,—ஸ்ரீவசனபூஷணத்தில் 399 "எதிர் சூழல்புக்கு" இதுவும் திருவாய்மொழிப் பாசுரம். இதை வ்யாப்திபரமாகக் கொண்டு உதாஹரித்தருளினார் பிள்ளைலோகாசார்யர் இங்கு வியாக்கியானத்தில் மாமுனிகள்—"எதிர்சூழல்புக்கென்கிறது அவதாரபரமாக மற்றுமுள்ளாராலே வ்யாக்யாதமாயிற்றாகிலும் இப்போதிவர் இவ்விடத்தில் வ்யாப்திபரமாக வருளிச்செய்கிறார் அநேக யோஜனைகளுமுண்டாயிறே யிருப்பது" என்றருளிச் செய்துள்ளார்

ஆசார்ய ஹ்ருதயத்திலும் ஒன்று காட்டுவோம்; அதில் (50) "பண்ணார்பாடல் பண்புரையிசைகொள் வேதம்போலே" என்ற இடத்து வியாக்கியானத்தில்

> "வியாக்கியானங்களில் 'பண்புடைவேதம்' என்றொழிய 'பண்புரை வேதம்' என்ற பாடமும், 'இசைகொள் வேதம்' என்கிறதுக்கு ஸாம வேத பரத்வமும் கண்டதில்லையேயாகிலும் ஆப்ததமரானவிவர் இப் ப்ரபந்தத்திலே இப்படி யருளிச் செய்கையாலே இப்படியும் கொள்ள வேணும்" என்றுள்ளது.

இவற்றால் ஆர்த்திப் பிரபந்தத்தில் "முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்" என்று மாமுனிகள் தாமே யருளிச்செய்தது ஸத்யாபிதமாகிறது.

இவை யெல்லாவற்றிற்கும் மேற்பட்ட தொன்று கேளீர்,—ஸகல சாஸ்த்ரங்களிலும் ஆழ்ந்த வ்யுத்பத்தி பெற்றிருப்பவர் மாமுனிகளொருவரே யென்று துணிந்து சொல்லலாம். சாஸ்த்ரங்களை எவ்வளவும் வாசித்து விடலாம். சதுஸ்ஸமுத்ரபாராவார பாரீண: என்று விருதும் வஹிக்கலாம் *அப்திர் லங்கித ஏவ* என்கிற ரீதியிலன்றிக்கே *ஆழியுள் புக்கு முகந்து* என்னும்படியாக, விஷயங்களின் சிறுமை பெருமை பாராதே ஒவ்வொன்றையும் ஆழ்ந்து நோக்குகை மாமுனிகளின் வியாக்கியானங்களிலன்றி வேறெங்கும் காணமுடியாது. இதற்கு நூறிடங்கள் காட்டலாமாயினும் ஓரிடமே காட்டுகிறேனிங்கு. ஸ்ரீ பாஷ்யத்தில் (ஸூ 17) *லோகவத்து லீலாகைவல்யம்* என்ற ஸூத்ர பாஷ்யத்தில் "ஜகத் ஸர்க்கே லீலைவ கேவலா ப்ரயோஜநம்" என்றும் "பரஸ்ய ப்ரஹ்மணோ லீலைவ ப்ரயோஜநம்" என்றும் ஸ்ரீஸூக்தி விந்யாஸமுள்ளது. இதையநுஸரித்துப் பிள்ளை லோகாசார்யரும் தத்வத்ரயத்தில் (162) "ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவல லீலை" என்றருளிச்செய்தார். இதில் எந்த வித்வானுக்கும் எவ்விதமான விசிகித்ஸையும் எளிதாகத் தோன்ற மாட்டாது. ஆனால், இங்கு மாமுனிகளின் ப்ரஜ்ஞாவிசேஷம் ஆராய்ச்சி செய்யப் புகுந்தவிதம் நிரூபண நிபுணர்களால் உற்று நோக்கத்தக்கது. ஸ்ருஷ்டி தான் லீலா ரூபமேயொழிய ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் லீலையென்று சொல்லுவது ஸமந்விதமாகாதென்று நிரூபித்தருளி ஸமந்வயம் செய்தருளியிருப்பதை "ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராம்" என்னப் பிறந்தவர்கள் பரிசீலிக்க வேணும். இங்ஙனே தொட்ட தொட்ட விடங்களெங்கும் துருஹசாஸ்த்ரார்த்த சர்ச்சைகளே மலிந்திருக்கும் ஸ்ரீமத்வரவரமுநீந்த்ர திவ்யஸூக்தி ஸந்நிதியில் *கோ மஜ்ஜதோ ரணுதுலாசலயோர் விசேஷ:* என்ற கணக்கிலே அறிவிலியான அடியேன் போல்வாரும் மஹாப்ராஜ்ஞர்களென்றிருப்பாரும் ஸமசீலர்களே யென்னத் தட்டில்லை.

ஏறக்குறைய அறுபது சூர்ணைகளின் வியாக்கியானத்தில் (அன்றிக்கே) என்றும் (அதவா) என்றும் தொடங்கி யோஜநா பேதங்கள் காட்டியருளுகிறார். அவ்விடங்களில் முந்தின யோஜனைக்கும் பிந்தின யோஜனைக்கும் வாசியறிவதும் காரணமறிவதும் குருமுகமாகக் கேட்டவர்களுக்கன்றி மற்றையோர்க்கு இயலாது.

கிம்பஹுநா? த்ராவிட பாஷையிலமைந்த க்ரந்தங்களென்று நாமமாத்ரமேயாய் ஸகல சாஸ்த்ரார்த்த ஸாரநிதியாய் விளங்குமிந்த திவ்ய ஸ்ரீஸூக்தி மாலையை அர்ச்சாமூர்த்திகள் போலே கோயிலாழ்வாரில் வைத்து ஆராதிக்க வேணுமென்றே ஆஸ்திக பக்தர்கள் ஆவல்கொள்ள வேணுமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

இங்ஙனம்

ஸ்ரீவைஷ்ணவதாஸன்

பராபவஹு ஐப்பசி விசாகம் } ப்ர. அண்ணங்கராசார்யதாஸன்.

# முமுக்ஷுப்படி சூர்ணைகளின் அட்டவணை

[லக்கம்—சூர்ணைகளின் வரிசை லக்கம்]



ஜீ—5

முமுக்ஷுப்படி சூர்ணைகளின அட்டவணை முறறிற்று.

ஸ்ரீ

## இந்த க்ரந்தமாலையை ஸேவிபபவர்களுக்கு ஸௌகரியமாக இதில அடியேன் செயதிருககுமவற்றுக்கு

# அறிக்கையும் மற்றும் சில அறிவிப்புகளும்.

1 மாமுனிகள் தமமுடைய வியாக்கியானங்களில எந்தெநத ஆசாரியர்களின் ப்ரஸ தாவம் செய்தருளி யிருக்கிருரெனபதையும், எந்தெந்த ஆசார்யாகளின் ஸ்ரீ ஸூக்திகளை உதாஹரித்தருளியிருக்கிருரென்பதையும், அப்படி உதாஹரிததருளின ஸ்ரீ ஸூக்திகள் எந் தெந்த இடங்களில் விளஙகுகினறனவெனபதையும, உதாஹரிததவறறில ஸமஸக்ருத மேற் கோள்கள் இத்தனை, திவயப்ரபந்த மேற்கோள்கள இத்தனையெனபதையும் ஸவாமியின் வியாக் கியான நடையின முக்கியமான சில விசேஷங்களையும் "மாமுனிகளின திவ்ய ஸூக்திகாம்பீர் யாநுபவம்" எனற தலைப்புளள (எட்டுபக்கங் கொண்ட) முனனணியில விவரிததிருக்கிறேன

2 முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசந பூஷணம், ஆசார்யஹ்ருதயம் – ஆகிய நான்கு ரஹஸய வியாக்கியானங்களிலும உதாஹரிக்கபபட்டுள்ள ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களுக்கு அகராதியட்டவணைகளை அந்தந்த ரஹஸயங்களுக்குச சேர [சிலவறறுககு முன்னேயும சில வறறுக்குப பினனேயும்] இட்டிருக்கிறேன. லககஙகளெல்லாம் மூல சூர்ணிகையினுடையவை.

ஜீ—6

3. நானகு ரஹஸ்யங்களினுடையவும் மூல சூர்ணிகைகளுக்கு அகராதியட்டவணையும் (லக்கக் குறிப்புடன) இட்டிருக்கிறேன்

4 இந்த திவ்ய க்ரந்தங்கள் ஏக காலத்தில் நாலைந்து அச்சுக்கூடங்களில் துரிதமாக அச்சிடுவிக்க நேர்ந்தபடியால் பக்க லக்கம் பூர்த்தி வரையில் ஏகரீதியாக அமைக்க இயலவில்லை, எனினும் அதனால் ஒரு குறையுமிலலை

5. அபரிஹார்யமான ஒரு குறையே யுள்ளது (அதாவது) இந்த வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகள த்ராவிட பாஷையில் அவதரித்தவை யென்று நாம மாத்ரமேயொழிய முக்கால் பாகம் ஸம்ஸ்க்ருதமாகவும், கால் பாகமே த்ராவிடமாகவுமுள்ளது ஸம்ஸ்க்ருத பாகங்களை க்ரந்த லிபியில் அச்சிட்டிருந்தால் பங்க்திகளை அஸ்கலிதமாகவும் அநவத்யமாகவும் ஸேவிப் பதறகு மிக மிக வாய்ப்பாக இருக்கும் தெனமொழியும் வடமொழியும் கலந்து பரிமாறும் இந நடையை மணிப்ரவாள நடையெனறு அநாதிகாலமாக வழங்கி வருகிறோம் இந்த நடையில அமையும் ஸ்ரீ ஸூக்திகளில் சேரும் ஸம்ஸ்க்ருத ச்லோகஙகளையோ ஸம்ஸ்க்ருத வசனங களையோ க்ரந்த லிபியில் அமைப்பதுதான் ப்ராசீன தாள கோசங்களிற காணும் முறை. க்ரந்த லிபியைத தமிழ்மொழிக்குச் சேர ஆளவந்தார்தாம் அமைத்தருளினர் எனறு பெரியார் பகரக கேட்டிருக்கை அந்த லிபியோடு சேர்த்தே முறகாலத்தில் பல மணிபரவாள நூல்கள் அச்சேற்றப்பட்டுமுள்ளன இக்காலததில் அந்த லிபியைப் பயிலாதவர்களே பெரும்பான்மையர் ஸம்ஸ்க்ருத பாகங்களுக்கு தேவநாகர லிபியையோ ஆந்திர லிபியையோ சேர்ப்பது விஷமமும் விரஸமுமாகும். இதைத் தீர ஆலோசிதது முழுதும் தமிழ் லிபியாகவே அமைக்க நேர்ந்தவிது அடியேனுக்கு மிகவும் மனக குறையே. இது அபரிஹார்யமெனறு கொண்ட தத்தனை *

### உபகாரகர்கள் திறத்தில் க்ருதஜ்ஞதாவிஷ்கரணம்.

இந்த க்ரந்தமாலையைப் பிரசுரம் செய்யவேணுமெனறு அடியேன் சென்ற விச்வாவஸு பங்குனி விசாகத்தன்று ஆசை கொண்டதாக முகப்பில் விஜ்ஞாபனம் செயதிருககிறேன அப்போது திருக்குறுங்குடி திருஜீயர்மடம் ஆஸதானத்தை அலங்கரிததிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ, பட்டா பிரான ஜீயா ஸவாமி ஸன்னிதிக்கு விஜ்ஞாபனம் விடுக்க, ஸ்ரீஸ்வாமி பரமக்ருபையுடன உதஸா ஹாபிவாததகமான ஸ்ரீமுகத்தை யருள்செயதார் ஸ்ரீ வைஷ்ணவவுலகின தௌர்ப்பாக்யவசத தினால் அந்த ஸவாமி அகாலத்தில் திருநாடலங்கரிக்க நேர்ந்துவிட்டது ஆயினும் வர்த்தமான (48-வது பட்டாபிஷிக்தரான) ஸ்ரீமத் பரமஹம்ஸ கலியன்ஸ்வாமி கனிந்த திருவுள்ளங்கொண் டிருப்பது பரமபாக்யம்

**திருமலை திருப்பதி ஸ்ரீமத் பரமஹம்ஸ.**
**பெரிய ஜீயர்ஸ்வாமியின் மஹோபகாரம**
**"ஒரெண்டானு மின்றியே வநதியலுமாறு"**
**என்றதற்கு நிதாசனபூமி.**

புதுடில்லியில வாழும் ஸ்ரீமான A: ராமாநுஜாசாரியருடைய பஹுமுகமான முயற்சி ஈடுமெடுப்பு மில்லாதது மதுரையில் வாழும் ஸ்ரீமான் ஸ்ரீவைஷ்ணவமணி. டாக்டர் V சேஷ ராமாநுஜயயாவின் ஸஹயோகம் சிந்தைக்கும் கோசரமன்று மிக மிகப் பாராட்டவுரியது அடுத்து வரும் இரண்டாவது ஸம்புடத்தில உதவிகளெல்லாம் விரிவாக வெளியிடப்பெறும்.

**ஜீயர் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்!



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# விசதவாக் சிகாமணிகளான மணவாளமாமுனிகளின்
# திவ்ய ஸ்ரீஸூக்திகளனைத்தையுங்கொண்ட
# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையின் முன்னுரை

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யதாஸன்.

## ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
## யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

உபயவிபூதி நாதனான எம்பெருமானுடைய லீலா விபூதியாகிய இவ்வுலகம் ஞானிகளால் இருள்தருமாஞாலமெனப்பட்டது. இருளைப் போக்குதற்குரிய அக்நி ஸூர்யன் சந்திரன் முதலிய தேஜஸ் பதார்த்தங்கள் பல பல இருந்தும் அவற்றால் போக்கவொண்ணாத அஜ்ஞாநாந்தகாரமே இங்கு இருள் எனப்பட்டது. அத்தகைய இருளைப் போக்குவதற்கு *புண்யாம்போஜ விகாஸாய பாபத்வாந்த க்ஷயாய ச, ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர * என்றபடி எம்பெருமானாராகிற விலக்ஷண ஸூர்யன் இவ்வுலகில் திருவவதரித்து "கடலளவாய திசையெட்டினுள்ளும் கலியிருளே, மிடைதரு காலத்திராமாநுசன்—மிக்க நான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்திலனேல் உயிரையுடையவன் நாரணனென்று அறிவாரில்லை யுற்றுணர்ந்தே" என்ற அமுதனாருளிச்செயலின்படியே மஹோபகாரம் செய்தருளும்படியாயிற்று. "தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனர் நீணிலத்தே, பொற்கற்பகம் எம்மிராமானுசமுனி போந்தபின்னே" என்கிறபடியே ஸம்ஸ்க்ருத வேத பாஹ்ய குத்ருஷ்டிகளை யெல்லாம் தம் ஸூக்தி சரங்களாலே நிரஸித்தருளி, "வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னும்படியாக ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் ப்ரவர்த்திப்பித்தருளி, திவ்யதேசங்களையும் உத்தரிப்பித்து ஒருவாறு அவதார கார்யத்தைத் தலைக்கட்டிக்கொண்டு சுடரொளிச் சோதிக்கு எழுந்தருளின பின், சிலகாலம் கடந்தபிறகு, அந்த எம்பெருமானார் தாமே மீண்டும் வைகுந்தநாதனுடைய திருவாணையினால் இந்நிலவுலகில் திருவவதரித்து மணவாள மாமுனிகளென்கிற திருநாமத்துடனே விளங்கி,

## ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை — முன்னுரை

முன்னவதாரத்திற் செய்தருளின மஹோபகாரங்களிற்காட்டிலும் பன்மடங்கு அதிசயித்த சேமங்களைச் செய்தருளி இவ்விருள் தருமா ஞாலத்தைத் தெருள் தருமா ஞாலமாகத் திருத்திப் பணிகொண்டார் அவ்வாசார்ய சிகாமணியின் எண்ணில் பல்குணங்களைக் கூறுதற்கு அவர் தம்முடைய நிஜரூபமான ஆதிசேஷனும் அசக்தன் என்கிற விது அதிசயோக்தியன்று.

'பூர்வாசார்யா' என்று இறைக்கும் நாம் வழங்கி வருமாறு பல பல மஹாசார்யர்களின் திருவவதாரத்தினால் புனிதமாய இவ்வுலகில், அவ்வாசாரிய பரம்பரை மணவாள மாமுனிகளோடு முடிவு பெற்றிருக்கின்றது. மாமுனிகளுக்குப் பிறகும் பல பல மஹான்கள் திருவவதரித்தாலும் 'பூர்வாசார்யர்கள்' என்கிற வ்யபதேசம் மாமுனிகளளவிலே விச்ராந்தமாயிருக்குமத்தனை.

எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகச் செய்தருளின விபவாவதாரங்களுள் இராம பிரானாகத் திருவவதரித்த காலத்தில் பல பேர்களிடத்திலே தான் பணிவுகாட்டிப்போந்தான். விச்வாமித்ர முனிவன், ஸுக்ரீவ மஹாராஜர், ஸமுத்ர ராஜன் என்றிப்படிப் பல வ்யக்திகள் பக்கலிலே வணங்கி நின்றான். முதலில் விச்வாமித்ரருடைய சரித்திரங்களை உணராமல் 'இவர் ஒரு மஹர்ஷி' என்கிற ப்ரதிபத்தி மாத்திரமே கொண்டு *இமௌ ஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம்* என்று அவர்க்குச் சேவகனாய் நின்றான். பிறகு அஹல்யா சாபவிமோசனம் செய்தபின் சதாநந்தர் வாயிலாக அம்முனிவருடைய சரிதைகளை விரிவாகக் கேட்டபின் 'இங்ஙனே ராஜஸரும் தாமஸருமான இவரையோ நாம் ஆசார்யனாகக் கொள்ளப்பெற்றது' என்று திருவுள்ளக் குறையுற்றிருந்தான் போலும். பிறகு ஒருகால் *ஸுக்ரீவம் சரணம் கத:* என்னும்படியாக ஒரு குரக்கினத்தரசன் காலிலே விழும்படியாயிற்று. அவன் திறத்து ப்ரீதியும் நிலை நின்றிருந்ததில்லை: இளையோனை யனுப்பி *மா வாலிபதமந்வகா:* இத்யாதிகளாலே நிக்ரஹப்ரகாசனம் செய்ய வேண்டியதாயிற்று. பிறகு *ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி* என்ற விபீஷண வசனத்தின்படியே கடலரசன்பாடே சரணம் புகுந்து கிடந்தான்; அங்கும் அப்ரீதியோடே தலைக்கட்டிற்று; *கோபமாஹாரயத் தீவ்ரம்— ஸாகரம் சோஷயிஷ்யாமி* இத்யாதிகள் காண்க. பிறகு க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபநி பக்கலிலே சரணம் புகுந்து வித்யாக்ரஹணம் பண்ணினான், அங்கு குரு தக்ஷிணை ஸமர்ப்பிக்க விரும்பி 'என்ன அபேக்ஷிதம்?' என்று அவரைக் கேட்டபோது *ஓது வாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்கு முன் தந்த அந்தணனொருவன், காதலென்மகனைப் புகலிடங்காணேன் கண்டு நீ தருவாய் எனக்கென்று கோதில் வாய்மையினான் உன்னை வேண்டிய குறை முடித்து அவன் சிறுவனைக் கொடுத்தாய்* என்னும்படியாக அந்த ஸாந்தீபநி என்றைக்கோ மறிகடலவாய் மாண்டுபோன தன் புதல்வனைக் கொணர்ந்து கொடுக்குமாறு வேண்டினார். இங்ஙனம் லௌகிகமான பலனை விரும்புகின்ற இவரை ஆசாரியனாகக் கொண்டோமே! யென்று அவரிடத்திலும் எம்பிரானது நெஞ்சம் அப்ரீதிகொண்டிருந்தது போலும்.

ஆக; விபவாவதாரங்களில் தான் தலைமடுத்த விடமெல்லாம் தடுமாறிப்போகவே, பெருங்குறைவாளனான பகவான் அர்ச்சாவதாரத்திலாவது குறை தீர ஒரு ஸதாசார்ய ஸமாச்ரயணம்

# மணவாளமாமுனிகள் திவ்யஸூக்திகளின் அடைவு

பெற்று வாழ்வோமென விரும்பி, * மாமுனி வேள்வியைக் காத்து அவப்ரதமாட்டிய வடிதிற லயோத்தி யெம்மரசாயும *கோவலனுய வெண்ணெயுண்டவாயனுயுமுள்ள அழகிய மணவாள னை திருக்கோலத்தில ஆசார்யத்வ பூர்த்தியுள்ள மணவாள மாமுனிகள் பக்கலிலே சிஷ்ய வ்ருத்தியை வஹித்து க்ருதார்த்தனுன இத்தகைய ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்த மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியமுதக்கடல ஸ்ரீவைஷ்ணவ வுலகுக்கெல்லாம் ஜீவாதுவாகையாலே அந்த திவ்ய ஸ்ரீஸூக்திகளெல்லாம் இரண்டு ஸம்புடமாக வெளியிடப்படவேணுமென விரும்பி இந்த ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையின் பதிப்பு தொடங்கப்படுகிறது

ஆர்த்தி ப்ரபந்தத்தில் (28) * பண்டுபல வாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தமமைக, கண்டதெல்லா மெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன் * என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்தபடி ஏற்கெனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள் வதிலேயே மிகுந்த அபிநிவேச முடையராய் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ளமுடையரல்ல ரல்லரேயானுலும் இவ்வுலகின் பாக்யபரிபாக மடியாக சிஷ்யர்களின் ப்ரார்த்தனைக்கிணங்கியும் பகவந் நியமனத்தை முன்னிட்டும் * தேனே பாலே கன்னலே யமுதேயான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச் செய்தருளும்படியாயிற்று அவற்றின் விவரணம் வருமாறு — 1 2 3 பிள்ளை லோகாசார்ய ரருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீவசந பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி எனகிற மூன்று ரஹஸ்யக்ரந்தங்கள் மிகச்சிறந்தவைகளும ப்ரதானங்களுமாகையாலே அம்மூன்றுக்கும் வியாக்கியானமிட்டருளினர் 4, பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்கியான மிட்டருளினர். 5, பெரிய வாச்சான்பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியான மருளிச் செய்திருந்தும் அதில் பெரியாழ்வார் திருமொழி முதற்பாசுரம் தொடங்கி “வாக்குத் தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை” (5—1—1) என்கிறவளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி துர்லபமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம வியாக்கியானமிட்டருளினர் 6, இராமாநுச நூற்றந்தாதிக்குச் சுருக்கமான உரை செய்தருளினர் 7, 8, அருளாளப்பெருமா னெம்பெருமானு ரருளிச்செய்த ஞானசாரப் ப்ரமேயசாரங்களுக்குப் பொருத்தமான புராண சுலோகங்களைச் சேர்ந்தருளினர் 9, கீதைக்குத் தாத்பர்யதீபமென்றொரு வியாக்கியானம் இட்டருளினர் (இது லுப்தம்) காஞ்சீபுரம் ஸ்ரீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் 55, 60 ஆண்டுகட்கு முன்பு தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கிற கீதாவியாக்கியானம் மணவாள மாமுனிகள் அருளிச் செய்ததன்று மாமுனிகளின் திருப்பேரனரான நக்ஷத்ரமாலிகாகாரர் அருளிச்செய்ததாக முடிவு பெற்றது 10, 11, ஈடு முப்பத்தாருயிரப்படிக்கும் தாமருளிய ரஹஸ்ய வ்யாக்கியானங்களுக்கும் ப்ரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித்தருளினர் 12, திருவாராதன ப்ரயோகமொன்று திருவாய் மலர்ந்தருளினர் 13, 14, 15, உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என மூன்று தமிழ்ப் ப்ரபந்தங்களருளிச் செய்தார் 16, 17, 18, தேவராஜ மங்களம், யதிராஜ விம்சதி, காஞ்சீ திவ்ய தேசமுக்தகம் ஆகிய இவை மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளாக ப்ரஸித்தம்.



## மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திப் பெருமை

உலகில் ஸ்ரீஸூக்திகளை அருளிச்செயதவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு, எனினும், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூகதிகளின் மாதுர்யமும் காமபீர்யமும அர்த்த புஷ்டியும ரஸபுஷ்டியும அநிதர ஸாதாரணமாகவே யிருக்கும. * நாமூலம லிக்யதே கிஞ்சித் நாநபேக்ஷித முசயதே* என்னுமபடி யமைநத வியாக்கியானம மாமுனிகளுடையதேயாம. வேறு எநத ஆசிரியரும இங்ஙனே வியாக்கியானம அமைக்கக் கற்றிலர் எனருல இது அதிசயோக்தியேயாகாது தத்வத்ரய வ்யாகக்யாநாதிகளிலே பல மதாநதரங்களைக கண்டித்து எழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும நோகாதபடிக்கும, வ்யர்த்த தூஷண பரிஹாஸங்களைச சிறிது புக விடாதபடிக்கும, எநத இடத்தை யெடுததாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள கனியாகும படிக்கும ‘ ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே ’ என்று திண்ணமாக எண்ணுமபடிக்கும், அநந்வயம க்லிஷ்டாந்வயம், மயங்க வைத்தல் முதலிய தோஷங்களுக்குச் சிறிதும இடமில்லாதபடிக்கும ஸ்ரீஸூக்திகளருளிச செய்தவர் மாமுனிகளொருவரே ஸூத்ரம போன்ற பிள்ளை லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகை யிடுகிற அழகும மூலத்திற்கு அர்த்தமருளிச செய்கிற வைகரியும, ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற அற்புதமும, மூலத்தில ஸ்வோக்தி விரோத பரோக்தி விரோதாதிகள் தோற்றுமிடங்களிலே நயனம் செய்தருளுகிற நைபுணியும *உளங்தோறும தித்திக்கும்

வஸ்துத : இவ்வாசிரியருடைய ஸூக்திகளை ஸேவித்த பின்பு இன்னொருவர் வாக்கில கண் வைத்தால்* ஸ்திதே ரவிநதே மகரந்த நிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம ஹி வீக்ஷதே* என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகச் செய்கிறோமென்கிற எண்ண மூண்டாகிறதேயன்றி வேறில்லை பலசொல்லியென்? மற்றையோருடைய நூல்களைக் காணுமபோது அவரவர்களுடைய ஞானத்தை அளவிட்டு அறியுமபடியாக வுள்ளது , மணவாளமாமுனிகளின வியாக்கியானங்களை ஸேவிக்குமளவில, திருவடியைப்பற்றிப் பெருமாளருளிச்செய்த திருவாக்கே நினைவுக்கு வருகின்றது. *நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:, நாஸாமவேதவிதுஷச் சக்யமேவம ப்ரபாஷிதும, நூநம் வ்யாகரணம க்ருதஸ்நம அநேந பஹுதா ச்ருதம, பஹு வ்யாஹரதாநேந ந கிஞ்சிதபசபதிதம் * இதயாதி வால்மீகி வாக்கும, *இல்லாத வுலகத் தெங்கும் ஈங்கிவனிசைகள்கூரக்கல்லாத கலையும் வேதக்கடலுமே யெனனுங் காட்சி, சொல்லாலே தோன்றிற்றன்றே ஆர் கொலிச சொல்லின் வல்லான? வில்லார் தோளிளைய வீர! விரிஞ்சனோ விடைவல்லானோ ?* என்ற கம்பர் வாக்கும உண்மையில மாமுனிகள் விஷயத்திலேதான் பொருந்தக் காணலாமென்பது அநஸூயுக்களின அநவத்ய ஸித்தாந்தம.

ஸ்ரீரஸ்து.
பேரருளாளன பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
விசதவாக சிகாமணிகளான
மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# ஸ்ரீ தேவராஜ மங்களம்

(தனியன்.)

यश्चक्रे देवराजस्य मङ्गलाशासनं मुदा। तं वन्दे रम्यजामातृमुनिं विशदवाग्वरम्॥

யச் சக்ரே தேவராஜஸ்ய மங்களாசாஸநம் முதா
தம வநதே ரம்யஜாமாத்ருமுநிம் விசதவாக்வரம்.

मङ्गलं वेधसो वेदिमेदिनीगृहमेधिने। वरदाय दयाधाम्ने धीरोदाराय मङ्गलम्॥ १॥

மங்கலம வேதஸோ வேதிமேதிநீகருஹமேதிநே,
வரதாய தயாதாம்நே தீரோதாராய மங்களம. 1

वाजिमेधे वपाहोमे धातुरुत्तरवेदितः। उदिताय हुताद्ग्नेरुदाराङ्गाय मङ्गलम्॥ २॥

வாஜிமேதே வபாஹோமே தாதுருததரவேதித:,
உதிதாய ஹு தாதக்நேருதாராங்காய மங்களம. 2

यजमानं विधिं वीक्ष्य स्मयमानमुखश्रिये। दयमानदृशे तस्मै देवराजाय मङ्गलम्॥ ३॥

யஜமாநம் விதிம் வீக்ஷ்ய ஸமயமாநமுகச்ரியே,
தயமாநதருசே தஸமை தேவராஜாய மஙகளம். 3

वारिदश्यामवपुषे विराजत्पीतवाससे। वारणाचलवासाय वारिजाक्षाय मङ्गलम्॥ ४॥

வாரிதச்யாமவபுஷே விராஜத்பீதவாஸஸே,
வாரணாசலவாஸாய வாரிஜாக்ஷாய மங்களம். 4

अद्यापि सर्वभूतानामभीष्टफलदायिने। प्रणतार्तिहरायास्तु प्रभवे मम मङ्गलम्॥ ५॥

அத்யாபி ஸர்வபூதாநாம் அபீஷ்டபலதாயிநே,
ப்ரணதார்ததிஹராயாஸ்து ப்ரபவே மம மங்களம். 5

दिव्यावयवसौन्दर्यदिव्याभरणहेतये। दन्तावलगिरीशाय देवराजाय मङ्गलम्॥ ६॥

திவயாவயவஸௌநதாயதிவ்யாபரணஹேதயே,
தநதாவளகிரீசாய தேவராஜாய மங்களம. 6

पुरुषाय पुराणाय पुण्यकोटिनिवासिने । पुष्पितोदारकल्पद्रुकमनीयाय मङ्गलम् ॥ ७ ॥

புருஷாய புராணாய புண்யகோடி நிவாஸிநே,
புஷ்பிதோதாரகல்பத்ருகமநீயாய மங்களம். 7

काञ्चनाचलशृङ्गाग्रकालमेघानुसारिणे । सुपर्णांसावतंसाय सुरराजाय मङ्गलम् ॥ ८ ॥

காஞ்சநாசலச்ருங்காக்ரகாலமேகாநுஸாரிணே,
ஸுபர்ணாம்ஸாவதம்ஸாய ஸுரராஜாய மங்களம். 8

भोगापवर्गयोरेकं वाञ्छन्द्वयो ददते द्वयम् । श्रीमद्वरदराजाय महोदाराय मङ्गलम् ॥ ९ ॥

போகாபவர்க்கயோரேகம் வாஞ்சதப்யோ தததே த்வயம்,
ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம் 9

मतङ्गजाद्रितुङ्गाग्रशृङ्गशृङ्गारवर्ष्मणे । महाकृपाय मद्रक्षादीक्षितायास्तु मङ्गलम् ॥ १० ॥

மதங்கஜாத்ரி துங்காக்ரச்ருங்கச்ருங்காரவர்ஷ்மணே,
மஹாக்ருபாய மத்ரக்ஷாதீக்ஷிதாயாஸ்து மங்களம். 10

श्रीकाञ्चीपूर्णमिश्रेण प्रीत्या सर्वाभिभाषिणे । अतीतार्चाव्यवस्थाय हस्त्यद्रीशाय मङ्गलम् ॥ ११ ॥

ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே,
அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம். 11

अस्तु श्रीस्तनकस्तूरीवासनावासितोरसे । श्रीहस्तिगिरिनाथाय देवराजाय मङ्गलम् ॥ १२ ॥

அஸ்து ஸ்ரீஸ்தநகஸ்தூரீ வாஸநாவாஸிதோரஸே,
ஸ்ரீஹஸ்திகிரிநாதாய தேவராஜாய மங்களம். 12

मङ्गलाशासनपरैः मदाचार्यपुरोगमैः । सर्वैश्च पूर्वैराचार्यैः सत्कृतायास्तु मङ्गलम् ॥ १३ ॥

மங்களாசாஸநபரை: மதாசார்யபுரோகமை:,
ஸர்வைச் ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம். 13

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்த மாலையில்
**ஸ்ரீ தேவராஜமங்களம் முற்றிற்று.**

ஸ்ரீ:

# காஞ்சீ. திவ்யதேச ஸங்க்ரஹ ச்லோகமாலிகை.

*ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸந்நிதி விஷயமான முக்தக ச்லோகங்கள்:*
*மணவாளமாமுனிகள திவ்யதேச யாத்திரையடைவில் முதல்பர்யாயமாகப்*
*பெருமாளகோயிலுக் கெழுந்தருளினபோது அருளிச்செய்தவை*

श्रीमद्द्वारवरं महाद्रि बलिपीठाग्र्यं फणीन्द्रह्रदं गोपीनां रमणं वराहवपुषं श्रीभट्टनाथं मुनिम् ।
श्रीमन्तं शठवैरिणं कलिरिपुं श्रीभक्तिसारं मुनिं पूर्णं लक्ष्मणयोगिनं मुनिवरानाद्यानथ द्वारपौ ॥
श्रीमन्मज्जनमण्डपं सरसिजां हेतीशभोगीश्वरौ रामं नीलमणिं महानसवरं तार्क्ष्यं नृसिंहं श्रियम् ।
सेनान्यं करिभूधरं तदुपरि श्रीपुण्यकोट्यां हरिं तन्मध्ये वरदं रमासहचरं वन्दे तदीयैर्वृतम् ॥

ஸ்ரீமத் த்வாரவரம் மஹாத்ரி பலிபீடாக்ர்யம் பணீந்த்ரஹ்ரதம்
கோபீநாம ரமணம வராஹவபுஷம ஸ்ரீ பட்டநாதம முநிம்,
ஸ்ரீமந்தம சடவைரிணம கலிரிபும ஸ்ரீ பக்திஸாரம முநிம
பூர்ணம லக்ஷ்மணயோகிநம முநிவராந் ஆத்யாந் அத த்வாரபௌ:
ஸ்ரீ மந்மஜ்ஜநமண்டபம ஸரஸிஜாம ஹேதீசபோகீச்வரௌ
ராமம நீலமணிம மஹாநஸவரம் தார்க்ஷ்யம ந்ருஸிம்ஹம் ச்ரியம்,
ஸேநாந்யம கரிபூதரம ததுபரி ஸ்ரீ புண்யகோட்யாம ஹரிம்
தந்மத்யே வரதம ரமாஸஹசரம வந்தே ததீயைர் வ்ருதம.

देवाधीशनृसिंह पाण्डवमहादूतप्रवालप्रभान् श्रीवैकुण्ठपतिं त्रिविक्रमहरिं नीरेशमेघेश्वरौ ।
नीलव्योमविभुं महोरगहरिं ज्योत्स्नेन्दुवक्त्रं हरिं चोरेशं कृतचिन्तभक्तहृदयावासं मुकुन्दाह्वयम् ॥
कामावासपतिं नृकेसरिवरं दीपप्रकाशप्रभुं श्रीयुक्ताष्टभुजास्पदेशमनघं श्रीमद्यथोक्तक्रियम् ।
इत्यष्टादशदिव्यमङ्गलवपुर्देवान् सरोयोगिना साकं निस्तुलकाञ्च्यभिख्यनगरीनाथान् नमामस्सदा ॥

தேவாதீசந்ருஸிம்ஹ பாண்டவமஹாதூதப்ரவாலப்ரபாந்
ஸ்ரீ வைகுண்டபதிம த்ரிவிக்ரமஹரிம நீரேசமேகேச்வரௌ,
நீலவ்யோமவிபும மஹோரகஹரிம ஜ்யோத்ஸ்நேந்துவக்த்ரம ஹரிம
சோரேசம க்ருதசிந்தபக்தஹ்ருதயாவாஸம முகுந்தாஹ்வயம்,
காமாவாஸபதிம ந்ருகேஸரிவரம தீபப்ரகாசப்ரபும
ஸ்ரீயுக்தாஷ்டபுஜாஸ்பதேசமநகம ஸ்ரீமத்யதோக்தக்ரியம்,
இத்யஷ்டாதச திவ்யமங்கலவபுர்தேவாந் ஸரோயோகிநா
ஸாகம நிஸ்துலகாஞ்ச்யபிக்க்யநகரீநாதாந் நமாமஸ ஸதா.

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையில் யதிராஜவிம்சதி

(தனியன்)

यः स्तुतिं यतिपतिप्रसादनीं व्याजहार यतिराजविंशतिम् ।
तं प्रपन्नजनचातकाम्बुदं नौमि सौम्यवरयोगिपुङ्गवम् ॥

*ய ஸ்துதிம் யதிபதிபரஸாதநீம் வ்யாஜஹார யதிராஜவிம்சதிம*
*தம் பரபந்நஜநசாதகாம்புதம் நௌமி ஸௌமயவரயோகிபுங்கவம*

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ॥ १ ॥

*ஸ்ரீமாதவாங்க்ரிஜலஜத்வயநிதயஸேவா ப்ரேமாவிலாசயபராங்குசபாதபகதம,*
*காமாதிதோஷஹரமாதமபதாசரிதாநாம ராமாநுஜம யதிபதிம பரணமாமி*
*மூாத்நா* 1

श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदाम्बुजभृङ्गराजम् ।
श्रीभट्टनाथपरकालमुखाब्जमित्रं श्रीवत्सचिह्नचरणं यतिराजमीडे ॥ २ ॥

*ஸ்ரீரஙகராஜசரணாம்புஜராஜஹமஸம ஸ்ரீமதபராங்குசபதாமபுஜப்ருஙகராஜம,*
*ஸ்ரீபட்டநாதபரகாலமுகாபஜமிதரம் ஸ்ரீவதஸசிஹ்நசரணம யதிராஜமீடே* 2

वाचा यतीन्द्र! मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम् ।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम् ॥ ३ ॥

*வாசா யதீநதர! மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணாம்*
*கூராதிநாத குருகேசமுகாதயபும்ஸாம பாதாநுசிநதநபரஸ் ஸததம் பவேயம்* 3

नित्यं यतीन्द्र! तव दिव्यवपुस्स्मृतौ मे सक्तं मनो भवतु वाग्गुणकीर्तनेऽसौ ।
कृत्यं च दास्यकरणं तु करद्वयस्य वृत्त्यन्तरेऽस्तु विमुखं करणत्रयं च ॥ ४ ॥

*நிதயம யதீநத்ர ! தவ திவயவபுஸஸம்ருதௌ மே ஸக்தம் மநோ பவது வாக*
*குணகீர்தநேஸௌ,*
*க்ருதயம ச தாஸ்யகரணம் து கரத்வயஸ்ய வ்ருதத்யநதரேஸது விமுகம*
*கரணதரயம ச* 4

अष्टाक्षराख्यमनुराजपदत्रयार्थनिष्ठां ममात्र वितराद्य यतीन्द्र नाथ! ।
शिष्टाग्रगण्यजनसेव्यभवत्पदाब्जे हृष्टाऽस्तु नित्यमनुभूय ममास्य बुद्धिः ॥ ५ ॥

*அஷ்டாக்ஷராக்யமநுராஜபதத்ரயார்தநிஷ்டாம மமாதர விதராத்ய யதீநத்ர நாத*
*சிஷ்டாக்ரகணயஜநஸேவ்யபவத்பதாப்ஜே ஹ்ருஷ்டாஸது நிதயமநுபூய மமாஸ்ய*
**புத்தி :** 5

अल्पाऽपि मे न भवदीयपदाब्जभक्तिश्शब्दादिभोगरुचिरन्वहमेधते हा।
मत्पापमेव हि निदानममुष्य नान्यत्तद्वारयार्य यतिराज! दयैकसिन्धो! ॥ ६ ॥

அலபாபி மே ந பவதீயபதாபஜபகதி, சப்தாதிபோகருசிரநவஹமேதடுதே ஹா,
மதபாபமேவ ஹி நிதாநமமுஷய நாநயத ததவாரயாாய யதிராஜ தயைக
ஸிநதோ 6

वृत्त्या पशुर्नरवपुस्त्वहमीदृशोऽपि श्रुत्यादिसिद्धनिखिलात्मगुणाश्रयोऽयम्।
इत्यादरेण कृतिनोऽपि मिथः प्रवक्तुमद्यापि वञ्चनपरोऽत्र यतीन्द्र! वर्ते॥ ७ ॥

வருதத்யா பசுா நரவபுஸ த்வஹமீதருசோபி சருதயாதிஸிததநிகிலாதமகுணாச்ர
யோயம

இதயாதரேண கருதிநோபி மித பரவகதுட அதயாபி வஞசநபரோதர
யதீநதர வர்ததே 7

दुःखावहोऽहमनिशं तव दुष्टचेष्टश्शब्दादिभोगनिरतश्शरणागताख्यः।
त्वत्पादभक्त इव शिष्टजनौघमध्ये मिथ्या चरामि यतिराज ततोऽस्मि मूर्खः ॥ ८ ॥

து ககாவஹோஹமநிசம தவ துஷடசேஷட சபதாதிபோகநிரதச சரணகதாககய'
தவதபாதபக்த இவ சிஷடஜநௌகமத்யே மிததயா சராமி யதிராஜ ததோஸமி
மூாகக 8

नित्यं त्वहं परिभवामि गुरुं च मन्त्रं तद्देवतामपि न किञ्चिदहो बिभेमि।
इत्थं शठोऽप्यशठवद्भवदीयसङ्घे धृष्टश्चरामि यतिराज ततोऽस्मि मूर्खः ॥ ९ ॥

நித்யம் தவஹம் பரிபவாமி குருஞச மந்த்ரம் தத்தேவதாமபி ந கிஞ்சிதஹோ
பிபேமி,

இத்தம் சடோப்யசடவத் பவதீயஸஙகே த்ருஷ்டச் சராமி யதிராஜ
ததோஸ்மிமூர்க்க: 9

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा योऽहं चरामि सततं त्रिविधापचारान्।
सोऽहं तवाप्रियकरः प्रियकृद्वदेवं कालं नयामि यतिराज! ततोऽस्मि मूर्खः ॥ १० ॥

ஹா ஹநத ஹநத மநஸா க்ரியயா ச வாசா யோஹம சராமி ஸததம
தரிவிதாபசாராந்,

ஸோஹம் தவாபரியகர: ப்ரியக்ருதவதேவ காலம் நயாமி யதிராஜ ததோஸ்மி
மூர்கக: 10

पापे कृते यदि भवन्ति भयानुतापलज्जाः पुनः करणमस्य कथं घटेत ।
मोहेन मे न भवतीह भयादिलेशस्तस्मात्पुनःपुनरघं यतिराज ! कुर्वे ॥ ११ ॥

*பாபே க்ருதே யதி பவநதி பயாநுதாபலஜ்ஜா. புந' க்ரணமஸய கதம் கடேத,*
*மோஹேந மே ந பவதீஹ பயாதிலேசஸ தஸமாத புந:புநரகம் யதிராஜ!*
*குர்வே.* 11

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशमन्धः पुरस्स्थितमिवाहमवीक्षमाणः ।
कन्दर्पवश्यहृदयस्सततं भवामि हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र ! नार्हः ॥ १२ ॥

*அந்தர்பஹிஸ ஸகலவஸதுஷு ஸந்தமீசம் அந்த புரஸஸதிதமிவாஹமவீக்ஷமாண:,*
*கநதாபபவசயஹ்ருதயஸ ஸததம பவாமி ஹநத தவதகரகமநஸய யதீநதர !*
*நாஹ:.* 12

तापत्रयीजनितदुःखनिपातिनोऽपि देहस्थितौ मम रुचिस्तु न तन्निवृत्तौ ।
एतस्य कारणमहो मम पापमेव नाथ ! त्वमेव हर तद्यतिराज ! शीघ्रम् ॥ १३ ॥

*தாபத்ரயீஜநிதது ககநிபாதிநோபி தேஹஸதிதௌ மம ருசிஸது ந தந்நிவ்ருத்தௌ,*
*ஏதஸய காரணமஹோ மம பாபமேவ நாத! தவமேவ ஹர தத யதிராஜ!*
*சீக்ரம்.* 13

वाचामगोचरमहागुणदेशिकाग्र्यकूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोऽहमेव न पुनर्जगतीदृशस्तद्रामानुजार्य करुणैव तु मद्गतिस्ते ॥ १४ ॥

*வாசாமகோசரமஹாகுணதேசிகாக்ரய கூராதிநாதகதிதாகிலநைச்யபாத்ரம்,*
*ஏஷோஹமேவ ந புநா ஜகதீதருசஸ தத ராமாநுஜாாய! கருணைவ து*
*மதகதிஸ தே.* 14

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथभट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके तस्माद्यतीन्द्र ! करुणैव तु मद्गतिस्ते ॥ १५ ॥

*சுத்தாத்மயாமுந குருத்தம கூரநாத பட்டாக்கய தேசிகவரோகத ஸமஸதநைச்யம,*
*அதயாஸதயஸஙகுசிதமேவ மயீஹ லோகே தஸமாத் யதீந்த்ர! கருணைவ து*
*மத்கதிஸ தே.* 15

शब्दादिभोगविषया रुचिरस्मदीया नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र ! ।
त्वद्दासदासगणनाचरमावधौ यस्तद्दासतैकरसताऽविरता ममास्तु ॥ १६ ॥

*சப்தாதிபோகவிஷயா ருசிரஸமதீயா நஷ்டா பவத்விஹ பவத்தயயா யதீந்த்ர !*
*தவ ததாஸதாஸகணநாசரமாவதௌ யஸ் தததாஸதைகரஸதா அவிரதா*
*மமாஸது* 16

श्रुत्यग्रवेद्यनिजदिव्यगुणस्वरूपः प्रत्यक्षतामुपगतस्त्विह रङ्गराजः ।
वश्यस्सदा भवति ते यतिराज ! तस्माच्छक्तस्स्वकीयजनपापविमोचने त्वम् ॥ १७ ॥

*ச்ருத்யகரவேதயநிஜதிவ்ய குணஸ்வரூப: ப்ரத்யக்ஷதாமுபகதஸ் தவிஹ ரங்கராஜ :*
*வச்யஸ் ஸதா பவதி தே யதிராஜ தஸ்மாத் சக்தஸ ஸவகீய ஜநபாப விமோசநே*
*த்வம்* 17

कालत्रयेऽपि करणत्रयनिर्मितातिपापक्रियस्य शरणं भगवत्क्षमैव ।
सा च त्वयैव कमलारमणेऽर्थिता यत्क्षेमस्स एव हि यतीन्द्र भवच्छ्रितानाम् ॥ १८ ॥

*காலத்ரயேபி கரணதரய நிர்மிதாதி பாபக்ரியஸய சரணம் பகவத்க்ஷமைவ,*
*ஸாச த்வயைவ கமலாரமணேர்ததிதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர !*
*பவதச்ரிதாநாம்.* 18

श्रीमन्यतीन्द्र ! तव दिव्यपदाब्जसेवां श्रीशैलनाथकरुणापरिणामदत्ताम् ।
तामन्वहं मम विवर्धय नाथ ! तस्याः कामं विरुद्धमखिलं च निवर्तय त्वम् ॥ १९ ॥

*ஸ்ரீமந யதீந்தர ! தவ திவ்யபதாபஜஸேவாம் ஸ்ரீ சைலநாதகருணாபரிணாமதத்தாம்*
*தாமந்வஹம் மம விவர்த்தய நாத ! தஸ்யா : காமம விருதத மகிலஞ்ச நிவர்த்தய*
*தவம* 19

विज्ञापनं यदिदमद्य तु मामकीनमङ्गीकुरुष्व यतिराज दयाम्बुराशे ।
अज्ञोऽयमात्मगुणलेशविवर्जितश्च तस्मादनन्यशरणो भवतीति मत्वा ॥ २० ॥

*விஜ்ஞாபநம் யதிதமத்ய து மாமகீநம அங்கீகுருஷ்வ யதிராஜ தயாம்புராசே*
*அஜ்ஞோயமாதமகுணலேசவிவாஜிதச்ச தஸ்மாதநநயசரணோ பவதீதி மதவா.* 20

**யதிராஜவிம்சதி முற்றிற்று.**

ஜீயர் திருவடிகளே சரணம

ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# உபதேச ரத்தினமாலை

## தனியன்

முன்னந் திருவாய்மொழிப்பிள்ளை தாமுபதேசித்த நேர்
தன்னின் படியைத் தணவாத சொல் மணவாளமுனி*
தன்னன்புடன் செய் உபதேசரத்தினமாலை தன்னைத்
தன்னெஞ்சு தன்னில் தரிப்பவர் தாள்கள் சரண் நமக்கே.

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை இன்னருளால்*
வந்த உபதேசமார்க்கத்தைச்—சிந்தை செய்து*
பின்னவரும் கற்க உபதேசமாய்ப் பேசுகின்றேன்*
மன்னிய சீர் வெண்பாவில் வைத்து. 1

கற்றோர்கள் தாமுகப்பர் கல்வி தன்னிலாசையுள்ளோர்*
பெற்றோமென உகந்து பின்பு கற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத்தால் இகழில் வந்ததென் நெஞ்சே!* இகழ்கை
ஆச்சரியமோ தான் அவர்க்கு. 2

**ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி*—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி*
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து. 3

பொய்கையார் பூதத்தார் பேயார்* புகழ்மழிசை
அய்யன் அருள்மாறன் சேரலர்கோன்*—துய்யபட்ட
நாதன் அன்பர் தாள் தூளி நற்பாணன் நன்கலியன்*
ஈதிவர் தோற்றத் தடைவாமிங்கு. 4

அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்கள்*
இந்த உலகில் இருள் நீங்க*—வந்துதித்த
மாதங்கள் நாள்கள் தம்மை மண்ணுலகோர் தாமறிய*
ஈதென்று சொல்லுவோம் யாம். 5

**ஐப்பசியில் ஓணம் அவிட்டம் சதயமிவை*
ஒப்பிலவா நாள்கள் உலகத்தீர்!*—எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்*
தேசுடனே தோன்று சிறப்பால். 6

மற்றுள்ளவாழ்வார்களுக்கு முனனேவந்துதித்து*
நற்றமிழால நூல செய்து நாட்டையுய்த்த *—பெற்றிமையோ
ரென்று முதலாழவாாகளென்னுமபெயரிவாக்கு*
நின்ற துலகததே நிகழநது. 7

பேதைநெஞ்சே! இன்றைப்பெருமையறிந்திலேயோ!*
ஏதுபெருமைஇன்றைக்கென்றென்னில்*—ஓதுகின்றேன்
வாயததபுகழ மஙகையாகோன மாநிலத்தில் வநதுதித்த*
காாததிகையில காாததிகைநாளகாண். 8

**மாறன்பணிதத தமிழமறைக்கு மங்கையர்கோன் *
ஆறஙகஙகூற அவதரிதத *—வீறுடைய
காாததிகையில காாததிகைநாள இன்றென்று காதலிப்பார் *
வாயததமலாததாளகள நெஞ்சே! வாழத்து. 9

காாததிகையுரோகிணிநாள காணமினின்றுகாசினியீர்*
வாயததபுகழபபாணாவந்துதிப்பால *—ஆததியர்கள
அனபுடனேதான அமலனுதிபிரான கற்றதறபின்*
நனகுடனேகொணடாடுமநாள. 10

மன்னியசீர்மார்கழியில கேட்டையின்றுமாநிலததீர்!*
எனனிதனுககேறறமெனில உரைக்கேன *—துன்னுபுகழ்
மாமறையோன தொணடரடிபபொடியாழ்வார்பிறபபால*
நானமறையோா கொணடாடுமநாள. 11

தையில்மகமினறு தாரணியீா! ஏறறம்* இந்தத்
தையிலமகத்துக்குச் சாறறுகின்றேன் *—துயயமதி
பெற்ற மழிசைபபிரான்பிறந்தநாளென்று*
நறறவர்கள கொண்டாடுமநாள. 12

மாசிப்புனர்பூசம் காணமினின்று மண்ணுலகீர் *
தேசித திவசததுக்கேதென்னில—* பேசுகின்றேன்
கொலலிநகாககோன் குலசேகரனபிறப்பால் *
நல்லவர்கள் கொண்டாடும்நாள. 13

ஏராாவைகாசி விசாகததினேற்றத்தை *
பாரோரறியப் பகர்கின்றேன*—சீராரும
வேதம தமிழசெய்த மெயயனெழில குருகை * 14
நாத னவதரிதத நாள.

**உண்டோவைகாசி விசாகத்துக்கொப்பொருநாள்? *
உண்டோ சடகோபர்க கொபபொருவர்?*— உணடோ
திருவாய்மொழிககொப்பு? தென குருகைககுணடோ *
ஒருபார் தனிலொக்குமூர்? 15

இன்றைப்பெருமையறிந்திலையோ ஏழைநெஞ்சே! *
இன்றைககெனனேற்றமெனிலுரைக்கேன்*— நன்றிபுனை
பல்லாண்டுபாடிய நமபட்டாபிரான வந்துதித்த *
நல்லானியில் சோதிநாள. 16

மாநிலததினமுன் நம் பெரியாழ்வார்வந்துதித்த *
ஆனிதனனில்சோதியெனறுலாதரிககும *— ஞானியாக்கு
ஒபபோரிலை யிவவுலகுதனி லெனறுநெஞ்சே ! *
எபபோதும சிநதிததிரு. 17

மங்களாசாசனத்தில் மறறுள்ளவாழவார்கள்*
தங்களார்வத்தளவு தானனறி*—பொங்கும்
பரிவாலே விலலிபுததூாப பட்டர்பிரானபெற்றான்*
பெரியாழ்வாரெனனும பெயர். 18

கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்*
ஆதி திருப்பலலாண்டானதுவும்*— வேதத்துக்
கோமென்னுமதுபோல உளளதுககெலலாமசுருக்காய்*
தான்மஙகலமாதலால. 19

**உணடோதிருபபல்லாண்டுக்கொப்பதோர் கலைதான்*
உண்டோ பெரியாழவாாககொப்பொருவர்—*தண்டமிழ்நூல்
செய்தருளுமாழவார்கள தமமில அவர்செய்கலையில்*
பைதல்நெஞ்சே நீயுணர்நதுபாா. 20

ஆழவார் திருமகளாராண்டாள் *மதுரகவி
யாழவார் எதிராசராமிவர்கள்—*வாழவாக
வந்துதிததமாதஙகள நாளகள தம்மின வாசியையும்*
இந்த வுலகோர்ககுரைப்போம் யாம. 21

**இன்றோ திருவாடிப்பூரம் *எமக்காக
வன்றோ இஙகாண்டாளவதரிததாள்—* குனறாத
வாழவான வைகுநதவான்போகந்தன்னை யிகழ்ந்து*
ஆழ்வார் திருமகளாராய். 22

பெரியாழ்வார்பெண்பிள்ளையாய் ஆண்டாள்பிறந்த*
திருவாடிபபூரத்தின் சீர்மை—* ஒருநாளைக்
குண்டோ மனமேயுணாந்துபாா * ஆண்டாளுக்
குண்டாகி லொபபிதறகுமுண்டு. 23

அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய்* ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்—*பிஞ்சாயப்
பழுத்தாளை யாண்டாளைப் பத்தியுடன் நாளும*
வழுததாய் மனமே மகிழ்ந்து. 24

ஏராரமதுரகவி யிவ்வுலகிலவந்துதித்த *
சீராருமசித்திரையில சித்திரைநாள — * பாருலகில்
மற்றுள்ளவாழவாாகள வநதுதித்தநாள்களினும *
உற்றதெமககெனறுநெஞ்சேயோர். 25

வாய்த்ததிருமநதிரத்தின மத்திமமாம்பதம்போல் *
சீரதத மதுரகவி செய்கலையை — * ஆர்த்தபுகழ
ஆரியாகள தாங்கள் அருளிச்செயல்நடுவே *
சேர்விததார் தாற்பரியம் தேர்நது. 26

இன்றுலகீர சித்திரையில் ஏய்ந்ததிருவாதிரைநாள் *
எனறையிலுமின்றிதனுககேறறமெனதான — * எனறவர்க்குச
சாற்றுகினறேனகேண்மின எதிராசா தம்பிறப்பால் *
நாற்றிசையும கொணடாடுமநாள. 27

** ஆழவாாகள தாஙகள் அவதரித்த நாடகளினும *
வாழவானநாளநமககு மணணுலகீர் — * ஏழபாரு
மூயய எதிராசருதிததருளும * சித்திரையில
செய்ய திருவாதிரை 28

எநதையெதிராசர் இவவுலகிலெந்தமக்கா *
வநதுதித்த நாளெனனும வாசியினல — * இநதத்
திருவாதிரைதனனின் சீாமைதனைநெஞ்சே *
ஒருவாமலெபபொழுதுமோா. 29

எணணருமசீாப்பொய்கைமுனனோர் இவ்வுலகில் தோன்றியவூர் *
உண்மைமிகுகச்சிமல்லைமாமயிலை — * மண்ணியினீர்
தேஙகுமகுறையலூர் சீர்க்கலியன்தோனறியவூா *
ஙகுமுறையூாபாணனூர். 30

தொண்டரடிப்பொடியாா தோனறியவூர் * தொல்புகழசேர்
மணடஙகுடியெனபா மணணுலகில் — * எண்டிசையும்
ஏததும குலசேகரனூரெனவுரைப்பர் *
வாயததிருவஞ்சிககளம 31

மன்னுதிருமழிசை மாடததிருககுருகூர் *
மினனுபுகழவிலலிபுததூா மேதினியில — * நனனெறியோர்
ஏயநதபததிசார ரெழிலமாறன பட்டர்பிரான *
வாயநதுதிததவூாகள வகை 32

சீாருமவிலலிபுத்தூா செல்வத்திருக்கோளூா *
ஏராாபெருமபூதூரெனனுமிவை — * பாரில்
மதியாருமாண்டாள மதுரகவியாழவாா
எதிராசாதோன்றியவூரிஙகு. 33

ஆழ்வார்களேற்றம் அருளிச்செயலேற்றம் *
தாழ்வாதுமின்றியவை தாம் வளர்த்தோர் — * ஏழ்பாரு
முய்ய அவர் செய்த வியாக்கியைகளுள்ளதெல்லாம் *
வையமறியப் பகர்வோம் வாய்ந்து. 34

ஆழ்வார்களையு மருளிச் செயல்களையும் *
தாழ்வா நினைப்பவர்கள் தாம் * நரகில் — வீழ்வார்க
ளென்றுநினைத்து நெஞ்சே யெப்பொழுதும் நீயவர்பால் *
சென்றணுகக் கூசித் திரி. 35

தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார் *
அருளிச்செயலையறிவாரார் — * அருள்பெற்ற
நாதமுனிமுதலாம் நந்தேசிகரையல்லால் *
பேதைமனமேயுண்டோ பேசு. 36

ஓராணவழியா யுபதேசித்தார் முன்னோர் *
ஏராரெதிராசரினருளால் — * பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று *
பேசி வரம்பறுத்தார் பின். 37

** எம்பெருமானார் தரிசனமென்றேயிதற்கு *
நம்பெருமாள் பேரிட்டுநாட்டிவைத்தார் * — அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த *
அந்தச்செயலறிகைக்கா, 38

பிள்ளானஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை *
தெள்ளார்வடக்குத்திருவீதிப — பிள்ளை *
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த *
குணவாளரென்று நெஞ்சேகூறு. 39

முந்துறவேபிள்ளான் முதலானோர் செய்தருளும் *
அந்தவியாக்கியைகளன்றாகில் * — அந்தோ
திருவாய்மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல
குருவார் * இக்காலம்நெஞ்சே கூறு. 40

தெள்ளாரும்ஞானத் திருக்குருகைப்பிரான்
பிள்ளான் * எதிராசர்பேரருளால் — * உள்ளாரும்
அன்புடனே மாறன்மறைப்பொருளையன்றுரைத்தது *
இன்பமிகுமாறாயிரம். 41

தஞ்சீரைஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி *
நஞ்சீயர்தாம்பட்டர்நல்லருளால் * — எஞ்சாத
ஆர்வமுடன்மாறன் மறைப்பொருளையாய்ந்துரைத்தது *
ஏரொன்பதினாயிரம். 42

நம்பிள்ளைதம்முடைய நல்லருளாலேவியிட *
பினபெரியவாசசான பிள்ளையதனல் * — இன்பா
வருபததி மாறன் மறைபபொருளைசசொனனது *
இருபத்துநாலாயிரம். 43

** தெளளியதாநம்பிளளை செப்புநெறிதன்னை *
வளளல வடக்குத் திருவீதிப் — பிளளை * இநத
நாடறிய மாறனமறைப்பொருளை நன்குரைத்தது *
ஈடுமுபபத்தாறுயிரம். 44

அன்போடழகிய மணவாளச்சீயர் *
பினபோருமகறறறிநது பேசுகைக்கா * — தம்பெரிய
போதமுடன மாறனமறையின பொருளுரைத்தது *
ஏதமிலபனனீராயிரம. 45

பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய * வியாககியைகள் செய்வால — * அரிய
அருளிச்செயறபொருளை ஆரியர்கடகிப்போது *
அருளிசசெயலாயத் தறிநது. 46

நஞ்சீயாசெய்த வியாக்கியைகள நாலிரண்டுக்கு *
எஞசாமை யாவைக்குமிலலையே * — தஞசீரால்
வையகுருவின தமபி மனனுமணவாளமுனி *
செயயுமவைதாமும சில. 47

சீரார வடக்குததிருவீதிப்பிள்ளை * எழு
தேரார் தமிழ வேதததீடுதனை — * தாருமென
வாஙகிமுனநமபிளளை யீயுணணிமாதவாக்குத
தாமகொடுததார் * பினனதனைததான. 48

ஆஙகவாபால்பெறற சிறியாழ்வானப்பிள்ளை *
தாமகொடுததாா தமமகனாா தமகையில * — பாங்குடனே
நாலூராபிளளைககவாதாம் நலலமகனாககவர்தாம *
மேலோாககீந்தாரவரே மிககு. 49

** நமபெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
யெனபர் * அவரவாதமேறறததால * — அனபுடையோர்
சாததுதிருநாமஙகளதானெனறு நன்னெஞசே *
ஏதததனைசசொலலிநீ யினறு. 50

துன்னுபுகழககந்தாடைத தோழப்பர் தம்முகப்பால் *
எனனவுலகாரியனோ வென்றுரைக்க * — பின்னை
உலகாரியனெனுமபோ நமபிளளைககோஙகி *
விலகாமல் நினறதென்றுமமேல. 51

நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருமுக மண்டலத்திற்கும் திருபபவளத்திற்கும் சாத்தியருளவேணும் (தலைமாறி) திருவடிகளுக்குத் திருவொற்றுடை சாத்தியருளவேணும் என்று விண்ணப்பம் செய்து திருத்துழாய்க்கொழுந் தைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, "ஸ்ரீமதே ராமாநுஜாயநம, திருவடி நிலைசாத்தியருள வேணும், திருமஞ்சன வேதிகையில எழுந்தருளவேணும் ஒலியல் சாத்தியருளவேணும, எண் ணெயக்காப்பு சாத்தியருளவேணும்திருமுடிக்காப்புக்காக நெல்லிக்காப்பு சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸநாநீய பாத்திரத்தில் நினறும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருமஞ்சனம் கண்டருள வேணும்" எனறு விண்ணப்பம் செய்து தியானித்து முக் கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலேசோதித்து ஆசமனீய பாத்ரத்தில் நின்றும் உததரணியாலே திருமஞ்சனததை எடுத்து "ஆசமனீயம் கண்டருள வேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சோத்து உத்தரணியை சுததஜலத்திலே சோதித்து 'திருவொற்றுடை ஒரு தலையாலே திருமுடி திருமேனி யெங்குமொக்க சாததியருள வேணும், (தலைமாறி) திருவடிகளுக்கு திருவொறறுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப் பம் செயது திருத்துழாய்க்கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதே-திருவடிகள நிலை சாத்தியருளவேணும, அலங்காராஸனததுக்கு எழுந்தருளவேணும், திருப்பரியட்டம் சாத்தி யருளவேணும் திருவுத்தரீயம் சாததியருளவேணும்" எனறு விணணப்பம் செய்து அர்க்கய பாத்திரத்தில நின அம் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதே அர்கக்யம் கண டருளவேணும்" என்று முக்கால முககால திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலததிலே சோதிதது, பாத்ய பாததிரததில் நினறும உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும" எனறு முககால் முக்கால திருப்படிக்கததிலே சேர்தது உத்தரணியை சுதத ஜலததிலே சோதிதது மீளவும அர்க்கய பாத்திரத்தில நினறும் உததரணி யாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருக்கைகள விளக்கி அருளவேணு" என்று முக்கால் முக்கால் திருபபடிக்கத்திலே சேர்தது உத்தரணியை சுத்த ஜலத்தில சோதித்து, ஆசமன பாத்ரத் தில நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" எனறு முககால முக்கால திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலததிலே சோதித்து, திருவொறறுடை ஒரு தலையாலே திருக்கைகளுககும் திருப்பவளத்திறகும் சாத்தி யருளவேணும் (தலைமாறி] திருவடிகளுக்குத் திருவொறறுடை சாததியருளவேணும் என்று விண்ணப்பமசெய்து 'ஸ்ரீமதேராமாநுஜாயநம: திருமண்காப்பு சாத்தியருளவேணும் ஸ்ரீசூர்ணக் காப்பு சாத்தியருளவேணும், திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும, திருப்படித்தாமம் சாத்தியருளவேணும், சாத்துப்படி சாத்தியருளவேணும திருவாபரணம் சாத்தியருளவேணும். ஆசார்யன திருக்கைகளால் ஸாவோபசாரஙகளையும் கண்டருளவேணும"என்றுதிருவடிகளிலே திருத்துழாய்க்கொழுந்தை ஸமர்ப்பித்து.

மீளவும் பஞ்சபாத்திரங்களையும் சோதித்து பூர்வமபோலே திருமஞ்சனத்தைப் பூரித்து சோஷிதது "பராஙகுச பரகாலாதிப்யோநம:" எனறு திருவடிகளிலே திருத்துழாய்க்கொழுந்தை ஸமர்பபிதது உடையவர்க்கு ஸமர்ப்பித்ததுபோலவே திருவாராதனம் பண்ணுகிறது

மீளவும் பஞ்சபாத்ரங்களையும சோதித்து திருமஞ்சனத்தைப்பூரித்து அபிமந்தரித்து சோஷித்து "ஸ்ரீமதே விஷ்வகஸேநாயநம:, அனந்தாய நாகராஜாயநம., வைனதேயாய பக்ஷி ராஜாயநம. ஸுதாசநய ஹேதிராஜாயநம, பாஞ்சஜனயாய சங்காதிபதயேநம" என்று திருவடி களிலே திருத்துழாய்க்கொழுந்தை ஸமர்ப்பித்து பூர்வம்போலே திருவாராதனம பண்ணுகிறது.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தைப்பூரித்துத் திருத்துழாய்க் கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி உத்தரவாக்யத்தாலே அபிமந்த்ரித்து எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநாராயணாயநம ஸ்ரீம்ச்ரியை நம:, பூம்பூம்யைநம:, நீம் நீளாயைநம: ஸமஸ்த பரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே; நாராயணாயநம திருவடி நிலைசாத்தியருளவேணும் மந்த்ராஸனத்திற்கு எழுந்தருளவேணும் ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதேநம அர்க்ச்யம் கண்டருளவேணும்" என்று எம்பெருமான் கைகளிலே ஸமர்ப்பித்து. கண்டருளின தாக பாவித்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்கரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்று உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "பாத்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்று உத்த ரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண் ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்தஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தையெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம்செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்கரணியை சோதித்து திருவொற்றாடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருப் பவளத்திற்கும் சாத்தியருளவேணும், (தலைமாறி) திருவடிகளுக்கு திருவொற்றாடை சாத்தியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்வது.

மீளவும் எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய் ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திரு வடிகள் நிலைசாத்தியருளவேணும் ஸ்நானஸன்நிதிக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப் பம் செய்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே நம: திருவடி விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப் படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்கரணியை சுத்த ஜலத் திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில்நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து ஆசமனம் கண்டருளவேணும" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத் திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றாடை (ஒருதலையாலே) திருக்கைகளுக்கு சாத்தியருளவேணும் (தலைமாறி) திருவடிகளுக்கு திருவொற்றாடை சாத்தி யருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஒரு திருத்துழாய்க் கொழுந்தாலே திருமுத்து விளக்கி திருப்படிக்கத்தில் சேர்தது கையை சோதித்து மற்றொரு கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிக்கத்திலேசேர்த்து கையைசோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணி யாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதேநம, திருப்பவளம் மாற்றியருளவேணும், திருக்கை கள் விளக்கியருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியருளவேணும் திருக்கைகள் விளக்கி யருளவேணும் என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" எனறு முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்தஜலத்திலே சோதித்து மீளவும்அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்," என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில்

நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து 'ஆசமனம் கண்டருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத் திற்கும் திருமுகமண்டலத்திற்கும் சாத்தியருளவேணும் (தலைமாறி) திருவடிகளுக்கு திரு வொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து,

திருவடிகளிலே திருத்துழாய்க் கொழுந்தை ஸமர்ப்பித்து 'ஸ்ரீமதேநம: திருவடி நிலை சாத்தியருளவேணும் திருமஞ்சன வேதிகைக்கு எழுந்தருளவேணும்' என்று விண்ணப் பம் செய்து தீர்த்த எம்பெருமான்களை வேதிகையிலே எழுந்தருளப்பண்ணி சுருளமுது சோதித்து கண்டருளப்பண்ணி திருவொற்றுடை சாத்தி "ஸ்ரீமதேநம: எண்ணெ யொலியல் சாத்தியருளவேணும் எண்ணெய்க்காப்பு சாத்தியருளவேணும் திருமுடிக்காப்புக்காகசாத்துப்படி சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸ்நாநீய பாத்திரத்தில் நின்றும் உத்தர ணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், *வெண்ணெ யளைந்த குணுங்கும்* இத்யாத்யநுஸந்தானத்துடனே தீர்த்த எம்பெருமான்களுக்குத் திருமஞ் சனம்பண்ணி உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணி யாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத் ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருமுடி திருமேனி எங்கு மொக்க திருவொற்றுடை சாத்தியருளவேணும் (தலைமாறி) திருவடிகளுக்குத் திருவொற்றுடை சாத்தியருளவேணும் என்று விண்ணப்பம் செய்து தீர்த்த எம்பெருமான்களைக் கோயிலாழ்வா ரிலே எழுந்தருளப்பண்ணி;

திருத்துழாய்க் கொழுந்தைத் திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம, திருவடி நிலை சாத்தியருளவேணும் அலங்காராஸனத்திற்கு எழுந்தருளவேணும், திவ்ய பீதாம்பரம் சாத்தி யருளவேணும் உத்தரீயம் சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "அர்க்யம் கண்டருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து,

மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத் தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால்முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற கும் சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும" என்று விண்ணப்பம் செய்து,

திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம, திருமண்காப்பு சாத்தியருளவேணும், ஸ்ரீசூர்ணக்காப்பு சாத்தியருளவேணும், திருயஜ்ஞோபவீதம் சாத்தியருள

வேணும், சாத்துப்படி சாத்தியருளவேணும் என்று *கந்தத்வாராம்* *பூசும் சாந்து* இத்யாத்யநுஸந்தானத்துடனே சாத்துப்படி சாத்தி "திருப்படித்தாமம் சாத்தியருளவேணும்" என்று *ஸ்புரதகிரீடாங்த ஹாரகண்டிகா* *ஸ்வோசிதவிவித* *மங்குல்தோய்சென்னி,* *சூட்டுநன்மாலைகள்,* இத்யாத்யநுஸந்தானத்துடனே கிரீடாதிநூபுராந்தமான திவ்யாபரணங்களையும், சங்கசக்ராத்யாயுதங்களையும் சாத்தியருளவேணும், திருமாலை சாத்தியருளவேணும், திருக்கண்ணுடி கண்டருளவேணும்" என்று திருத்துழாய்க்கொழுந்தாலே கண்டருளப்பண்ணி, *பரிவதிலீசனைப்பாடி* இத்யாத்யநுஸந்தானத்துடனே தூபம் கண்டருளப்பண்ணி, *வையந் தகளியா* *அன்பே தகளியா* *திருக்கண்டேன்* *வடிக்கோலவாள் நெடுங்கண்* இத்யாத்யநுஸந்தானத்துடனே 'தீபம கண்டருளவேணும், கந்த, புஷ்ப தூப, தீப, ந்ருத்த, கீத, வாத்யச்சத்ர, சாமர, தாலவ்ருந்தாதி ஸாவோபசாரங்களையும் கண்டருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து திருப்பல்லாண்டு திருப்பாவை விண்ணப்பம் செய்து ;

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருத்துழாய்க் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து, "ஸ்ரீ மதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, "ஸ்ரீமதேநம திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் தலைமாறி திருவடிகளுக்கும் சாத்தி

திருமுன்பே ஸதல சுத்திபண்ணி திருப்போனகம் ஸமர்ப்பித்து அர்க்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து திருப்போனகத்தை உத்தர வாக்யத்தாலே ப்ரோக்ஷித்து பரிஷேசனம் பண்ணி ஆபோசனம் ஸமர்ப்பித்து த்வயத்தாலே அபிமந்த்ரித்து இரண்டு கூறாக பாவித்து அதில் ஒரு பாகம் எம்பெருமான்களுக்கும் மற்றொரு பாகம பிராட்டிமார்களுக்குமாக பாவித்து அர்க்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தையெடுத்து இடது கையிலே வைத்துக்கொண்டு திருப்போனகத்தை ஆசாரயன் ஆமலகப்ரமாணம் எம்பெருமான் வலதுதிருக்கையிலே ஸமர்ப்பிப்பதாகவும் கண்டருளுகிறதாகவும் பாவித்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பானீய பாத்ரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை யெடுத்து பானீயம் கண்டருளப்பண்ணி 'நாறுநறும் பொழில்,' 'இன்று வந்தித்தனையும்,' 'பச்சைமாமலை போல்மேனி 'மிக்கானை மறையாய்,' 'அடியேன் மேவி,' அன்ன ஸூக்தம், மதுஸூக்தம்,'யாட்ரீதிர் விதுராப்பிதே'' "பிப்ரத்வேணும்" இத்யாத்யநுஸந்தானத்துடனே திருப்போனகம் கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி பிராட்டிமார்களுக்கும் யதாபாகமாக கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து, 'ஸ்ரீமதேநம: திருப்பவளம் மாற்றியருளவேணும்,' திருக்கைகளும் விளக்கியருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து 'திருவடிகள் விளக்கியருளவேணும்'என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலேசேர்த்து உத்தரணி

யை சுத்த ஜல ததிலே சோதித்து மீளவும் அர்க்க்யபாத்ரத்தில நின்றும்தீர்த்தததையெடுத்து 'திருக் கைகள விளக்கியருளவேணும்' எனறு விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத் திலே சேர்தது உத்தரணியை சுத்த ஜலததிலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணி யாலே தீாத்தத்தை யெடுதது 'ஆசமனம கண்டருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால திருப்படிக்கததிலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திரு வொறறுடை ஒருதலையாலே திருக்கைகளுககும திருப்பவளத்திறகும் சாத்தியருளவேணும்(தலை மாறி) திருவடிகளுக்கு திருவொற்றுடை சாததியருளவேணும்'' என்று விண்ணப்பம் செய்து .

"ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாயநம . அனந்தாயநாகராஜாயநம:, வைநதேயாய பக்ஷிராஜாயநம:, ஸுதர்சனாய ஹேதிராஜாயநம, பாஞ்சஜன்யாய சஙகாதிபதயேநம . திருப்போனகம் யதாபாக மாகக் கண்டருளவேணும்'' எனறு விண்ணப்பம் செய்து பானீயம்கண்டருளப்பண்ணித் திரு வொற்றுடை சாத்தி· "ஸ்ரீமதப்ய: பராஙகுச பரகாலாதிப்யோநம'' என்று திருப்போனகம் யதாபாகமாகக் கண்டருளப்பணணி பாநீயம் கண்டருளபபணணி, 'ஸ்ரீமதேராமாநுஜாயநம.' என்று உடையவருக்குத திருபபோனகம கணடருளப்பணணி அனந்தரம் ஆசாாயனுககுக் கண்டருளபபண்ணி

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதிதது தீர்த்தம் பூரித்து அபிமந்த்ரித்து சோஷித்து திருததுழாய் திருவடிகளிலே ஸமர்ப்பிதது "ஸ்ரீமதேநம. திருவடிநிலை சாததியருளவேணும் மந்தராஸனத்துககு எழுந்தருளவேணும'' என்று விண்ணப்பம் செய்து அர்க்க்ய பாத்ரத்தில் நினறும உததரணியாலே தீர்தததை எடுத்து "அர்க்க்யம் கண்டருளவேணும்'' எனறு விண் ணபபம் செயது முககால் முககால திருப்படிககத்திலே சோத்து உததரணியாலே தீர்த்தத்தை எடுத்து "பாத்யம் கண்டருளவேணும்'' என்று விண்ணபபம் செய்து முக்கால முக்கால் திருப் படிக்கததிலே சோகது உததரணியை சுத்த ஜலத்திலே சோதிதது அர்க்க்ய பாத்ரததில் நின்றும் உதரணியாலே தீாத்ததைதயெடுத்து 'திருககைகள் விளககியருளவேணும்'' என்று விண்ணப் பம் செயது முக்கால் முககால் திருப்படிக்கத்திலே சோத்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதிதது ஆசமன பாதரத்தில நினறும உத்தரணியாலே தீாததத்தை யெடுத்து "ஆசமனம் கணடருளவேணும்'' எனறு விண்ணபபம செய்து முக்கால முக்கால் திருப்படிக்கத்திலே சோதது உத்தரணியை சுதத ஜலததிலே சோதிதது திருவொறறுடை சாததி, சுருளமுது கண் டருளபபணணி அாககய பாதரததில நினறும் தீர்தததை எடுதது திருப்பவளம் மாறறி "திருக் கைகள விளக்கியருளவேணும்'' எனறு முக்கால முககால திருப்படிக்கத்திலே சேர்த்து உத்த ரணியை சுத்த ஜலததிலே சோதிதது ஆசமன பாதரததில நினறும் தீாதததை எடுதது ஆச மனம கணடருள பணணி திருபபடிக்கத்திலே சோகது திருவொறறுடை சாற்றி கறபூரநீரா ஜனம 'லக்ஷ்மீசரணலாக்ஷாங்க' இத்யாதி ச்லோகாநுஸந்தானத்துடனே திருப்பாவை முதலா னவை சாற்றி

திருவடிகளிலே திருத்துழாய்க்கொழுந்தை ஸமர்ப்பித்து 'திருவடிகள்நிலை சாத்தியருள வேணும பர்யங்காஸனத்துக்கு எழுநதருளவேணும்' என்று விணணபபம் செய்து பாத்ய பாதரததில் நினறும உத்தரணியாலே தீாதத்தை யெடுதது 'ஸ்ரீமதேநம: திருவடிகள் விளக்கி யருளவேணும' எனறு விணணப்பம செயது முககால முககால திருபபடிக்கத்திலே சோத்து உத்தரணியை சுதத ஜலததிலே சோதிதது அாக்கய பாத்ரததில் நினறும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து 'திருக்கைகள் விளக்கியருளவேணும்' எனறு விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கததிலே சோத்து உததரணியை சுதத ஜலத்திலே சோதித்து ஆச

மன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே எடுத்து 'ஆசமனம் கண்டருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்துதிருவொற்றுடை சாத்தி சுருளமுது திருத்திக்கண்டருளப்பண்ணி திருப்பவளம் மாற்றி திருக்கைகள் விளக்கி ஆசமனம் கண்டருளப்பண்ணி திருவொற்றுடை சாத்தி திருவடிகளிலே திருத்துழாயக்கொழுந்தை 'ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்' என்று விணணப்பம் செய்து, 'உபசாராபதேசேந' என்கிற ச்லோகாநுஸந்தானத்துடனே தெண்டனஸமர்ப்பிதது அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டு 'பன்னகாதீசபர்யங்கே ரமாஹஸ்தோபதானகே' என்கிற ச்லோகத்தையும் 'அரவத்தமளியினோடும்' 'உறகலுறகல்' என்கிற பாசுரங்களையும் அநுஸந்திதது கோயிலாழ்வார் திருக்காப்புசேர்த்து திருமஞ்சனத்தாழியை பாநீயார்த்தமாக ஸன்னிதியிலே ஸ்தாபித்து 'ஜிதம்தே' என்கிற ஸ்தோத்ராநு ஸந்தானத்துடன் தெண்டன் ஸமர்ப்பித்து அபராத க்ஷாமணம் பண்ணிக்கொள்வது ... ..

## ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரக்ரந்தமாயில் ஜீயர்படி திருவாராதனக்ரமம் முற்றிற்று

ஜீயர்திருவடிகளே சரணம்

# ஸ்ரீமத்வரவரமுநீந்த்ர பக்தர்களுக்கு அறிவிப்பு

*மணவாளமாமுனிகள் கீதைக்கு தாத்பர்யதீப மெனறொரு விவரணகரந்தம் அருளிசசெயதிருநததாக முன்னோர்களின் வைபவ நூலகளில எழுதியிருக்கக் காணகிறது அநதகரநதம லுபதம எனறு பலகால் விஜ்ஞாபித்திருககிறேன் இநதகரநதமாலையின முன்னறிக்கையிலும விஜ்ஞாபித்திருககிறேன் இதைககணட சிலா, ஏறககுறைய அறுபது வருஷஙகளுககு முன ஸ்ரீகாஞ்சி ஸ்ரீஸுதர்சநமுதராக்ஷரசாலையில தேவநாகர லிபியில மணவாளமாமுனிகள அருளிசசெயததாக ஸமஸகருத-கீதாவியாககியானமொனறு அசசிட்டிருபபதை நினைப்பூட்டி 'இதை லுபதமெனறு எழுதியிருபபது எதனாலே' எனறு கேட்டார்கள; இன்னமும கேடடுவருகிறாகள அனனவர்களுககு இதைபபற்றின உணமையை ஈணடு விஜ்ஞாபிககிறேன ஸுதர்சன முதராக்ஷரசாலையில் அந்தக்ரநதம அச்சிடும ஸமயம அடியேனுக்கு நனறாயத் தெரியும் அதில சேர்க்கபபட்டிருக்கிற பூமிகையில இது மணவாளமாமுனிகளருளிச்செயததே யென்று வறபுறுததி அஸ்மதாசார்யரான (வைகுணடவாஸி) ஸ்ரீகாதிஸ்வாமி எழுதியருளியிருப்பதையும அப்போதே அறிவேன. ஆனாலும மணவாளமாமுனிகளின் திருப்பேரனாருமநக்ஷத்ரமாலிகாகாரருமான அபிராமவராசாரயா பணிததேயனறி மணவாளமாமுனிகளருளிச் செய்ததனறு, அவருடைய ஸ்ரீஸூக்தி நடையேயனறு எனபதை அடியேன் பலபடிகளாலுமறியப்பெறறேன. ஸ்ரீமத்பரமஹமஸ அயோத்யா. ராமாநுஜஜீயர் ஸ்வாமி ஸ்ரீரஙகநாராயண ஜீயர் ஆஸ்தானத்தை அலஙகரித்திருநத காலத்தில அநத மடத்திலிருந்த ஸ்ரீதாளகோசததையுங்காட்டியருளினர். ஆகவே மாமுனிகளருளிய கீதாதாத்பர்யதீபம லுபதமேயென்பது திணணம். ஐயுறவேணடா. (ப்ர-அ.)*

ஸ்ரீ:

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

★

பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்த

# முமுக்ஷுப்படி,

# தத்வத்ரயம்

# ஸ்ரீவசனபூஷணம்

★

அவருடைய திருத் தம்பியாரான

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆசார்யஹ்ருதயம்

ஆகிய இந் நான்கு ரஹஸ்யங்களும்

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

வியாக்கியானத்துடன்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:    ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# மணவாளமாமுனிகளின்
# ரஹஸ்யவ்யாக்யானங்களுக்குப் பொதுத்தனியன்கள்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம் முநிம்

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம்,
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோநித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ ததிதராணி த்ருணாயமேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்யசரணௌ சரணம்ப்ரபத்யே.

மாதாபிதாயுவதயஸ் தநயாவிபூதிஸ
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந:குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்தங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா.

பூதம்ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மிநித்யம்

## ரஹஸ்யார்த்த ஸம்ப்ரதாயபரம்பரையின் ஒட்டுத் தனியன்கள்

லோககுரும் குருபிஸ்ஸஹபூர்வை: கூரகுலோத்தம தாஸமுதாரம்,
ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ தீப்ரசயம் வரயோகிநமீடே.

லோகாசார்யாயகுரவே க்ருஷ்ணபாதஸ்யஸூநவே,
ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதவேநம:,

லோகாசார்ய க்ருபாபாத்ரம் கௌண்டிந்ய குலபூஷணம்,
ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தேகூரகுலோத்தமம்.

நமச்ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே,
ப்ரஸாதலப்த பரமப்ராப்ய கைங்கர்யசாலிநே,
லோகாசார்யபதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம்,

ஜ்ஞாநவைராக்யஜலதிம் வந்தேஸௌம்யவரம்குரும்
ஸ்ரீ ஜிஹ்வாவததீசதாஸ மமலமசேஷசாஸ்த்ரவிதம்,

ஸுந்தரகுருவரகருணாகந்தளித ஜ்ஞாநமந்திரம் கலயே.
ஸ்ரீசைலேசதயாபாத்ரம்...ரம்யஜாமாதரம்முநிம்.

ஸ்ரீமதே வரவரமுநயே நம

# முமுக்ஷுப்படி முதலான ரஹஸ்ய வியாக்கியானங்கள் நான்கிலும் உதாஹரிக்கப்பட்டுள்ள ஸம்ஸ்க்ருதப்ரமாணங்களுக்கு அகராதியிட்டவணை சூர்ணிகை லக்கங்களுடன்

# 1. முமுக்ஷுப்படி வியாக்கியானம்

60 அகாரச சிதஸவருபஸய
33 அகாரஞ்சாபயுகாரஞ்ச
60. அகாரேணோசயதேவிஷ்ணு
35 அகாரோவை ஸாவாவாக
120 அகிஞ்சநோகதி
120 அகிஞ்சநோநநய கதி:
76, 177 அகிஞ்சிதகரஸய
128. அகிலஜகநமாதரம
155 அஞ்சலி பரமா முதரா
97 அணடாநாமதுஸஹஸராணும
205, 263. அதபாதகபீதஸதவம
8 அநநதாவை பகவநமநதரா
46 அநநயாராகவேணுஹம
46 அநநயாஹிமயா ஸீதா
183 அநாதிகாலபரவருதத
183 அநாதமநயாதமபுததியா
137 அபயாஸாவபூதேபய
(அவ) 57 அஸநநேவ ஸபவதி
216 அஸதாநஸநேஹைகாருணய
55. ஆதமதாஸயம ஹரேஸஸவா
13. ஆர்ததாவிஷணுஞசசிதி
8 ஆஸதாம தேகுணராசிவத
6 ஆஸதிகோதாமசீலசச
279 ஆதமாவா அரேதரஷட
279 ஆதமாநமேவ லோகமுபாஸீத
5 ஈசேசிதவயஸமபந
75 உகதாததவிசதீகார
291 உநமாதச சிததவிபரம
149, 243 உபாயேகருஹரக்ஷி
3 ருசோயஜூமஷிஸாமாநி
13 ஏகோஹவைநாராயணஆஸீத
199. ஏததபுததவாபுததிமாந
176 ஏததஸாமகாயநநாஸதே
5 ஏவமஸமஸருதி சகரஸதே
277 ஏஷ நாராயண ஸ்ரீமாந
13. ஏஷஸாவபூதாநதராதமா
19 ஐஹலௌகிகமைசவாயம
279 ஓமிதயாதமாநம தயாயத
28. ஓமிதயேகாக்ஷரம
28. ஓமிதயகரேவயாஹரேத
35. ஓஙகாரபரவா வேதா
129 க குபயேத வாநரோததம
137. கதஞசந நதயஜேயம
199 காமணவஹி ஸமஸித்திம
127 கிமேதநநிதோஷ
13. கிமததரபஹுபிமநதரை,
94 கிமதேந நகருதமபாபம
135 கருபயா பாயபாலயத
277 கருஷண ஏவஹிலோகாநாம
208 218 கருஷணம தாமம ஸநா
127 க்ஷிபாமி
207 கசசா நுஜாநாமி
246 கதயாததா புததயாததா
16. கோவிநதேதியதாகரநதத
199 கருதேநவா அததைலேந
13 சக்ஷுசச தரஷடவயஞச நாரா
207 சசால சாபஞச முமோச
86 சேதநஸய யதாமமயம
2)1 சோதநாலக்ஷணோதத
175 சாயாவா ஸதவமநுகசசேத
199 ஜநமகாமசமே திவயம
279 ஜநமாநதர ஸஹஸரேஷு
155. ஜஞாநமோக்ஷோ ஜாயதே
58 ததேவபூதம ததுபவயமாஇ
58 ததேவாகநிஸததவாயு
4 தநமநதரம பராஹமணுதீனம
226 தமேவசாதயம
8 தவாநநத குணஸயாபிஷடேவ
35 தஸயப்ரகருதி லீனஸய
100 தவமேவோபாய பூ தோமே
128 தவமமாதா ஸாவலோகாநாம
81 தவமமே ஹமமேகுதஸதத
5 த்வாமேவசரணம பராபய
5, 55 தாஸபூதாஸ ஸவதஸஸாவே
13 திசசச பரதிசசச
97 தேவிதவாமநுலீலயா
135 தேவயாகாருணயருபயா
199 தேசோயம ஸாவகாமதுக
2 தேஹாஸகதாதமபுததி
86 தவயக்ஷரஸது பவேந மருதயு
218. தாம ஸமஸதாபநாததாய
129 நகசசிந நாபராதயதி
127 நக்ஷமாமி
176, 187 நமஇத்யேவவாதிந
11 நமநதரோஷ்டாக்ஷராத் பர
199 நஹி ஜஞாநேந ஸதருசம
179, 76 நாகிஞ்சித குாவத
35 நாமருபஞசபூதாநாம
101. நாரசபதேந ஜீவாநாம்
101 நாரஸதவிதி ஸாவபுமஸாம
13 நாராயண பரமபரஹம
10, 11 நாராயணாய விதமஹே
13 நாரயணேதி சபதோஸதி
11 நாஸதிசாஷ்டாக்ஷராத் பர
177 நிதயகிஙகர பரஹாஷயி
177 நிதயகிஙமரோ பவாநி
66 பஞசவிமசு ஆதமாபவதி
66 பஞசவிமசோயம புருஷ
5 பதிம விசவஸயாதமேசவரம
220, 251. பராஸய சகதி
127 பரிபூாணுகஸிறநே
277 பவிதராணும ஹிகோவிநத
116 பிதரம மாதரம தாராந
259 புணயபாபே விதூய
277 புணயாதவாரவதீ கதர
191 பரக்ஷாலய பாதாவாசாமேத
31 பரணவாதயம் நமோமதயம
35 பரணவாத்யாஸததாவேதா
46 பரஸஙம புஷயநதீமபி
5, 23 பராபயஸயபரஹமணோருபம
158 பராயசிததிரியம ஸாதர
221 பலமத உபபததே:
8 பஹவோநருப கலயாண குண
8 பஹூநிமேவயதீதாநி
205 பரஹமஹத்யாஸுராபாநம
199 பகதயாதவநநயயாசகய
155 பவசரணமிதீரயநதியேவை
169 பவாமஸது ஸஹ வைதேஹயா
206 புக்தவாசாநதராயணம சரேத

முமுக்ஷுப்படிவயாக்கயான பரமாணாநுகரமணிகை முற்றிற்று.

## 2. தத்வத்ரயவ்யாக்க்யான ப்ரமாணாநுக்ரமணிகை

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# முமுக்ஷுப்படி வ்யாக்க்யான அவதாரிகை

சரிய பதியாய், ஸ்ரீ வைகுண்ட நிகேதநனாய், நித்ய முக்தாநுபாவ்யனாய் நிரதிசயாநந்த யுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரன், அநந்த நித்யஸூரிகளோபாதி தன்னை அநுபவித்து நித்ய கைங்கர்யபரராய் வாழுகைக்குப் ப்ராப்தியுண்டாயிருக்கச் செய்தேயும் அதனை இழந்து *அஸந்நேவ* என்கிறபடியே அஸத்கல்பராய்க் கிடக்கிற ஸமஸாரிசேதநருடைய இழவை அநுஸந்தித்து, அத்யந்த வ்யாகுலசித்தனாய், இவர்கள் கரண களேபரங்களை இழந்து இற கொடிந்த பக்ஷி போலே கிடக்கிற தசையிலே கரணாதிகளைக்கொடுத்து அவற்றைக்கொண்டு வ்யபிசரியாதே தன்னை யாச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்கு உடலாக, அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமாய் ஸ்வத ப்ரமாணமான வேதத்தையும் தது பப்ருஹ்மணங்களான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளையும் ப்ரவர்த்திப்பித்தவிடத்திலும், அந்த சாஸ்த்ராப்யாஸத்துக்கு அநேக யோக்யதை வேண்டுகையாலே அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்து சேதநர் உஜ்ஜீவிக்கை அரிதா யிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி ஸகல சாஸ்த்ர தாத்பர்யங்களையும் ஸங்க்ரஹமாக இவர்கள் அறியலாம்படி பண்ணவேணுமென்று, ஸ்வரூபோபாய புருஷார்த்த யாதாத்ம்ய ப்ரதிபாதக மான ரஹஸ்யத்ரயத்தையும், ஸ்வயமேவ ஆசார்யனாய் நின்று ப்ரகாசிப்பித்தருளினான்.

அதில், திருமந்த்ரத்தை ஸ்ரீ பதரிகாச்ரமத்திலே ஸ்வாம்சபூதனான நரன் விஷயமாக ப்ரகாசிப்பித்தான். த்வயத்தை ஸ்ரீ விஷ்ணுலோகத்திலே ஸ்வமஹிஷியான பிராட்டிவிஷயமாக ப்ரகாசிப்பித்தான். சரமச்லோகத்தைத் தேர்த்தட்டிலே ஸ்வாச்ரிதனான அர்ஜுநன் விஷயமாக ப்ரகாசிப்பித்தான். ஆகையாலிறே *லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்* என்று குரு பரம்பராதியிலே ஈச்வரனை அநுஸந்திக்கிறது.

இனி இந்த ரஹஸ்யத்ரயந்தான் ஸப்தம் ஸங்க்ரஹமா யிருந்ததேயாகிலும் ஆத்தமு உபதேசகம்யமாகையாலும், அதறிந்தே எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வேண்டுகையாலும், அந்த ரஹஸ்யத்ரயத்திலும் பூர்வாசார்யர்களுடைய உபதேச பரம்பரா ப்ராப்தமான ஆர்த்த விசேஷங் களை ஸர்வர்க்கும் ஸங்க்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் பிள்ளை லோகாசார்யர் தம்முடைய பரமக்ருபையாலே இப் ப்ரபந்தமுகேந அருளிச் செய்கிறார். முன்பே ரஹஸ்யத்ரய விஷயமாக மூன்று ப்ரபந்தம் இட்டருளியிருக்கச் செய்தேயும், அதில் யாத்ருச்சிகப்படி அதிஸங்க்ரஹ மாகையாலும், பரந்தபடி அதிவிஸ்த்ருதமாகையாலும், ச்ரிய:பதிப்படி உபயதோஷமுமின்றிக்கே யிருந்ததேயாகிலும் ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் அதிகரிக்கப் போகாமையாலும் த்ரிவித தோஷமுமில்லாதபடி இன்னமும் ஒரு ப்ரபந்தமிட வேணுமென்று திருவுள்ளம்பற்றி எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப் ப்ரபந்தம் இட்டருளிற்று.

ஆகையிறே, அல்லாத ப்ரபந்தங்கள் கிடக்க, இத்தை எல்லாரும் அதிகரித்துப்போரு கிறது. இன்னமும் பூர்வ ப்ரபந்தங்களில் அநுக்தமான ஆர்த்த விசேஷங்களும் இப் ப்ரபந்தத் திலே உண்டாகையாலும் இதுவே எல்லார்க்கும் ஆதரணீயமாயிருக்கும்.

வ்யாக்க்யான அவதாரிகை முற்றிற்று

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த முமுக்ஷுப்படி

# திருமந்த்ரப்ரகரணம்

---

### மூ. 1. முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.

வ்யாக்யாநம்.— (முமுக்ஷுவுககு அறியவேண்டும ரஹஸயம மூனறு.) முமுக்ஷுவாகிறுன மோக்ஷததிலே இச்சையுடையவனுனவன *முசல் மோக்ஷணே* யிறே தாது. இததால, ஸமஸார விமோசனததில் இசசை பிறநதவனுககு எனறபடி ஆதமபராபதி காமனுககும முமுக்ஷுதவமுணடேயாகிலும், இவவிடததில அவன விவக்ஷிதனனறு, அவனுககு ரஹஸய தரயஜஞாநாபேக்ஷை இல்லையிறே. ஆகையால, இவா முமுக்ஷுவெனகிறது, பகவதபராபதி காமதயா ஸம்ஸார நிவருததியில் இசசை பிறநதவனை ஏவமபூதனுனவனுககு 'அறிய வேண்டும ரஹஸயம் மூனறு' எனறது — இவனுககு அவச்யம ஜஞாதவயமாயுளளது ஸவரூப உபாய புருஷாாத்தங்களாகையாலும, அவறறை இநத ரஹஸயதரயம உளளபடி ப்ரதிபாதிக்கையாலும, ரஹஸயத்ரயமுமே அறியவேண்டுவதென்கை *ஸ்வஜஞாநம பராபகஜஞாநம் ப்ராபயஜஞாநம முமுக்ஷுபி: । ஜஞாநத்ரயமுபாதேயம ஏததநயநந கிஞசந ॥* எனனககடவதிறே 'ரஹஸ்யம மூனறு' எனறு இவா உததேசிககிறது – திருமநதரமும தவயமும சரமச்லோகமுமாகிற இவறறை எனனுமிடம, மேலே ஸுஸபஷடம. இவற்றை ரஹஸயஙகளென்கிறது, ஸகல வேதாநத ஸாராாதத பரதிபாதகதயா பரமகுஹயஙகளாகையாலே ஆக, இவவாகயததால், அதிகாரி நிாததேசமும தத்ஜஞாதவய நிாததேசமும பணணியருளிஞராயதது ... (1)

2 (அவ.) இனி, அநத ரஹஸயதரயததிலும பரதமரஹஸயம் ஏது எனனும ஆகாங்க்ஷையிலே அருளிச செயகிறா, 'அதில பரதம ரஹஸயம திருமநதரம' எனறு,

### மூ. 2. அதில பரதம ரஹஸயம் திருமந்தரம்.

வயா:— அதாவது – அநத ரஹஸயதரயததிலுமவைததுககொண்டு, இவவதிகாரிக்கு பரதமம ஜஞாதவயமான ரஹஸயம ஸவரூபயாதாதம்யபரமாய தயாஜயோபாதேய விபாகஜஞாநததைப பரிபூாணமாகப பிறபபிககுமதான திருமநதரமெனகை. அநநயாாஹசேஷதவம அநநயசரணதவம அநநய போகயதவமாகிற ஆகாரதரயததையும பரதிபாதிககையாலே சேதநஸ்வரூப யாதாதமய ப்ரதிபாதநபரமாய, தததநுகுண தயாஜயோபாதேய விபாகத்தையும ஸுஸபஷடமாக பரதிபாதியா நின்றுளள இமமநதரததாலே ஸுசிக்ஷிதனுணவனுககிறே, மறறை ரஹஸயஙகளிரணடிலும பரதிபாதிககபபடுகிற உபாயோபேயங்களில் அபேக்ஷை ஜநிபபது. ஆகையாலே ஸவரூபயாதாதம்யபரமான திருமந்தரம பரதம ரஹஸ்யமென்னக குறையிலலை இனனமும, பரணவததுககு மநதரசேஷம விவரணமாறுபபோலே

மந்த்ரசேஷத்துக்கு த்வயம் விவரணமாய், த்வயத்துக்குச் சரம ச்லோகம் விவரணமாயிறே இருப்பது அந்த ந்யாயத்தாலும் இதினுடைய ப்ராதம்யம் ஸித்தமிறே ஆக, இவை எல்லாவற்றையும் திருவுள்ளம் பற்றியாய்த்து 'ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம்' என்று இவர் அருளிச்செய்தது இத்தை மந்த்ரமென்கிறது *மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:* என்கிறபடியே சப்த சக்தியாலும் அர்த்த போதநத்தாலும் தன்னை அநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமாகை யாலே சப்தசக்தியாலே ரக்ஷகமாம், ஜபஹோமாதிகளாலே கார்யங்கொள்ளும் உபாஸகர்க்கு அர்த்த போதநத்தாலே ரக்ஷகமாம் ஈச்வரனே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நர்க்கு அர்த்தபோதநத்தாலே ரக்ஷகமாகையாவது *தேஹாஸக்தாத்மபுத்திர் யதி பவதி பதம் ஸாது வித்யாத் த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோ யதி ஸ்யாத் ப்ரதமம் இதர சேஷத்வதீச்சேத் த்விதீயம், ஆத்மத்ராணோந்முகச்சேந்நம இதி ச பதம் பாந்தவாபாஸ லோலச் சப்தம் நாராய ணாக்யம் விஷயசபலதீச்சேத் சதுர்த்தீம் ப்ரபந்ந * என்று பட்டர் அருளிச்செய்தபடியே தன்னை அநுஸந்திப்பார்க்கு தேஹாத்மாபிமானமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்யசேஷத்வமும், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமும், அபந்துஸங்கமும், விஷயப்ராவண்யமும் மேலிடாதபடி பண்ணி ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நோக்குகை (2)

3 இனிமேல் இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை விஸ்தரேண ப்ரதிபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதினுடைய அநுஸந்தாந க்ரமகதநமுகத்தாலே இதின் வைப வத்தை அருளிச்செய்கிறார் 'திருமந்த்ரத்தினுடைய' என்று தொடங்கி

**மூ 3 திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்கவேணும்**

வ்யா — திருமந்த்ரத்துக்குச் சீர்மையாவது *ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவ ஆதர்வணாநிச - ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம்* என்கிறபடியே ஸகலவேத ஸங்க்ரஹமாய் "மற் றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகமாய் *மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம், பவித்ரம் ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாதந * என்கிறபடியே மந்த்ரங்களில் வைத்துக்கொண்டு பரமமான மந்த்ரமாய், குஹ்யங் களில் வைத்துக்கொண்டு உத்தமமான குஹ்யமாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கிற கௌரவம். (சீர்மைக்குப் போரும்படி) என்றது, தகும்படியென்கை (ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்கை)யாவது, இத்தை அநுஸந்திக்குமளவில் சுஷ்கஹ்ருதயனாயிருந் தநுஸந்திக்கை யன்றிக்கே இதின் வைலக்ஷண்ய ஜ்ஞாநமடியாக இதின் பக்கல் தனக்குண்டான ப்ரேமத் தோடே, குஹ்யாநாம் குஹ்யமானவிது அசல்றியாதபடி *மந்த்ரம் யத்நேந கோபயேத்* என்கிறபடியே பேணிக்கொண்டநுஸந்திக்கை இப்படி அநுஸந்திக்கவேணு மென்கையாலே ப்ரகாராந்தரேண அநுஸந்திக்க லாகாதென்கிற நியமம் தோற்றுகிறது .. (3)

4. இப்படி, தன்பக்கல் ப்ரேமமுண்டாகவே இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாமோ வென்ன வருளிச் செய்கிறார், 'மந்த்ரத்திலும்' என்று தொடங்கி

**மூ 4. மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்க உண்டானால் கார்யகரமாவது**

வ்யா — அதாவது-ஜ்ஞாதவ்யார்த்தஜ்ஞாபகமான இம் மந்த்ரந்தன்னிலும், சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயயுக்தயா இம்மந்த்ரத்துக்கு வாச்யவஸ்துவா

யிருக்கிற ஸர்வேச்வரன் விஷயத்திலும் *தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம்* என்கிறபடியே இம்மந்த்ரம் ஆசார்யாதீநமா யிருப்பதொன்றாகையாலே இத்தை யதாப்ரதிபத்தியுக்தனாய்க் கொண்டு, தனக்கு உபகரித்த ஆசார்ய விஷயத்திலும் தத்தத்வைலக்ஷண்யாநுரூபமாக ப்ரேமம் அதிசயேந உண்டாகுமால, இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாவதென்கை. *மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதம ஸாதநம்.* என்னக் கடவதிறே .. .. ... (4)

5. இனி, இம்மந்த்ரத்தினுடைய அவதரணப்ரகாரகத்தந முகத்தாலே இதினுடைய அபரிமித வைபவத்தை அருளிச் செய்கிறார் 'ஸம்ஸாரிகள்' என்று தொடங்கி.

மூ. 5. ஸம்ஸாரிகள் தங்களையும ஈச்வரனையும் மறந்து, ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும் படி, தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினன்.

வ்யா :— ஸம்ஸாரிகளாகிறார் அநாத்யசித்ஸம்பந்தத்தாலே ப்ரவாஹரூபேண வருகிற அவித்யாகர்மவாஸநாருசிவிவசராய் ஜந்மமரணாதிக்லேசபாகிகளாய்த் திரிகிற பத்தசேதநர் 'தங்களையும் ஈச்வரனையும் மறந்து' என்றது. *தாஸபூதா: ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: । நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச.* என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்தமான பகவத் சேஷத்வத்தை லக்ஷணமாக வுடையராயிருக்கிற தங்களையும் *பதிம்விச்வஸ்ய *ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்தித்தம்* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே தங்களுக்கு நிருபாதிக சேஷியாயிருக்கிற ஈச்வரனையும் அறியாதேயென்கை. ஆகில், 'அறியாமலென்னாதே மறந்தென்பானென்? முன் ஒருகால் நினைத்துப் பின்பு அந்நினைவுக்கு ப்ரச்யுதி வந்தவிடத்திலிறே மறந்து என்னலாவது' என்னில்: ''மறந்தேனுன்னை முன்னம்'. என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தத்தை யுணர்ந்தால் முன்பு நினைத்திருந்த அர்த்தத்தை மறந்தாற்போலே இருக்கும் ஸம்பந்தத்தில் உறைப்பை நினைத்து அருளிச்செய்தாரா மித்தனை. 'ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து' என்றது கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்தாலே வகுத்த சேஷியான ஈச்வர விஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும் ப்ராபிக்கப் பெறுதேயென்கை. புருஷார்த்தத்தினுடைய கௌரவத்தையும், அதுக்கிட்டுப் பிறந்து வைத்துக் கிட்டப்பெறுமல் கிடந்தபடியையும் நினைத்து, 'இழந்து' என்கிறார். 'இழந்தோ மென்கிற இழவுமின்றிக்கே' என்றது ஸ்வஸ்வரூபபரஸ்வரூப ஜ்ஞானமும் புருஷார்த்த ஜ்ஞாநமும் இல்லாமையாலே ஸ்வசேஷத்வாநுரூபமான சேஷிவிஷய கைங்கர்யரூப புருஷார்த்தத்தை இழந்தோமென்கிற அல்ப க்லேசந்தானுமின்றிக்கே என்கை (ஸம்ஸாரமாகிற பெருங் கடலிலே விழுந்து நோவுபட) என்றது *ஸம்ஸார ஸாகரம் கோரம் அநந்தக்லேச பாஜனம்* என்கிறபடியே அநந்தக்லேசபாஜநமாய், ஒருவராலும் ஸ்வயத்நத்தால் கரைகாண அரிதாம் படியிருக்கிற ஸம்ஸாரமாகிற மஹா ஸமுத்ரத்துக்குள்ளே விழுந்து தாபத்ரயாபிபூதராய்க் கொண்டு க்லேசப்படவென்கை. இத்தால், தங்களையும் ஈச்வரனையும் அறியாமையாலும், புருஷார்த்தத்தை அறியாமையாலும், ஸம்ஸாரஸாகரத்துக்குள்ளே கிடந்து நோவுபடா நிற்க விரோதியான ஸம்ஸாரந்தன்னையும் தந்நிஸ்தரணோபாயத்தையும் அறியாமையாலும், ஜ்ஞாதவ்யமான அர்த்தபஞ்சகத்திலும் ஒன்றையும் அறியாமற் கிடந்தார்களென்கை. *ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்* இத்யாதிப்படியே ஸகல சாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது அர்த்தபஞ்சகத்தையுமிறே இவ்வர்த்தங்களை இவர்களுக்கு ஸுக்ரஹமாக அறிவிக்கைக்காக, ஸகல சாஸ்த்ர ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தை ஸர்வேச்வரன் வெளியிட்ட ப்ரகாரத்தைச்

சொல்லுகிறது மேல் ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே என்றது *ஈசேசிதவ்யஸம்பந்தாத் அநிதம்ப்ரதமாதபி* என்கிறபடியே அநாதியாக ஸர்வேச்வரனோடுமுண்டான ஈசேசிதவ்ய ஸம்பந்தத்தையுடையனான எம்பெருமான் *ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி, ஜீவே துக்காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே* என்கிறபடியே இவர்கள் படுகிற துக்க தர்சநமாத்ரத்தாலுண்டான தன்னுடைய நிர்ஹேதுககருபையாலே யென்கை 'இவர்கள் தன்னையறிந்து கரைமரம் சேரும்படி' என்றது இப்படி ஸம்ஸார ஸாகரத்திலே கிடந்து நோவுபடுகிற இவர்கள் *த்வாமேவ சரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:* என்றும் *ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம், விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்* என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸார நிஸ்தரணோபாயபூதனான தன்னை யறிந்து ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்படும்படி யென்கை 'தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று' என்றது "நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்கிறபடியே நரநாராயணரூபேண அவதரித்து நரனான தான் சிஷ்யனுமாய், நாராயணனான தான் ஆசார்யனுமாய் நின்று என்கை 'திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்' என்றது ஸகல சாஸ்த்ர ஸங்க்ரஹமாய் அநந்த சாஸ்த்ர தாத்பர்யமான அர்த்தபஞ்சகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியா நிற்கும் திருமந்த்ரத்தை ப்ரகாசிப்பித்தருளினானென்கை. அருளிச்செய்தானென்னாதே வெளியிட்டருளினானென்றது — இப்போது தான் ஒன்றை நிர்மித்துச் சொன்னானல்லன், அநாதி யானத்தை ப்ரகாசிப்பித்தானித்தனை என்னுமிடமும், அதிகுஹ்யமாயுள்ளத்தை இவர்கள் துர்க்கதிகண்டு ஸஹிக்கமாட்டாமையாலே ப்ரகாசிப்பித்தானென்னுமிடமும் தோற்றுகைக்காக (5)

6 ஆனால், ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளிவிட அமையாதோ? சிஷ்யனாய் நின்றது ஏதுக்காக? என்ன அருளிச்செய்கிறார், 'சிஷ்யனாய்' என்று தொடங்கி

## மூ 6 சிஷ்யனாய் நின்றது சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக.

வ்யா — அதாவது, ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளின அளவன்றிக்கே, தானே சிஷ்யனுமாய்க்கொண்டு நின்றது, *ஆஸ்திகோ தர்மசீலச்ச சீலவாந் வைஷ்ணவச்சுசி:, கம்பீரச்சதுரோ தீரச் சிஷ்ய இத்யபிதீயதே* *சரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம குணாநஸூந், குர்வர்த்தம் தாரயேத் யஸ்து ஸ சிஷ்யோ நேதர: ஸ்ம்ருத:* ஸத்புத்தி:ஸாதுஸேவீ ஸமுசிதசரிதஸ்தத்வபோதாபிலாஷீ சுச்ரூஷுஸ்த்யக்தமாந: ப்ரணிபதநபர: ப்ரச்நகாலப்ரதீக்ஷ:, சாந்தோ தாந்தோநஸூயுச் சரணமுபகதச் சாஸ்த்ரவிச்வாஸசாலீ சிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவிதபிமதம் தத்வதச் சிக்ஷணீய:* இத்யாதிகளிற் சொல்லுகிறபடிகளும் ஸாத்யாந்தர நிவ்ருத்தியும் பலஸாதந சுச்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநஸூயையும் உடையனாயிருக்கையுமாகிற சிஷ்யலக்ஷணம் லோகத்திலுள்ளார் அறியாமையாலே அத்தை ஸ்வாநுஷ்டாநத்தாலே அறிவிக்கைக்காகவென்கை உபதேசத்தாலே அறிவிக்குமளவில ஸ்வோத்கர்ஷம் தேடிக்கொள்ளவந்தானித்தனை யென்று நினைக்கவுங்கூடும், அநுஷ்டாநத்தாலே அறிவிக்குமளவில நமக்கும் இது வேணுமென்று விச்வஸித்துப் பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே. (6)

7 "இப்படி சிஷ்யனாய் நின்று இம்மந்த்ர சிக்ஷைபண்ணி இவ்வழியாலே ஜ்ஞாநம் பிறக்க வேணுமோ? "ஞானக்கலைகள்" என்கிறபடியே ஸகல சாஸ்த்ரங்களும் ஜ்ஞாநஸாதநமாயன்றோ இருப்பது அவற்றை அப்யஸித்து அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்தாலோ?"

என்ன, சாஸதரஜநயஜஞாநத்துககும இம மநதர ஜநயஜஞாநததுக்கும உண்டான விசேஷததை ஸதருஷடாநதமாக அருளிசசெயகிறுா 'ஸகலசாஸதரஙகளாலும' எனறு தொடஙகி.

மூ. 7. ஸகல சாஸதரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம்ஸவயமாஜிதம்போலே; திருமந்த்ரத்தால் பிறககும் ஜஞாநம் பைதருகதநமபோலே.

வ்யா — அதாவது-ததவஜஞாந ஜநகஙகளான சருதி ஸமருதயாதி ஸகல சாஸதரஙகளாலும சேதநருககுப பிறக்கும் ஜஞாநம ஸவயமஆாஜிததநமபோலே அதயாயாஸலபயமாயிருககும் ஆசாரயோபதேசம அடியாகத திருமநத்ரததால் பிறககும ஜஞாநம பைதருகதநமபோலே அநாயாஸலப்யமா யிருககுமெனகை *சாஸ்த்ரஜ்ஞாநம பஹுகலேசம புததேச்சலந காரணம, உபதேசாத் ஹரிம் புதவா விரமேத ஸாவ கர்மஸு* எனனககடவதிறே. இததால், சாஸ்தரஙகளிறகாட்டில் தத்ஸஙகரஹமான திருமநதரததுககு உணடான வைபவம சொல்லிற்றுயிற்று (7)

8. ஆனுல, சாஸதரங்களொழிநததாகிறது, பகவந் மந்தரந்தான் இதொனறுமனறே; பினனையும் பலவிலலையோ? எனகிற சஙகையிலே, மந்தராநதரஙகளிறகாடடில இதுககு உண்டான வைபவததை அருளிச் செயவதாகத திருவுள்ளமபறறி, 'பகவந மநதரஙகளதான அநேகங்கள' எனகிறுா

மூ. 8. பகவந் மந்த்ரங்கள தான் அநேகங்கள.

வ்யா — *ஆஸ்தாதே குணராசிவதம் குணபரீவாஹாதமநாம ஜநமநாம ஸஙகயா* *பஹவோ நருண கல்யாணகுணு. புதரஸய ஸநதிதே* *தாவநநத குணஸயாபி ஷடேவ ப்ரதமே குணு* *பஹுநி மே வயதீதாநி தவ சாஜுந* எனறும "எணணில தொல்புகழ" எனறும், ¶ "எநநினற யோனியுமாயப பிறநதாய" எனறும இத்யாதிகளிற் சொலலுகிற படியே பகவத குணங்களும குணபரீவாஹ ருபஙகளான அவதாரஙகளும அஸஙகயாதமாயிருககுமாபோலே அவறறை அநுபநதிததிருககும மநதர விசேஷங்களும் "அநநதா வை பகவநமந்த்ரா:" எனகிறபடியே அநேகஙகளா யிருககுமெனகை (8)

9. அவையெலலாநதான ஏகவாககமோ? எனன, 'அவைதான வயாபகஙகளெனறும அவ்யாபகஙகளென்றும் இரணடு வாககம' எனகிறுா,

மூ. 9. அவைதான, வயாபகஙகளென்றும அவயாபகங்களென்றும் இரணடு வாக்கம.

வ்யா :— அதாவது- ஸாவ வயாபகமான பகவதஸவருபததை பரதிபாதிககையாலே வ்யாபகஙகளெனறும, பகவதவதாரகுண சேஷடிதஙகளில் ஒரொனறை பரதிபாதிககையாலே அவயாபகங்களெனறும உபயவாககமாயிருககு மென்கை (9)

'வாக்கதவயமும தன்னிலொககுமோ?' என்ன, 'அவயாபகஙகளில் வயாபகஙகள் மூன்றும் சரேஷடஙகள' என்கிறுா

மூ 10. அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்.

வ்யா — அதாவது – அவ்யாபகங்களாய் இருந்துள்ள ஸகல மந்த்ரங்களிலும் * நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு ப்ரசோதயாத் * என்று விஷ்ணு காயத்ரியில் ஓதப்படுகிற வ்யாபக மந்த்ரங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்களாயிருக்கு மென்கை (10)

11 ‘ இந்த வ்யாபக மந்த்ர த்ரயமும் தன்னிலொக்குமோ ’ என்ன, ‘ இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதானம் ’ என்கிறார்.

மூ 11 இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்.

வ்யா.— அதாவது – அவ்யாபகங்களிற் காட்டில் ச்ரேஷ்டமாயிருந்துள்ள இந்த வ்யாபக மந்த்ரங்கள் மூன்றிலும் வைத்துக்கொண்டு * நாராயணாய வித்மஹே * என்று ப்ரதமோபாத்தமாகையாலும், ஆத்தபூர்த்யாதிகளாலும், * நாஸ்தி சாஷ்டாக்ஷராத்பர * * ந மந்த்ரோஷ்டாக்ஷராத் பர * என்னும்படியான பெருமையையுடைய திருமந்த்ரம் ப்ரதாநமாயிருக்குமென்கை (11)

12 ‘ மற்றை வ்யாபகத்வயத்துக்கும் தாழ்வு ஏது ? ’ என்ன ‘ மற்றையவை யிரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு ’ என்கிறார்.

மூ 12 மற்றையவை யிரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு.

வ்யா — அதாவது – வாஸுதேவ விஷ்ணு சப்தங்களான மற்றை வ்யாபக மந்த்ரங்களிரண்டுக்கும், நாராயண சப்தம்போலே ஸ்வரூபரூபகுணாதிகளையெல்லாம் ப்ரதிபாதியாதே ஸ்வரூபமாத்ரத்தை ப்ரதிபாதிக்கையாலே, நிர்விசேஷசிந்மாத்ர வஸ்துவாதிகளான குத்ருஷ்டிகள் மிகவும் ஆதரித்துப்போருகையாகிற அசிஷ்டபரிக்ரஹமும், வ்யாப்யாத்யாஹாராதி ஸாபேக்ஷதையாகிற அபூர்த்தியும் உண்டென்கை “ ஷடக்ஷரி - வ்யாப்ய பதார்த்தங்களையும், வ்யாபநப்ரகாரத்தையும் வ்யாப்தி பலத்தையும் வ்யாபகனுடைய குணங்களையும் சொல்லாதே வ்யாப்திமாத்ர ப்ரகாசகமாகையாலே அபூர்ணம் வ்யாபநப்ரகாரத்தைச் சொல்லா நிற்கச் செய்தேயும், வ்யாப்ய பதார்த்தங்களுக்கு வாசகசப்தம் இல்லாமையாலும் * ஸர்வம் வஸதி * என்று ஆர்த்தபலத்தாலே ஸர்வசப்தம் புகுந்தாலும் அதில் குணம் அந்வயியாமையாலும், இனி, குணஸித்திக்காக பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டுகையாலும், வ்யாப்தி பலத்தைச் சொல்லாமையாலும், த்வாதசாக்ஷரியும் அபூர்ணம் இம்மந்த்ரம் அவைபோலன்றியிலே, வ்யாப்ய பதார்த்தங்களோடு வ்யாபநப்ரகாரத்தோடு வ்யாப்திபலத்தோடு வ்யாபகனுடைய குணங்களோடு வாசியற சாப்தமாகக் காட்டுகையாலே, அவற்றிற்காட்டில் இதுக்கு ஆர்த்தபௌஷ்கல்ய நிபந்தநமான ஆதிக்யம் உண்டு ” என்று, மற்றை வ்யாபக மந்த்ரங்களிரண்டினுடைய அபூர்த்தியையும் திருமந்த்ரத்தினுடைய ஆர்த்தபூர்த்தியையும் ஸுஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே. (12)

13 இது தனக்கு சிஷ்டபரிக்ரஹ முண்டோவென்னவருளிச் செய்கிறார் ‘ இத்தை ’ என்று தொடங்கி

மூ 13 இத்தை வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்

வ்யா — அதாவது-விஷ்ணு காயத்ரியிலே வ்யாபகமந்த்ரத்ரயத்தையுஞ் சொல்லுகிற வளவில் ப்ரதமத்திலே நாராயண சப்தத்தை ப்ராதாந்யேந ப்ரதிபாதிக்கையாலும் * விச்வம் நாராயணம் * என்று தொடங்கி, * நாராயண பரம்ப்ரஹ்ம தத்வம் நாராயண பர , நாராயண

பரோஜ்யோதிராதமா நாராயண பர , யசச கிஞசிஜஜகத யஸமிந தருசயதே சரூயதேபி வா, அநதாபஹிசச ததஸாவம வயாபய நாராயணஸ் ஸதித * எனறு ஸகல வேதாநத ஸாரபூத மான நாராயணுநுவாகததிலும, *ஏகோ ஹ வை நாராயண ஆஸீநந பரஹமா நேசாநோ நேமே தயாவாபருதிவீ * எனறு மஹோபநிஷததிலும *சக்ஷுசச தரஷடவயஞ்ச நாராயண சரோதரஞச சரோதவ்யஞச நாராயண * என்று தொடங்கி, *திசச்ச பரதிசசச நாராயண * எனறு முடிவாக நடுவு அடைய ஸுபாலோபநிஷததிலும, *யஸயாதமா சரீரம யஸய பருதிவீ சரீரம * எனறு தொடஙகி *யஸய மருதயு சரீரம * எனகிறது ாருக நடுவுளள பாயாயஙகள் தோறும *ஏஷ ஸாவபூதாந்தராதமா அபஹதபாப்மா திவயோ தேவ ஏகோ நாராயண:* என்று அநதாயாமி பராஹமணததிலும வாஸுதேவ விஷ்ணு சபதஙகளை அநாதரிதது நாராயண சபததையிட்டு பகவதஸவருபாதிகளை நிாததேசிககையாலும அபௌருஷேயமாய நிதயநிாததோஷமாய ஸவத: பரமாணஙகளான வேதஙகளும விரும்பிறறின. *யதா ஸா வேஷு தேவேஷு நாஸதி நாராயணுதபர , ததா ஸாவேஷு மநதரேஷு நாஸதி சாஷடாக்ஷராதபர * *பூதவோாதவபாஹுரதயாதர ஸதயபூாவம் பரவீமி வ ; ஹே புதர சிஷயாசசருணுத ந மநதரோஷ்டாக்ஷராத பர * *ஸாவ வேதாநதஸாராாததஸ ஸமஸா ராாணவதாரக , கதிரஷடாக்ஷரோ நருணும அபுநாபபவகாங்க்ஷிணும * *ஆாததா விஷண்ணு சிதிலாச்ச பீதா கோரேஷு ச வயாதிஷு வாததமாநா , ஸங்கீாதய நாராயண சபதமாதரம விமுகத துகாஸ ஸுகிநோ பவநதி * *நாராயணேதி சபதோஸதி வாகஸதி வசவாததிநீ, ததாபி நரகே கோரே பதநதீதி கிமதபுதம * *கிம ததரபஹுபிாமநதரை கிம ததர பஹுபிாவரதை , நமோ நாராயணுயேதி மநதர: ஸாவாாதத ஸாதக * இதயாதிகளாலே வேதாாததோபபருமஹணஙகளாயிருககிற ஸவபரபநதஙகளிலே பல விடஙகளிலும இததை சலாகிததுககொணடு சொலலுகையாலே, வேதாாதத விசதீகரண பரவருததரான வயாஸாதி பரமருஷிகளும விரும்பிஞாகள, "வணபுகழநாரணன்" "செலவநாரணன" என்று தொடங்கி "வாழபுகழ நாரணன" எனறு முடிவாக, ஆதிமதயாவஸாநமாக நமமாழவாா அருளிசசெயகை யாலும, "நாடுநகரமும நனகறிய நமோ நாராயணுய" எனறு தொடஙகி "ஓவாதே நமோ நாரணு வெனபன" எனறு பெரியாழவாரும, "நாததழுமபெழநாரணு" என்று தொடங்கி "நலநதிகழநாரணன" எனறு பெருமாளும, "நானமுகனை நாராயணன படைததான" எனறு தொடஙகி "எடடெழுதது மோதுவாாகள வலலா வானமாளவே" என்று திருமழிசைபபிரா னும, "நான கண்டுகொணடேன நாராயணு வெனனும நாமம" எனறு உபகரமததைசயிலே ஒருகால் சொனனுபபோலே ஒனபதினகால சொலலி "நாராயணுவோ ! மணிவணணு ! நாகணை யாய ! வாராய" எனறு திருமஙகையாழவாரும உபகரமததோடு உபஸமஹாரததோடு வாசி யற அருளிச செயகையாலும், "நனமாலைகொணடு நமோ நாரணு வெனனும சொனமாலை கறறேன" எனறும "நாரணுவெனரேவாதுரைககு முரையுணடே" எனறுமே, "ஞானசசுடா விளககேறறினேன நாரணற்கு" "நாரணனதன நாமஙகள" "பகற்கணடேன நாரணனைக் கணடேன்" என்றும், "நாமம் பல சொல்லி நாராயணு" என்றும் முதலாழவாாகளும அருளிச செயகையாலும, "மயாவறமதிநல மருளினன" எனகிறபடியே நிாஹேதுக பகவத் கடாக்ஷத தாலே ஸமதிகத ஸமஸத வஸது வாஸதவரான ஆழவாாகளெலலாரும விருமபிஞாகள. இதர மநதரஙகளை அநாதரிதது இததையே தநதாமுககுததஞசமாக அநுஸநதிதது, உபதேச வேளையிலும தநதாமைபபற்றினவாகளுககும இததையே உஜஜீவநஹேதுவாக உபதேசிததுப போருகையாலே, அவவாழவாாகளைபபின சென றஆசாாயாகளெலலாருமவிருமபிஞாகளெனகை

இததால மநத்ராநதரஙகளிற காடடில இம் மநதரததுக்குண்டான வைபவஞ சொல்லிறறுயதது (13)

14 இனி வாசயநதனனிலும இதுக்குண்டான வைபவததை அருளிசசெயகிறுா 'வாச்ய பரபாவம் போலன்று வாசக பரபாவம' எனறு

மூ 14 வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்.

வ்யா :— அதாவது-இதுக்கு வாச்யனாயிருந்துள்ள ஈச்வரனுடைய பெருமைபோலன்று தத்வாசகமான இதின் பெருமையென்றபடி (14)

15 அதுதான் ஏது? என்னவருளிச் செய்கிறார் 'அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்றுதவும்' என்று

மூ 15 அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்று உதவும்

வ்யா — அதாவது-இதுக்கு வாச்யனானவன் ஸந்நிஹிதனன்றிக்கே தூரஸ்தனாயிருந்த காலத்திலும் வாசகமான இது ஆஸந்நமாய் நின்று தன்னை வசித்தவர்கள் அபேக்ஷிதங்களை ஸாதித்துக் கொடுக்குமென்கை (15)

16 'இப்படி வாச்யன் தூரஸ்தனாயிருக்க, வாசகம் உதவின இடம் உண்டோ?' என்ன அருளிச் செய்கிறார் 'த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே' என்று.

மூ. 16. த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே.

வ்யா — அதாவது — மஹாஸதஸ்ஸிலே துச்சாஸனன் வஸ்த்ராபஹாரம் பண்ணுகிறபோது * மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி * என்று முன்பே ஸ்ரீ வஸிஷ்டமஹர்ஷி சொல்லி வைத்ததை நினைத்து, * சங்கசக்ர கதாபாணே த்வாரகா நிலயாச்யுத, கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷ மாம் சரணாகதாம் * என்று சரணம் புகுந்த த்ரௌபதிக்கு அவ்வாபத்திலே * கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம் தூரவாஸிநம் * என்கிறபடியே வாச்யனான க்ருஷ்ணன் தூரஸ்தனாயிருக்கச் செய்தேயும் வஸ்த்ரத்தை வாத்திப்பித்துக் கொடுத்தது அவ்வவதாரத்துக்கு வாசகமான கோவிந்தனென்கிற திருநாமமிறே யென்கை நாராயண சப்தார்த்தத்தில் ஏகதேசத்துக்கு வாசகமான ஒரு திருநாமம் செய்தபடி கண்டால், இதன் ப்ரபாவம் கிம்புநாந்யாயஸித்தமிறே யென்று கருத்து (16)

17 இன்னமும் ஒரு ப்ரகாரத்தாலே இதன் வைபவத்தை அருளிச் செய்கிறார் 'சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும்' என்று தொடங்கி

மூ 17 சொல்லும் க்ரமமொழியச்சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது

வ்யா .— அதாவது — ஏதேனும் ஒரு மந்த்ரமும் தன்னைத் தஞ்சமாக விச்வஸித்துச் சொன்னவர்களுக்கொழியத் தன் கார்யம் செய்யாதேயாகிலும், இது அங்ஙனன்றிக்கே தன்னைத் தஞ்சமாக விச்வஸித்துச் சொல்லுகையாகிற க்ரமம் ஒழிய, * ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச ஸ்தோபம் ஹேலநமேவ வா * என்கிறபடியே சொல்லிலும், சொன்னவர்களுக்கு ரக்ஷகமாகையாகிற தன் ஸ்வரூபத்தில் நழுவ நில்லாதென்கை (17)

18 இனி, இதன் ஸர்வாபேக்ஷித ப்ரதத்வமாகிற வைபவத்தை அருளிச் செய்கிறார் 'இதுதான்' என்று தொடங்கி

மூ 18 இதுதான் "வலந்தரும்" என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்

வ்யா :— அதாவது — இம்மந்த்ரந்தான் "குலந்தரும்" என்று தொடங்கி ஆழ்வார் அருளிச் செய்தபடியே, அதிகாராநுகுணமான அபேக்ஷிதங்களையெல்லாம் கொடுக்குமென்கை. (18)

19 அததை விசதீகரிககிறா • ஐசவாய ' இதயாதியாலே.

மு 19 ஐசவாய கைவல்ய பகவல்லாபங்களே ஆசைபபட்டவர்களுக்கு அவற்றைக் கொடுககும்.

வயா — அதாவது – * ஐஹலௌகிக மைசவாயம ஸவாக்காதயம பாரலௌகிகம, கைவலயம பகவநதஞச மநதரோயம் ஸாதயிஷயதி * எனகிறபடியே ஐஹிகமாயும பார லௌகிகமாயுமிருககும ஐச்வாயததையும் ஆதமபராபதி ரூபமான கைவலயததையும் பரம புருஷாாத்தமான பகவல லாபததையும ஆசைபபட்ட அதிகாரிகளுககு ஜபஹோமாதிகளாலே ஸவயம ஸாதநமாய நினறு, அவவோ புருஷாாததஙகளைக கொடுக்கு மெனகை (19)

20 இனி காமாதயுபாய ஸஹகாரிதவரூபமான இதன வைபவததை அருளிச செயகிறா ' காமஜஞாந ' இதயாதியாலே

மூ 20 காமஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவாகளுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத தலைக்கட்டிக் கொடுக்கும்.

வ்யா — அதாவது-காமயோகததில இழிநதவாகளுககு ஜபஹோமாதிகளாலே தன்னை ஸஹாயமாகக கொளளுமளவில, காமயோகாரமப விரோதியான பாபத்தைப போககி அநதக காமததினுடைய அவிச்சேதாபாதகமாயக கொணடு அததைத தலைககட்டிககொடுககும, பரத மததிலே, ஜஞாந யோகததிலே இழிநதவாகளுககுத தனனை ஸஹாயமாகக கொளளுமளவில, கர்மஸாதயமான ஜஞாநாரம்ப விரோதி பாபநிவருததியைபபணணி அநத ஜ்ஞாநததுககு நாடோறும அதிசயத்தைப பண்ணுநினறுகொணடு, அத்தைத் தலைக் கட்டிககொடுககும். பக்தியோகத்திலே இழிந்தவாகளுககுத தனனை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், பக்தியோகா ரம்ப விரோதியான பாபத்தைப போககி பகதிவிவருததி ஹேதுவாயககொண்டு அத்தைத தலைககட்டிக்கொடுககுமென்கை ... (20)

21. இஙஙனனறிககே, பரபநநாககு இது செயயும உபகார வைபவததை அருளிச் செயகிறா ' பரபததியிலே ' என்று தொடஙகி

மூ. 21. ப்ரபததியிலே இழிந்தவாகளுககு ஸ்வருப ஜ்ஞாநததைப் பிறப்பித்துக் காலக்ஷேபததுக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

வயா — அதாவது – கீழசசொனனவைபோலே துசசகமுமாய ஸவரூபவிருததமுமாய இருக்கையனறிககே ஸுசகமுமாய ஸவரூபாநுரூபமுமான பரபததயுபாயததிலே இழிநதவாக ளுககு, ததநுரூபமான பகவதபாரதநதாயரூப ஸவரூபஜஞாநததை விசதமாகப பிறபபிதது ஆததாநுஸநதாநாதிகளாலே போதுபோககுகைககும ஹேதுவாய, " எனக்கென்றும் தேனும்பாலுமமுதுமாய திருமாலதிருநாமம " எனகிறபடியே பரதிபாதயவஸ்துவைபபோலே ஸ்வயம போகயமாயிருககையாலே போகததுககும் ஹேதுவாயிருககுமென்கை. (21)

22. இனி ஜஞாதவய ஸகலாாதத பரதிபாதகதவமாகிற இதன வைபவததை அருளிச செயகிறா ' மறறெலலாம் பேசிலும ' எனறு தொடஙகி.

மூ. 22. " மற்றெல்லாம் பேசிலும் " என்கிறபடியே அறியவேண்டும் அாத்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு.

வயா — அதாவது – “ நின திருவெடடெழுததுங கறறு—மறறெலலாம பேசிலும் ” எனகிறபடியே, ஆதமோஜஜீவநததுககு உடலாக அறியவேணடும அாததவிசேஷஙகளெல லாம் இமமநதரததுககுளளே உணடெனகை (22)

23 ‘ அறியவேணடும அாததமெலலாம ஆகிறது எது ? ’’ எனனும ஆகாஙகைஷயிலே அருளிசசெயகிறா ‘ அதாவது அஞசாததம ’ எனறு.

மூ 23 அதாவது – அஞ்சாததம

வயா — ஸவஸவரூப பரஸவரூப புருஷாாததஸவரூப உபாயஸவரூப விரோதிஸவ ரூபஙகளாகிற அாததபஞசகமும எனறபடி *பராபயஸய பரஹமணோ ரூபம பராபதுச்ச பரதயகாதமந , பராபதயுபாயம பலம பராபதேஸ ததா பராபதிவிரோதிச, வதநதி ஸகலா வேதாஸ ஸேதிஹாஸபுராணகா , முநயசச மஹாதமாநோ வேதவேதாாததவேதிந * எனகிற படியே, ஸகல வேதசாஸதரஙகளும பரதிபாதிபபது இவவாதத பஞசகததையுமாகையாலே ’ ததஸஙகரஹமான இமமநதரததுககும பரதிபாதயம இதுவேயிறே இமமநதரநதான பரண வததாலே பரதயகாதம ஸவரூபததையும, நமஸஸாலே விரோதயுபாய ஸவரூபஙகளையும், நாராயணபதததாலே பரஸவரூபததையும, அதில சதுாததியாலே பலஸவரூபததையும பரதி பாதிககக கடவதாயிறே இருபபது (23)

24 இமமநதராாதத வைபவததை அருளிசசெயகிறா மேல ‘ பூாவாசாாயாகள ’ எனறு தொடஙகி

மூ 24 பூாவாசாாயாகள இதில அாததம அறிவதறகு முனபு, தஙகளைப பிறநதாாக ளாக நினைததிராாகள , இதில அாததஜஞானம் பிறந்த பின்பு, “ பிறநதபின மறநதிலேன ” என்கிறபடியே இததையொழிய வேறொனறுல காலக்ஷேபம பணணியறியாாகள.

வயா — அதாவது - நாதயாமுந யதிவராதிகளான நம பூாவாசாாயாகள, ‘ அனறு நான பிறநதிலேன ’’ எனகிறபடியே இமமநதரததில அாததமறிவதறகு முனபு தஙகளைப பிறநதாாகளாக நினைததிராாகள , இதில அாததஜஞாநம தஙகளுககுணடான பினபு ‘ பிறநதபின மறநதிலேன ’ எனறு ஆழவாா திவயஸூகதியில சொலலுகிறபடியே இமமநத ராாததததையொழிய மறறொனறுல காலக்ஷேபம பணணியறியாாகளெனகை வேதசாஸத ரஙகள, ஆழவாா அருளிச செயலகள இவறறுல போதுபோககும போதும இமமநதராாத ததததை உடகொணடே அநுஸநதிககையாலே, (இததையொழிய வேறொனறுல காலக்ஷேபம பணணியறியாாகள) எனனத தடடிலலை (24)

25 வாசககசகதி ஸாவததையும ஸாகிததுக கொடுககவறறுயிருகக, இதினுடைய வாசயத திலே இவாகள ஊனறுகைககு ஹேதுவேதெனன அருளிசசெயகிறா, ‘ வாசகததிறகாடடில ’ எனறு தொடஙகி

மூ 25 வாசகததிறகாட்டில வாசயததிலே ஊன்றுகைககடி, ஈசவரனே உபாயோபேயமெனறு நினைததிருக்கை

வயா — அதாவது – ஸாவபலததுககும ஸவயம ஸாதநமாயும, ஸாதநாநதரஙகளுக் கும ஸஹகாரியாய நினறு தலைககட்டிக கொடுததும போருகிற இதினுடைய வாசகசக்திதானே அமைநதிருககசசெயதே, அதிலுஙகாடடில கீழசசொனனபடியே, இமமநதரததினுடைய வாச யததிலே பூாவாசாாயாகள ஊனறுகைககடி, உபேயாநதரபராாய இததை ஸாதநமாகக

கொண்டு ஸாதித்தல, உபாயாந்தரபரராய இத்தை ஸஹகாரியாகக கொள்ளுதல் செய்யுமவா களைபபோலன்றிக்கே, உபாயோபேயங்களிரண்டும ஈசவரனே யென்று பரதிபத்திபண்ணி யிருக்கையென்றபடி.

ஆக, " திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி " என்று தொடங்கி இவ்வளவும —வாயவந்தபடி அநுஸந்திக்கவொண்ணாதபடியான இதனுடைய கௌரவத்தையும், ஈசவரன் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையால வந்த ஏற்றத்தையும், ஸகலசாஸ்த்ரங்களிலும் ஸகலமந்த்ரங்களிலும வாசயந்தனனிலுங்காட்டில் இதுக்கு உண்டான பெருமையையும், அக்ரமமாகச சொல்லிலும் தனகாரயம செய்யும ஆதிக்யத்தையும், அபேக்ஷித ஸகலபலப்ரதத்வரூப மாஹாத்ம்யத்தையும், காமாத்யுபாய ஸஹகாரித்வரூபமான உத்காஷத்தையும ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகத்வயாவந்த மாஹாத்ம்யத்தையும், ஏதத்ப்ரதிபாத்ய அர்த்தகௌரவ விசேஷத்தையும் அருளிச்செய்கையாலே, இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை எல்லாரும் அறியுமபடி தாசிப்பித்தருளினாராயிற்று (25)

26. இனிமேல் இமமந்த்ரத்துக்கு வாக்யார்த்தம் இரண்டுபடியாக அருளிச் செய்கிறா ' இதுதன்னில் ' என்று தொடங்கி.

மூ. 26. இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் – ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் பலமுமென்னவுமாம்.

வ்யா — அதாவது-இமமந்த்ரந்தனனில சொல்லுகிற அர்த்தம்-இவவாத்மாவினுடையநு சேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும, அந்த ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள கைங்கர்யமாகிற ப்ராப்யமுமாம. அன்றிக்கே, சேஷத்வமாகிற ஸ்வரூபமும, அந்த ஸ்வரூபா ரூபமான உபாயமும, உபாயலப்யமான பலமும் என்று சொல்லவுமாமென்கை. இதில ப்ரதம யோஜனையில் ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும, நாராயணபதத்தாலே ப்ராப்யமும சொல்லுகிறது அநந்தரயோஜனையில ப்ரணவத்தாலே சேஷத்வமும, நமஸ்ஸாலே உபாயமும, நாராயணபதத்தாலே பலமும சொல்லுகிறது (26)

27 ' பலவேஷந்தானிருக்கும்படி எங்ஙனே ? ' என்ன, அருளிச செய்கிறா ' பலமிருக் கும்படி ' என்று தொடங்கி

மூ. 27. பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும ஆர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்.

வ்யா :— அதாவது – இவவாத்மாவுக்கு ப்ராப்யமான பலந்தான ஆர்சசிராதிமார்க்கத் தாலே பரமபதத்திலேபோய் பரிபூர்ண பகவதநுபவத்தைப் பண்ணி, அவவநுபவஜநித ப்ரீதி ப்ரேரிதனாய்க்கொண்டு பண்ணும அசேஷசேஷவருத்தியாகையாலே, அதிருக்கும்படியை ஸங்க்ரஹேண ப்ரமேய சேகரமாகிற ப்ரபந்தத்திலும விஸ்தரேண ஆர்சசிராதிகதியாகிற ப்ரபந்தத்திலும விசதமாகச சொன்னோம, அவற்றிலே கண்டுகொள்வதென்கை (27)

28. இனி இமமந்த்ரத்துக்கு ப்ரதிபதம அர்த்தம அருளிச்செய்வதாகத் திருவுள்ளம பற்றி, ப்ரதமம இதினுடைய அக்ஷரஸங்க்யையையும பதஸங்க்யையையும அருளிச்செய்கிறா ' இதுதான ' என்று தொடங்கி.

மூ. 28. இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய மூன்று பதமாயிருக்கும்.

வ்யா — அதாவது – இமமந்த்ரந்தான *ஓமித்யேகாக்ஷரம, நம இதி த்வே அக்ஷரே; நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரஞ் சந்தஸா காயத்ரீசேதி *, *ஓமித்யக்ரே வ்யாஹரேத, நம இதி பச்சாத. நாராயணாயேத்யுபரிஷ்டாத * என்கிறபடியே எட்டுத்திரு

லோகாசார்யபதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம்,
ஜ்ஞாநவைராக்யஜலதிம் வந்தே ஸௌம்யவரம் குரும்.

ஸ்ரீ ஜிஹ்வாவததீசதாஸம் அமலம் அசேஷசாஸ்த்ரவிதம்,
ஸுந்தரகுருவரகருணாகந்தளித ஜ்ஞாநமந்திரம் கலயே

ஸ்ரீவசநபூஷணத்துக்கே உரிய தனியன்கள்

புருஷகாரவைபவஞ்ச ஸாதநஸ்ய கௌரவம்
தததிகாரிக்ருத்யம் அஸ்ய ஸத்குருபஸேவநம்,
ஹரிதயாமஹைதுகீம் குரோருபாயதாஞ்ச யோ
வசநபூஷணேவதஜ் ஜகத்குரும் தமாச்ரயே

ஸாங்காகிலத்ரவிட ஸம்ஸ்க்ருதரூப வேத
ஸாரார்த்த ஸங்க்ரஹ மஹாரஸ வாக்யஜாதம்,
ஸர்வஜ்ஞலோககுருநிர்மித மார்யபோக்யம்
வந்தே ஸதா வசநபூஷண திவ்யசாஸ்த்ரம்.

அகுண்டோத்கண்ட வைகுண்டப்ரியாணாம் கண்டபூஷணம்,
குருணாஜகதாமுக்தம் வ்யாபதாம் வசநபூஷணம்.

பேறுதருவிக்குமவள் தன் பெருமை யாறுபெறுவான் முறையவன்,
கூறுகுருவைப்பணுவல் கொள்வதிலையாகிய குளிர்ந்த வருள் தான்,
மாறிலபுகழ்நற்குருவின் வண்மையொடெலாம் வசன பூடணமதில்.
தேறிடநமக்கருள் முடும்பையிறையவன் கழல்கள் சேரென்மனனே.

திருமாமகள்தன் சீரருளேற்றமும் திருமால்திருவடி சேர்வழிநன்மையும்
அவ்வழி யொழிந்தன வனைத்தின் புன்மையும் மெய்வழியூன்றிய
[மிக்கோர்பெருமையும்
ஆரணம்வல்லவ ரமருநன்னெறியையும் நாரணனருள்தரு நற்குருநீதியும்
சோதிவானருள் தூயமாகுருவின் பாதமாமலர் பணிபவர்தன்மையும்
தீதிலவானவர் தேவனுயிர்களை யேதுமின்றி யெடுக்கும்படியையும்
மன்னியவின்பமு மாகதியுநற்குரு வென வுணர்பெறு மின்பொருடன்னையும்
அசைவிலாவேத மதனுள்ளனைத்தையும் வசனபூடண வழியாலருளிய
மறையவர்சிகாமணி வண்புகழ்முடும்பை யிறையவனெங்கோ னேருலகாரியன்
தேனமலர்ச்சேவடி சிந்தைசெய்பவர் மாநிலத்தின்பமதெய்தி வாழ்பவரே.

லோகாசார்யக்ருதே லோகஹிதே வசநபூஷணே,
தத்வார்த்த தர்சிநோலோகே தந்நிஷ்டாச்ச ஸுதுர்லபா:

ஜகதாசார்யரசிதே ஸ்ரீமத்வசநபூஷணே,
தத்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்டாம் தேஹிநாத யதீந்த்ர மே.

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையில்

# ஸ்ரீவசநபூஷண வ்யாக்க்யாநாவதாரிகை

---

ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில், பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப் படுகிற ஆகாரத்ரயமும் ஸர்வாத்ம ஸாதாரணமாகையாலே, *யத்ரர்ஷய:ப்ரதமஜா யே புராணா:* என்கிற நித்யஸூரிகளோபாதி, சுத்த ஸத்வமான பரமபதத்திலே நித்யாஸங்குசிதஜ்ஞாநராய்க்கொண்டு, நிரந்தர பகவதநுபவஜநித நிரதிசயாநந்த த்ருப்தராயிருக்கைக்கு யோக்யதை யுண்டாயிருக்கச்செய்தேயும், *அநாதிமாயயா ஸுப்த:* என்கிறபடியே திலதைலவத் தாருவஹ்நிவத் துர்விவேசத்ரிகுணத்ரவ்யாநாதி பகவந்மாயாதிரோஹித ஸ்வப்ரகாசராய், அநாத்யவித்யாஸஞ்சிதாநந்த புண்யாபுண்ய கர்மாநுகுணமாக ஸுர நர திர்யக் ஸ்தாவர யோநிகள்தோறும் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து, பிறந்த பிறந்த ஜந்மங்கள் தோறும் தேஹாத்மாபிமாநமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்ய சேஷத்வமுமாகிற படுகுழிகளிலே விழுந்து, தத்ததநுகுண ஸாத்ய ஸாதநங்களிலே மண்டி, *யாதானும்பற்றி நீங்கும்விரதத்தை* யேறிட்டுக்கொண்டு, ப்ராப்தசேஷியாய் பரமப்ராப்ய ப்ராபகபூதனானவனுக்கு அத்யந்தவிமுகராய், கர்ப்ப ஜந்ம பால்ய யௌவந வார்த்தக மரண நரகங்களாகிற அவஸ்தாஸப்தகத்திலே நிரந்தரவித்த விவித நிரவதிக து:க்கங்களை யநுபவித்துத் திரிகிறவிஸம்ஸாரி சேதநரிலே, ஆரேனும் சிலர்க்கு, ஜாயமாநகால பகவத் கடாக்ஷ விசேஷத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலைமடிந்து, ஸத்வம் தலையெடுத்து, மோக்ஷ ருசியுண்டானாலும், தத்வ ஹித புருஷார்த்தங்களை உள்ளபடி அறிந்தே உஜ்ஜீவிக்கவேண்டுகையாலும், அவை தன்னை சாஸ்த்ர முகத்தாலே அறியப்பார்க்குமளவில், சாஸ்த்ரங்களில் தலையான வேதமானது *அநந்தா வை வேதா:* என்கிற படியே அநந்தமாய், ஸ்வார்த்தநிர்ணயத்தில் ஸர்வசாகா ப்ரத்யய ந்யாயாதி ஸாபேக்ஷமாயிருக்கையாலே அல்பமதிகளுக்கு அவகாஹித்து அர்த்தநிச்சயம்பண்ணவரிதாகையாலும், அநந்த வேதபாரகராய ஸ்வயோகமஹிம ஸாக்ஷாத்க்ருத பராவர தத்வ விபாகரான வ்யாஸாதி பரமர்ஷிகளாலே, ப்ரணீதங்களாய் வேதோபப்ர்ம்ஹணங்களான ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களிலும் ஸாராஸாரவிவேக சதுரர்க்கொழிய தாத்பர்யாம்சம் தெரியாமையாலும், அவைபோலன்றிக்கே ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநகாமனான ஸர்வேச்வரன், தானே ஆசார்யனாய் வெளிப்படுத்தின ஸகல வேத ஸாரமான ரஹஸ்யத்ரயமும் அதிஸங்க்ரஹதயா அதிகூடார்த்தங்களாகையாலும், பகவதாகஸ்மிக கடாக்ஷவிசேஷத்தாலே, மயர்வறமதிநலமருளப் பெற்று ஸகலவேத சாஸ்த்ர தாத்பர்யங்களையும் கரதலாமலகமாக ஸாக்ஷாத்கரித்த பராங்குச பரகாலாதிகளான ஆழ்வார்களருளிச்செய்த த்ராவிடவேத ததங்கோபாங்கங்களான திவ்யப்ரபந்தங்களும் அளவிலிகளால் அர்த்ததர்சநம் பண்ணப் போகாமையாலும், ருசிபிறந்த சேதநரிழந்துபோம்படியிருக்கையாலே ஆழ்வாருடைய நிர்ஹேதுக கடாக்ஷலப்த திவ்ய ஜ்ஞாநரான நாதமுனிகள் தொடக்கமாக ஸத்ஸம்ப்ரதாய ஸித்தராய் ஸகல சாஸ்த்ர நிபுணராய் பரமதயாளுக்களான பூர்வாசார்யர்கள் அந்த வேதாதிகளிலர்த்தங்களை ஸங்க்ரஹித்து மந்தமதிகளுக்கும் ஸுக்ரஹமாம்படி ப்ரபந்தீகரித்து முபதேசித்தும் போந்தார்கள். அப்படியே ஸம்ஸாரிசேதனரிழவு ஸஹிக்கமாட்டாத பரம க்ருபையாலே தது'ஜ்ஜீவநார்த்தமாகத் தாமும் பலப்ரபந்தங்க

ளருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர், ஆசார்யபரம்பரா ப்ராப்தஙகளானவர்த் தங்களில் அவர்கள் தாஙகள கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக வுபதேசித்துப் போந்தவையாய அருமை பெருமைகளைபபற்ற இதுககு முன்பு தாமும ப்ரகாசிப்பி யாம லடககிககொணடு போநதவையுமான அர்த்தவிசேஷஙக ளெலலாத்தையும, பினபுள்ளாரு மிழககவொணணாதெனகிற தமமுடைய கருபாதிசயததுககு மேலே, பெருமாளும ஸவப்நத்திலே திருவுளளமா யருளுகையாலே, ஸ்ரீ வசநபூஷணமாகிற இப்ப்ரபநதமுகேந வெளியிடடருளுகிறார்.

முனபே பேரருளாளப் பெருமாள் தமமுடைய நிர்ஹேதுக கருபையாலே மணற்பாககத்திலே இருப்பாரொரு நமபியாரை விசேஷ கடாக்ஷம் பணணியருளி, தஞ்சமாயிருப்பன சில வர்தத விசேஷங்களைத் தாமேயவர்கணு ஸவப்நமுகேந வருளிச செயது, நீர்போய இரண்டாற்றுககும நடுவே வர்ததியும், இனன முமககிவவர்த்தஙக ளெலலாம விசதமாக நாமஙகே சொலலுகிறோமெனறு திருவுளளமாயருளுகையாலே, அவரிஙகேவந்து பெரியபெருமாளை ஸேவித்துககொணடு, தமககு முனபு அஙகருளிச செய்தவர்த்தங்களையும அசலறியாதபடி அநுஸநதித்துககொணடு,ஏகாந்தமானதொரு கோயிலிலே வர்த்தியாநிறககசசேயதே, தமமுடைய ஸ்ரீபாதத்துக கநதரஙகரான முதலிகளும தாமுமாக பிளளை ஒரு நாள அநத கோயிலிலே யாத்ருச்சிகமாகவெழுந் தருளி அவவிட மேகாநதமாயிருககையாலே ரஹஸ்யார்த்தங்களை அவர்களுககருளிச செயதுகொண் டெழுந்தருளியிராநிற்க, அவை, தமககுப் பேரருளாளப்பெருமா ளருளிசசெயத வர்த்தவிசேஷஙகளா யிருககையாலே அவர் பேரவித்தராய உளளி னினறும புறப்பட்டுவந்து பிளளை ஸ்ரீபாதத்திலே விழுந்து, அவரோ நீரெனன, ஆவதேதெனறு பிளளைகேட்டருள, பேரருளாளப் பெருமாள தமககிவவர்த்தஙகளை ப்ரஸாதித்தருளினபடியையும, இததேசத்திலே போரவிடடருளினபடியையும, இனனமுமககஙகே விசதமாகச சொலலுகிறோமெனறருளிசசெய்தபடியையும விண ணப்பஞ்செயயக கேடடு மிகவும ஹருஷடராய அவரையுமபிமாநிததருள, அவருமங குததைககு அநதரஙகராயவர்த்திககிறநாளிலே, பெருமாள அவாககு ஸவப்நததிலே இவவர்த்தஙகள மறந்துபோகாதபடி இவறறையொருப்ரபந்தஸதமாககச சொனனோ மெனறு நீர் பிளளைககுச சொலலுமெனறு திருவுளளமாக, அவரிப்படி பெருமாள திருவுள்ளமாயருளினாரெனறு விண்ணப்பஞ் செய்ய, ஆனால அப்படி செயவோ மெனறு திருவுளளமபற்றி அநந்தரமிப்ரபநதமிடடருளினாரென்று ப்ரஸித்தமிறே. ரத்னப்ரசுரமான பூஷணததுககு ரத்நபூஷணமெனறு பேராமாப்போலே, பூர்வா சாரியர்களுடைய வசநப்ரசுரமாய அநுஸநதாதாககளுககு ஔஜ்ஜ்வலயகரமாயிருக கையாலே இதுககு வசநபூஷணமெனறு திருநாமமாயிற்று.

இப்ப்ரபந்தத்தில் *வேதார்த்த மறுதியிடுவது* என்று தொடஙகி *அத்தா லேயது முறபட்டது* எனனுமளவாக, வக்ஷ்யமாணார்த்த நிர்ணயக ப்ரமாண நிர்தேசம பண்ணுகிற தாகையாலே ப்ரயநதோபோத்காதம. *இதிஹாஸசரேஷ்ட்டம* என்று தொடஙகி *ப்ரபத்த்யுபதேசம பணணிறறு மிவளுககாக* என்னுமளவும் ஸாபராத சேதநருடைய ஸர்வாபராதங்களையும ஸர்வேசவரனை ஸஹிப்பித்து ரக்ஷிப்பிககையே ஸ்வரூபமான புருஷகாரவைபவமும, அநத புருஷகாரமும மிகையாம்படியான உபாய

வைபவமும சொல்லுகிறது. *ப்ரபத்திக்கு* என்று தொடஙகி* *ஏகாந்திவ்யபதேஷ்டவ்யஃ* எனனுமளவு மிவவுபாயவரணரூபப்ரபத்தியினுடைய தேசகாலாதி நியமாபாவம், விஷயநியமம், ஆசரய விசேஷம, இத்தை ஸாதநமாககில வருமவத்யம், இதினஸ்வரூபாங்கங்கள முதலானவறறைச் சேரச் சொலலி ப்ரபத்தவ்யனே உபாயமெனறு ஸாதிககையாலே பூர்வோகதோபாயசேஷமாகையால உபாயப்ரகரணம. இதில *ப்ராப்திக குகப்பானுமவனே* என்னுமளவும ப்ரதாந ப்ரமேயம; மேல் ப்ராஸங்கிகம. *உபாயத்துககு* எனறு தொடஙகி *உபேயவிரோதிகளுமாயிருககும்* என்னுமளவும், இவ்வுபாயத்தைககொண்டு உபேயத்தைப் பெறுவா னொருசேதநனுககு உபாயோபேயாதிகார ப்ரதாநா பேக்ஷிதஙகளையும, உபாயாந்தர தயாக ஹேதுககளையும், மற்றும த்யாஜயோபாதேயஙகளா யுளளவற்றையும விஸதரேண சொலலுகையாலே அதிகாரிநிஷ்டாகரமஞ சொலலுகிறது. *தானஹிதோபதேசம் பண்ணுமபோது* எனறு தொடஙகி *உகப்பு முபகாரஸமருதியும் நடககவேணும்* என்னுமளவாக, ஹிதோபதேசஸமயத்தில ஸ்வாசார்ய பாரதந்த்ர்யாதிகளான ஸதாசார்ய லக்ஷணம், ஸசிஷ்ய லக்ஷணம், தததுபயர் பரிமாற்றம், திமனங்கெடுத்த ஸவாசார்யவிஷயத்தில சிஷ்ய னுபகார ஸம்ருதி கரமம இவற்றைச சொல்லுகையாலே, ஸித்தோபாயநிஷ்டனுன வதிகாரியினுடைய ஸவாசார்யாநுவர்த்தந க்ரமஞ சொல்லுகிறது. *ஸவதோஷாநுஸந்தாநம பயஹேது* என்று தொடஙகி *நிவர்த்தக ஜ்ஞாநமபயஹேது* எனனுமளவாக, இவவதிகாரிககு அத்வேஷம தொடங்கி ப்ராப்தி பலமான கைஙகர்யபர்யந்தமாக வுண்டான பேறுகளுககெலலாம ஹேதுவாய, ஸ்வகர்மபயநிவர்த்தகமான பகவந் நிர்ஹேதுக கருபாப்ரபாவஞ் சொலலுகிறது. *ஸவதந்த்ரனை உபாயமாகத் தான பறறினபோதிறே* எனறு தொடஙகி. மேலெலலாம் மிககவேதியர் வேதத்தி னுட்பொருளான சரமபர்வநிஷ்டையை வெளளிதாகச சொலலுகிறது. *வேதார்த்தமறுதியிடுவது* எனறு தொடங்கி இவ்வர்த்தத்திலே தலைககட்டுகையாலே, இப்பரபநதத்தில சரமப்ரகரண ப்ரதிபாத்யமானவர்த்தம வேததாத்பர்யமெனனுமிடம் ஸமப்ரதிபந்நம. ஸ்ரீகீதைககு சரமசலோகமபோலே யிறே இப்ப்ரபநதத்துககு சரமப்ரகரணம. அஙகு, ஸாத்யோபாயங்களை யுபதேசித்துககொண்டுபோந்து, ஸ்வஸ்வாதந்த்ரய பீதனானவனுககு அவறறைத்தள்ளி ஸிததோபாயம காட்டப்பட்டது. இஙகு, ஸிததோபாயத்தைச சொலலிககொண்டு போந்து, ஈச்வரஸவாதநதர்யததுககஞ்சினவனுககு ப்ரதமபர்வத்தைத் தளளி சரம பர்வம காட்டப்பட்டது. ஆக இப்படி ஆறுப்ரகரணமாய, ஆறர்த்தப்ரதிபாதகமா யிருககும.

ஒனபது ப்ரகரணமாய், ஒனபதர்த்த ப்ரதிபாதகமா யிருககு மென்னவுமாமஃ அநத பக்ஷத்திலும ப்ரதமப்ரகரணம் பூர்வவத்.

மேல *ப்ரபத்திககு* என்று தொடஙகி *பகவத்விஷய ப்ரவ்ருத்தி சேரும* என்னுமளவும, பூர்வப்ரகரணோகதோபாய சேஷமாகையால் உபாயப்ரகரணம, *ப்ராபகாந்தரபரித்யாகத்துககும* என்று தொடங்கி *ஆகையாலே ஸ்வரூபமா யிருககும* எனனுமளவும உபாயாந்தர தோஷப்ரகரணம. இப்ப்ரகரணத்தில ப்ரபத்த்யுபாயவைலக்ஷண்யகதநம் ப்ராஸங்கிகம். *இவனவனைப்பெற நினைககும,

போது* என்று தொடங்கி *இடைச்சியாய்ப் பெற்று விடுதல் செய்யும்படியாயிருக்கும்* என்னுமளவும் ஸித்தோபாயநிஷ்டருடைய வைபவப்ரகரணம். *இப்படி ஸர்வப்ரகாரத்தாலும்* என்று தொடங்கி *உபேய விரோதிகளுமாயிருக்கும்* என்னுமளவும் ப்ரபந்ந திநசர்யா ப்ரகரணம் *தான் ஹிதோபதேசம் பண்ணும்போது* என்று தொடங்கி *சேதநனுடைய ருசியாலே வருகையாலே* என்னுமளவும், ஸதாசார்ய லக்ஷணப்ரகரணம். *சிஷ்யனென்பது* என்று தொடங்கி *உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்* என்னுமளவும் ஸச்சிஷ்யலக்ஷணப்ரகரணம் *ஸ்வதோஷாநுஸந்தானம்* என்று தொடங்கி *நிவர்த்தகஜ்ஞாநம் அபயஹேது* என்னுமளவும் பகவந் நிர்ஹேதுகவிஷயீகார ப்ரகரணம் *ஸ்வதந்த்ரனை* என்று தொடங்கி மேலடங்க சரமப்ராப்ய ப்ராபக ப்ரகரணம். இவ்விரண்டு க்ரமத்தையும் பற்றவிறே “பேறுதருவிக்குமவள் தன் பெருமை” “திருமாமகள் தன்” என்கிற தனியன்களிரண்டு மவதரித்தது ஆகையாலே இரண்டு ப்ரகாரமு மநுஸந்திக்கக் குறையில்லை.

இப்ப்ரபந்தந்தான் தீர்க்கசரணாகதியான திருவாய்மொழி போலே த்வய விவரணமா யிருக்கும். எங்ஙனே யென்னில், திருவாய்மொழியில் முதல் மூன்று பத்தாலே உத்தரகண்டார்த்தத்தையும், மேல் மூன்று பத்தாலே பூர்வகண்டார்த்தத்தையுஞ் சொல்லி, மேல் நாலு பத்தாலும் அவ்வுபாயோபயோகியான குணங்களையும், ஆத்மாத்மீயங்களில் தமக்கு நசையற்றபடியையும், அவனோடு தமக்குண்டான நிருபாதிகபந்தத்தையும், தாம் ப்ரார்த்தித்தபடியே பெற்றபடியையும் ப்ரதிபாதிக்கையாலே, தத்தநுரூபார்த்தங்களைச் சொல்லித் தலைக்கட்டினாப்போலே, இதிலும், ப்ரதமத்திலே புருஷகாரத்தையும், அநந்தரமுபாயத்தையும், அநந்தரம் ஏதத்துபாயாதிகாரி நிஷ்டையையுஞ் சொல்லுகையாலே பூர்வகண்டார்த்தத்தையும்; அவ்வதிகாரி நிஷ்டை சொல்லுகிறவளவில், உபேயாதிகாராபேக்ஷிதங்களைச் சொல்லுகிற இதுகளுள்ளே உத்தரகண்டார்த்தத்தையுஞ் சொல்லி, மேல் ப்ராந்த சேஷத்தாலும் தத்துபதேஷ்டாவான ஆசார்யனளவில் இவனுக்குண்டாக வேண்டும் ப்ரதிபத்த்யநுவர்த்தந ப்ரகாரங்களையும், இவனுக்கு மஹா விச்வாஸஹேதுவான பகவந்நிர்ஹேதுக க்ருபா ப்ரபாவத்தையும், வாக்ய த்வயோக்தோபாயோபேய சரமாவதியையுஞ் சொல்லித் தலைக்கட்டுகையாலே ஔபநாத்த ப்ரதிபாதகமான பக்ஷத்திலும், பூர்வவாக்யத்தில் க்ரியாபதோக்தமான ஸ்வீகாரம் உபாயாந்தரபரித்யாக பூர்வகமாயல்லதிராமையாலும், திநசர்யையும் அப்பதத்தில் சொல்லப்படுகிற வதிகாரிக்கே யுள்ளதாகையாலும், ஸதாசார்யலக்ஷணம் த்வயோபதேஷ்டாவான வாசார்யன்படி சொல்லுகிறதாகையாலும் த்வய விவரணமாக நிர்வஹிக்கக் குறையில்லை.

இப்படி த்வயவிவரணமான விதிலே, த்வயந்தன்னிற்போலே மற்றை ரஹஸ்யத்வயார்த்தங்களும் ஸங்க்ரஹேணோக்தங்களாயிருக்கும், எங்ஙனே யென்னில்.—

*அஹமர்த்தத்துக்கு* என்று தொடங்கி *அடியானென்றிறே* என்னுமளவாகவும், *ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமிறே ப்ரதாநம்* என்றும், ப்ரணவார்த்தஞ் சொல்லப்பட்டது. *ஸ்வயத்ந நிவ்ருத்தி* இத்யாதியாலும், *தன்னைத்தானே முடிக்கையாவது* என்று தொடங்கி *இப்படி ஸர்வப்ரகாரத்தாலும்* என்கிறதற்குக் கீழுள்ளத்தாலும் நமச்சப்தார்த்தஞ் சொல்லப்பட்டது. *பரப்ரயோஜநப்ரவ்ருத்தி*

இத்யாதியாலும் *உபேயத்துக்கிளையபெருமாளையும* இத்யாதியாலும *கைங்கர்யந் தான் பக்தி மூலமல்லாதபோது* இத்யாதியாலும த்ருதீயபதார்த்தஞ சொல்பட்டது. *அஜ்ஞானத்தாலே* இத்யாதியாலும, *ப்ராபகாநதரபரிதயாகத்துககும்* இத்யாதியாலும உபாயாநதர த்யாகத்தை ஸஹேதுகமாகச சொலலுகையாலே. தத்த்யாஜ்யதையையும தயாகபரகாரததையும சொலலுகிற பதத்வயார்த்தமுஞ் சொல்லப்பட்டது. *இதுதனககுஸவரூபம* இத்யாதியாலும *பராப்திக்குபாயமவன் நினைவு* இத்யாதியாலும *மாமேகம சரணம* எனகிறபதஙகளி லர்த்தஞ சொல்லப்படடது. *ப்ரபத்த்யுபாயத்துககு* இத்யாதியாலே *வரஜ* என்கிற ஸவீகாரவைலக்ஷண்யஞ் சொலலப்படடது. *அவனிவனை* எனறு தொடங்கி *ஸவாதந்த்ர்யத்தாலே வரும் பாரதநத்ர்யம ப்ரபலம* என்னுமளவும், ஸர்வபாபங்களையுந்தள்ளி அஙகீகரிககு மீச்வர ஸவாதநத்ர்யத்தையும, *க்ருபாபலமு மநுபவித்தேயறவேணும்* என்று, பலஸித்தியில கண்ணழிவிலலாமையுஞ சொலலுகையாலே உத்தரார்த்தத்திலர்த்தஞ் சொலலப்படடது. .... .... .... .... *

வயாககயாநாவதாரிகை முறறிற்று.

ஸாவஜ்ஞரான பிளளை லோகாசார்யர் அருளிசசெயத ஸ்ரீவசனபூஷணம்.

(மூ.) 1. வேதாாததமறுதியிடுவது ஸ்மருதீதிஹாஸபுராணஙகளாலே.

## மணவாளமாமுனிகளின் வ்யாக்க்யாநாரம்பம்

(வேதார்த்தமித்யாதி) ப்ரமாதாவானவன பரமாணததைக கொணடிறே ப்ரமேயத்தை நிசசயிபபது. அநத பரமாணநதான, ப்ரத்யக்ஷாதி ரூபேண அஷடவிதமாகச சொலலுவர்கள். அதில "ப்ரதயக்ஷமேகஞசார்வாகா:" இத்யாதியில் சொலலுகிற பாஹ்யகுதருஷடிகளைப போலனறியே, ப்ரத்யக்ஷாநுமாநாகமஙகளை மூனறையும பரமாணதயா அஙகீகரிதது, உபமாநாதி பஞ்சகத்தையும் அவற்றிலே யதாயோக மநதாப்பவிபபித்து, அவறறில ப்ரத்யக்ஷம இந்தரியகரஹணயோகயங்களிலும, அநுமாநம பரத்யக்ஷஸிததவயாப்திகரஹணநுரூபமாக கதிபயபரோக்ஷார்த்தஙகளிலும ப்ரமாணமாகவும, அதீந்த்ரியாாததததில சாஸதரமே ப்ரமாணமாகவும நிஷகர்ஷிதது, அதுதனனிலும "வேதே கர்த்ராதயபாவாத் பலவதி ஹி நயைஸ தவநமுகே நீயமாநே தநமூலதவேந மாநம ததிதரதகிலம ஜாயதே" எனகிறபடியே ஸவப்ராமாணயத்துககு மூலஸாபேக்ஷமான பௌருஷேய சாஸத்ரததைப் பறற, ஸவத: பராமாண்யமுடைய வேதமே ப்ரபலப்ரமாணமாகவும அறுதியிட்டிருககும பரமவைதிகராகையாலே, இப்ப்ரபந்தத்தில தாமருளிசசெயகிற அர்த்தஙகளெலலாம வேதப்ரதிபாத்ய மெனனுமிடம தோற்ற முதலிலே வேதத்தை ப்ரமாணமாகவஙகீகரித்துக கொணடு ததாததநிாணயம பண்ணுமகரமததை இவவாகயததாலே யருளிசசெயகிறார்.

அகிலஹேய ப்ரதயநீகத்வ கலயாணைகதாநத்வங்களாலே ஈசவரன் அகில ப்ரமேய விலக்ஷணனா யிருககுமாபோலேயிறே அபௌருஷேயதவ நிதயத்வங்

களாலே வேதம் அகில ப்ரமாணவிலக்ஷணமாயிருக்கும்படி; வேதத்தினுடைய அபௌருஷேயத்வம் "வாசா விரூப நித்யயா" இத்யாதிச்ருதியாலும், "அநாதி நிதநாஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா, ஆதௌ வேதமயீ திவ்யா யதஸ் ஸர்வாः ப்ரஸூதயः" இத்யாதி ஸ்ம்ருதியாலும் ப்ரதிபாதிக்கப்படாநின்றதிறே. இந்த ச்ருதிஸ்ம்ருதிகள் வேதநித்யத்வத்தைச் சொல்லுகையாலே தத்பௌருஷேயத்வமும் ஸித்தமிறே. அதஏவ ப்ரமவிப்ரலம்ப ப்ரமாதாசக்திரூபதோஷ சதுஷ்டய ஸம்பாவநாகந்த ரஹிதமாயிருக்கும். பௌருஷேயத்வமிறே அவை வருகைக்கு மூலம். இப்படி யிருக்கையாலே இதுக்கு மேற்பட்டதொரு சாஸ்த்ரமில்லை. ஆகையாலேயிறே "ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யமுத்த்ருத்ய புஜமுச்யதே, வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி ந தைவம் கேசவாத் பரம்" என்று இதிஹாஸிகராலும் பௌராணிகராலும் ஏககண்டமாகச் சொல்லப்பட்டது. இதினேற்றமெல்லாம் திருவுள்ளம்பற்றியிறே "சுடர்மிகு சுருதி" யென்று நம்மாழ்வாரருளிச்செய்தது. அவரைப் பின் செல்லுமவராய் அபியுக்ததாகரேஸரரான பட்டரும் "ஆதௌ வேதாः ப்ரமாணம்" என்றாரிறே.

இத்தை வேதமென்கிறது, "வேதயதீதி வேதः" என்கிற வ்யுத்பத்தியாலே புபுத்ஸுக்களாய் ஆஸ்திகராயிருப்பார்க்கு ஸ்வார்த்த ப்ரகாசகமாயிருக்கையாலே. இப்படியிருந்துள்ள வேதந்தான், ப்ரதிபாத்யார்த்த விசேஷத்தாலே பாகத்வயாத்மகமாயிருக்கும். அத்தை இவ்விடத்தில் உபயபாகஸாமாந்யவாசியான வேதசப்தத்தாலே ஸாகல்யேந சொல்லுகிறது. அர்த்தமென்று பூர்வபாகப்ரதிபாத்யமான கர்மத்தையும், உத்தரபாகப்ரதிபாத்யமான ப்ரஹ்மத்தையுஞ் சொல்லுகிறது. பூர்வோத்தர மீமாம்ஸைகளில் "அதாதோ தர்மஜிஜ்ஞாஸா" என்றும் "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா" என்றுமிறே உபக்ரமித்தது; ஆகையாலே, பாகத்வயத்துக்கும் ப்ரதிபாத்யம் ஆராதநரூபமான கர்மமும் ஆராத்யவஸ்துவான ப்ரஹ்மமுமிறே. கர்மத்தினுடைய பகவதாராதநத்வம் "ஸ ஆத்மா, அங்காந்யந்யா தேவதாः" என்று அக்நீந்த்ராதி ஸகல தேவதைகளும் பகவத் சரீரபூதராக சாஸ்த்ரஞ் சொல்லுகையாலே ஸித்தமிறே. இவ்வாகாரத்தை யறிந்து, அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமி ஸமாராதநமாக அநுஷ்டிக்குமவர்களிடத்தில், இதினுடைய பகவதாராதநத்வம் ஸுஸ்பஷ்டமாயிருக்கும். இவ்வாகாரமறியாதார் அவ்வோ தேவதா மாத்ரங்களை யுத்தேசித்துப் பண்ணும் கர்மமும் வஸ்துகத்யா பகவதாராதநமாய்த் தலைக்கட்டும். *யே யஜந்தி பித்ருந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந், ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே" என்னக்கடவதிறே. "யேப்யந்யதேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதாः, தேபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதி பூர்வகம்* என்று தானே யருளிச்செய்தானிறே. ஆகையாலே எல்லாப்படியாலும் கர்மத்துக்கு பகவதாராதநத்வம் ஸித்தமிறே. இப்படி ஆராதநரூபமான கர்மமும் ஆராத்ய வஸ்துவான ப்ரஹ்மமுமாகிற அர்த்த த்வயத்தையுமறியவே, த்யாஜ்யோபாதேயரூப ஸகலார்த்தங்களையுமறியலா யிருக்கையாலே, பாகத்வய ப்ரதிபாத்யம் கர்மப்ரஹ்மங்களென்கிறது. எங்ஙனேயென்னில், கர்மந்தான் புபுக்ஷுக்களுக்கு ஐச்வர்ய ஸாதநமாய் முமுக்ஷுக்களில் பக்திநிஷ்டர்க்கு உபாஸநாங்கமாய், ப்ரபந்நர்க்கு கைங்கர்யரூபமாயிறேயிருப்பது. இப்படியிருந்துள்ள கர்மத்தின் வேஷத்தை உள்ளபடி யறியவே,

அநந்த ஸ்திரபல ப்ரஹ்மப்ராப்திகாமரான ஸாதகர்க்கு இது உபாஸநாங்கத்வேந உபாதேயம், ஐச்வர்யார்த்திகளுக்குபாதேயமான வாகாரத்தால் த்யாஜ்யம என றறியலாம். அநந்யஸாதநர்க்கு இது கொண்டு ஸாதிக்கவேண்டுவதொன றிலலாமை யாலே கைங்கர்யரூபேணோபாதேயம், உபாஸகர்க்கு உபாதேயமான ஆகாரத்தாலே த்யாஜ்யம என றறியலாம். ப்ரஹ்மத்தை யறியும்போது, தத்ஸ்வரூபரூப குண விபூதிகளை யெல்லா மறியவேண்டுகையாலே விபூதிபூத சேதநாசேதநங்களின ஸ்வரூப மறியலாம். அதில ஜ்ஞாநாநந்தலக்ஷணமான சேதநஸ்வரூப வைலக்ஷண்ய மடியாக வருகிறதாகையாலே கைவல்யத்தின வேஷமுமறியலாம். ப்ரஹ்மத்தினுடைய சேஷித்வப்ராப்யத்வங்களை யறியவே ததநுபவாதிகள புருஷார்த்தமென் றறியலாம். ததுபாஸ்யத்வ சரண்யத்வங்களை யறியவே தத்ப்ராப்தி ஸாதநவிசேஷங்களை யறிய லாம ப்ரஹ்மத்தினுடைய நிரதிசயபோக்யதையையும அநந்ய ஸாத்யத்வத்தையும தத்ப்ரகாரதயா பரதந்த்ரமான ஸ்வஸ்வரூபத்தையும தர்சிக்கவே ஸாத்யாந்தர ஸாதநாந்தரங்களினுடைய த்யாஜ்யத்வத்தையும ஸுஸ்பஷ்டமாக வறியலாம். ஆக இப்படி யிருக்கையாலே பாகத்வயத்துக்கும ப்ரதிபாத்யம ஆராதந ஸ்வரூபமான காமமும ஆராதய வஸ்துவான ப்ரஹ்மமுமெனனக குறையிலலை. *தவதர்ச்சாவிதி முபரி பரிக்ஷீயதே பூர்வபாகஃ,ஊர்த்வோ பாகஸ் தவதீஹா குணவிபவபரிஜ்ஞாபநைஸ் தவத்பதாப்தௌ* என றிறே பட்டரருளிச செய்தது. இப்படி பாகத்வய ப்ரதிபாத யங்களான இவ்வர்த்தங்களை அறுதி யிடுகையாவது, கர்மத்தினுடைய ஸ்வரூபாங்க பலாதிகளையும ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபரூபகுண விபூத்யாதிகளையும ஸம்சய விபர்யயமற நிர்ணயிக்கை. அதுதான செய்யும்போது ஸகலசாகாப்ரத்யயந்யாயத தாலும, ஸகல வேதாந்தப்ரத்யயந்யாயததாலும செய்யவேணும். அதில் ஸகல சாகாப்ரத்யயந்யாயமாவது —ஒரு வாக்யத்திலே ஓரர்த்தத்தைச சொன்னால், அதி னுடைய அங்கோபாங்காதிகளை நேராகவறிகைக்காக, சாகாந்தரங்களெல்லாத திலும ஸஞ்சரித்து அவற்றில சொலலுகிறவர்த்தங்களிலும ஜ்ஞாநமபிறநது, அவ் வர்த்தங்களுக்கு அந்யோந்ய விரோதங்களையும சமிப்பித்து, தனக்கபிமதமான அங்கி யோடே சேருமவற்றைச சேர்க்கை ஸகலவேதாந்தப்ரத்யயந்யாயமாவது—ஒரு வேதாந்தத்திலே ஒருவாக்யம ஓரர்த்தத்தைச சொன்னால், அல்லாத வேதாந்தங் களிலும ஸஞ்சரித்து, அவற்றில சொலலுகிறவர்த்தங்களுக்கு அந்யோந்ய விரோதம் பிறவாதபடி விஷயவிபாகம் பண்ணி, தனக்கபிமதமானவர்த்தங்களோடே சேரு மவற்றைச சேர்க்கை இதுதான மஹாமதிகளான மஹர்ஷிகளுக்கொழிய, அல்லா தார்க்குச செய்யப்போகாமையாலே, உபப்ருமஹணங்கள கொண்டே நிர்ணயிக்க வேணும. ஆகையாலே, தந்நிர்ணயகங்களை யருளிசசெய்கிறார் *ஸ்மருதீதிஹாஸ புராணங்களாலே* என்று. ஸ்மருதிகளாவன—ஆப்தரான மநவத்ரி விஷ்ணு ஹாரீத யாஜ்ஞவல்க்யாதிகளாலே அபிஹிதங்களான தர்மசாஸ்த்ரங்கள. இதிஹாஸங்களாவன :—புராவருத்தப்ரதிபாதகங்களான ஸ்ரீராமாயண மஹாபார தாதிகள. புராணங்களாவன —ஸர்காதிபஞ்சலக்ஷணோபேதங்களான ப்ராஹ்ம பாத்ம வைஷ்ணவாதிகள. வேதார்த்தமறுதியிடுவது இவற்றாலே யென்று இப்படி நியமேநவருளிசசெய்தது, இவற்றையொழிய ஸ்வபுத்த்யா நிர்ணயிக்குமள வில், அல்ப சருதனானவனுக்கு விப்ரதிபத்தி வருமாகையாலே வேதகாலுஷ்ய

ஹேதுவாமென்று நினைத்து இதமியமந்தான *இதிஹாஸ புராணப்யாம வேதம் ஸமுபப்ருமஹயேத். பிபேதயல்பசருதாத வேதோ மாமயம ப்ரதரிஷயதி* என்று பாரஹஸ்பத்யஸமருதியிலும மஹாபாரதத்திலும சொல்லப்படடதிறே. இவ்வுபகர மவாகயபரகரியையாலே, புருஷகாரவைபவம தொடஙகி ஆசார்யாபிமாந பர்யநதமாக இபப்ரபநதத்தி விவரருளிசசெய்கிற வேதார்த்தஙகளெல்லாம உபபாமஹணஙகளை கொண்டே நிசசயிததருளிசசெயகிறு ரெனனுமிடம தோறறுகிறது. அதுதான தததர்த்தங்க ளருளிசசெயகிற ஸதலங்களிலே ஸமபாதிபநநம. ஆக இவவாக யததால, ஸகல ப்ரமாணஙகளிலும வேதமே பரபல ப்ரமாணமெனனுமிடமும், ததர்ததநிர்ணயம பணணும க்ரமமும் சொல்லிறறுயத்து (1)

2\. இவற்றிலெததாலே எநதபாகத்திலர்த்தம அறுதியிடககடவதெனன வருளிச்செயகிறார் *ஸமருதியாலே யென்றுதொடஙகி

2\. ஸமருதியாலே பூரவபாகத்திலாதத மறுதியிடக்கடவது; மறறை யிரணடாலும உததர பாகததிலாதத மறுதியிடககடவது.

உபப்ருமஹயமான வேதததுககு, ப்ரதிபாதயார்ததவிசேஷததாலேயிறே பாகபேதமுணடாயத்து, அப்படியே உபப்ர்மஹணஙகளுககும ப்ரதிபாதயவிசேஷத் தாலே பேதமுணடிறே. அதில ஸமருதிகள பூர்வபாகோபபர்மஹணஙகளா கவும இதிஹாஸாதிகள உத்தரபாகோப பர்மஹணஙகளாகவும நிர்மிதங் களாகையாலே, தததததுபப்ர்மஹணஙகளைக கொண்டே தத்தத்பாகார்தத நிசசயம பணணவேணடியிறேயிருபபது. அதறைபபறற ஆசார வயவஹார பராயச சித்தாதிகளுககு பரதிபாதகஙகளான தர்மசாஸதரஙகளாலே கர்மபரதிபாதகமான பூர்வபாகத்தி லர்த்தநிச்சயம பணணககடவது. பகவத்ஸவரூப ரூபகுண விபூதி சேஷடிதஙகளுககு ப்ரதிபாதகஙகளான இதிஹாஸபுராணஙகளாகிற மறறையிரண் டாலும, ப்ரஹமப்ரதிபாதகமான உத்தரபாகததி லாத்தநிசசயம பணணககடவதென கிறார். இபபடி உபயவிதமான உபபர்மஹணஙகளாலே உபயபாகார்ததத்தையும் அறுதியிடுகையாவது .–அநதீதசாகாநதரார்த்தஙகளுககும் ப்ரதிபாதகஙகளான விவற் றாலே, அதீதசாகார்த்தஙகளை அபேக்ஷித விசேஷஙகளோடேகூட நிசசயிககை. ஸமருதிகள தனனிலே ப்ரஹ்மப்ரதிபாதகமும, இதிஹாஸாதிகளிலே காமப்ரதி பாதகமுமுண்டாயிருநததேயாகிலும. ஸமருதிகளில பரஹ்மப்ரதிபாதகம கர்மங களினுடைய ததாராதந ரூபத்வ ஜ்ஞாபநார்ததமாகவும, இதிஹாஸபுராணஙகளில கர்மப்ரதிபாதகம கர்மஙகளினுடைய உபாஸநாங்கத்வ ஜ்ஞாபநார்ததமாகவுமாகை யாலே இப்படி வகையிடுச சொல்லக குறையிலலை. *ப்ராயேண பூர்வபாகார்த்த பூரணம தர்மசாஸதரதஃ, இதிஹாஸபுராணப்யாம வேதாந்தார்ததஃ ப்ரகாச்யதே* என்னககடவதிறே. (2)

3\. உத்தரபாகோபப்ர்மஹண த்வயத்துககும் தாரதம்யமுண்டோ, தன்னி லொககுமோவென்கிற சஙகையிலே யருளிச செயகிறார மேல. அனறிககே ஏகபாக விஷயமான விரண்டு உபபர்மஹணஙகளிலும இனனதுககு ப்ராபல்ய மெனனு

மத்தையும் தர்சிப்பிக்கவேணுமென்று தாமே திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறாராகவுமாம்.

### 3. இவை யிரண்டிலுமவைத்துக்கொண்டு இதிஹாஸம் ப்ரபலம்.

*இவை இரண்டிலுமென்று தொடங்கி. அதாவது ச்ரேஷ்ட பரிக்ரஹண தயா வந்த சேர்த்தியை யுடைத்தான விவை யிரண்டிலும் வைத்துக்கொண்டு, ப்ராமாணயத்தில வந்தால புராணத்திலும் இதிஹாஸத்துக்கு ப்ராபல்ய முண்டெனகை. புராணத்திறகாட்டில் இதிஹாஸத்துக்கு ப்ராபல்யம் பரிக்ரஹாதிசயம் மத்யஸ்தத்தை கர்த்ராப்ததமத்வம் ஆகிறவிவற்றாலே. இவற்றில பரிக்ரஹமாவது, சாஸ்த்ரபரிக்ரஹம். "வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸா தாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* *மதிமந்தாநமாவித்ய யேநாஸௌ சருதிஸாகராத, ஜகத்திதாய ஜநிதோ மஹாபாரதசந்த்ரமா:* *வ்யாஸவாக்ய ஜலௌகேந குதர்மதருஹாரிணா, வேதசைலா வதீர்ணேந நீரஜஸ்கா மஹீ க்ருதா. *பிபேதி கஹநாச்சாஸ்த்ராந் நரஸ் தீவ்ராதிவௌஷதாத, பாரதச சாஸ்த்ர ஸாரோயம் அத: காவ்யாத்மநா க்ருத:* விஷ்ணௌ வேதேஷு வித்வத்ஸு குருஷு ப்ராஹ்மணேஷு ச, பக்திர்பவதி கல்யாணி பாரதாதேவ தீமதாம்* இத்யாதிகளாலே புராண விசேஷங்களிலே இதிஹாஸம் சலாகிக்கப்படாநின்றதிறே.

மத்யஸ்த்தையாவது —*யஸ்மிந் கல்பேது யத்ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா, தஸ்ய தஸ்யது மாஹாத்மயம் தத்ஸ்வரூபேண வர்ணயதே* என்று ஸர்வபுராணத்துக்கும் ப்ரவர்த்தகன் ப்ரஹ்மாவாய், அவனுக்கு யாதொரு கல்பத்திலே குணத்ரயத்தில யாதொரு குணம் விஞ்சியிருந்தது, அந்த குணாநுகுண தேவதையினுடைய மாஹாத்ம்யத்தைப் புராணத்திலே சொல்லுகையாலே, பக்ஷபாதிகளாயிருக்கும் புராணங்கள் போலன்றிக்கே, லௌகிக வைதிக ஸகலார்த்த நிர்ணயத்திலே அதிக்ருதங்களாகையாலே ஒரு விஷயத்திலும் பக்ஷபாதமின்றிக்கே யிருக்கை.

கர்த்ராப்ததமத்வமாவது—ப்ரபந்தகர்த்தாவானவன் யதா(ர்த்த) தர்சந ஸாமர்த்த்யத்தையும், யதாத்ருஷ்டார்த்தவாதித்வத்தையும் மிகவுமுடையவனாயிருக்கை. *அதேதிஹாஸ புராணயோ ரிதிஹாஸோ பலீயாமஸ:, குத:. தேஷாம பரிக்ரஹாதிரேகாத், ஸாவத்ர மாத்யஸ்த்யேந பூதார்த்த ப்ரதீதே:, வசநஸௌஷ்டவேந, கர்த்ராப்ததமத்வாவகதேச்ச* என்று தொடங்கி பரிக்ரஹாதிசயாதிகளாலே புராணேதிஹாஸ ப்ராபல்யம் ஸாமாந்யேந தத்வநிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும், *மஹாபாரதம் ஹி பரிக்ரஹவிசேஷாவஸிதம்* என்று தொடங்கி, *தர்மேசார்த்தேச காமேச மோக்ஷேச பரதர்ஷப. யதிஹாஸ்தி தத்ந்யத்ர யந் நேஹாஸ்தி ந தத் க்வசித்* இதி லௌகிக வைதிகஸகலார்த்தநிர்ணயாதிக்ருதத்வேந க்வசிதபி அபக்ஷபாதித்வாச்ச புராணேப்யோ பலவத்தரம்* என்னுமளவாக, பரிக்ரஹாதிசயத்தாலும் மத்யஸ்த்தையாலும் புராணங்களிற்காட்டில் இதிஹாஸ விசேஷமான மஹாபாரதத்துக்குண்டான ப்ராபல்யம் ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே பட்டராலும் ப்ரதிபாதிக்கப்பட்டதிறே. (3)

### 4. அதின ப்ராபல்யத்தை இசைவிக்கிறார்.—(அத்தாலே என்று தொடங்கி.)

4. அத்தாலே யது முறபடடது.

அநத ப்ராபல்யததாலே, *இதிஹாஸ புராணம் பஞ்சமம* என்றும், *இதிஹாஸ புராணுபயாம்* என்றும சருதிஸமருதிகளிலே இரணடையும சேரச சொலலுகிற வளவில, இதிஹாஸமானது புராணத்துககு முனனே சொலலப்படடதெனகை. த்வநத்வ ஸமாஸத்தில் அலபாச்தரமாதல அப்யாஹிதமாதலிறே முறபடுவது. அதில அலபாசதரமன றியிலேயிருககை, அது முறபடடது அப்யாஹிததவத்தாலே யிறே; இநத அபயர்ஹிதத்வத்துககு மூலம அதின பராபலயமெனறு கருதது.

அதவா (ஸமருதீதிஹாஸ புராணஙகளாலே) என்று பாகத்வயோபபர்ம ஹணஙகளையும ஸமஸதமாகச சொலலுகிறவிடத்தில, *இதிஹாஸாசச புராணுநிச இதிஹாஸபுராணுநி, ஸம்ர்தயசச இதிஹாஸ புராணுநிச ஸ்மர்தீதிஹாஸபுராணுநி* எனறிபபடி இவாககு ஸமாஸவிவகைக்ஷ யாகையாலே, அலபாசதரமான புராணததுககு முனனே இதிஹாஸததை யருளிசசெயததின கருததை (இவை யிரண்டிலும) இத்யாதியாலே யருளிசசெயகிறுராகவுமாம. இந்த யோஜனையில (அத்தாலேயது முறபடடது) எனகிற விதுககு அந்தபராபலயத்தாலே (இதிஹாஸ புராணஙகளாலே) யெனகிற விடததில புராணததுககு முனனே இதிஹாஸஞ சொலலப்படடதெனறு பொரு ளாகக கடவது.

ஆக வேதார்த்த நிர்ணயம பணணுமளவில், ததுபப்ருமஹணஙகளாலே பணணவேணுமெனறும், அதில பூர்வோததரபாகோபபாமஹணஙகள இனன தெனறும், உத்தரபா கோபப்ர்மஹணங்களான இதிஹாஸ புராணஙகளில இதிஹாஸம ப்ரபலமெனறும அருளிசசெயகையாலே, மேல தாமருளிச செயயப புகுகிற வாத்தங்களுககு ப்ரமாண மொருஙகவிடடருளினுராயத்து. (4)

புருஷகார வைபவம

5. முதலிலே (வேதாநதம) இதயாதியாலே வேதததர்த்த ததுபபர்மஹணங களை ஸாகலயேந உபாதாநம பணணி, அநத வேதததினுடைய பாக விபாக ததுப பர்மஹண விபாகஙகளையும பணணினுரேயாகிலும சேதநருடைய உஜ்ஜீவநததுக கபேக்ஷிதாாததஙகளை யருளிசசெயய இழிநதவராகையாலும, அதுதான பூர்வபாக வேத்ய மனறிககே உததரபாகவேதய மாகையாலும, பூர்வபாகததில முமுக்ஷுவுககு ஜ்ஞாதவயாமசமுளளதும, உத்தரபாகார்ததங்களான ஸவரூபோபாய புருஷார்த்த ப்ரதிபாதந ஸதலஙகளிலே தத ததநுகுண த்யாஜயோபாதேய கதந முகேந ஜ்ஞாபிககலா யிருககையாலும, உததரபாகார்த்த நிர்ணயத்திலே ப்ரவர்த்தராய், அதுதனனிலும பகவதஸவரூப ரூபகுணவிபூதிகளையும பகவதுபாஸநாதிகளையும, பரககநினறு ப்ரதிபாதிககிற விடஙகளில, ஸாராஸார விவேகபூர்வகமாக தாத் பர்யார்த்தஙகளை ஸஙகரஹிதது, ஸமசய விபாயயமற சேதநர்ககு ப்ரதிபததிவிஷய மாமபடி யருளிசசெயது செலலுகிறுர்மேல. அதில, ப்ரதமத்திலே, உத்தரபா கோபபாமஹண தவயததில ப்ரபலமாகசசொனன இதிஹாஸஙகளில வைததுக கொண்டு ஸ்ரீராமாயணத்தினுடைய பராபலயத்தை பரகாசிப்பியா நினறுகொண்டு, தத் ப்ரதிபாத்யவிசேஷததை யருளிசசெயகிறுர் (இதிஹாஸ சரேஷ்டடமெனறு தொடங்கி).

**5. இதிஹாஸ ச்ரேஷ்ட்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவ ளேற்றஞ் சொல்லுகிறது. மஹாபாரதத்தால் தூதுபோனவ னேற்றஞ் சொல்லுகிறது.**

ஸ்ரீராமாயணத்துக்கு இதிஹாஸ ச்ரேஷ்ட்டத்வமாவது, *வால்மீகயே மஹர்ஷயே ஸந்தி தேச ஆஸநம்தத:, ப்ரஹ்மணா ஸமநுஜ்ஞாதஸ ஸோப்யுபாவிசதாஸநே* என்று ஸகலலோகபிதாமஹனான ப்ரஹ்மாவாலே ஸம்பாவிதனான ஸ்ரீவால்மீகிபகவானாலே ப்ரணீதமாகையாலும், *ந தே வாகந்ருதா காவ்யே காசித்த்ர பவிஷ்யதி* என்று ப்ரஹ்மாவனுக்ரஹிக்கையாலே இதில் சொன்ன வர்த்தங்களெல்லாம் மெய்யாகக் கடவதாகையாலும், *தாவத் ராமாயணகதா லோகேஷு ப்ரசரிஷ்யதி* என்று ஸகலலோகபரிக்ரஹமுண்டாகையாலும், இதிஹாஸாந்தரங்களைப் பற்ற ப்ரபலப்ரமாணமாயிருக்கை. இதுதன்னை நடுவிற்றிருவீதிப்பிள்ளை பட்டர் தத்த்வத்ரய ப்ரபந்தத்தில் ப்ரமாணாதிகாரத்திலே யருளிச்செய்தாரிறே. இன்னமும் *வேதவேத்யே பரே பும்ஸி* இத்யாதிப்படியே ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரன் ஸம்ஸாரிசேதநரக்ஷணார்த்தமாக இதர ஸஜாதீயனாய்வந்து அவதரித்தாப்போலே, ஸர்வப்ரமாணோத்கர்ஷ்டமான வேதமும், தத்அவதார குணசேஷ்டித ப்ரதிபாதநமுகேந தத்ஆச்ரயணருசியை ஸம்ஸாரிகளுக்குண்டாக்கி ரக்ஷிக்கைக்காக ஸ்ரீராமாயணரூபேண அவதரித்ததென்று சொல்லப்படுகையாலும் இதினுடைய வேற்றம் ஸம்ப்ரதிபந்நம்.

பிராட்டியென்னாதே (சிறையிருந்தவள்) என்றருளிச்செய்தது, அவளுடைய தயாதிசயத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக; தேவதேவ திவ்யமஹிஷியான தன் பெருமையையும் சிறையிருப்பின் தண்மையையும் பாராதே, தேவஸ்த்ரீகள் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்தது தயாபரவசையாயிறே. பிரஜை கிணற்றிலே விழுந்தால் ஒக்கக்குதித்தெடுக்கும் மாதாவைப்போலே, இச்சேதநர்விழுந்த ஸம்ஸாரத்திலே தானுமொக்கவந்து பிறந்து, இவர்கள் பட்டதைத் தானும்பட்டு ரக்ஷிக்கையாலே, நிருபாதிக மாத்ருத்வஸம்பந்தத்தாலவந்த நிரதிசய வாத்ஸல்யத்துக்கும் ப்ரகாசகமிறேயிது. இந்த குணாதிசயத்தை வெளியிடுகைக்காகவிறே பரமாசார்யரான நம்மாழ்வார் *தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்* என்றருளிச்செய்தது. அவருடைய திவ்யஸூக்தியிறே இவரிப்படி யருளிச்செய்கைக்கு மூலம். சிறையிருப்பு தண்மையாவது காம நிபந்தநமாகிலிறே. ஆச்ரிதரான தேவர்களுடைய ஸ்த்ரீகள் சிறையை விடுவிக்கைக்காக, தன்னனுக்ரஹத்தாலே தானே வலியச் செய்ததாகையாலே, ஏற்றத்துக்குடலாமித்தனையிறேயிது; ஸம்ஸாரிகளோடொக்க கர்ப்பவாஸம் பண்ணிப் பிறக்கிறவிது. *பலபிறப்பாயொளிவரும்* என்னும்படி ஸர்வேச்வரனுக்கு தேஜஸ்கரமாகிறது, கர்மநிபந்தநமன்றிக்கே அநுக்ரஹநிபந்தநமாகையிறே. ஆனபின்பு, இதுவும் அநுக்ரஹ நிபந்தநமாகையாலே இவளுக்கு தேஜஸ்கரமாமித்தனை. இத்தை ராவணபலாத்காரத்தாலே வந்ததாக நினைப்பார் இவள் சக்திவிசேஷமறியாத க்ஷுத்ரரிறே. *சீதோ பவ* என்றவள் *நஷ்டோ பவ* என்னமாட்டாளன்றே. ஆகையால் இது தன்னனுக்ரஹத்தாலே பரரக்ஷணார்த்தமாகச் செய்த செயலாகையாலே, இதுவே இவள் தயாதிகுணங்களுக்கு ப்ரகாசகமென்று திருவுள்ளம்பற்றியாய்த்து இவர் (சிறையிருந்தவள்) என்று அருளிச்செய்தது. ஸ்ரீராமாயணமெல்லா மிவளுடைய வேற்றஞ்சொல்லுகிற தென்னுமிடம்

*காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச் சரிதம் மஹத்* என்று ஸ்ரீவால்மீகிபகவான் தானே வாயோலையிட்டு வைத்தானிறே *ஸ்ரீமத் ராமாயணமபி பரம ப்ராணிதி த்வச் சரித்ரே* என்றருளிச்செய்தாரிறே பட்டர்.

அநந்தரம் மஹாபாரத ப்ரதிபாத்யத்தை யருளிச்செய்கிறார் (மஹாபாரதத்தால என்று தொடங்கி.) *க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்- கோஹ்யந்யோ புவி மைத்ரேய மஹாபாரதக்ருத் பவேத்* *ஏவமஸ்திம பாரதந்து ப்ரோக்தம் யேந மஹாத்மநா - ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹாமுநி:* என்று பகவதாவேசாவதாரமாய *ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:* என்று ஆப்ததமனாக ப்ரஸித்தனாயிருந்துள்ள ஸ்ரீ வேதவ்யாஸ பகவானாலே *வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்* என்கிறபடியே பஞ்சமவேதமாகப் ப்ரணீதமாய், அநேக புராண ப்ரசஸ்தமாயிருந்துள்ள மஹாபாரதமும் ஸ்ரீராமாயணத்தோபாதி ப்ரபல ப்ரமாணம். இதுவும் நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர் தாமேயருளிச் செய்தார். பெரிய பட்டரும் ஸ்ரீ ஸஹஸ்ரநாம பாஷ்யோபோத்காதத்திலே, *ஸ்ரீராமாயணவந் மஹா பாரதம் சரணம்* என்றருளிச் செய்தாரிறே. ஸர்வேச்வரனென்னாதே (தூதுபோனவன்) என்றது அவனுடைய ஆச்ரித பாரதந்த்ர்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக; தேவதேவனான தன் பெருமையையும் செய்கிற தொழிலின் தண்மையையும் பாராதே, பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலை கட்டித் தூது போய்த்தது, ப்ரணத பாரதந்த்ர்ய ருசி பரவசனாயிறே. இதுதான் இவனுடைய ஆச்ரயண ஸௌகர்யாபாதகமான நீர்மைக்கு டலாயிருந்துள்ள வாத்ஸல்யாதிகளுக்கெல்லாம் ப்ரகாசகமாயிருப்ப தொன்றிறே. இந்த குணத்திலே யீடுபட்டிறே *இன்னார் தூதனென நின்றான்* என்றும் *கூடமன்னரிடை நடந்த தூதா* என்றும் திருமங்கையாழ்வா ரருளிச்செய்தது. அந்த திவ்ய ஸூக்தியிறே இவரிப்படி யருளிச்செய்கைக்கு மூலம். *பேசிற்றே பேசுகையிறே இவர்களுக்கேற்றம். தூது போனது-தண்மையாவது, கர்மவச்யதை யடியாக வரிலிறே. ஐச்சமாக ஆச்ரித விஷயத்தில் செய்கிற தாழ்ச்சியெல்லாம் ஏற்றத்துக்குடலாயிறே யிருப்பது *ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:* என்று பரார்த்தமாகப் பிறக்கையாலே சிறப்பெறுமென்று ச்ருதி சொன்னவிது பரார்த்தமாகத் தன்னிச்சையாலே செய்யுமவையெல்லாம் இவனுக்கு தேஜஸ்கரமென்னுமதுக் குபலக்ஷணமிறே. இவன் செய்த தூத்யத்தை மாந்த்யஹேதுவாக நினைப்பார், அறிவுகேடரில் தலையானவர்களித்தனை. அறிவில் தலைநின்றவர்கள் *ஏதத்ரம்* என்று மோஹிக்கும்படியாயிறே யிருப்பது. இப்படி யிருந்துள்ள இந்நீர்மையிலேற்றத்தை வெளியிடுகைக்காக வாய்த்து இவர் (தூது போனவன்) என்றருளிச் செய்தது. மஹாபாரதமெல்லாம் இவனுடைய வேற்றமே சொல்லுகையிலே தத்பரமாகையாலேயிறே, மஹா பாரத கதை சொல்லத் தொடங்குகிறவன் *நாராயணகதாமிமாம்* என்றது. ஆக ப்ரபந்தத்வயத்துக்கும் ப்ரதாநப்ரதிபாத்யங்களின்னதென்னுமிடம் ப்ரகாசிப்பிக்கப்பட்டது. (5)

6. உபப்ர்ஹ்மணமுகேந வேதாந்த தாத்பர்யத்தை நிஷ்கர்ஷித்து உஜ்ஜீவநத்துக்குடலானவற்றைச் சொல்லுவதாகவிறே உபக்ரமித்தது. அதிலிப்போது சொன்னவிவற்றால வேதாந்தத்தி லவ்வர்த்தங்கள் சொல்லிற்றாய்த்தென்னுமாகாங்க்ஷையிலே யருளிச் செய்கிறார் மேல இவை என்று தொடங்கி.

**6. இவை யிரண்டாலும் புருஷகார வைபவமும் உபாய வைபவமும் சொல்லிற்றாயத்து.**

அதாவது (சிறையிருந்தவளேற்றம், தூதுபோனவனேற்றம்) என்றவிவை யிரண்டாலும், அபராத பூயிஷ்டரான சேதநர்க்கு ஆச்ரயணீயையாமளவில் அகில ஜகந்மாதாவான ஸம்பந்தத்தாலும் க்ருபாதிகளாலும் நடுவொரு புருஷகாரம் வேண்டாதபடிவந்து ஆச்ரயிக்கலாம்படியாய் அபராதங்களைப் பார்த்துச்சீறி *க்ஷிபாமி* *நக்ஷமாமி* என்னுமீச்வர ஹ்ருதயத்தைத் திருத்தி அவர்களை யங்கீகரிப்பிக்கும் புருஷகார பூதையானவள் வைபவமும், அங்கீகரித்தால் பின்னையவள்தானே சிதகுரைக்கிலும் *என்னடியாரது செய்யார்* என்று மறுதலித்துத் தான திண்ணியனாய் நின்று ரக்ஷிக்கும் உபாயபூதனானவன் வைபவமும் சொல்லிற்றாய்த்தென்கை. (புருஷகாரம்) என்றும் (உபாயம்) என்றும் இவற்றை நிரூபகமாக வருளிச்செய்தது, பிராட்டிக்கு புருஷகாரத்வமும் ஈச்வரனுக்கு உபாயத்வமும் அஸாதாரணமென்று தோற்றுகைக்காக. இதுதன்னை *மத் ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத:, லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்றும், *அஹம் மத்ப்ராப்த்யுபாயோவை ஸாக்ஷாத் லக்ஷ்மீபதிஸ் ஸ்வயம், லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லபா ப்ராப்தி யோகிநீ, ஏதஸ்யாச்ச விசேஷோயம் நிகமாந்தேஷு சப்த்யதே* என்றும், *ஆகிஞ்சந்யைக சரணா: கேசித் பாக்யாதிகா: புந:, மத்பதாம்போருஹத்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீத மானஸா:, லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந, மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேச ப்ராப்யம் ப்ராபகமேவ மாம், லப்த்வா க்ருதார்த்தா: ப்ராப்ஸ்யந்தே மாமேவ நாந்ய மாநஸா:* என்று பகவச்சாஸ்த்ரத்திலே தானே யருளிச்செய்தானிறே. மற்றைப் பிராட்டிமார்க்கும் ஸூரிகள் முதலான ததீயர்க்கும் இவள் ஸம்பந்தமடியாக வருகிற புருஷகாரத்வமிறேயுள்ளது, இவளைப்போலே ஸ்வதஸ்ஸித்தமன்றே ஆகையிறே *ஏதத் ஸாபேக்ஷஸம்பந்தா தந்யேஷா மமலாத்மநாம், தேவீஸூரி குரூணாஞ்ச கடகத்வம் நது ஸ்வத:* என்று தீபஸங்க்ரஹத்திலே ஜீயரருளிச்செய்தது. உபாயத்வமும் *க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்* என்று ஸநாதந தர்மமாகச் சொல்லப்படுகிற அவனுக்கே ஸ்வதஸ்ஸித்தமாய் ததீயர்க்கு தத்ஸத்தியடியாக வருகிறதிறே யுள்ளது. ஆகையாலே பிராட்டிக்கு புருஷகாரத்வமும், ஈச்வரனுக்கு உபாயத்வமும் நிரூபகமாகத் தட்டில்லை. இவ்வர்த்தத்தை வெளியிடுகைக்காக வாய்த்து இவரிப்படி யருளிச்செய்தது. இப்படி உபப்ருமஹணமான ப்ரபந்த த்வயத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற புருஷகாரத்வமுமுபாயத்வமும் உபப்ருமஹ்யமான வேதாந்தத்திலுக்தமான ஸ்தலமேதென்னில், கடவல்லயுபநிஷத் ஸித்தமான த்வயத்தில் பூர்வவாக்யத்திலே உபயமும் சேர உக்தமிறே. இச்சேதநனுக்கு இருவரோடும் ஸம்பந்தமுண்டாயிருக்க ஈச்வர ஸமாச்ரயணத்துக்கிவள் புருஷகாரமாக வேண்டுகிறதென்னென்னில், மாத்ருத்வ ப்ரயுக்தமான வாத்ஸல்யாதிரேகத்தாலும், அவனைப்போலே காடிந்யமார்த்தவங்கள் கலந்திருக்கையன்றிக்கே, கேவல மார்த்தவமேயாய், பிறர் கண்குழிவு காணமாட்டாத ப்ரக்ருதியாகையாலும், விமுகரையு மபிமுகராக்குகைக்கு க்ருஷிபண்ணு மவளாகையாலும், குற்றவாளர்க்குங் கூசாமல் வந்து காலிலே விழலாம்படி யிருப்பாளாய், பும்ஸ்த்வ ப்ரயுக்தமான காடிந்யத்தோடே பித்ருத்வ ப்ரயுக்தமான ஹிதபரதையையு முடையனாய், குற்றங்களைப் பத்தும் பத்தாக்க கணக்கிட்டு க்ரூர தண்டங்களைப் பண்ணுகையாலே, குற்றவாளர்க்கு முன்செல்லக் கூடலரிக்கும்படி யிருக்கு மீச்வரனை உசிதோ

பாயங்களாலே குற்றங்களை யடைய மறப்பித்துக் கூட்டிவிடுமவளுமா யிருக்கையாலே அபராதமே வடிவான இச்சேதநன அவனை யாச்ரயிக்குமளவில இவள புருஷகார மாக வேணும். ஆகையிறே அவனை உபாயமாகவரிக்க இழிகிறவளவில இவளைப் புருஷகாரமாக முனனிடுகிறது. ... .. ... ... (6)

7. அநந்தரம், புருஷகாரத்தினபடிகளை விஸ்தரேண உபபாதிக்கக்கோலி, ப்ரதமத்திலே புருஷகாரத்வத்துக்கு அவச்யாபேக்ஷித குணங்களை யருளிச்செய்கிறார் (புருஷகாரமாம்போது) என்று தொடங்கி.

7. புருஷகாரமாம்போது க்ருபையும் பாரதந்த்ர்யமும் அநந்யார்ஹத்வமும் வேணும்.

(புருஷகாரமாம்போது) என்றது—புருஷகாரமாமிடத்தி லென்றபடி. க்ருபையாவது—பரது:க்காஸஹிஷ்ணுத்வம். பாரதந்த்ர்யமாவது—பராதீநத்வம். அநந்யார்ஹத்வமாவது—தத்வ்யதிரிக்த விஷயாநார்ஹத்வம் இவை புருஷகாரத்துக்கு அவச்யாபேக்ஷிதமானபடி யென்னென்னில், சேதநர் ஸம்ஸாரத்தில படுகிற து:க்கங்கண்டு பொறுக்கமாட்டாமல, ஈச்வரனோடே இவர்களைச் சேர்க்கைக்குடலான யத்நம பண்ணுகைக்கு க்ருபைவேணும், ஸ்வதந்த்ரனை வசீகரிக்கும்போது அநுவர்த்தநத்தாலே வசீகரிக்க வேண்டுகையாலே பாரதந்த்ர்யம வேணும்; நம்மையொழிந்ததொரு விஷயத்துக்கு அர்ஹமன்றியே நமக்கே அதிசயகரமாயிருக்கும வஸ்துவாகையாலே நங்கார்யமன்றோ சொல்லுகிறது என்று, சொன்னபடி யவன்செய்கைக் குறுப்பாகையாலே அநந்யார்ஹத்வம் வேணும். ஆகையாலிவை மூன்றும் புருஷகாரத்துக்கு அவச்யாபேக்ஷிதமிறே ஈச்வர க்ருபையிற் காட்டில இவள க்ருபைக்கு விசேஷமென்னென்னில், ஈச்வரனுவான நிரங்குசஸ்வதந்த்ரனாய், நிக்ரஹாநுக்ரஹங்களிரண்டுக்கும் கடவனாய், சேதநகர்மங்களை நிறுத்தறுத்துத் தீர்த்துமவனாகையாலே அவனுடைய க்ருபை ஸ்வாதந்த்ர்யத்தாலே அமுக்குண்டு கிடந்து, ஓரோ தசைகளிலே தலையெடுக்கக் கடவதாயிருக்கும். இவள அநுக்ரஹைக சீலையாகையாலே யிவளுடைய க்ருபைக்கு வேறொன்றால ஓர் அபிபவ மில்லாமையாலே எப்போது மொருபடிப்பட்டிருக்கும். ஆகையா லிவளுடைய க்ருபை கரையழிந்திருக்கும். ஸம்பந்தத்தில வ்யாவ்ருத்திபோலேயாயத்து க்ருபையில வ்யாவ்ருத்தியும். இப்படியிருக்கையாலேயிறே இவளை ஆச்ரயிப்பார்க்கு வேறொரு புருஷகாரம தேடவேண்டாதொழிகிறது ஈச்வர விஷயத்தி லிவளுடைய பாரதந்த்ர்யாநந்யார்ஹத்வங்களும ஸ்வரூப ப்ரயுக்தமான மாத்ரமன்றிக்கே *ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ* என்றும *விஷ்ணுபத்நீ* என்றும சொல்லுகிற பத்நீத்வ ப்ரயுக்தமாயும், *அஹந்தா ப்ரஹ்மணஸ் தஸ்ய ஸாஹமஸ்மி ஸநாதநீ* என்றும *ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ:* என்றும சொல்லுகிறபடியே ஸ்வரூப நிரூபகத்வாதி ஸித்தமான அநந்யத்வ ப்ரயுக்தமாயுமிருக்கும் இப்படியிருக்கையாலேயிறே அல்லாதாரைக்கடைய மிதுநசேஷத்வமும், இவளொருத்திக்கும ததேகசேஷத்வமுமாயத்து. இந்த அவயவதாகேந வுண்டான ஸம்பந்தத்தாலேயிறே இவளுக்கு ஈச்வரனை வசீகரிக்குமளவில புருஷகாரம வேண்டாதொழிகிறது இம் மூன்று குணத்திலும வைத்துக்கொண்டு, க்ருபையானது, *ச்ரிஞ்-ஸேவாயாம்* என்கிற தாதுவிலே நிஷ்பந்நமான ஸ்ரீசப்தத்தில *ஸ்ரீயதே* என்கிற கர்மணிவ்யுத்பத்தியிலும பாரதந்த்ர்யாநந்யார்ஹத்வங்க ளிரண்டும, *ச்ரயதே* என்கிறகர்த்தரிவ்யுத்பத்தியிலும், நித்யயோக வாசியான மதுப்பிலும ஸித்தமிறே. ... .... .... (7)

8. இநத கருபாதிதரயததையும எலலாருமறியுமபடி தானே வெளியிட டருளின வைபவததை ஸ்ரீராமாயணததி லிவளுககுச சொலலபபடட விசலேஷ த்ரயத்தாலும தாசிப்பிககிறா மேல (பிராட்டி) என்று தொடஙகி வாகயதரயததாலே.

8. பிராட்டி முறபடப பிரிநதது தனனுடைய கருபையை வெளியிடுகைக்காக; நடுவிற பிரிநதது பாரதநதாயததை வெளியிடுகைககாக, அநநதரம பிரிநதது அநநயாாஹதவததை வெளியிடுகைககாக

(பிராட்டி யிதயாதி) *தேவதவே தேவதேஹேயம மநுஷ்யதவேச மாநுஷீ, விஷ்ணோ தேஹாநு ரூபாம வை கரோதயேஷாதமநஸ தநும* எனகிறபடியே, நாயகனை ஸாவேசவரனுடைய தத்ததவதார ஸஜாதீயமான விகரஹ பரிகரஹம பணணி வநதவதரிககுமவ ளாகை யாலே, *ராகவதவேபவத ஸீதா* எனகிறபடியே, அவன சகரவாததி திருமகனை வாறே ததநுரூபமாகத தானும ஜநகராஜன திருமகளான பிராட்டி, தணடகாரண யததிலே யெழுநதருளியிருககசசெயதே, ராவணன பிரிததானெனறொரு வயாஜத தாலே ப்ரதமம பெருமாளைபபிரிநது லஙகைககெழுநதருளிறறு, *தேவயா காருணய ரூபயா* என்று *தத்குண ஸாரதவததாலே காருணயந தானைச சொலலுமபடியான தனனுடைய பரமகருபையை பரகாசிபபிககைககாக வெனகை எஙஙனேயெனனில, தேவஸதரீகள சிறையை விடுவிககைககாகத தான சிறை யிருககையாலும, அவ விருபபிலே தனனை அலலும பகலும தாஜநபாதஸநமபணணி யருவிததினற க்ரூரராக்ஷஸிகள, ராவணன் பராஜிதனாகவும பெருமாள விஜயிகளாகவும தரிஜடை ஸ்வபநங கணடததாலே பீதபீதைகளாய நடுஙகுகிறதசையிலே *பவேயம சரணம் ஹி வ:* என்று நீஙகள நோவுபடுகிற ஸமயததுககு நானிருநதேனே, நீஙக ளஞ்ச வேண்டாவென்று அபயப்ரதாநம பணணுகையாலும, அது உக்திமாதரமாயப போகாமே, ராவணவதாநநதரம தனககு சோபநஞ சொலலவநத திருவடி அவா களை சிதரவதமபணணுமபடி காட்டிததரவேணுமெனன, அவனோடே மனறாடி, *ராஜ ஸமசரய வசயாநாம* இதயாதியாலே அவாகள குறறததை குணமாக உபபாதித தும், *மாஷ்யாமீஹ துாபலா* என்று பிறாநோவுகணடு பொறுததிருககத்தககநெஞ் சுரம தனககிலலாமையை முனனிட்டும, *காாயம கருண மாாயேண ந கசசிநநாபராதயதீ* என்று அவனுககும இரஙகியலலது நிறகவொணணாதபடி யுபதேசிததும், இப்படி யொருநிலைநின்று தானடியிறபணணின பரதிஜஞாநுகுணமாக ஆர்தராபராதை களானவாகளை ரக்ஷிககையாலும தனனுடைய கருபையை வெளியிட்டாளிறே

(நடுவிலிதயாதி) நடுவிறபிரிவாவது மீணடு பெருமாளுடனே கூடித் திருவயோ த்யையிலே யெழுநதருளித் திருவயிறு வாயததிருககிற காலததிலே *அபதயலாபோ வைதேஹி மமாயம ஸமுபஸதித:, கிமிசசஸி ஸகாமா தவம பரூஹி ஸாவம வராநநே* என்று உனககபேக்ஷை யேதெனறு கேட்டருள, *தபோவநாநி புணயாநி த்ரஷ்டுமிசசாமி ராகவ, கஙகாதீர நிவிஷ்டாநி ருஷீணாம புண்யகாமனும, பலமூலாசிநாம வீர பாதமூலேஷு வர்த்திதும் ஏஷமே பரம: காமோ யநமூலபலபோஜிஷு அப் யேகராதரம காகுத்ஸத! வஸேயம் புண்ய் கீாததிஷு* என்று தனககுணடான வநவாஸ வாஞ்சையை விணணப பஞ்செய்ய, அததைபபறறப போக விடுவாரைபபோலே லோகாபவாத பரிஹாராாதத

மர்கப் பெருமாள காட்டிலே போகவிடப போனது இப்பிரிவுககு ப்ரயோஜநம பெருமாள கட்டிலேவைத்தபோதோடு காட்டிலே விட்ட போதோடு வாசியற, அவருடைய நினைவையே பினசெலலவேண்டுமபடியான தனனுடைய பத்நீத்வப்ர யுகதமான பாரதநதர்யத்தை ப்ரகாசிபபிககை. கஙகைக கரையேறின வநநதரம இளையபெருமாள கனகக கலேசப்பட்டுககொண்டு, பெருமாள திருவுளளமாயவிட்ட கார்யத்தை விண்ணப்பஞசெயய, அதனைககேட்டு மிகவும பரலாபித்து *ந கலவந யைவ ஸௌமித்ரே! ஜீவிதம ஜாஹ்நவீஜலே, தயஜேயம ராகவம வமசே பாதது: மா பரிஹா ஸ்யதி* எனறாளிறே, இததால ஆறறாமையின கனத்தாலே முடிநது பிழைககை தேட்டமாகா நிறகச செயதேயும, அது செயயமாட்டாதே பெருமாளநினைவைப் பின சென்று தனப்ராணனை நோககிககொண்டிருகக வேண்டுமபடியான பாரதநதர்யத்தை யிறே ப்ரகாசிப்பித்தது பிறர்ககாக ஜீவிககவேணடும பரதந்த்ராகககு முடிவுதேட்ட மாறுலும முடியப் போகாதே! *மாயும வகையறியேன வலவினையேன் பெண பிறநதே* என்றாரிறே யாழவார, ப்ரதமவிசலேஷத்தில பத்துமாஸததுககுளளே படுவதெலலாம பட்டவள, *பதிர்ஹி தைவதம நார்யா: பதிர்பநது: பதிர்கதி:, பராணைரபி ப்ரியம தஸமாத பர்த்து: கார்யம விசேஷத:* என்று தானருளிச செயதபடியே, பதிசித்தாநுவிதாநமே நமககு ஸவரூபமெனனும பாரதநத்ர்ய புத்தியாலேயிறே அநேக ஸம்வதஸரம பாடாற்றியிருநதது. ஆக இப்படி இபபிரிவிலே தனனுடைய பாரதநத்ர்யததை வெளியிட்டாளிறே.

(அநந்தரமித்யாதி.) அநந்தரததில பிரிவாவது, மீணடு பெருமாள் ஸநனிதியிலே வந்திருககச் செயதே, பிரிந்து பிறநதகததிலே புககுவிட்டது. இப்பிரிவுககு ப்ரயோஜநம, *அநந்யா ராகவேணாஹம பாஸகரேண ப்ரபா யதா* *அநந்யாஹி மயா ஸீதா* என்று உபயஸமமதமான தனனுடைய அநநயத்வ ப்ரயுகதமான அநநயார்ஹத்வத்தை ஸர்வ ஸம்மதமாமபடி ப்ரகாசிப்பிககை எஙஙனேயெனனில, பெருமாள அசவமேதம் பணணியருளா நிற்கசசெய்தே, ஸ்ரீ வால்மீகி பகவானுடைய நியோகத்தாலே குசலவர்கள வநது ஸ்ரீ ராமாயணத்தைப பாடிககொணடு திரியாநிற்க, அததைப் பெருமாள திருசசெவி சாத்தி ஸந்நிதியிலே யவர்களை யழைதது விசேஷஜ்ஞரெலலாரையுந கூட்டி யவாகள பாட்டுக கேளாநிறகிற நாளிலே, அவர்களைப் பிராட்டியினுடைய பிளளைகளென்றறிநத வநநதரம, பிராட்டியளவிலே திருவுளளஞ சென்று தனககேற சுத்தையாகில கடுக இததிரளிலே நாளைவநது ப்ரதயயமுகததாலே தன சுததியை ப்ரகாசிப்பிப்பாளாகவென்று தூதமுகேந பெருமாள மஹர்ஷிககும பிராட்டிககும அறிவித்துவிட, அப்படியே ஸ்ரீவால்மீகிபகவானை முனனிட்டுககொணடு அநத மஹாபரிஷத்திலே பெருமாள ஸந்நிதியிலே வநது ஒதுஙகி நிறகச செயதே, ஸ்ரீ வால்மீகி பகவாந இவள சுத்தையெனனுமிடத்தை பலமுகத்தாலுஞ் சொலல, பெருமாளு மிவள சுத்தை யென்னுமிடம நானுமறிவன, மஹர்ஷி சொனனதுவே போரும், ஆனாலும் லோகாபவாத பரிஹாரார்ததமாக ஒரு ப்ரத்யய மித்திரளிலே பண்ணவேணுமென்று திருவுளளமானபடியாலே, *ஸர்வாந ஸமாகதாந தருஷ்ட்வா ஸீதா காஷாய வாஸிநீ-அப்ரவீத் ப்ராஞ்ஜலிர் வாகயம அதோ தருஷ்டி ரவாஙமுகீ* எனகிறபடியே கையுமஞஜலியுமாய்க கவிழதலையிட்டுக கொணடுநின்று, *யதாஹம் ராகவாதந்யம மநஸாபி ந சிந்தயே, ததா மே மாதவீ தேவீ விவரம தாது மாஹதி; மநஸா கரமணா வாசா

யதா ராமம் ஸமர்த்தயே, ததா மே மாதவீ தேவீ விவரம் தாதுமர்ஹதி யதைதத் ஸத்ய முக்தம் மே வேத்மி ராமாத் பரம் நச-ததா மே மாதவீதேவீ விவரம்தாதுமர்ஹதி* என்று சபதம் பண்ண *ததா சபந்த்யாம் வைதேஹ்யாம் ப்ராதுராஸீந் மஹாத்புதம் - பூதலாதுத்திதம் திவ்யம் ஸிம்ஹாஸந மநுத்தமம். த்ரியமாணம் சிரோபிஸ்து நாகை ரமிதவிக்ரமை:, திவ்யம் திவ்யேந வபுஷா ஸர்வரத்ந விபூஷிதம், தஸ்மிம்ஸ்து தரணீதேவீ பாஹுப்யாம் க்ருஹ்ய மைதிலீம், ஸ்வாகதே நாபிநந்த்யைநா மாஸநே சோபவேசயத; தாமாஸநகதாம் த்ருஷ்ட்வா ப்ரவிசந்தீம் ரஸாதலம் - புஷ்ப வ்ருஷ்டிரவிச்சிந்நா திவ்யா ஸீதாமவாகிரத* என்று அவ்வளவிலே பூமியில் நின்றும் ஒரு திவ்யஸிம்ஹாஸநம் வந்துதோன்ற, அதிலே ஸ்ரீ பூமிப்பிராட்டி இவளை ஸ்வாகதப்ரச்ந பூர்வகமாக இரண்டு கையாலு மெடுத்துக்கொண்டுபோய் வைக்க, ஆஸநகதையாய்க்கொண்டு ரஸாதலத்தை ப்ரவேசியா நிற்கிற இவளைக் கண்டு திவ்ய புஷ்ப வ்ருஷ்டி இடைவிடாமல் இவள்மேலே விழுந்ததென்கையாலே இப்பிரிவிலே தன்னுடைய அநந்யார்ஹத்வத்தை ப்ரகாசிப்பித்தாளிறே.

ஆக இவ்வவதாரத்திலிவளுக்குச் சொல்லப்பட்ட விச்லேஷத்ரயத்துக்கும் ஹேது, இக்குணங்களை இப்படி வெளியிடுகையாய்த்து. இங்ஙனன்றாகில் அநபாயிநி யாய அகர்மவச்யையா யிருக்கிற இவளுக்கு, கர்மவச்யர்க்குப்போலே, இப்படி பிரிவு வருகைக்கு யோக்யதையில்லையிறே. தன்னுடைய புருஷகாரத்வோபயோகியான குணங்களையும் புருஷகாரத்வத்தையும் ப்ரகாசிப்பிக்கைக்காக வந்த அவதாரமிறே யிது; ஆகையிறே *யஸ்யாநுயஸ்யாஹாரந்தி ஸீதாவதார முகமேதமமுஷ்ய யோக்யா* என்று பட்டரருளிச் செய்தது. இப்படி சேதநர்பக்க லநுக்ரஹத்துக்குடலான க்ருபையையும் ஈச்வரன் பக்கலனுகூல வசீகரிக்கைக்குடலான பாரதந்த்ர்யாதிகளையும் தானே வெளியிட்டது, சாஸ்த்ரங்களில் கேட்கிற மாத்ரமன்றிக்கே அநுஷ்டாந பர்யந்தமாகக் காண்கையாலே தன்னைப் புருஷகாரமாகப் பற்றுவார்க்கு ருசி விச்வாஸங்க ளுறைக்கைக்குறுப்பாக. .... .... ... ... (8)

9. ஏவம்பூதகுண விசிஷ்டையான இவளுடைய புருஷகாரத்வம் தோற்றுவ தெங்கேயென்ன வருளிச்செய்கிறார் மேல். ஸம்ச்லேஷ விச்லேஷங்க ளென்று தொடங்கி.

9. ஸம்ச்லேஷ விச்லேஷங்க ளிரண்டிலும் புருஷகாரத்வம் தோற்றும்.

புருஷகாரத்மாவது - கடகத்வம்; அது இவளுக்கு அவனோடு கூடியிருக்கும் தசையிலும் நீங்கியிருக்கும் தசையிலும் ப்ரகாசிக்குமென்கை. ஸம்ச்லேஷதசையிலே, இளையபெருமாள், காட்டுக்கெழுந்தருளுகிறபோது பெருமாள் நிறுத்திப் போவதாகத் தேடினவளவிலே என்னைக் கூடக்கொண்டு போகவேணுமென்று *ஸ ப்ராதுச் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: ஸீதாமுவாசாதியசா: ராகவஞ்ச மஹாவ்ரதம்* என்கிற படியே சரணம்புகுகிறவளவிலும்; பஞ்சவடியிலே யெழுந்தருளினபோது நீரும் நிழலும் வாய்த்திருப்பதொரு ப்ரதேசத்தைப் பார்த்துப் பர்ணசாலையைச் சமையு மென்று பெருமாளருளிச் செய்ய, நந்தலையிலே ஸ்வாதந்த்ர்யத்தை வைத்த போதே பெருமாள் நம்மைக் கைவிட்டாரென்று விக்ருதராய் *ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ் ஸம்யதாஞ்ஜலி:, ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த மிதம் வசந மப்ரவீத். பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷசதம் ஸ்திதே, ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதா மிதி மாம் வத* என்கிறபடியே தம

முடைய பாரதந்த்ரயத்தைப் பெறுகைக்காகக் கையு மஞ்ஜலியுமாய் நின்றபேக்ஷிக்கிற வளவிலும் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுத் தம்மபேக்ஷிதம் பெறுகையாலும், ஆஸுர ப்ரக்ருதியான ஜயந்தன் காகரூபத்தைக் கொண்டு வந்து ஜநநி பக்கலிலே அக்ருத்ய பரவருத்தனுக *ஃ: க்ரீடந் ஸரோஷேண பஞ்சவக்த்ரேண போகிநா* என்று பெருமாள் அவன்மேலே சீறித் தலையை அறுப்பதாக ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க, *ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைச்ச ஸமஹர்ஷிபி:, த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:* என்கிறபடியே, எங்குஞ் சுற்றித் திரிந்தவிடத்திலும் ஒருபுகலிடம் இல்லாமையாலே போக்கற்று சரணம்புக, *ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம், வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்* என்றும், *புரத: பதிதம் தேவீ தரண்யாம் வாயஸம் ததா - தச்சிர: பாதயோஸ் தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ, தமுத்தாப்ய கரேணாத க்ருபாபீயூஷ ஸாகர: ரரக்ஷ ராமோ குணவாந் வாயஸம் தயயேக்ஷத*என்றும் ஸ்ரீராமாயண பாத்ம புராணங்களில் சொல்லுகிறபடியே, இவள் புருஷகாரமாகப் பெருமாள் ரக்ஷிக்கையாலும், விச்லேஷ தசையிலே *இஹ ஸந்தோ நவா ஸந்தி ஸதோவா நாநுவர்த்தஸே ததாஹி விபரீதா தே புத்தி ராசார வர்ஜிதா* இத்யாதியாலே விபரீத புத்தியான ராவணனைப் பெருமாள் திருவடிகளிலே சேர்க்கைக்கு விரகு பார்க்கையாலும், ராவணவதாநந்தரம் ராக்ஷஸிகளைச் சித்ரவதம் பண்ணுவதாக உத்யுக்தனாயி நிற்கிற திருவடியைக் குறித்து, *பாபாநாம்வா சுபாநாம்வா வதார்ஹாணாம் ப்லவங்கம கார்யம் கருணம் ஆர்யேண ந கச்சிந் நாபராத்யதி* என்று அவனிரங்கத்தக்க வார்த்தைகளைச் சொல்லி அவர்களபராதங்களைப் பொறுப்பிக்கையாலும். உபய தசையிலும் இவள் புருஷகாரத்வம் தோற்ற நின்றதிறே திருவடி, ராக்ஷஸிகளை அபராதாநுகுணம் தண்டிக்கும்படி காட்டித்தர வேணுமென்றவளவில பிராட்டி யவனுடனே மன்றாடி ரக்ஷித்தவித்தனையன்றே *மாத்ரா மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ் த்வயா ரக்ஷந்த்யா பவநாத்மஜாத் லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா—காகம் தஞ்ச விபீஷணம் சரணமித்யுக்தி க்ஷமௌ ரக்ஷதஸ் ஸா ந: ஸாந்த்ர மஹாகஸஸ் ஸுகயது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ* என்று பவநாத்மஜன் நிமித்தமாக ரக்ஷித்தாளென்றன்றே பட்டருமருளிச்செய்தது, அவ்விடத்தில் புருஷீகரித்தமை எங்ஙனே யென்னில், பலாத்காரத்தா லன்றிக்கே அநுஸாரத்தாலே அபராதங்களைப் பொறுப்பிக்கையாலே புருஷகாரத்வமென்கிறது; *திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டா விறே* என்று திருவடி விஷயமாகவும் புருஷீகரித்தமையை யருளிச்செய்தாரிறே இவர்தாமே. ஆகையா லிரண்டு தசையிலும் இவள் புருஷகாரத்வம் தோற்று மென்கிற மாத்ரத்தைச் சொல்லுகிற இவ்வாக்யத்திலிதுவும் கூட்டக்குறையில்லை. (9)

10 இவ்வுபய தசையிலும் இவள் புருஷீகரிக்கும் ப்ரகாரமென்னென்ன அருளிச்செய்கிறார்- (ஸம்ச்லேஷ தசையி லென்று தொடங்கி).

10. ஸம்ச்லேஷ தசையி லீச்வரனைத் திருத்தும் விச்லேஷதசையில சேதநனைத் திருத்தும்.

ஈச்வரனைத் திருத்துகையாவது—அபராதத்தையே பார்த்து *க்ஷிபாமி* *ந க்ஷமாமி* என்றிருக்கும் க்ருபையைக் குலைத்து, அங்கீகார உந்முகனாக்குகை; சேதனனைத் திருத்துகையாவது—அக்ருத்ய கரணாதிசீலனாய் பகவத் விமுகனாய்த் திரிகிற ஆகாரத்தைக் குலைத்து, ஆச்ரயணோந்முகனாக்குகை. ஸம்ச்லேஷ தசையில்,

இளைய பெருமாளுக்காக ஈச்வர விஷயத்திலும், விச்லேஷ தசையில ராக்ஷஸிகளுக்காகத் திருவடி விஷயத்திலும புருஷீகாரத்தமை உபயதசையிலும புருஷகாரத்வம் தோற்றுமென்கிற மாத்ரத்துக்குக் கூட்டிக்கொள்ளலாயிருந்ததாகிலும், ப்ராகரணிகமான வர்த்தம ஸம்ஸாரிசேதநனையு மீசவரனையும சேரவிடுகையாகையாலே, இவ்வாக்யத்துக் கிப்படியே அர்த்தமாகக் கடவது ஆகையால ஈச்வரனோடு தான் கூடியிருக்கும தசையில, சேதநன ஆச்ரயணோந்முகனாய வநதிருக்கச்செய்தே, பூர்வாபராதத்தைப் பார்தது ஈசவர னங்கீகரியாதிருக்குமளவில, அவன ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்த்து க்ருபாதி குணங்களைக் கிளப்பி இவனை யங்கீகரிக்குமபடியாக்குகையும்; பிரிநதிருக்கும தசையில, ஈசவர னங்கீகாரோந்முகனாய வநதிருக்கச்செய்தே, இச சேதநன கர்மாநுகுணமாக விமுகனாயிருக்குமளவில இவன வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைப்பித்து ஆசரயணோன்முகனாக்குகையும இவவிரண்டு தலையையும திருத்துகையாவது. ஆகவிப்படி, அங்கீகார விரோதியான ஸ்வாதந்த்ரயத்தை மாற்றி, அங்கீகாரத்துக்குடலான க்ருபாதிகளை உத்பவிப்பிக்கையாலும், ஆசரயண விரோதியான வைமுக்யத்தை மாற்றி, ஆசரயண ருச்யாதிகளை ஜநிப்பிக்கையாலும், *ச்ரு-ஹிம்ஸாயாம* என்கிற தாதுவிலும், *ச்ரு விஸ்தாரே* என்கிற தாதுவிலும் நிஷ்பந்நமான ஸ்ரீசப்தத்தில *ச்ருணோதி* *ச்ருணாதி* என்கிற வ்யுத்பத்தி த்வயார்த்தமும இவவிடத்திலே தோற்றுகிறது, *ச்ருணோதி நிகிலாந் தோஷாந் ச்ருணாதி ச குணைர் ஜகத்* என்று இவ்வுத்பத்தி த்வயமும சேதநபரமாயத் தோற்றிற்றேயாகிலும், (ஈசவரனைத் திருத்தும்) என்கிற விடத்திலும இந்த ந்யாயம தோற்றுகையாலே இப்படி சொல்லுகை குறையில்லை. (10)

11. இருவரையும் திருத்துவ தெவவழியாலே யென்னு மாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் (இருவரையு மென்று தொடங்கி).

11. இருவரையும திருத்துவதும உபதேசத்தாலே.

ஈச்வரனைத் திருத்துவது இசசேதநனுடைய அபராதங்களைக் கணக்கிட்டு நீரிப்படி தள்ளிக் கதவடைத்தால இவனுக்கு வேறொரு புகலுண்டோ, உமக்கு மிவனுக்கு முண்டான பந்தவிசேஷத்தைப் பார்த்தால *உறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது* என்கிறபடியே குடநீர் வழித்தாலும போகாததொன்றன்றோ, ஸ்வமமான விவனை லபிக்கை ஸ்வாமியான வுமமுடைய பேறல்லவன்றோவிருப்பது, எதிர் சூழல்புக்குத் திரிகிற வுமக்கு நான சொல்லவேணுமோ, ரக்ஷணஸாபேக்ஷனாய் வந்த விவனை ரக்ஷியாதபோது உமமுடைய ஸர்வரக்ஷகத்வம் விகலமாகாதோ? அநாதிகாலம் நமமுடைய ஆஜ்ஞாதிலங்கநம்பண்ணி நமமுடைய சீற்றத்துக்கிலக்காய்ப் போந்த விவனை அபராதோசித தண்டம பண்ணாதே அத்தைப்பொறுத்து அங்கீகரித்தால் சாஸ்த்ர மர்யாதை குலையாதோ வென்றன்றோ திருவுள்ளத்திலோடுகிறது, இவனை ரக்ஷியாதே அபராதாநுகுணமாக நியமித்தால உமமுடைய க்ருபாதி குணங்கள் ஜீவிக்குமபடியென்? அவை ஜீவித்ததாவது இவனை ரக்ஷித்தாலன்றோ, நியமியாதபோது சாஸ்த்ரம ஜீவியாது, ரக்ஷியாதபோது க்ருபாதிகள ஜீவியாது, என்செய்வோமென்ன வேண்டா, சாஸ்த்ரத்தை விமுகர் விஷயமாக்கி க்ருபாதிகளை அபிமுகர் விஷயமாக்கினால இரண்டும ஜீவிக்கும், ஆனபின்பிவனை ரக்ஷித்தருளீரென்னுமுபதேசத்தாலே. இவவுபதேச க்ரமம இவர் தாமருளிச்செய்த பரந்தபடியிலும்,

ஆச்சான்பிள்ளை யருளிச்செய்த பரந்த ரஹஸ்யத்திலும் விஸ்தரேண காணலாம். *பித்தேவ தவதப்ரேயாந ஜநநீ பரிபூர்ணகஸீ ஜநே ஹித ஸ்ரோதோ வருத்தயா பவதி ச கதாசித் கலுஷதீ:, கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வமுசிதை ருபாயை விஸ்மார்ய ஸ்வ ஜநயஸி மாதா ததஸி ந:* என்று, அபராத பரிபூர்ணசேதந விஷயமாக ஹிதபரனை ஸர்வேச்வரன் திருவுள்ளம் சீறும்படியையும், அத்தசையில இச் சீறறத்துக் கடியென்னென்பது:— இவன் நீரக்கழியச்செய்தவபராத மென்றவன் சொன்னால், மணற்சோற்றிலே கல்லாராய்வாருண்டோ? இந்தஜகத்தில் அபராதமற்றிருப்பாரார்? என்பதாய், உசிதோபாயங்களாலே அபராதங்களை மறப்பித்து, பிராட்டி சேர்த்தருளும்படியையும் அருளிச் செய்கையாலே, உபதேசத்தாலே ஈச்வரனைத் திருத்தும்படியை ஸங்க்ரஹேண பட்டரும் அருளிச்செய்தாரிறே. அவதார தசையிலேயும் *ப்ராணஸம்சயமாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாத வாயஸம், த்ராஹி த்ராஹீதி பர்த்தாரமுவாச தயயா விபும்* என்று வாசாமகோசரமான மஹாபராதத்தைப் பண்ணின காகத்தைத் தலையறுப்பதாக விட்ட ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கொரு கண்ணழிவு கற்பித்துப் பெருமாள் ரக்ஷித்தருளிற்றும் இவளுபதேசத்தாலே யென்னுமிடம், பாத்ம புராணத்திலே சொல்லப்பட்டதிறே. இனி சேதநனைத் திருத்துவது, உன்னபராதத்தின் கனத்தைப் பார்த்தால் உனக்கோரிடத்தில் காலூன்ற விடமில்லை ஈச்வரனுவான் நிரங்குச ஸ்வதந்த்ரனகையாலே அபராதங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு அறுத்தறுத்துத் தீர்த்தாகிற்கும். இவ்வநர்த்தத்தைத் தப்பவேண்டில அவன் திருவடிகளிலே தலை சாய்க்கையொழிய வேறொரு வழியில்லை, அபராத பரிபூர்ணனை யென்னை யவனங்கீகரிக்குமோ தண்டியானேயென்று அஞ்சவேண்டா. ஆபிமுக்யமாத்ரத்திலே அகிலாபராதங்களையும் பொறுக்கைக்கும் போக்யமாகக் கொள்ளுகைக்கும் ஈடான குணங்களாலே புஷ்கலனென்று லோகப்ரஸித்தனா யிருப்பானொருவன், ஆனபின்பு நீ ஸுகமேயிருக்க வேணுமாகில் அவனை ஆச்ரயிக்கப் பார்—என்னும் பரமஹிதோபதேசத்தாலே; அப்படி எங்கே கண்டோமென்னில், பாபிஷ்டனாய் வழிகெட நடந்து திரிகிற ராவணனைக் குறித்து *மித்ர மௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா, வதஞ்சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷப:, விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிது மிச்சஸி* என்று பெருமாளோடே உறவுபண்ணுகைக்கா னுனக்கு ப்ராப்தம், அது செய்யப் பார்த்திலையாகில் வழியடிப்பாரக்கும் தரையிலே காலபாவி நின்று வழியடிக்கவேணுமே, உனக்கோரிருப்பிடம் வேண்டி யிருந்தாயாகிலும் அவரைப் பற்றவேணும். அவரல்லாததொரு ஸ்தலமில்லைகாண், எளிமையாக எதிரிகாலிலே குனிந்து இவ்விருப் பிருப்பதிற்காட்டில் படடுப்போக வமையுமென்றிருந்தாயோ, உன்னை சித்ரவதம் பண்ணாமல் நற்கொலையாகக் கொல்லும்போது மவரைப்பற்ற வேணுங்காண், நான் பண்ணின அபராதத்துக்கு என்னை யவர்கைக்கொள்வரோ வென்றிருக்கவேண்டா, ஆபிமுக்யம் பண்ணினால் முன்பு செய்த வபராதத்தைப் பார்த்துச் சீறுமந்த புன்மை யவர்பக்கலில்லைகாண், அவர் புருஷோத்தமர்காண், சரணாகதி பரமதர்மமென்றறியுமவராய் சரணாகததோஷம் பாராத வத்ஸலராகவெல்லாரும் அறியும்படிகாண் பெருமாளிருப்பது, நீ ஜீவிக்கவேணுமென்று இச்சித்தாயாகில் அவரோடேனக்குறவு உண்டாகவேணுமென்று இப்படி யச்சமுறுத்தி யுபதேசித்தாளிறே; அவன் திருந்தாதொழிந்தது இவளுடைய உபதேசக்குறையன்றே,

அதாவது—ஸௌலப்யாதி குணபூர்த்தியாலே பரபத்திக்கு நியத விஷயமான இவ்வர்ச்சாவதாரத்திலே ப்ரபத்தி பண்ணுமதிகாரிகள் ப்ரபத்தி ஹேது பேதத்தாலே மூன்று வகைப்பட்டிருப்பர்களென்கை. (41)

42. அவர்களாரென்னு மபேக்ஷையிலே யருளிச் செய்கிறார் (அஜ்ஞரும) என்று தொடங்கி.

42. அஜ்ஞரும, ஜ்ஞாநாதிகரும், பக்திபரவசரும்.

(அஜ்ஞராகிறார)—பகவல்லாபத்துக்கு உறுப்பாக ஸாதநாநுஷ்டாநம பண்ணுகைக்கீடான ஜ்ஞாந மில்லாதவர்கள். அஜ்ஞாநம அசக்திக்கு முபலக்ஷணம. (பராப காந்தர பரித்யாகத்துக்கு மஜ்ஞாநாசக்திகளன்று) என்று மேலே யிவர் தாமே யருளிச் செய்கிறாரிறே. (ஜ்ஞாநாதிகராகிறார்). ஜ்ஞாந சக்திகள் உண்டா யிருக்கச் செய்தேயும், பகவ தத்யந்த பரதந்த்ரமான ஸ்வரூப யாதாத்ம்ய தர்சநத்தாலே, உபாயாந்தரங்கள் ஸ்வரூபவிருத்தமென்று பரித்யஜிக்கைக்கீடான ஜ்ஞாந பூர்த்தியுடையவர்கள். (பக்தி பரவசராகிறார)—ஒன்றையு மடைவுபட அநுஷ்டிக்க க்ஷமரல்லாதபடி பகவத் ப்ரேமாதிசயத்தாலே சிதிலகரணரா யிருக்குமவர்கள். (42)

43. இப்படி யிவ்வஜ்ஞாநாதிக ளடியாக ப்ரபத்தி பண்ணினவர்க ளின்னாரென்னுமிடம காணலா யிடமுண்டோ வென்னுமாகாங்க்ஷையிலே யருளிச் செய்கிறார் (அஜ்ஞாநத்தாலே) என்று தொடங்கி.

43. அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நா அஸ்மதாதிகள், ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நா பூர்வாசார்யர்கள், பக்திபாரவச்யத்தாலே ப்ரபந்நா ஆழ்வார்கள்.

(அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நா) என்றது—இதரோபாயாநுஷ்டாநத்தி லிழிகைக்கீடான ஜ்ஞாநாதிகள் முதலிலே யில்லாமையாலே, அநந்யகதிகளாய்க் கொண்டு பகவத் விஷயத்திலே ப்ரபத்தி பண்ணினவர்களென்றபடி. (அஸ்மதாதிகள்) என்று—ஸ்வநைச்யாநுஸந்தாநத்தாலே மந்தாதிகாரிகளோடே தம்மையும் கூட்டி யருளிச்செய்கிறார். (ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர்) என்றது—உபாயாந்தரங்கள் ஸ்வரூபநாசக மென்று நடுங்கும்படியான ஸ்வரூபயாதாத்ம்ய தர்சநத்தாலே வந்த ஜ்ஞாந பூர்த்தியாலே அநந்ய கதிகளாய்க் கொண்டு, ஸ்வரூபாநுரூபமாக பகவதி ந்யஸ்தபரரானவர்களென்றபடி (பூர்வாசார்யர்களாகிறார்) நாத யாமுந யதிவராதிகள். (பக்தி பாரவச்யத்தாலே ப்ரபந்நா) என்றது—பகவத்ப்ரேம பௌஷ்கல்யத்தாலே, *காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்* என்றும், *இட்டகால் இட்டகை* என்றுஞ் சொல்லுகிறபடியே—சிதிலகரணராயிருக்கையாலே, ஸாதநாநுஷ்டாநத்துக்கு ஆளன்றிக்கே அநந்யகதிகளாய்க்கொண்டு அவன் பக்கலிலே பரஸமர்ப்பணம் பண்ணினவர்களென்றபடி. பக்தி பரவசர்க்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணப் போகாதென்னுமிடம் *உன்னைக் காணுமவாவில் வீழ்ந்து நானெங்குறறேனுமல்லேன்* என்றும், *என் கொள்வன்* என்கிற பாட்டிலும் ஆழ்வார் ஸுஸ்பஷ்டமாக வருளிச் செய்தாரிறே (43)

44. இப்படி அஜ்ஞாநாதிகளோரோரனந்தே யிவர்களுக்கு ப்ரபத்தி ஹேதுவாகச் சொல்லுகைக்கு மூலமின்னதென்கிறார் (இப்படி என்று தொடங்கி).

44. இப்படி சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற.

அதாவது—அஜ்ஞானசக்திகளும் ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானமும் பகவத் பக்தியுமாகிற விவை மூன்றிலும், மூவர்க்கு மவ்வய முண்டாயிருக்கச் செய்தே, ஒரொன்றே யிவர்களுக்கு ப்ரபத்தி ஹேதுவாகச் சொல்லுகிறதும் இவற்றில் ஒரொன்றே இவ்வதிகாரிகளப்பக்க லூற்றத்திருக்கையாலே யென்கை.

இத்தால—முற்பட்டவர்கள் பக்கல் ஜ்ஞான பக்திகளிரண்டும் குறைந்து அஜ்ஞானமே விஞ்சியிருக்கும், நடுவிலவர்கள் பக்கல, அஜ்ஞான மல்பமாய பக்தியுமளவு பட்டு ஜ்ஞானமே விஞ்சியிருக்கும், பிற்பட்டவர்கள் பக்கல, அஜ்ஞானம் அத்யல்பமாய ஸ்வரூப ஜ்ஞானமுங் குறைவற்றிருக்கச் செய்தே, ப்ரேமமே கரைபுரண்டிருக்கும்; ஆகையால், எல்லா மெல்லார் பக்கலிலு முண்டேயாகிலும் அல்பங்களானவை கிடக்கச் செய்தே அதிகமானதுவே அவ்வவர்க்கு ப்ரபத்தி ஹேதுவாமென்றதாயத்து. இந்த யோஜனைக்கொரு குறையுண்டு மயர்வற மதிநலம் பெற்ற ஆழ்வார்களுக்கும் அஜ்ஞானம் சிறிது கிடக்கிறதுண்டென்று கொள்ள வேண்டி வருகையாலே, ஆனால் செய்வதென்னென்னில், (ஊற்றத்தைப் பற்ற) என்கிறவிதத்தை அநுஸந்தான பரமாக்கி யோஜிக்குமளவி லிவ்விரோதமில்லை, அப்போது (இப்படி) இத்யாதிக்கு—அஜ்ஞானசக்திகளும் ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானமும் பகவத் பக்தியுமாகிற இம் மூன்றினுடையவு மநுஸந்தானம் மூவர்க்கு மேதேனுமொருபடி யுண்டாயிருக்கச் செய்தே ஒரொன்றே யிவர்களுக்கு ப்ரபத்தி ஹேதுவாகச் சொல்லுகிறதும் இவற்றிலேயொரொன்றிலே யிவ்வதிகாரிகளுக்கு ஊற்றமாகையாலே யென்று பொருளாகக் கடவது. அதாவது—அநந்யகதிகளாய ப்ரபந்நராகைக்குடலான அஜ்ஞானாதி த்ரயாநுஸந்தானமும் மூவர்க்கு முண்டானாலும், மூன்றிலும் வைத்துக்கொண்டு ப்ரசுரமானதே தந்தாமுக்கு அநந்யகதிகளாய ப்ரபத்தியி லிழிகைக்கு ஹேதுவாக வநுஸந்தித்திருக்கையாலே யென்றபடி. இதில் ப்ரதமாதிகாரிகளுக்கு அஜ்ஞானாநுஸந்தானம் ஸ்வரஸம்; நடுவு சொன்னவர்களுக்கும், ப்ராமாணிகராகையாலே அஜ்ஞானத்தினுடைய ஸ்வாஸந நிவ்ருத்தி கூடாமையால், அஜ்ஞானாநுஸந்தானம் கூடும், பிற்பட்டவர்கள் மயர்வற மதிநலம் பெற்றவர்களாகையாலே அஜ்ஞானாநுஸந்தானம் நைச்ய நிபந்தநமாயித்தனை. (44)

45. இவ்வஜ்ஞானாதி த்ரயத்துக்கும் காரணமின்னதென்கிறார் (இம்மூன்றும்) என்று தொடங்கி.

45. இம்மூன்றும் மூன்று தத்வத்தையும் பற்றிவரும்.

(மூன்று தத்வத்தையும் பற்றிவரும்) என்றது—ஸாதநாநுஷ்டானத்தில் அஜ்ஞானசக்திகளுக்கு மூலம் காம நிபந்தமான அசித் ஸம்பந்தமாகையாலே, அஜ்ஞானம் அசித்தத்வத்தைப் பற்றிவரும், இதர ஸாதநங்கள ஸ்வரூப விருத்தமென்று பரித்யஜிக்கைக்குடலான ஜ்ஞான பூர்த்திக்கடி மத்யம பதத்தில் சொல்லுகிற ஆத்ம ஸ்வரூப யாதாத்ம்ய தர்சனமாகையாலே, ஜ்ஞானாதிக்யம் ஆத்ம தத்வத்தைப்பற்றி வரும்; ஒன்றையுமடைவுபட அநுஷ்டிக்கமாட்டாதபடி கரணசைதிலயத்தைப் பண்ணும் பக்திவிவ்ருத்திக்குக் காரணம் * காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி *

என்னும் பகவத் விக்ரஹ வைலக்ஷண்யமாகையாலே பகதிபாரவச்யம் பகவத்தத் த்வத்தைப் பற்றிவரு மென்றபடி (45)

46 அதிகாரி த்ரயத்துக்கும் அஜ்ஞாநாதி த்ரயத்திலுமந்வய முண்டாயிருக்க, ஒரொன்றே ப்ரபத்ந ஹேதுவாகச் சொல்லுகிறது (ஊற்றத்தைப்பற்ற) என்றிறே சொல்லிற்று, இப்படி ஏகாதிகாரி பக்கலிலே இம்மூன்று முண்டென்னு மிடங் காணலாமிட முண்டோவென்ன வருளிச் செய்கிறார் (என்னை) என்று தொடங்கி.

46. * என்னை செய்கேன் * என்கிறவிடத்தில் இம்மூன்றுமுண்டு

அதாவது—எம்பெருமான் தம்முடைய ஆர்த்தி கண்டிரங்கக் காணாமையாலே, தன்னைப் பெறுமிடத்தில் சில ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமென்றிருந்தானாகக் கொண்டு, உபாயாந்தராநுஷ்டாநத்துக்கு யோக்யதை யில்லாதபடி அஜ்ஞனான நான் என் செய்கேன், ஜ்ஞாநம் தந்தேறாமே என்னில், நீ தந்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூப பாரதந்தர்யத்தை யுணர்ந்து ஸாதநாநுஷ்டாநம் அப்ராப்த மென்றிருக்கிற நானென்ன செய்கேன், ஸ்வரூபத்துக்குச் சேராதாகிலும் உன்னைப் பெறலாமாகில் அது தன்னை அநுஷ்டிக்கலாயத்திறே ஜ்ஞாந மாத்ரத்தைத் தந்தாயாகில், பகதிரூபாபந்ந ஜ்ஞாநத்தைத் தருகையாலே ஒன்றையுமடைவுபட அநுஷ்டிக்க க்ஷமனல்லாதபடி பகதி பரவசனான நானென்னசெய்கேன் என்று இம்மூன்று மாழ்வார்க்கு விவக்ஷித மாகையாலே அவ்விடத்திலே இம்மூன்று முண்டென்கை. ஆகையால இவ்விடத் திலே காணலாமென்று கருத்து. (46)

47 ஆனாலிம்மூன்றும் அவ்விடத்தில் ப்ரபத்தி காரணமாகிறதோ வென்ன? (அங்கொன்றைப் பற்றி யிருக்கும்) என்கிறார்.

47. அங்கு ஒன்றைப்பற்றி யிருக்கும்

அதாவது—அவ்விடத்தில் ப்ரபத்தியானது மூன்றிலும் வைத்துக்கொண்டு ஊன்றி யிருக்கிற பகதிபாரவச்யத்தையே தனக்கு ஹேதுவாகப் பற்றி யிருக்கு மென்றபடி (47)

48 இந்த ஹேதுத்ரய மடியாக வரும் ப்ரபத்திகளில் முக்யமேதென்ன? (முக்யமதுவே) என்கிறார்.

48. முக்ய்யம் அதுவே.

அதாவது—பகதி பாரவச்யமடியாக ப்ரபத்தி பண்ணுமிடத்தில ப்ராப்யருசி கண்ணழிவற வுண்டாகையாலே அதுவே முக்ய மென்றபடி. (48)

49. இவ்வதிகாரித்ரயத்துக்கும் ப்ரமாணமுண்டோ வென்ன? ப்ரதமம் பட்டருளிச்செய்ததொரு ச்லோகத்தை யுதாஹரிக்கிறார் (அவித்யாத꞉) என்று தொடங்கி.

49. "அவித்யாத꞉" என்கிற ச்லோகத்திலே இம்மூன்றும் சொல்லிற்று.

*அவித்யாதோ தேவே பரிப்ருடதயாவா வித்யயா ஸ்வபகதோ பூம்நாவா ஜகத் கதி மநயா மவிதுஷாம், கதி கமயச்சாஸௌ ஹரிர் ஜிதந்தாஹ்வய மந்த்ர: ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸகலு பகவாந் சௌநகமுநி:* இச்சலோகார்த்தம், ஜிதந்தா வ்யாக்யாநோபோத்காதத்திலே, "ப்ரபத்திக் கதிகாரிகள் அஜ்ஞரும் ஸர்வஜ்ஞரும் பக்திபரவசருமென்று த்ரிவிதமாகப் பட்டர் அருளிச்செய்தாரிறே" என்று தொடங்கி, *அஜ்ஞனாகிறான்—பகவல்லாபத்துக்குத் தன்பக்கலில் ஜ்ஞாந சக்திகளில்லாதவன்; ஸர்வஜ்ஞனாகிறான்—தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதிக்கவொண்ணாத வைபவத்தையுடையவனீச்வரனென்றிருக்கையாலே அநந்யஸாத்யனென்றிருக்குமவன்; பக்திபரவசனாகிறான் — ஜ்ஞாநசக்திகளுண்டாயிருக்கச்செய்தே அடைவுபட அநுஷ்டிக்கமாட்டாதவன்; இவர்கள் மூவரும், பகவத்விஷயமொழிய வேறு உபாயமுண்டென்றறியாதவர்கள்; இவர்களுக்கு ப்ராபகனுமாய், ப்ராப்யனுமாயிருக்கும் ஸர்வேச்வரன்" என்று, ஜிதந்தையென்று பேரையுடைத்தான மந்த்ர ரஹஸ்யத்தை, ஸர்வஜ்ஞனான ஸ்ரீசௌநகபகவான் வ்யாக்யாநம் பண்ணப் பெறுவதே! என்கிறார்" என்று ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தார்.

(ஜ்ஞாநாதிகயத்தாலே ப்ரபந்நர்) என்றவிடத்தில், ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநம் ப்ரபத்தி ஹேதுவாகச் சொல்லிற்று; இந்த ச்லோகத்தில், பகவதநந்ய ஸாத்யத்வ ஜ்ஞாநம் ப்ரபத்திஹேதுவாகச் சொல்லிற்று; ஆகையால், இரண்டும் ஜ்ஞாநாதிகர்க்கு அநந்யகதித்வ பூர்வகமான ப்ரபத்தித்துக்கு ஹேதுவாமென்று கொள்ள வேணும். கீழுமிதுதானே ஆத்மஜ்ஞானலாமென்னில், ஒண்ணாது, (இம்மூன்றும் மூன்று தத்வத்தையும் பற்றிவரும்) என்றதோடு சேராமையால். (49)

50. அநந்தரம், இவ்வர்த்த விஷயமாக, அகிலஜகந்மாதாவாய் ஆப்ததமையான பிராட்டி லக்ஷ்மீதந்த்ரத்திலருளிச்செய்த வசநத்தை யுபாதாநம் பண்ணுகிறார் (இதம் சரணமஜ்ஞாநாம்) என்று.

## 50. "இதம் சரணமஜ்ஞாநாம்."

*இதம் சரண மஜ்ஞாநா மிதமேவ விஜாநதாம், இதம் திதீர்ஷதாம் பார மிதமாநந்த்ய மிச்சதாம்* இந்த ச்லோகத்தில், *இதம்* என்று பராமர்சிக்கிறது கீழ்ச்சொன்ன சரணாகதியை. *அபாயோபாயநிர்முக்தா மத்யமாம ஸ்திதிமாஸ்திதா, சரணாகதி ரகர்யைஷா ஸம்ஸாரார்ணவ தாரிணீ* என்றிறே கீழ்ச்சொல்லிநின்றது (இயம் என்று ஸ்த்ரீலிங்க நிர்தேசமன்றிக்கே, * இதம் * என்ற நபும்ஸக லிங்க வ்யத்யயம் சரணசப்த விவக்ஷையாலே. இதில் அஜ்ஞஸர்வஜ்ஞர்களை ஸ்புடமாகச் சொல்லுகையாலே, மேல் பக்திபரவசரைச் சொல்லுகிறதென்று கொள்ளவேணும். *இதம் திதீர்ஷதாம் பாரம்* என்றது-சடக்கென அநிஷ்ட நிவ்ருத்தி பிறக்கவேணுமென்னும் த்வரையையுடையார்க்கென்றபடி. *ஆநந்த்ய மிச்சதாம்* என்றது ஸ்வரூபப்ராப்த பரிபூர்ண பகவதநுபவத்தைப் பெறாதொழிலல்லது தரிக்கமாட்டாதார்க்கென்றபடி. இவையிரண்டும் பக்தியினுடைய பூமாவாலே வருமவையிறே பக்திபாரவச்யம் உபாயாந்தராநுஷ்டாநத்தில் அசக்திக்கு முறுப்பாய், அநிஷ்ட நிவ்ருத்தியிலும் இஷ்டப்ராப்தியிலுமுண்டான விளம்பாக்ஷமதைக்கு முடலாயிறே யிருப்பது; அதில், விளம்பாக்ஷமதைக் குடலான

ஆகாரத்தை இந்த ச்லோகத்தில் சொல்லுகிறது. ஆனால், கீழ் அசக்திக்குடலாக வன்றோ சொல்லிப்போந்தது, அதுக்கிது ப்ரமாணமாமோவென்னில்; அதிகாரித்ரை வித்யம் தர்சிப்பிக்கிற இவ்வளவே இவ்விடத்திலபேக்ஷிதமாகையாலே இது ப்ரமாண மாகச் சொல்லத் தட்டில்லை. *அவித்யாதঃ* என்கிற ச்லோகத்தில், ஜ்ஞாநாதிக்யத்துக் குடலாகச் சொன்னதும் கீழ்ச்சொல்லிவந்ததும் பிந்நமாயிருக்கச் செய்தே, அதிகாரி த்ரைவித்யத்துக்கு ப்ரமாணமாக வத்தைச் சொன்னபோலே. ... (50)

51. ஆக, ப்ரபத்த்யதிகாரி த்ரைவித்யத்துக்கு ப்ரமாணம் காட்டினாராய் நின்றார்கீழ்; இந்த த்ரிவிதப்ரபத்தியிலும் பக்திபாரவச்ய ப்ரபத்தியே முக்யமென் றிறே கீழ்ச்சொல்லிற்று. ஏவம்பூத ப்ரபத்தி நிஷ்டரானவர்கள் தந்நிஷ்டை குலைந்து பகவல்லாபார்த்தமாக ஸ்வயத்நத்திலே மூளுவது, அவன்வரக்கொள்ள அவனையு பேக்ஷிப்பதாகிற விவற்றுக்கு நிதாநமேதென்ன, அருளிச்செய்கிறார் (பக்திதன் னிலே) என்று தொடங்கி.

51. பக்திதன்னிலே அவஸ்தாபேதம் பிறந்தவாறே இதுதான் குலையக்கடவ தாயிருக்கும்.

(பக்திதன்னிலே அவஸ்தாபேதம் பிறக்கையாவது)—கரணசைதில்யத்தாலே ஸ்வயத்ந க்ஷமரன்றிக்கே அவனே யுபாயமாக அத்யவஸித்து, அவன் வரவு பார்த் திருக்கு மவஸ்தையளவன்றிக்கே கண்ணுஞ்சுழலையிட்டு, ஏதேனுமொருபடியாலே யாகிலும் அவனை யிப்போதே பெறவேணும் என்னுமதிமாத்ர த்வராவஸ்தை விளைகை. (இது) என்று—ப்ரபத்தியைச் சொல்லுகிறது. தாத்ருசாவஸ்தை பிறந்தால் ப்ரபத்தி குலைகையாவது *என்னான்செய்கேன்* என்று ஸ்வப்ரவ்ருத்தியிலந்வயமற்று பகவதி ந்யஸ்தபரரா யிருக்கு மிருப்புக்குலைகை. .... .... .... (51)

52. இப்படி ப்ரபத்தி நிஷ்டை குலையும்படி பிறந்த பக்தியும் அவஸ்தா பேதம் விளைக்குமத்தை யருளிச் செய்கிறார் (தன்னை) என்று தொடங்கி.

52. தன்னைப் பேணவும் பண்ணும் தரிக்கவும் பண்ணும்.

(தன்னைப் பேணப் பண்ணுகையாவது)—*காறைபூணும்* இத்யாதியிற்படியே—அவன் வரவுக் குடலாகத் தன்னை யலங்கரிக்கும்படி பண்ணுகை. அதாவது—பகவல்லாபார்த்தமாக ஸ்வயத்னத்திலே மூட்டு மென்றபடி. இது, மடலெடுக்கை முதலானவற்றிலே மூட்டுமதுக்கு முபலக்ஷணம். (தரிக்கப் பண்ணுகையாவது)—அரைக்ஷண மவனையொழிய தரிக்கமாட்டாமையாலே, அவன் வரவுக்குடலாக ஸ்வய த்னத்திலே மூளும்படி பண்ணின வதுதானே, அவன் வரக்கொள்ள விளம்ப ரோஷத் தாலே *போரு நம்பீ* *கழகமேறேல் நம்பீ* என்று அவனை யுபேக்ஷித்துத் தள்ளி தரித்திருக்கும்படி பண்ணுகை. ஆக, இவை யிரண்டாலும்—*என்னான் செய்கேன்* என்றும், *தரியேனினி* என்று மிருக்கு மிருப்புக்கு ப்ரதிகோடியை விளைக்கு மென்ற படி. ஆகையாலே, ப்ரபத்தி நிஷ்டை குலைந்து ஸ்வப்ரவ்ருத்த்யாதிகளி லிழிகைக்கடி—பக்தியினுடைய அவஸ்தா பேதமென்று கருத்து. (52)

53. (தன்னைப் பேணவும் பண்ணும் தரிக்கவும் பண்ணும்) என்று—எம்பெருமான் வருகைக்கு உடலாகக் க்ருஷி பண்ணுகையும் அவன் வரக்கொள்ள அவனை உபேக்ஷிக்கையுமாகிற பரஸ்பர விருத்த ஸ்வபாவங்களை விளைக்கும்படியையிறே சொல்லிற்று; இப்படி பக்தியானது ஸ்வாவஸ்தா விசேஷங்களாலே சேதநர்க்கு விளைக்கும் பரஸ்பர விருத்த ஸ்வபாவங்கள் தத்விஷய மாத்ரத்திலன்றிக்கே தத்ஸம்பந்தி வஸ்துக்கள் விஷயமாகவும் காணலாமென்கிறார் மேல் (இந்த என்று தொடங்கி)

**53 இந்த ஸ்வபாவவிசேஷங்கள் கல்யாணகுணங்களிலும் திருச்சரங்களிலும் திருநாமங்களிலும் திருக்குழலோசையிலுங் காணலாம்.**

(இந்த ஸ்வபாவ விசேஷங்கள்) என்று—கீழ்ச் சொன்னவைதன்னையே சொல்லுகிறதன்று, இப்படிப்பட்ட ஸ்வபாவ விசேஷங்களென்றபடி. அவையாவன—அநுபாவ்ய விஷய மொருபடிப்பட்டிரா நிற்கச் செய்தே, அத்தை யநுபவிக்கிறவர்களுக்கு தாரகமாய்த் தோற்றுகையும், பாதகமாய்த் தோற்றுகையும். (கல்யாண குணங்கள்) இத்யாதி. * கோவிந்தன் குணம்பாடி யாவி காத்திருப்பேனே * என்று தாரகமாகவும் * வல்வினையேனை யீர்கின்ற குணங்களையுடையாய * என்று பாதகமாகவும் சொல்லுகையாலே — கல்யாண குணவிஷயமாகவும்; * சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக்கன்றி யென் மனந்தாழ்ந்து நில்லாதே * என்று தாரகமாகவும், * சரங்களே கொடிதாயடுகின்ற * என்று பாதகமாகவும் சொல்லுகையாலே - திருச்சர விஷயமாகவும், * திருமாலைப் பாடக் கேட்டு மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே * என்று தாரகமாகவும், * கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர் * என்று பாதகமாகவுஞ் சொல்லுகையாலே—திருநாம விஷயமாகவும், * எங்களுக்கே யொருநாள் வந்தூத உன் குழலின்னிசை போதராதே * என்று தாரகமாகவும், * அவனுடைத் தீங்குழ லீருமாலோ * என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருக்குழலோசை விஷயமாகவும் காணலாமென்றபடி.

என்றுமொக்க போக்யங்களாயிருந்துள்ள கல்யாண குணாதிகள் தாரகமாய்த் தோற்றுவது, பாதகமாய்த் தோற்றுவதாகிறது — அநுபோக்தாக்களான இவர்களுடைய ப்ரேம ஸ்வபாவ விசேஷங்களாலேயிறே, அல்லது, குணாதிகளின் ஸ்வரூப பேதத்தாலன்றே. ஆகையால், பக்த்யவஸ்தா பேதஜநிதங்களான ஸ்வபாவ விசேஷங்கள் இவ்வோ வஸ்துக்கள் விஷயமாகவுங் காணலாமென்கிறது. குணாதிகள் தாரகங்களாகவும் பாதகங்களாகவும் பேசுகிற விடத்தில் இரண்டு மொருவர் பேச்சன்றிக்கே யிருந்ததேயாகிலும், ஆழ்வார்களெல்லாரும் ஏகப்ரக்ருதிகளாகையாலும், எல்லாருடைய பக்தியும் பகவத் ப்ரஸாத லப்தையான பரபக்தியாகையாலும், அந்த பக்தி ஸ்வபாவ விசேஷங்கள் காட்டுகிற மாத்ரமே இவ்விடத்தில் அபேக்ஷிதமாகையாலே விரோதமில்லை. * சரங்களே கொடிதாயடுகின்ற * என்கிற இது பராஜித ராக்ஷஸர் பாசுரமன்றோ, அத்தை * சரங்களாண்ட * என்கைக்கு ப்ரதிகோடியாகச் சொல்லலாமோ வென்னில்; ராமவிஜயம் தமக்கிஷ்டமாகையாலே, அந்த விஜயத்துக்கு இலக்காய், தோற்ற ராக்ஷஸர் தசைபிறந்து, பிராட்டிமார் தசை பிறந்து பேசுமாப்போலே தாமான தன்மை தோற்றாதே தோற்றராக்ஷஸர் பாசுரத்தாலே விஜயத்தைப் பேசி யநுபவிக்கிறாரென்றிறே இத்திருமொழிக்கு வ்யாக்யானம் பண்ணி

யருளுகிற வாசார்யர்க ளருளிசசெயவது. ஆகையால, தம முடைய ப்ரேம ஸவபாவத் தாலே ததவஸதாபகநமானபினபு திருச்சரஙகள பாதகமாயததும தமககேயாய்த் தோற்றிய பேசுகையாலே அப்படி சொலலக குறையிலலை.

அதவா, (தனனைப் பேணவும பணணும தரிககவும பணணும) எனற விவை யிரணடாலும—அவன் தானே வருமளவும தரியாமல வரவுககுடலாக யத்திககப் பணணுவது, வரககொளள பரணயரோஷத்தாலே தளளித தரித்திருககப பணணுவ தாம படியையிறே சொலலிறறு, இப்படி விருத்த ஸவபாவஙகளை யொனறுதானே விளைககு மெனனுமிது வேறு சில விஷயங்களிலுங காணலாமோ வெனன வருளிச செயகிறார் (இநத) எனறு தொடஙகி. அதாவது—இப்படிப்படட ஸவபாவ விசேஷஙகள, *கோவிந்தன குணமபாடி* எனறு தொடஙகி, கீழசசொனனபடியே ஒரு தசையிலே தாரகமாகப பேசுவது, ஒரு தசையிலே பாதகமாகப பேசுவதாமபடி, இவர்களுககு தரிப்பும பாதையுமாகிற விருத்த ஸவபாவஙகளை விளைககிற கலயாண குணஙகளிலேயுங காணலாமெனகை.

ஆக, (பரபத்திககு) எனறு தொடஙகி இவவளவாக—ப்ரபத்தி வைபவத்தை யும; ததவிஷய வைபவததையும. தததிகாரி தரைவிதயத்தையும, தரிவித ப்ரபத்தி யிலும பகதிபாரவசய ஹேதுக பரபததியினுடைய முககயததையையும், அது தனககு ஸவ ஹேதுபூத பகத்யவஸதா பேதத்தால வரும குலைதலையும, அநத பகத்ய வஸதாபேதஞ் செயவிககு மமசஙகளையு மருளிச்செயதார். .. .. (53)

54. இபப்ரபததி தனககு (தாமபுத்ராதிகளும) எனறு தொடஙகி கீழுகத ரான வதிகாரிகள பககலிலே ஸாதநதயா அநுஷ்டாநம காண்கையாலும், காம ஜ்ஞாந பகதி பரபத்திகளெனறு உபாயஙகளோடே ஸஹபடிதமாயப போருகையாலும், *யதயேந காமகாமேந நஸாதயம ஸாதநாநதரை:—முமுக்ஷுணா யத ஸாங்க்யேந யோகேந நச பகதித:—பராபயதே பரமம தாம யதோ நாவாததேத புந:—தேந தேநாபயதே தததநயா ஸேநைவ மஹாமுநே—பரமாதமாச தேநைவ ஸாதயதே புருஷோததம:* எனறும, *இதம சரணமஜ்ஞாநாம* எனறும இபபடியே சாஸதரஙகளித்தை ஸாதநமாகச் சொலலுகை யாலும, உபாயத்வ பரதிபத்தி யோகயதை யுணடாகையாலே, அததை வ்யாவர்ததிக கைககாக அதுககுடலான பலவறறையு மருளிசசெயகிறார் மேல; அதில பரத மததிலே, இபபரபததியை யுபாயமாகக கொணடால வரு மவதயததை தர்சிப்பிக கிறார். (இதுதனனை) எனறு தொடஙகி.

**54 இதுதனனைப் பாரததால் பிதாவுககுப புதரனெழுதது வாங்குமாபோலேயிருபபதொனறு.**

(இது தனனைப் பார்ததால) எனறது—இசசேதநனீசவர விஷயத்தில பண்ணு மிபப்ரபததிதனனை யுபாயமெனனப பார்த்தா லெனறபடி. ஈசவரன தனனை ரக்ஷிக கைககு ஹேதுவாக விசசேதநன பண்ணும ப்ரபத்தி தனனை நிரூபித்தால என றிஙஙனே அநதயாஹாரேண யோஜிககவுமாம, அப்போதும அர்தத மொககுமிறே.

(பிதாவுககுப் புதர னெழுத்து வாஙகுமாப்போலே யிருப்பதொனறு) என்றது உத்பாதகனுகையாலே ஹிதைஷியாய தானறியாத தசையிலும தனனை ரக்ஷித்துக

கொண்டுபோரும் தம்மப்பனுக்கு, புத்ரனானவன், தானறிந்த தசையிலே என்னை நீ ரக்ஷிக்கவேணும் என்றெழுத்து வாங்கினால், இரண்டு தலைக்கும் முண்டான உறவுக்குக் கொத்தையாமாப்போலே, ஸத்தாகாரணபூதனாய் ஸர்வதசையிலும் ரக்ஷகனாய்க் கொண்டு போருகிற அகாரவாச்யனான ஸர்வேச்வரனுக்கும் மகாரவாச்யனான இவனுக்கு முண்டான ஸம்பந்தத்துக் கவத்யகர மென்றபடி. (எழுத்து வாங்குகை யாவது)—ரக்ஷகன் பேரைத் தன் மார்பிலே யெழுதிக்கொள்ளுகை. ... (54)

55. ஆனால் இது தனக்கு ஸ்வரூபமேதென்ன வருளிச்செய்கிறார் (இது தனக்கு) என்று தொடங்கி.

55. இது தனக்கு ஸ்வரூபம் தன்னைப் பொறுத்தொழிகை.

(இது தனக்கு ஸ்வரூபம்) என்றது—இப்ப்ரபத்தி தனக்கு அஸாதாரணாகார மென்றபடி. (தன்னைப் பொறுத்தொழிகையாவது)—உபாயவரணாத்மகமான தன்னை உபாயமென்ன ஸஹியாதபடியா யிருக்கை. அதாவது—ஆபாதப்ரதிபத்தியி லொழிய உள்ளபடி நிரூபித்தால் ஸ்வஸ்மிந் நுபாயத்வ ப்ரதிபத்திக்கு யோக்யமாகமாட்டாதபடி யிருக்கை யென்றபடி. அன்றிக்கே, (தன்னைப் பொறுத்தொழிகை) என்கிறவிடத்தில், உபாயத்வேந ப்ரதீதமான தன்னைப் பொறுத்தொழிகையென்று அத்யாஹாரேண யோஜிக்கவுமாம், இப்படி சொன்னாலும், ஸ்வஸ்மிந் நுபாயத்வப்ரதிபத்த்யஸஹத்வமே பொருளாயிறே. . ... .. ... ... (55)

56. சரமச்லோகத்தில் இத்தை ஸாங்கமாக விதிக்கையாலே *யத்யத் ஸாங்கம், தத்தத் ஸாதநம்* என்கிற ந்யாயமித்துக்கும் வாராதோ வென்ன ; அங்க ஸ்வரூபத்தை தர்சிப்பிக்கவே அந்த ந்யாயமிதுக்குவாராதென்று பார்த்து, அது தன்னை யருளிச்செய்கிறார் (அங்கம்) என்று தொடங்கி.

56. அங்கம் தன்னை யொழிந்தவற்றைப் பொறுத்தொழிகை.

(தன்னை யொழிந்தவற்றைப் பொறுத்தொழிகையாவது)—ஸ்வீகாரரூபமான தன்னை யொழிந்த சேதந ப்ரவ்ருத்திகளி லொன்றையும் ஸஹியாதபடி யிருக்கை. ஸாதநரூப ஸகல ப்ரவ்ருத்திகளினுடையவும் ஸ்வாஸ்த்யாகமிறே யிதுக்கங்கம். *யத்யத் ஸாங்கம்* என்கிறவிடத்தில், ப்ரவ்ருத்தி ரூபாங்க ஸஹிதமானவற்றையிறே ஸாதநமாகச் சொல்லுகிறது ; அப்படியன்றிக்கே, இதினுடைய வங்கம் நிவ்ருத்தி ரூபமாகையாலே; இதுதானே யிதினுடைய வநுபாயத்வ ஸூசகமென்று கருத்து (56)

57, 58, 59 இதினுடைய வநுபாயத்வத்தை த்ருடீகரிக்கைக்காக ஸித்த ஸாத்யோபாயங்களின் படிகளைச் சொல்லி, அவையிரண்டையும்பற்ற விதுக் குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறார் (உபாயம்) என்று தொடங்கி. (பொறுத்து) என்னுமளவாக.

57. உபாயம் தன்னைப்பொறுக்கும்.

(உபாயம் தன்னைப் பொறுக்கும்) என்றது— ஸித்தோபாயமான ஸர்வேச்வரன் இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்க ளிரண்டுக்கும் ஸ்வயமேவ நிர்வாஹகனா

கையாலே, தன்னை யுபாயமென்றால அதுககுத தகுதியாயிருககு மென்றபடி. *உபாயோபேயதவே ததிஹ தவ ததவம நது குணெள* என்று உபேயதவத்தோ பாதி வஸ்துவுககு ஸ்வரூபமாயிறே உபாயத்வமு மிருப்பது *யேச வேதவிதோ விப்ரா யேசாத்யாத்மவிதோ ஜநா:—தே வதந்தி மஹாத்மாநம க்ருஷ்ணம தர்மம ஸநாதநம்* *சரண்யம சரணஞ்ச தவாமாஹுர் திவ்யா மஹர்ஷய:* *அம்ருதம ஸாதநம் ஸாத்யம ஸமபச்யந்தி மநீஷிண:* என்னககடவதிறே. (தன்னைப பொறுககும) என்கிற விவவளவே சொலலிவிடுகையாலே—தன்னை யொழிந்தவற்றைப் பொறாமை அர்த்தாத் ஸித்தம். இநத ஸித்தோபாயம ஸஹாயாந்தர ஸம்ஸர்ககாஸஹமாயிறே யிருப்பது, *இவவுபாய விசேஷம ஸவவயதிரிகதமா யிருபபதொன்றை ஸஹியாமை யாலேயிறே ஆநுகூலய ஸங்கலபாதிகளுக குபாயாங்கத்வமன்றிககே, அவகாத ஸவேதம போலே ஸமபாவித ஸ்வபாவதவமுணடாகிறது* என்று இவவாத்ததததை பரநதபடியிலே இவர்தாமே யருளிசசெய்தாரிறே. ... ... (57)

### 58. உபயாந்தர மிரண்டையும் பொறுககும.

(உபாயாந்தர மிரண்டையும பொறுககும) என்றது—ஸித்தோபாயேதரமான ஸாதயோபாயம, ஸ்வபாரதந்தர்ய ஜ்ஞாநரஹிதராய ஸ்வயத்நபரரா யிருபபாாககு மோக்ஷ ஸாதநதயா சாஸ்த்ரவிஹிதமாகையாலே ஸ்வஸமிந உபாயத்வ பரதிபத்தி ஸஹமமாய ஸவோத்பத்தயாதிகளில பரவருததி ரூபாங்க ஸாபேக்ஷமாகையாலே ஸ்வ வயதிரிகதங்களையும ஸஹிககுமதா யிருககுமென்றபடி. *பகதயா லபயஸ தவநநயயா, *உபய பரிகர்மித ஸ்வாந்தஸய ஐகாந்திகாதயந்திக பகதியோககை லப்ய:* ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ தயாந ஸமாதிபி:—நராணம க்ஷீணபாபாநாம க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே* என்னக கடவதிறே.

### 59. இது இரண்டையும பொருது.

(இதிரண்டையும பொறாது) என்றது-ஸித்தோபாய வரண ரூபமாய, நிவருத்தி ஸாதய ரூபமாய, அதிகாரி விசேஷணமாய, ஸவருபாநதிரேகியா யிருககிற விநத ப்ரபத்தி உபயாஸஹமா யிருககு மென்றபடி. ஆகையால ஸித்த ஸாதயோபாய வயாவ்ருதத வேஷையா யிருககிற விநத பரபததிக குபாயதவ மஸமபாவித மென்ற தாய்த்து.

அன்றிககே, (இது தனககு ஸ்வரூபம) இத்யாதிககு—ஆனால ஸாங்கமாக சாஸ்த்ர விஹிதமான வித்த ப்ரபத்திக்கு ஸ்வரூபமேது, இதுககுச சொலலுகிற அங்கநதா னேதென்ன; அவையிரணடையுமடைவே யருளிசசெயகிறார் (இது தனககு) இதயாதி வாகயததாலே.

ஆனால தன்னைப் பொறுப்ப தேதென்ன வருளிசசெய்கிறார் (உபாயம) இத்யாதி.

தன்னையும தன்னையொழிநதவற்றையும பொறுககுமதேதென்ன வருளிச செய்கிறார் (உபாபாநதரம) இத்யாதி.

இந்த ஸித்தஸாத்யோபாயங்க ளிரண்டிலும இப்ப்ரபத்திக குண்டான வ்யாவ்ருத்தியை தர்சிப்பியா நின்றுகொண்டு உகதாரததததை நிகமிக்கிறார் (இதிரண்டையும்) இத்யாதி—என்றிங்ஙனே ஸங்கதியாகவுமாம.

அதவா, இதி னநுபாயத்வததை ஸாதிக்கைக்காக இதினுடைய ஸவரூபாங்கங்க ளிரண்டையும தாமே யருளிச்செயகிறார் (இது தனக்கு) இத்யாதி வாக்ய த்வயத்தாலே.

இதி னநுபாயதவத்தை ஸபுடமாகக்குகைக்காக ஸித்தஸாத்யோபாயஙகளின படிகளை தர்சிபபிப்போமென்று திருவுள்ளமபற்றி, ப்ரதமம ஸித்தோபாயத்தின படியை யருளிசசெய்கிறார் (உபாயம) இத்யாதியால.

அநநதரம, ஸாத்யோபாயத்தின படியை யருளிச்செயகிறார (உபாயாநதரம்) இத்யாதியால்,

இவை யிரண்டிலும ப்ரபத்திக்குணடான வயாவருத்தியை தர்சிபபிக்கிறார் (இதிரண்டையும) இத்யாதியால, என்றிங்ஙனே ஸங்கதியாகவுமாம. இவவுபய ஸங்கதிகளும் வாக்யங்களுக்கு கர்த்தம பூர்வவத் .. .... (59)

60 இப்படி இபப்ரபததி யுபாயமல்லவாய விட்டால, பலஸித்திக கிவன பக்கலிலும சில வேணடாவோவென்ன வருளிச்செயகிறார (பலத்துக்கு) என்று தொடங்கி.

60. பலததுக்கு ஆதமஜஞாநமும அப்ரதிஷேதமுமே வேண்டுவது.

(பலததுக்கு) என்றது—பல ஸித்திக கென்றபடி (ஆதம ஜஞாநமாவது)—ஸவஸவரூபஜஞாநம. அதாவது—ததேகசேஷத்வ ததேகரக்ஷ்யதவங்களையறிகை. (அப்ரதிஷேதமாவது)—நிருபாதிக சேஷியாய நிருபாதிக ரக்ஷகனான வவனபண்ணும் ரக்ஷணததை விலக்காமை அதாவது—ஸவரக்ஷணே ஸ்வாநவய நிவருத்தி. அவதாரணததால—இவை யிரணடுமொழிய பின்னையொன்றும வேணடாவென்றபடி. சரமபததில சொலலுகிற பலததுக்கு, ப்ரதமபததில சொலலுகிற வாத்ம ஜ்ஞாநமும, மதயமபததில சொலலுகிற அப்ரதிஷேதமுமே வேணடுவது (60)

61. இபபடியன்றிககே, பலஸாதநமாகவிவனுஞ் சில செயயவேணுமென்றால வரும தீங்கென்னென்ன வருளிச்செயகிறார் (அல்லாத) என்று தொடங்கி

61. அல்லாதபோது பநதத்துக்கும பூர்த்திக்கும கொத்தையாம

(அலலாதபோது) என்றது—இவவளவன்றிககே பல ஹேதுவாக விவன சில செய்ய வேண்டுமபோதென்றபடி. (பநதத்துக்கும பூர்த்திக்கும கொத்தையாகையாவது)—இவனுடைய ரக்ஷணம தனபேறுமபடியான வவனுடைய நிருபாதிக சேஷித்வத்துக்கும, இவனுடைய ப்ரவருததியிலொன்றையும அபேக்ஷியாத நிரபேக்ஷோபாயதவத்துக்கும் அவதயமாயத் தலைக்கட்டுமென்கை. .... (61)

62. ஆனாலும் அநந்த க்லேச பாஜநமான ஸம்ஸாரஸாகரத்தில் அழுந்திக் கிடந்தலைகிற தன்னுடைய பத்தை யுணர்ந்தால், ஆபத்ஸகனான ஸர்வேச்வரனே ஸ்வப்ரபத்தியாலே வசீகரித்து, தத்ப்ரஸாதத்தாலே இத்தைக் கழித்துக்கொள்ள வேண்டாவோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆபத்தை) என்று தொடங்கி.

62 ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று ப்ரமித்து அத்தை விளைத்துக்கொள்ளா தொழிகையே வேணடுவது.

அதாவது—ஸர்வேச்வரன திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணி ஸம்ஸாரமாகிற ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறோமென்று, தான் பண்ணுகிற ப்ரபத்தியாலே தன்னுடைய பத்தைப் போக்கிக்கொள்ளுகிறனாக ப்ரமித்து, ததேகபாரதந்த்ர்யரூப ஸ்வரூபஹாநியாகிற ஆபத்தை விளைத்துக்கொள்ளா தொழிகையே தங்கிவருத்திக்கு இவன் செய்யவேண்டுவதென்றபடி. ஓராபத்தைப் பரிஹரிக்கப்புக்கு ஓராபத்தை விளைத்துக்கொள்ளாதே, இவன் ஸ்வயத்நத்தில் நிவ்ருத்தனாயிருக்கவே எம்பெருமான் தானே ரக்ஷிக்குமென்று கருத்து. (அத்தை) என்றது—ஆபத் ஸாமாந்யத்தைப் பற்ற, அல்லது, ப்ரக்ருதாபத்து தன்னையே பராமர்சித்தபடியன்று (62)

63 ஆனாலும், *ரக்ஷ்யாபேக்ஷாம ப்ரதீக்ஷதே* என்று—ரக்ஷகனான ஸர்வேச்வரன் ரக்ஷ்யபூதனான விசேதநனுடைய வபேக்ஷையைப் பார்த்திருக்கு மென்கையாலே, அவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இவனுடைய வபேக்ஷையும் வேண்டியன்றோ இருக்கிறதென்ன வருளிச்செய்கிறார் (ரக்ஷணத்துக்கு) என்று தொடங்கி.

63 ரக்ஷணத்துக்கபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே.

அதாவது—நிருபாதிக ரக்ஷகனானவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இச்சேதநன் பக்கல் வேண்டுவது, நீ எனக்கு ரக்ஷகனமன்றோ அல்லேனென்னாதே தன்னுடைய ரக்ஷ்யத்வத்தை யிசையுமிவ்வளவே என்கை *ரக்ஷ்யாபேக்ஷாம* என்கிறவிடத்தில் சொல்லுகிற வபேக்ஷை, ரக்ஷ்யத்வாநுமதி த்யோதகமித்தனை என்று கருத்து. *யாசநா ப்ரபத்தி: ப்ரார்த்தநா மதி:* என்கிற ஸ்வீகாரத்தை அப்ரதிஷேத த்யோதக மென்றிறே இவர்தா மருளிச்செய்தது. (63)

64 இப்படி அநுமதி ஸாபேக்ஷனாய் ரக்ஷிக்குமாகில் இவ்வநுமதிதான் ஸாதந மாகாதோ வென்ன வருளிச்செய்கிறார் (எல்லாம்) என்று தொடங்கி.

64. எல்லா வுபாயத்துக்கும் பொதுவாகையாலும் சைதந்யகார்ய மாகையாலும், ப்ராப்தி தசையிலு மநுவர்த்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகி யல்லாமை யாலும், அசித்வ்யாவ்ருத்த வேஷத்தை ஸாதநமாக்க வொண்ணாது.

(எல்லா வுபாயத்துக்கும் பொதுவாகையாவது)—போக மோக்ஷோபாயங்களிலேதேனு மொன்றிலே யதிகரிக்குமவனுக்கும், நீ யிவ்வுபாயத்தை யநுஷ்டி என்றால், அப்படியே செய்கிறேன் என்னு மநுமதி பூர்வகமாக வதிலிழியவேண்டுகையாலே, ஸகலோபாய ஸாதாரணமாயிருக்கை. இத்தால் ஓரிடத்திலும் இவ்வநுமதிக்கு அதிகாரி விசேஷணத்வ மொழிய, பல ஸாதநத்வமில்லாமை காட்டப்பட்டது. (சைதந்ய

கார்யமாகையாவது) ரக்ஷ்யதவம சேதநாசேதந ஸாதாரணமா யிருககச்செய்தே, ஜ்ஞாந சூந்யமாகையாலே அவவாகாரததை யறிகைககு யோகயமலலாத அசேதநம போலனறிககே, ஜ்ஞாநாச்ரய பூதனுகையாலே யததை யறிகைககு யோகயனு யிருககிற விசசேதநன பககலுண்டான வநுமதி, இவனுடைய ஜ்ஞாந காாயமாய்க கொண்டு வந்ததா யிருககை. இததால—இவவநுமதி சேதநனை வாசியைப்பற்ற வநததாகையாலே, ஸாதந கோடியில அநவயியா தெனறபடி (ப்ராப்தி தசையிலு மநுவர்த்திககையாவது) உபாய தசையளவி லனறிககே உபேய தசையிலும, அவன வ்யாமோஹாநு குணமாகக கொளளும விநியோக விசேஷங்களில, திருவுளளமான படி கொண்டருளவேணு மெனனு மநுமதி யிவனுககு நடநது செலலுகை. இததால ஸாதநமாகில பல ஸிதநியளவிலே மீள வேணுமெனறு கருதது. (ஸ்வரூபாதிரேகி யலலாமையாவது)—சேஷி செயயுமதுக குடனபட்டிருககை சேஷத்வ பாரதநத்ர்ய கார்ய மாகையாலே இவவநுமதி ஸவரூபத்துககுப புறமபனறிககே ஸவரூபமா யிருககை. இத்தால ஸாதநமாகில ஸவரூபாதிரேகியா யிருகக வேணுமெனறு கருத்து. (அசித வயாவருத்த வேஷமாவது)—ஜ்ஞாதருத்வத்தாலே ஜ்ஞாந சூநயமான வசித தில வேறு படடிருககிற வாதமாவனுடைய வாகாரம. இவவிடததில அவவாகார மாவது ஜ்ஞாநகாாயமானவநுமதி இத்தை (ஸாதநமாககவொணணாது) எனறது—இப்படி இதினுடைய அஸாதநத்வ ஹேதுககள அநேகமுண்டாகையால் இததை ஸாதநமாகக கறபிககப்போகா தெனறபடி. (அசித வயாவருத்தி வேஷம) எனறு பாடமாகில, ஜ்ஞாந சூநயமான வசித்திற் காடடி லாதமாவுககுண்டான ஜ்ஞாதருதவ ரூப வ்யாவருத்தியின வேஷமான வநுமதியை என்று சப்தார்த்தம ... (64)

65. ஆனால இவவசித் வயாவருததிதனககொரு பரயோஜநம வேண்டாவோ வெனன வருளிசசெயகிறா (அசித வயாவருத்திககு) எனறு தொடஙகி.

65. அசிதவயாவ்ருத்திக்கு ப்ரயோஜநம, உபாயததி லுபகாரஸம்ருதியும் உபேயததிலுகப்பும.

(உபாயத்திலுபகார ஸம்ருதியாவது) *என்னைத் தீமனங் கெடுத்தாய்*, *மருவித் தொழும மனமே தநதாய* எனகிறபடியே ஸித்தோபாயமான வெமபெருமான தன திறததில பண்ணின உபகாரஙகளை யநுஸநதிககை. (உபேயத்தி லுகப்பாவது) அவன திருவடிகளில தான பணணும கைஙகர்யஙகளில *உகந்து பணி செயது* எனகிற உகப்பும, அத்தா லவனுககு விளைகிற ப்ரீதியைக கணடு தனககு விளைகிற ப்ரீதியும. ... ... ... ... ... .... (65)

66. இப்படி இவனபககலுளளதொனறு முபாயமனறாகில் இவனுககு தத் ப்ராப்தயுபாயந்தா னேதெனன வருளிச செயகிறார் (உன மனத்தால) என்று தொடங்கி.

66. "உன்மனததா லென்னினைந் திருந்தாய்" என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம அவன நினைவு.

அதாவது—இததலையிலுளள தொனறும பேற்றுக குபாயமல்லாமையாலே, *உன் மனத்தா லென்னினைந்திருந்தாய்* எனறு—கை கழிநதவறறுககுமொரு போககடி

பார்த்திருக்கக்கடவ உன் திருவுள்ளத்தால் நினைத்திருந்ததென்னென்று, ஹிதைஷியான அவன் நினைவே உபாயமென்று ஆழ்வாரநுஸந்தித்தபடியே, அவனை ப்ராப்திக்கைக்குபாயம்—ஸர்வஜ்ஞனுய ஸர்வசக்தியாய ப்ராப்தனுய பரமதயாளுவாய் இருக்கிற அவனுடைய இச்சேதநோஜ்ஜீவநார்த்தமான நினைவென்றபடி. (66)

67. அந்நினைவுதானவனுக்கெப்போதுண்டாவதென்ன வருளிச்செய்கிறார் (அதுதானெப்போதுமுண்டு) என்று தொடங்கி.

67 அதுதானெப்போதுமுண்டு

(எப்போதும்) என்றது—இவன் யாதானுமொன்றிலீடுபட்டுத் திரிகிற காலத்தோடு இன்றேடு வாசியற ஸர்வ காலத்திலுமென்றபடி (67)

68 ஆனால் அது இந்நாள்வரை பலியாதிருப்பானென்னென்னென்ன வருளிச் செய்கிறார் (அது பலிப்பது இவன் நினைவு மாறினால்) என்று தொடங்கி

68 அது பலிப்பது இவனனிவே வு மாறினால

அதாவது—அவன் நினைவு இவனுக்குக் கார்யகரமாவது, இவனுடைய ஸ்வரக்ஷண சிந்தை மாறின காலத்திலென்றபடி (68)

69 இவ்வர்த்தத்தினுடைய ஆப்தயார்த்தமாக நஞ்சீயர் வார்த்தையை யருளிச் செய்கிறார் (அந்திம காலத்துக்கு) என்று தொடங்கி

69. "அந்திம காலத்துக்குத் தஞ்சம், இப்போது தஞ்சமென்னென்கிற நினைவு குலைகை" என்று ஜீயரருளிச்செய்வர்

அதாவது—நஞ்சீயர், தம்முடைய ஸ்ரீபாதத்திலே யுள்ளாரொரு ஸ்ரீவைஷ்ணவரை நோவறிகைக்காகச் சென்றெழுந்தருளி யிருக்கிறவளவிலே, அந்த ஸ்ரீவைஷ்ணவர், *அடியேனுக்கு அந்திம காலத்துக்குத் தஞ்சமாயிருப்பதொன்றருளிச் செய்யவேணும்* என்ன, *அந்திம காலத்துக்குத் தஞ்சம் நமக்கிப்போது தஞ்சமென் என்கிற தன்னுடைய ஸ்வரக்ஷண சிந்தை குலைகைகாணும்* என்றருளிச் செய்த வார்த்தை. ஆகையாலே, ஈச்வரன் இவ்வாத்மோஜ்ஜீவநத்துக்குறுப்பாகப் பண்ணும் சிந்தை பலிப்பது இவனுடைய ஸ்வரக்ஷண சிந்தை மாறினாலென்றதாய்த்து. ... (69)

70. ப்ராபகன் ஈச்வரனுனாலும் ப்ராப்தாவும் ப்ராப்திக்குகப்பானும் இவனன்றே, ஆனபின்பு இவனனினைவை யிப்படி நேராகத் துடைக்கலாமோ வென்ன அருளிச்செய்கிறார் (ப்ராப்தாவும்) என்று தொடங்கி. அன்றிக்கே, இச் சேதநன் கையிலுள்ளவற்றில் உபாயத்வகந்தமறத் துடைத்து ஈச்வரனை உபாயமென்று நிஷ்கர்ஷித்தபோதே, ப்ராப்த்ருத்வமும் ப்ராப்தியில் வரும்உகப்பும் இவன் தன்றிக்கே, உபாயபூதனான ஈச்வரன்தேயாய்ப் பலித்து விடுகையாலே (ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானு மவனே) என்று நிகமித்தருளுகிறாராகவுமாம்.

70. ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்குகப்பானுமவனே.

ப்ராப்தா அவனாகையாவது—*ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம* என்கிற ஸ்வதஸ்ஸித்தமான ஸ்வஸ்வாமித்வ ஸம்பந்தமடியாக, உடைமையை ப்ராபிக்கு முடையவனைப்போலே இவ்வாத்மாவை ப்ராபிப்பான தானாயிருக்கை. ப்ராபகன அவனாகையாவது—தான இவனை ப்ராபிக்கு மிடத்தில †ப்ராப்திக்கு உபாய மும், ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வ ஸத்யஸங்கல்பத்வாதிகுணவிசிஷ்டனாய நிரங்குச ஸ்வதந்த்ரனாய தானாயிருக்கை ப்ராப்திக்ருகப்பான அவனாகையாவது—ஸ்வத்தி னுடைய லாபத்திலே தத் போக்தாவான ஸ்வாமி ஹ்ருஷ்டனாமாப்போலே, இவனை ப்ராபித்தால, ப்ராபிக்கப் பெறறோமே! என்று உகப்பானும இவ்வாத்மாவுக்கு நித்யபோக்தாவான தானாயிருக்கை இவை மூன்றும (அவனே) என்கிற அவதா ரணத்தாலே—இவற்றிலிவனோடு அந்வயிப்பதொன்றுமில்லை யென்கை.

இதில (ப்ராப்தாவும ப்ராபகனும அவனே) என்கையாலே — இவனுக்கு ஸ்வயத்நத்தில் அந்வயமில்லை யென்னுமிடமும, (ப்ராப்திக்கு உகப்பானுமவனே) என்கையாலே ஸ்வப்ரயோஜநத்தில யிலனுமிட்ததில அந்வயமில்லை யென்னுமிடமும ஸித்தமாயத்து (70)

71 ஆனால், ஜ்ஞாத்ருத்வ கார்யமான கர்த்ருத்வ போக்த்ருத்வங்களை யுடைய வனாகையாலே ஸ்வயத்ந ஸ்வப்ரயோஜநங்களுக்கு அர்ஹனா யிருக்க, இவை யிரண்டி னுடையவும நிவ்ருத்தி இவனுக்கு கெவவழியாலே வருகிறதென்கிற சங்கையிலே அத்தை யருளிச்செய்கிறார் (ஸ்வயத்ந நிவ்ருத்தி) இத்யாதி வாக்ய த்வயத்தாலே.

71. ஸ்வயத்ந நிவ்ருத்தி பாரதந்த்ரய பலம், ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி சேஷத்வ பலம்.

அதாவது—ஜ்ஞாத்ருத்வ நிபந்தநமான காத்ருத்வ முண்டாயிருக்கச்செய்தே பகவத் ப்ராப்திக்குத் தானொரு யத்நம்பண்ணும விருக்கையாகிற இந்த ஸ்வயத்ந நிவ்ருத்தி, பராதீந ஸ்வரூப ஸ்தித்யாத்மதத்வமாகிற பாரதந்த்ர்யத்தின காரயம; அப்படியே, போக்த்ருத்வ முண்டா யிருக்கச்செய்தே அத்தலையை ரஸிப்பிக்கும தொழிய தனக்கென்ன ஒன்றில ரஸமின்றிக்கே யிருக்கையாகிற ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி, பராதிசயாதாயகத்வமே வடிவாயிருக்கையாகிற சேஷத்வத்தின கார்யம. இத்தால—பாரதந்த்ரய சேஷத்வங்க ளிரண்டும ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலே, அவ்வாகாரங்களை யறியவே இவையிரண்டும தன்னடையே வருமென்றதாயத்து. (71)

72. ஆனால் இப்படி ஸ்வயத்ந ஸ்வப்ரயோஜநங்களிலந்வயமற்றிருக்குமாகில, இவனுடைய ப்ரயத்நத்துக்கும் சைதந்யத்துக்கும ப்ரயோஜந மென்னென்ன வருளிச்செய்கிறார் (பரப்ரயோஜந) இத்யாதி வாக்ய த்வயத்தாலே.

72. பரப்ரயோஜந ப்ரவ்ருத்தி ப்ரயத்நபலம்; தத்விஷய ப்ரீதி சைதந்யபலம.

அதாவது—*அஹம ஸர்வம கரிஷ்யாமி* *வழுவிலா வடிமை செய்யவேண்டும* *உனக்கே நாமாட் செய்வோம* என்கிறபடியே—பரனுக்கு ப்ரயோஜநமாகப் பண்ணும கைங்கர்யரூப ப்ரவ்ருத்தி இவனுடைய ப்ரவ்ருத்த்யுத்யோகரூபமான

† ப்ராபிப்பிக்கு முபாயமும என்று பெரியார திருத்துவர்.

ப்ரயத்நத்துக்கு ப்ரயோஜநம். *நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி* என்கிறபடியே— அத்தலையில் உகப்புக் குறுப்பாகத் தான் பண்ணுகிற கைங்கர்யத்தாலே அத்யந்த ஹ்ருஷ்டனாயிருக்கிற அந்த பரனை விஷயமாக வுடைத்தான ப்ரீதி, இவனுடைய அசித்வ்யாவ்ருத்திரூபமான சைதந்யத்துக்கு ப்ரயோஜநமென்கை *படியாய்க் கிடந்துன்பவளவாய் காண்பேனே* என்னக்கடவதிறே. இத்தால—பாரதந்த்ர்ய சேஷத்வங்களாலே பலித்த ஸ்வயத்ந ஸ்வப்ரயோஜந நிவ்ருத்திகளை யுடையனான சேதநனுடைய ப்ரயத்ந சைதந்யங்களுக்கு, பாரதந்த்ர்ய சேஷத்வாநுகுணமாக ப்ரயோஜநங்கள் சொல்லிற்றாயித்து. (72)

73. சேஷத்வாதிகளும் ஜ்ஞாத்ருத்வாதிகளும் ஆத்ம தர்மங்களா யிருக்கச் செய்தே, சேஷத்வாதிகளை ப்ரதாநமாகக் ஜ்ஞாத்ருத்வாதிகளை தத்நுகுணமாக யோஜிக்கைக்கு நியாமகமேது? மற்றைப்படிதா னாலோ வென்ன வருளிச்செய்கிறார் (அஹமர்த்தத்துக்கு) என்று தொடங்கி.

73. அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்.

(அஹமர்த்தமாவது)—*ப்ரத்யகத்வேந அஹம் புத்தி வ்யவஹாரார்ஹமான ஆத்ம வஸ்து; ஜ்ஞாநாநந்தங்களாவன—தத்கதமான ப்ரகாசத்வாநுகூலத்வங்கள், *ஜ்ஞாநாநந்தமயஸ் த்வாத்மா* *ஸ்வரூபமணுமாத்ரம் ஸ்யாத் ஜ்ஞாநாநந்தைக லக்ஷணம்* என்று இவற்றையிட்டிறே வஸ்துவை நிரூபிப்பது. (தடஸ்த மென்னும் படி) என்றது—பஹிரங்க நிரூபகதயா புறவித் தென்னும்படி யென்றபடி. (தாஸ்ய மாவது)—சேஷத்வம். இது (அந்தரங்க நிரூபகமாகையாவது)—பகவத் ஸ்வரூபத்துக்கு ப்ரகாரதயா சேஷமாய்க் கொண்டு தன ஸத்தையாம்படியிருக்கும் வஸ்துவாகையாலே, ப்ரதமம் சேஷத்வத்தையிட்டு நிரூபித்துக்கொண்டே மற்றுள்ள ஆகாரங்களையிட்டு நிரூபிக்க வேண்டும்படி யிருக்கை. இத்தால நிரூபகமாகையாவது—வஸ்துவை வஸ்த்வந்தரத்திற் காட்டில வ்யாவர்த்திப்பிக்குமதாகையாலே, தாஸ்யம் ஈச்வர வ்யாவர்த்தகமாய், ஜ்ஞாநாநந்தங்கள் அசித்வ்யாவர்த்தகங்களாயிருக்கும்; இப்படி நிரூபகத்வயமும் வஸ்துவுக்கு அபேக்ஷிதமா யிருக்கச்செய்தே பகவத் ப்ரகாரதயா லப்த ஸத்தாகமான வஸ்துவுக்கு அசித்திற் காட்டில உண்டான வாசியை யறிவிக்கிற மாத்ரமான ஜ்ஞாநாநந்தங்கள் புறவித்தாம்படி ப்ரகாரத்வ ப்ரயுக்தமான சேஷத்வமே அந்தரங்கநிரூபகமாயிருக்குமென்றதாயத்து (இறே) என்று—இவ்வர்த்தத்தில ப்ரமாணப்ரஸித்தி. ப்ரதமம் சேஷத்வத்தையிட்டு வஸ்துவை நிரூபித்துக்கொண்டு, பின்னை ஜ்ஞாநாநந்தலக்ஷணமுமாய் ஜ்ஞாநகுணகமுமாய் அசித்வ்யாவ்ருத்தமுமாயிருக்கு மென்னுமிடத்தை த்ருதீயபதத்தாலே நிரூபிக்கிற ப்ரணவமும், ஸமஸ்த வஸ்துக்களும் ஸர்வேச்வரனுக்கு ப்ரகாரமென்னுமதை ப்ரதிபாதிக்கிற நாராயணபதமும், முதலானவை இதில ப்ரமாணம். *தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:, நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவச* இத்யாதிகளு முண்டிறே *அடியே னுள்ளான்* என்றாரிறே ஆழ்வார். திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறேயிது. இப்படி சேஷத்வம் அந்தரங்க

நிருபகமாகையாலே நிருபித ஸ்வரூப விசேஷணங்களான ஜ்ஞாத்ருத்வாதிகளையே ததநுகுணமாக யோஜிக்கவேணுமென்று கருத்து. (73)

74. இது ஸ்வரூப நிருபகமாகில ஆத்மாவுள்ளவன்றே தொடங்கி யுண்டாய்ப் போரவேண்டாவோ, இதுக்கு முன்பின்றிக்கே இப்போதுண்டாகையாலும், லோகத்திலிதுதான ஔபாதிகமாய நடக்கக் காண்கையாலும், தாஸ்யமாத்மாவுக்கு வந்தேறியன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (இதுதான வந்தேறியன்று) என்று தொடங்கி.

74. இதுதான் வந்தேறியன்று.

(இதுதான) என்று பரக்ருதமான தாஸ்யத்தைப் பராமர்சிக்கிறது. (வந்தேறியாவது)—ஆகந்துகம். (அன்று) என்கையாலே—ஸ்வாபாவிக மென்றபடி. *ஸவோஜ்ஜீவநேச்சா யதி தே ஸவ ஸத்தாயாம ஸப்ருஹா யதி, ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸவபாவஞ்ச ஸதா ஸமர* *நானு முனக்குப் பழவடியேன்* என்னக்கடவதிறே. (74)

75. ஆனால், வந்தேறியாக விவக்ஷிதங்களவை என்ன? இதுக்கு விரோதிகளானவையென்றருளிச்செய்கிறார் (ஸ்வாதந்த்ர்யமும்) என்று தொடங்கி.

75. ஸ்வாதந்த்ர்யமும் அந்யசேஷத்வமும் வந்தேறி

ஸ்வாதந்த்ர்யமாவது—நானெனக்குரியனென்றிருக்கை. அந்ய சேஷத்வமாவது—பகவதந்யவிஷயங்களிலே தொண்டுபட்டிருக்கை. இவற்றை வந்தேறியென்கிறது—இவனுடைய அவித்யாதிகளடியாக வந்தவையாகையாலே. (75)

76 இவை இதுக்கு விரோதிகளானமையை உபபாதிக்கிறார்மேல் (சேஷத்வ விரோதி) என்று தொடங்கி.

76. சேஷத்வவிரோதி ஸ்வாதந்த்ர்யம்; தச்சேஷத்வவிரோதி ததிதர சேஷத்வம்.

(சேஷத்வ விரோதி ஸ்வாதந்த்ர்யம்) என்றது—நானெனக்குரியனென்றிருக்குமளவில ஒரு விஷயத்திலும் சேஷத்வமில்லாமையாலே ஸ்வாதந்த்ர்யம் சேஷத்வத்தை யுதிக்கவொட்டாதென்றபடி. (தச்சேஷத்வ விரோதி ததிதர சேஷத்வம்) என்றது—ஸ்வாதந்த்ர்யங்குலைந்து சேஷத்வத்துக்கிசைந்தாலும பகவத்வ்யதிரிக்த விஷயங்களிலே ஒன்றுக்குத் தன்னை சேஷமென்றிருக்குமது நிருபாதிக சேஷியான அவனபக்கல சேஷத்வத்தைத் தலையெடுக்கவொட்டாதென்றபடி. (76)

77. (இதுதான வந்தேறியன்று) என்று தொடங்கி உபபாதித்த அர்த்தத்தை நிகமிக்கிறார்மேல (அஹங்காரம்) என்று தொடங்கி.

77. அஹங்காரமாகிற ஆர்ப்பைத் துடைத்தால் ஆத்மாவுக்கு கழியாதபோது அடியானென்றிறே.

அஹங்காரந்தான், தேஹாத்மாபிமானரூபமாயும் ஸ்வாதந்த்ர்யரூபமாயும் இரண்டு வகைப்பட்டிறேயிருப்பது; அதில் இங்கு ஸ்வாதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது. (ஆர்ப்பு) என்கையாலே—அதினுடைய திரோதாயகத்வமும் ஆகந்துகத்வமும் தோற்றுகிறது, அத்தை (துடைக்கையாவது) ஸதாசார்யோபதேசாதிகளாலே

ஸ்வாஸ்ரமாகப் போகக்குகை. (ஆத்மாவுக்கழியாதபேர் அடியான) என்றது— ஔபாதிகமான வர்ணாச்ரமாதிகளாலேவந்து அழிந்துபோம் நாமங்கள் போலன்றிக்கே, யாவதாத்மாநுவர்த்தியான நாமம் தாஸனென்னுமதென்றபடி (இறே) என்று இவ்வர்த்தத்தில் ப்ரமாணப்ரஸித்தி *தாஸபூதாஸ் ஸ்வத:* *ஆத்மதாஸ்யம்* இத்யாதிகள் இவ்விடத்தில் விவக்ஷிதங்கள். ஆகையால், ஸ்வாதந்த்ர்யாதிகள் ஔபாதிகம். தாஸ்யம் ஸ்வாபாவிகமென்னக் குறையில்லை யென்று கருத்து. (77)

78. அதுவென்? க்ராமகுலாதிகளாலவரும் வ்யபதேசமன்றோ நடந்து போகுகிறதென்ன வருளிச்செய்கிறார் (க்ராம) இத்யாதியால.

### 78. க்ராமகுலாதிகளால் வரும பேர் அநர்த்தஹேது

அதாவது—க்ராமகுலாதி வ்யபதேசம் அஹங்காரஜநகமாகையாலே ஸ்வரூப ஹாநிரூபாநர்த்தகர மென்றபடி. ஆகையால, அவற்றாலிவன் வ்யபதேஷ்டவ்யனல்லனென்று கருத்து. (78)

79. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் காட்டுகிறார் மேல (ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:) என்று.

### 79. "ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:"

"ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராமகுலாதிபி:, விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி". இத்தால—பகவதேக பரனாயிருக்குமவன் க்ராமகுலாதிஸம்பந்தங்களையிட்டுச் சொல்லப்படுமவனல்லன், பகவத்ஸம்பந்தத்தையிட்டுச் சொல்லப்படுமவன், அவனுக்கு அந்த க்ராமகுலாதிகளெல்லாம் பகவானேயென்கிறது. (ப்ராப்தாவும்) இத்யாதி வாக்யத்திலே இச்சேதநனுடைய ஸ்வயத்ந நிவ்ருத்த்யாதிகள் தோற்றினபடியாலே இவற்றுக்கு நிதாநமின்னதென்றும், ஏவம்பூதனுடைய ப்ரயத்நசைதந்யப்ரயோஜநமும் சேஷத்வாதிப்ராதாந்யஹேது ஆத்மஸ்வரூபத்தினுடைய தாஸ்யாந்தரங்க நிரூபகத்வமென்றும் இப்படியிருக்கிறவிது ஸ்வாபாவிகம், ஏதத் விரோதிகள் ஔபாதிகமென்றும், தந்நிவ்ருத்தியி லாத்மாவுக்கு தாஸ்யமே நித்ய நிரூபகமாயிருக்கு மென்கையாலே யிவ்வர்த்தத்தை முதலித்தும், க்ராம குலாதிகளா லிவன் வ்யபதேஷ்டவ்ய னல்லனென்றும், உக்தார்த்தத்தில் ப்ரமாணமுஞ் சொல்லுகையாலே, ஸ்வயத்ந நிவ்ருத்தி) இத்யாதி வாக்யந் தொடங்கி யிவ்வளவும் ப்ராஸங்கிகம்.

ஆக, இப்ப்ரகரணத்தால—ப்ரபத்திக்கு தேசாதிநியமங்களில்லை, விஷய நியமமேயுள்ளதென்னுமிடமும், அவ்விஷயந்தானின்னதென்னுமிடமும் அவ்விஷயத்தினுடைய வைலக்ஷண்யமும், அதில் ப்ரபத்திபண்ணுமதிகாரிகளுடைய த்ரைவிதயமும், ப்ரபத்தியையுபாயமாக்கினால் வருமவத்யமும், ப்ரபத்தினுடைய ஸ்வரூபாதிகளும், ப்ரபத்தவ்யனே உபாயமென்னுமிடமும் ப்ரதிபாதிக்கப்பட்டது. (79)

80. அநந்தரம், அதிகாரி சோதநம பண்ணுகிறது. உபாயம் உபேயார்த்தமாகையாலும், (உபேயத்திலுகப்பும) என்றும (பரப்ரயோஜநப்ரவ்ருத்தி ப்ரயத்நபலம

தத்விஷயப்ரீதி சைதந்யபலம்) என்றும் உபேயாதிகாரமும் கீழ ப்ரஸக்தமாகை யாலும், த்வயநிஷ்டனுனவதிகாரிக்கு உபயமும் அபேக்ஷிதமாகையாலும், உபா யோபேயாதிகாரங்களில் இச்சேதநனின்ன வின்னபடி யிருக்கவேணு மென்னுமத்தை தத்தந்நிஷ்டரை நிதர்சநமாகக்கொண் டருளிச்செய்கிறார் (உபாயத்துக்கு) இத்யாதி வாக்ய த்வயத்தாலே.

**80 உபாயத்துக்கு, பிராட்டியையும் த்ரௌபதியையும் திருக்கண்ணமங்கை யாண்டானையும்போலே யிருக்கவேணும்; உபேயத்துக்கு, இளையபெரு மாளையும் பெரியவுடையாரையும் பிள்ளைதிருநறையூரரையரையும் சிந்த யந்தியையும்போலே யிருக்கவேணும்.**

(உபாயத்துக்கு) என்றது—உபாயத்துக்கதிகாரியாம்போதென்றபடி. உபா யாதிகாரத்துக் கென்னவுமாம் அப்படியே (உபேயத்துக்கு) என்றதுவும் (உபாயத் தில்) என்று பாடமானபோது, உபாயவிஷயத்தி லென்றபடி இப்படியே மற்றை யதுவும். (80)

81 அவர்களைப்போலேயிருக்கவேணுமென்றதின் கருத்தை தர்சிப்பிக் கைக்காக, அவர்கள் தங்கள்படிகளை யடைவேயருளிச்செய்கிறார் மேல் அதில் பிராட் டியுடையவும் த்ரௌபதியுடையவும் படிகளையருளிச்செய்கைக் குடலாக பரதமத்திலே உபயர்க்கும் வாசியை யருளிச்செய்கிறார். (பிராட்டிக்கும்) என்று தொடங்கி

**81. பிராட்டிக்கும் த்ரௌபதிக்கும் வாசி, சக்தியும் அசக்தியும்.**

அதாவது—*தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்* என்றிருந்த பிராட்டிக்கும் *ரக்ஷ மாம்* என்ற த்ரௌபதிக்கும் தமமிலவாசி, *சீதோ பவ* என்று நெருப்பை நீராக் கினப்போலே *தக்தோ பவ* என்று விரோதிவர்க்கத்தை பஸ்மமாக்கித் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவல்ல சக்தியுண்டாகையும், ஸ்வயத்நத்தாலே விரோதிகளைத் தள்ளித் தன்னை நோக்கிக்கொள்ளப் பார்த்தாலும் நோக்கிக்கொள்ளுகைக் கீடான சக்தி தனக்கில்லாமையுமென்கை. (81)

82. ஏவம்பூதரானவர்கள் செய்தவைதன்னை யருளிச் செய்கிறார் (பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள், த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்) என்று.

**82. பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்; த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்; திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்.**

(ஸ்வசக்தியை விடுகையாவது)—நாயகரான பெருமாள் ரக்ஷிக்குமத்தனையல்லது நம்முடைய சக்தியால் நம்மைரக்ஷித்துக்கொள்ளுகை நம் பாரதந்த்ர்யத்துக்கு நாசக மென்று ஸ்வசக்தியைக்கொண்டு கார்யம் கொள்ளாதொழிகை *அஸந்தேசாத்து ராமஸ்ய தபஸச் சாநுபாலநாத், ந த்வா குர்மி தசக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹதேஜஸா* என்றாளிறே. (லஜ்ஜையை விடுகையாவது)—துச்சாஸநன் ஸபாமத்யே துகிலை யுரிகிற வளவில் லஜ்ஜாவிஷ்டையாய்க்கொண்டு தானொருதலையிடுக்குகை யன்றிக்கே இரண்டுகையும் விடுகை. பேரளவுடையாளாகையாலே பிராட்டிக்கு 'பெருமாளே

ரக்ஷகா' என்று விசுவஸித்து ஸ்வசக்தியை விட்டிருக்கலாம், அத்தனையல்லவன்றிக்கே யிருக்கச்செய்தே, மஹாபத்தசையிலே 'இவ்வளவில் க்ருஷ்ணனே ரக்ஷகன்' என்று மஹாவிச்வாஸம்பண்ணி மஹாஸபாமத்யே இவள் லஜ்ஜையைவிட்டதிறே அரிது. (திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்) அதாவது—ஸ்வரக்ஷணஹேதுவான ஸ்வவ்யாபாரங்களை விட்டாரென்னறபடி. ஒரு ஸேவகனுடைய நாயை ஒரு ஸேவகனடிக்க அவன் அது பொறுமல் அடித்தவனோடே எதிர்த்துப் பொருது அவனையுங்கொன்று தானும் குத்திக்கொள்வதாகவிருக்கிறபடியைக்கண்டு, ஒரு க்ஷேத்ரசேதநன் தன்னபிமாநத்திலேயொதுங்கினதென்னுமிவ்வளவுக்காகத் தன்னை யழியமாறினபடி கண்டால் பரமசேதநனபிமாநத்திலே யொதுங்கினால் அவனென்னபடுமோ! என்று, ஸ்வரக்ஷணவ்யாபாரங்களையடையவிட்டு அநந்நாயோபாதியாகத் தம்மை யநுஸந்தித்துக்கொண்டு அப்போதேவந்து திருக்கண்ணமங்கையில பத்தராவித்திருவாசலில் கைப்புடையிலே புகுந்து கண்வளர்ந்தாரென்று ப்ரஸித்தமிறே (82)

83. இனி உபயாதிகாரிகளில் ப்ரதாநரான இளைய பெருமாள் படியை விஸ்தரேணவருளிச்செய்கிறார் (பசியா என்று தொடங்கி.)

83. பசியராயிருப்பார் அட்டசோறு முண்ணவேணும் அடுகிறசோறு முண்ணவேணு மென்னுமாப்போலே காட்டுக்குப்போகிறபோது இளையபெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு, அடிமைசெய்யவேணும் எல்லா வடிமையும் செய்யவேணும் ஏவிக்கொள்ளவும் வேணும் என்றார்; படைவீட்டில் புகுந்த பின்பு, காட்டில் தனியிடத்தில் ஸ்வயம் பாகத்திலே வயிறுநிறைப்பெருக்கினபடியாலே, ஒப்பூணுண்ணமாட்டாதே, ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக் குடையையும், ஒரு திருக்கையாலே திரு வெண்சாமரத்தையும் தரித்து அடிமைசெய்தார்.

அதாவது—பசியராயிருப்பார், தங்கள் பசியின் கனத்தாலே, இதுக்குமுன் பாகின சோறும் இப்போ தாக்குகிற சோறும் எல்லாம் நாமே யுண்ணவேணும் என்று மநோரதிக்குமாப்போலே; பெருமாள் காட்டுக்கெழுந்தருளுகிறபோது, *பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தரான இளையபெருமாள், படைவீட்டில் நின்றும் புறப்படுவதற்கு முன்னே கூடப்போவதாக உத்யோகிக்கிற படியைக்கண்டு, நீர்நிலுனும் என்று நிர்ப்பந்தித்தருள * குருஷ்வ மாமநுசரம் வைதர்மயம் நேஹ வித்யதே, க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி தவசார்த்தஃ ப்ரகல்பதே * என்றும், கங்கை கடந்தேறினவன்று மீளவிடுகைக்குறுப்பாக அவர் அநேகமருளிச்செய்ய* நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ, முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யா விவோத்த்ருதௌ* என்றும் சொல்லுகையாலே பிரியில் தாமுளராக மாட்டாமையை முன்னிட்டு * குருஷ்வ மாம * என்ற வநந்தரத்திலே, *தநுராதாய ஸகுணம் கநித்ர பிடகாதரஃ, அக்ரதஸ் தே கமிஷ்யாமி பந்தாந மநுதர்சயந் ஆஹரிஷ்யாமி தே நித்யம் மூலாநி பலாநிசஃ வந்யாநி யாநி சாந்யாநி ஸ்வாஹாராணி தபஸ்விநாம்* என்கையாலே ஸ்வ சேஷத்வாநுகுணமாக அடிமை செய்யவேணுமென்றும், தத்நந்தரத்திலே * பவாமஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச்ச தே *

என்கையாலே— அதுதன்னிலும் இன்னவின்ன வடிமையென்று ஒரு நியதியின்றியே எல்லாவடிமையும் செய்யவேணுமென்றும், பஞ்சவடியிலே எழுந்தருளினபோது, நீரும் நிழலும் வாய்த்திருப்பதொரு ப்ரதேசத்தைப் பார்த்துப் பர்ணசாலையைச் சமையும் என்ன, *ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ் ஸம்யதாஞ்ஜலிஃ, ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்தம் இதம் வசந மப்ரவீத்* என்று—ஈந்தஜிலே ஸ்வாதந்த்ர்யத்தை வைத்த போதே பெருமாள் நம்மைக் கைவிட்டாரென்று விக்ருதராய், பிராட்டி முன்னிலை யாகக் கையுமஞ்சலியுமாய் நின்று *பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷசதம் ஸ்திதே, ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத* என்கையாலே—அடிமை செய்யுமளவில் ஸ்வாதந்த்ர்யமாகிற தோஷம் கலசாதபடி உசித கைங்கர்யங்களிலே யேவிக்கொள்ள வேணுமென்றும் ப்ரார்த்தித்தா ரென்கை. (படைவீட்டில்) இத்யாதி திருப்படை வீட்டிலே எழுந்தருளிவந்து புகுந்து திருவபிஷேகம் பண்ணியருளின போது, தம்மோடுகூட அடிமை செய்கைக்கொருவருமில்லாததொரு தனிக்காட்டிலே தாமே யடிமைசெய்து கைங்கர்யாபிநிவேசத்தைப் பெருக்குகையாலே, ஸ்வயம்பாகத்திலே வயிறறைப் பெருக்கினவன் ஒப்பூணுண்ண மாட்டாதாப்போலே, ஸ்ரீ பரதாழ்வான தொடக்கமானவர்களோடொக்கத் தாமும் ஓரடிமைசெய்து நிறகமாட்டாதே, திரு வெண்கொற்றக் குடையை யெடுக்கை திருவெண்சாமரம் பரிமாறுகையாகிற விரண்டடிமையை ஏககாலத்தில் செய்தா ரென்கை இந்த வ்ருத்தாந்தந்தான் ஸ்ரீராமா யணத்தில்லை. *சத்ரசாமர பாணிஸ்து லக்ஷ்மணோ நுஜகாமஹ* என்கிறது ஸ்ரீராமாயண மன்றோ வென்னில்; காட்டுக் கெழுந்தருளுவதற்கு முன்னே திருவபிஷேகார்த்த மாக வலங்கரித்து, தம்முடைய திவ்யாந்தஃபுரத்தில் நின்றும் புறப்பட்டு, சக்ரவர்த்தி திருமாளிகையை நோக்கித் திருத்தேரிலே யேறிப் பெருமாளெழுந்தருளுகிறபோது, இளையபெருமாள் செய்த வ்ருத்தாந்தமாகத் திருவயோத்யா காண்டத்திலே சொல்லப் பட்டதாகையாலே, இவ்விடத்துக்குச் சேராது. ஆனால், இவர் என்கொண் டிப்படி யருளிச்செய்தா ரென்னில்; பாத்மபுராண ப்ரக்ரியையாலே யருளிச்செய்தார். *அத தஸ்மிந் திநே புண்யே சுப லக்நே சுபாந்விதே, ராகவஸ் யாபிஷேகார்த்தம் மங்களஞ் சக்ரிரே ஜநாஃ* என்று தொடங்கி ப்ரகரணங்களைச் சொல்லிக்கொண்டு வந்து, *மந்த்ர பூத ஜலைச் சுத்தைர் முநயஸ் ஸம சரித வ்ரதாஃ—ஜபந்தோ வைஷ்ணவாந் ஸூக்தாந் சதுர்வேத மயாந் சுபாந்—அபிஷேகம் சுபஞ்சக்ருஃ காகுத்ஸ்தம் ஜகதாம் பதிம்— தஸ்மிந் சுபதமே லக்நே தேவ துந்துபயோ திவி—நிநேதுஃ புஷ்ப வர்ஷாணி வவர் ஷுச்ச ஸமந்ததஃ—திவ்யாம்பரைர் பூஷணைச்ச திவ்யகந் தாநுலேபநைஃ—புஷ்பைர் நாநா விதைர் திவ்யைர் தேவயா ஸஹ ரகூத்வஹஃ—அலங்க்ருதச்ச சுசுபே முநிபிர் வேதபாரகைஃ—சத்ரஞ்ச சாமரம் திவ்யம் த்ருதவாந் லக்ஷ்மணஸ் ததா—பார்ச்வே பரத சத்ருக்நௌ தாளவ்ருந்தம் விதேஜதுஃ—தர்ப்பணம் ப்ரததௌ ஸ்ரீமாந் ராக்ஷ ஸேந்த்ரோ விபீஷணஃ—ததார பூர்ண கலசம் ஸுக்ரீவோ வாநரேச்வரஃ—ஜாம்ப வாம்ச்ச மஹா தேஜா புஷ்ப மாலாம் மநோஹராம்—வாலிபுத்ரஸ்து தாம்பூலம் ஸகர்ப்பூரம் ததௌ ப்ரியாத்—ஹநூமாந் தீபிகாம் திவ்யாம் ஸுஷேணஸ்து த்வஜம் சுபம்—பரிவார்ய மஹாத்மாநம் மந்த்ரிணஸ் ஸமுபாஸிரே* என்று பாத்ம புராணத் தில் உத்தரகண்டத்தில் நாற்பத்தொன்பதா மத்யாயத்திலே சொல்லப்பட்டதிறே, *சத்ரஞ்ச சாமரம் திவ்யம் த்ருதவாந்* என்றது தோற்றவிறே (திருவெண்கொற்றக் குடையையும் திருவெண்சாமரத்தையும் தரித்து) என்றருளிச் செய்தது. ... (83)

84 பெரிய வுடையாரும பிளளை திருநறையூரரையரும உடமபை யுபேக்ஷித்தாகவ;
சிநதயநதிக குடமபு தனனடையே போயிற்று.

84 (பெரியவுடையாரும பிளளை திருநறையூரரையரும உடமபை யுபேக்ஷித்தார்கள) ஸ்ரீஜடாயு மஹாராஜரை பெரியவுடையார் எனறுய்ததது நம முதலிக ளருளிசசெயவது. இவாதாம, பஞசவடியிலே பெருமாளெழுநதருளி தமமை யங்கீகரிதத *இஹ வதஸ்யாமி ஸௌமித்ரே ஸார்ததமேதேந பக்ஷிணா* எனறவனறு தொடஙகி திருவடிகளுககு மிகவும பரிவராய, பெருமாளெழுநதருளியிருககிற திவயாசரமத்துக காஸகநமாக வர்ததியா நிறகசசெயதே, அசிநதிதமாக ராவணன வந்து பிராட்டியைப பிரிததுககொணடு போக, அபபோது பிராட்டி இவரை யொரு வருக்ஷததினமேலே கணடு *எனனை யிவனிபபடி யபஹரிததுக கொணடு போகாநினறான* எனறு இவர் பேரைச சொலலிக கூப்பிட, உறங்குகிறவிவர் அநத ஆர்த்த தவநியைக கேட்டுணாநது, ராவணன கொணடுபோகிறபடியைக கணடு *உனககிது தகாதுகாண* எனறு தாமோபதேசம பணணினவளவில அவன கேளாமையாலே, *நமப்ராணனோடே யிது கணடிருககக கடவோமலலோம, யுத்தமபண்ணி மீட்குதல, இல்லையாகில முடிதல செய்யக கடவோம* எனறு அத்யவஸிதது, அதி பலபராககரமராகையாலே யவனோடே மஹாயுததததைப்பணணி, அவன கையாலே யடிபட்டு விழுந்து தநதிருமேனியை விட்டாரிறே பிளளை திருநறையூரரையா ஸகுடுமபமாக திருநாராயணபுரததில வேதநாராயணப பெருமாளை ஸேவிககச சென்று புகுநதவளவிலே, பரஸமயிகள அநதக கோயிலிலே அககி ப்ரக்ஷேபததைப் பண்ண, உளளு நினறவாகளெலலாரும புறபபட்டோடிப் போகச செயதே, அநத வெமபெருமான திருமேனிக கழிவு வருகிறபடியைக கணடு ஸஹிககமாட்டாத ப்ரேமாதிசயததாலே தாமுமொககமுடிவதாக வதயவஸிதது இவா நிறகையாலே பிளளைகளும இவரை விட்டுப போகோம எனறு நிறக, அவர்களும தாமும கூடவதுககுளளே நினறு திருமேனியை விட்டாரெனறு பரஸிததமிறே

(சிநதயநதிக குடமபு தனனடையே போயிறறு) அதாவது *காசித் ஆவஸததஸயாந்தே ஸதித்வா த்ருஷ்ட்வா பஹிர்குரும—தந்மயத்வேந கோவிந்தம தத்யௌ மீலிதலோசநா. தச்சித்த விமலாஹ்லாத க்ஷீண புண்யசயா தத்தா—ததப்ராப்தி மஹா து:கவிலீநாசேஷ பாதகா—சிந்தயந்தீ ஜகத்ஸூதிம பரப்ரஹ்ம ஸ்வரூபிணம—நிருச்சவாஸதயா முக்திம கதாந்யா கோபகந்யகா* எனகிறபடியே திருககுரவையி னனறு திருககுழலோசையைக கேட்டு, ஸ்ரீபருநதாவநததேறப் போவதாகப புறப்பட்டவளவிலே, குருதர்சநததாலே போகமாட்டாமல நினறு கருஷ்ணனை த்யாநமபணணி, தத்கதசித்தை யாகையாலே வந்த நிர்மல ஸுகததாலும ததப்ராபதி நிபநதநமான நிரவதிக து:கததாலும ப்ரக்ஷீணாசேஷ புணயபாபையாய, ததஸமரணம செலலாநிறக, ததப்ராப்தயலாப க்லேசத்தாலே தரிககமாட்டாமல மூசசடஙகுகையாலே, இவளுககுத் தானுபேக்ஷிகக வேண்டாதபடி தேஹம தனனடையே விட்டுககொணடு நின்றதெனகை. . (84)

85. ஆக இப்படி நிதர்சநபூதர்படிகளைச் சொலலி, இனி யிவர்களைப்போலே யிருககவேணுமெனறதின கருததை யருளிசசெய்கிறார் (உபாயததுககு) இதயாதி வாக்யத்வயத்தாலே.

**85. உபாயத்துக்கு, சக்தியும் லஜ்ஜையும யத்நமும குலைய வேணும் ; உபே யததுககு ப்ரேமமும் தன்னைப் பேறுமையும தரியாமையும் வேணும்**

அதாவது—உபாயததுக் கதிகாரியாமபோது, தனனுடைய ரக்ஷணம் தானே பணணிககொளளுகைக குறுப்பான சகதியும, தான் பரிகரஹிககிற உபாயததுககு விரோதிகளானவற்றை விடுமளவில் நாடடார் சிரிககுமதுககுக் கூசும லஜ்ஜையும, தன் பாரதநத்ர்ய விரோதியான ஸவயதநமும கைவிடவேணும, உபேயத்துக கதிகாரி யாமபோது, சேஷியைப் பிரியாதே நினறு எல்லாவடிமையு மவனே வினபடி செய்ய வேணுமெனனும் ப்ரேமமும, அத்தலைககொரு தீஙகுவரில அதுகண் டாறறமாட டாமல தனனுடமபை யுபேக்ஷிககையும, ததவிகரஹாநுபவாலாபத்தில ,தரித திருககமாடடாமல மூசசடஙகுமபடியாகையும வேணுமென்றபடி. ஆகையாலே, அவர் களைப்போலே யிருககையாவது—இவவதிகாரங்களை யுடையராகை யெனறு கருத்து.

86. விஷ்ணோ: காயம ஸமுததிச்ய தேஹ தயாகோ யதா க்ருத:—ததா வைதுண்ட மாஸாத்ய முகதோ பவதி மாநவ: எனறு ஆகநேய புராணத்திலும், *தேவகார்ய பரோ பூத்வா ஸ்வாம தநும ய: பரித்யஜேத்—ஸயாதி விஷ்ணு ஸாயுஜ்ய மபி பாதக கருந் நர:* எனறு வாயவயததிலும், *ரங்கநாதம ஸமாசரித்ய தேஹதயாகம் கரோதிய:—தஸய வம்சே மருதாஸ ஸர்வே கசசநதயாதயநதிகம லயம* எனறு வாமனீயத்திலும் சொலலுகை யாலும, விசேஷித்து ஆசவமேதிக பர்வத்தில் வைஷ்ணவ தர்ம சாஸத்ரததில பஞச மாத்யாயத்திலே *அக்நி ப்ரவேசம யசகாபி குருதே மதககதாத்மநா—ஸ யாத்யக்நி ப்ரகாசேந விமாநேந மபாலயம. ப்ராணாபஸ் தயஜதி யோ மாதயோ மாம ப்ரபநநோ பயநாசகம—பால ஸூர்ய பரகாசேந வரஜேத யாநேந மத க்ருஹம* என்று பகவானதானே யருளிச் செய் கையாலும, இபபடி மோக்ஷ ஸாதநமாகச் சொலலப்படுகிற பகவதர்த்தமான ஸவதே ஹத்யாகம அநந்ய ஸாதநனை விவனுககு த்யாஜ்யமனறோ, ப்ரபந்நரா யிருககிற பிளளைதிருநறையூரரைய ரிததை யநுஷ்டிப்பா னெனனெனன வருளிச செய்கிறா. (இவனுககு) எனறு தொடஙகி

**86. இவனுககு வைதமாய வருமதிறே தயஜிக்கலாவது, ராகப்ராபதமாய வருமது த்யஜிககவொண்ணாதிறே.**

அதாவது. *இதம குர்யாத* எனறு ஒருவிதிப்ரயுகதமாய் வருமதிறே ப்ராப்தா ப்ராப்த விவேகம பணணி யிவனுககுக கைவிடலாவது, அஙஙனனறிககே, தன விரஹத்தி லாற்றப் போகாதபடி போகயமுமாய் ப்ராப்தமுமான விஷயத்தில் ராகப்ர யுகதமாய வருமது வருந்தியும கைவிடப் போகாதிறே யெனகை. ... (86)

87. வைதமாய் வருமளவில ஸ்வத்யஜமாய், ராகப்ராபதமாய்வருமளவில துஸத்யஜமாவானெனனெனன வருளிச செய்கிறார். (உபாயத்வ) இத்யாதியாலே.

**87 உபாயதவாநுஸநதாநம் நிவர்த்தகம ; உபேயதவாநுஸந்தாநம ப்ரவர்த்தகம**

(உபாயத்வாநுஸந்தாநம நிவர்ததகம்) என்றது-வைதமாய வரும தசையில தேஹத்யாக ரூப ப்ரவருத்தியி லுபாயதவாநுஸநதாநம நடககையாலே, அவ்வநு ஸநதாந மிவனை ஸாதநதயா ஸமப்ரதிபநநமான இத்தேஹத்யாக ரூப ப்ரவ்ருததியில் நினறும மீளுவிககுமெனறபடி. (உபேயதவாநுஸநதாநம் ப்ரவர்ததகம) எனறது—

ராக ப்ராப்தமாய் வரும தசையில, இவவிஷயத்துககு ஹாநிவரக கண்டிருப்பதில முடிகையே நலலது என்று தேஹதயாகந்தனனே புருஷார்ததமாக வநுஸநதிககை யாலே, அவ்வநுஸந்தாந மிவனை யதிலே மூளுவிககு மெனறபடி. அனறிககே, வைதமாய் வருமபோது, பகவத விஷயததி லுபாயதவாநுஸநதாநம இதுககு நிவர்த தகமாம; ராக ப்ராப்தமாய வருமபோது, அவவிஷயததில உபேயத்வாநுஸநதாந மிதுக்கு ப்ரவர்ததகமா மெனனவுமாம (87)

88. இப்படியொரு ஸாதந புதத்யா வனறிககே, தத விஷய ப்ராவண்யாதி சயத்தாலே ஸவதேஹததை விடுமபடியான நிலை விளையககூடுமோவெனன வருளிச் செய்கிறார் (அப்ராப்த) இத்யாதியாலே.

**88. அப்ராப்த விஷயங்களிலே ஸக்தனானவன அது லபிக்கவேணும எனறிரா நின்றால், ப்ராப்தவிஷயப்வணனுககுச சொல்லவேண்டாவிறே.**

அதாவது—ஸவரூப ப்ராப்தமலலாத ஹேயவிஷயஙகளிலே ப்ரவணனானவன், தன்னை யழியமாறி யாகிலும் அவவிஷயததை லபிககவேணுமெனறு ஸவதேஹ த்யாகததிலே ப்ரவர்த்தியாநினறால, ஸவரூபப்ராப்தமான விலக்ஷணவிஷயத்திலே ப்ரவணனானவனுககு, அவவிஷயத்தைப் பறறத் தனனையழியமாறுகையாகிறவிது கூடுமெனனுமிடம் கிமபுநர்ந்யாயஸிததமனறோவெனகை ஒரு வேசையையளவிலே யொருவன அதிஸகதனாய்க்கொண்டு போருமவளாய, அவளுககு வயாதி கனககவநத வளவிலே * இவள ஆறியெழுநதவாறே நான என தலையையரிநது தருகிறேன் * எனறொரு தேவதைககு ப்ரார்த்தித்து, பின்பு தலையையரிந்துகொடுப்பதும செய்தானெனறு ப்ரஸித்தமிறே. (88)

89. உபாயோபேயாதிகாரங்களுககுடலாக மறறுஞ சொனன அநுஷ்டா நங்கள்போலனறிககே, உபாயதயா சாஸ்த்ரஸிததமாகையாலே, அநநய ஸாத நனுககு அநநுஷ்டாநமான விநத தேஹதயாகம ராகப்ராப்தமாகையாலே துஸ்த யஜமா யிருந்ததே யாகிலும, உபாய கோடியிலே யநவயிததனறி நிலலாதே யெனன வருளிசசெய்கிறா (அநுஷ்டாநமும) எனறு தொடஙகி.

**89. அநுஷ்டாநமும் அநநுஷ்டாநமும உபாயகோடியிலந்வயியாது**

அதாவது—அநுஷ்டாநமாகச சொனன ஸவசகதித்யாகாதிகளும ப்ரேமாதி களும உபாயோபேயாதிகாராநதர்ப்பூதமாகையாலே உபாயகோடியிலநவயியாதாப் போலே, அநநுஷ்டாநமாகச சொனன ஸவதேஹத்யாகமும, உபாய புததயா அநுஷ்டிதமன்றிககே ராகப்ராப்தமாகையாலே உபாயகோடியி லந்வயியாது, உபே யாதிகாரததிலே யநதர்ப்பவிககுமததனை எனகை. உபாயதயா சாஸதர ஸிததமே யாகிலும, உபாயபுத்தயா வநுஷ்டிதமானதுககேயிறே உபாயத்வமுளளது அநங னன்றாகில ப்ரபந்நனாவ னுபாயபுததியற உபேயபுத்தயாபண்ணுகிற புணயதேச வாஸாதிகளு முபாயகோடியிலே அநவயிகக வேணுமிறே. (89)

90. அன்றிககே, இந்த ப்ரவருத்திதான உபாயகோடியிலேயந்வயிததததாகி லும் அநந்யோபாயத்வததுககுக குலைதல வருமித்தனையிறே, அது ப்ரேமபரவசர்கது

அவத்யமன்றென்னைக்காக ப்ரேமபரவசர் ப்ரவ்ருத்திகளை தர்சிப்பிக்கிறார் (அந்யோபாயத்வமும்) என்று தொடங்கி

**90. அந்யோபாயத்வமும் அந்யோபேயத்வமும் அந்யதைவத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்தி காணாநின்றோமிறே.**

அந்யோபாயத்வம் குலையும்படியான ப்ரவ்ருத்தியாவது *திருந்தவே நோற்கின்றேன்* *நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்* *குதிரியாய் மடலூர்தும்* *ஓதிநாமம்* *ஊராதொழியேன் நான் வாரார்பூம் பெண்ணைமடல்* *உலகறியவூர்வன் நான்=மன்னியபூம் பெண்ணை மடல்* என்று நோன்பு நோற்கை, மடலெடுக்கை முதலான வ்யாபாரங்களிலே மிழிகை. அந்யோபேயத்வம் குலையும்படியான ப்ரவ்ருத்தியாவது—அத்தலைக்கு அதிசயத்தை விளைக்கையே புருஷார்த்தமென்றிருக்கை தவிர்ந்து, *நமக்கே நலமாதலில்* என்றும், தூமலர்த்தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்* என்றும்—தனக்கு அதிசயம் தேடத்தொடங்குகை. அந்ய தைவத்வம் குலையும்படியான ப்ரவ்ருத்தியாவது *காமநேவா வுனையுமும்பியையும் தொழுதேன்* *பேசுவதொன்றுண்டு இங்கெம்பெருமான்* என்று காமன் பக்கலிலே தேவதா புத்தி பண்ணி யாராதிக்கை. (காணாநின்றோமிறே) என்றது—ப்ராப்ய வஸ்துவின் பராவண்யாதிசயத்தாலே பேரளவுடையவர்கள் பக்கலிலுமுண்டாகக் காணாநின்றோமிறே என்கை. முன்புசொன்ன ப்ரவ்ருத்திக்கு உபாயகோட்யந்வயம் வஸ்துகத்யா வருமென்று கொள்ளுகிற மாத்ரமிறே; அங்ஙனன்றிக்கே, கேவலோபாயபுத்த்யா வநுஷ்டிதமானவையிறே யிவை, ஆகையால ப்ரேமபரவசர்களிது அவத்யமன்றென்று கருத்து. (90)

91 இதனையும் கலக்கத்தாலே வந்தவையிறே, அஜ்ஞானமூலமாய் வருமவையொன்று மாதரணீயமன்றே என்ன வருளிச்செய்கிறார். (ஜ்ஞாந) இத்யாதியாலே.

**91. ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சுபெறும்.**

(ஜ்ஞாந விபாகமாவது)—*ஞானங் கனிந்தநலம்* என்கிறபடியே—ஜ்ஞானத்தினுடைய பரிபாகரூபையான பக்தி. அதின் கார்யமான (அஜ்ஞானமாவது)—அந்த பக்த்யதிசயத்தாலே வரும் ப்ராப்தாப்ராப்த விவேகாபாவம்; அத்தாலே வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்களெல்லாம் (அடிக்கழஞ்சுபெறும்) என்றது—அதி சலாக்யங்களா யிருக்குமென்றபடி. காம நிபந்தநமான அஜ்ஞானத்தாலே வருமவையே ஹேயங்களென்று கருத்து .... (91)

92 ஆனாலும், இவ்வதிப்ரவ்ருத்தி இத்தலையில ப்ரவ்ருத்தியி லொன்றையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின கார்யகரத்வத்துக்கு ப்ரதிபந்தகமாகாதோ வென்ன வருளிச்செய்கிறார் (உபாய) இத்யாதியாலே

**92. உபாயபலமாய உபேயாந்தர்பூதமா யிருக்குமது உபாயப்ரதிபந்தகமாகாது.**

(உபாயபலம்) என்றது—ஸித்தோபாயமான வவன் பண்ணின க்ருஷிபலமென்றபடி. *மயர்வற மதிநல மருளினன்* *பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த

காரமர்மேனி நங் கண்ணன்* என்றும—ஏவம்பூத ப்ரவருத்தி ஹேதுவான பக்திக்கு உத்பாதகனும வர்த்தகனு மவனேயிறே, ஆகையாலே, பக்திபாரவச்ய நிபந்தநமான இப்ப்ரவருத்தியை யுபாயபல மென்கிறது. (உபேயாந்தர்பூதமா யிருக்குமது) என்றது —ப்ராப்ய த்வரையின முறுகுதலாலே கண்ணுஞ்சுழலையிட்டு இததலைபடுகிற அலமாப்பெல்லாம நமமை யாசைப்பட்டிப்படி படப்பெறுவதே! என்று அவன முகமலருகைக்குறுப்பாகையாலே, மடலெடுக்கை தொடக்கமான விநத ப்ரவருத்திகள அவன முகமலர்த்திக்காகப பண்ணும கைங்கர்யத்தோபாதியாயக்கொண்டு உபேயத்திலே அந்தர்ப்பூதமாயிருக்குமெனகை (உபாய ப்ரதிபந்தகமாகாது) என்றது—ஏவம்பூதமானது உபாயத்தினுடைய கார்யகரத்வத்துக்கு விலக்ககாதென்றபடி. (92)

93. இப்படி மடலெடுக்கை முதலானவை ஸித்தோபாய ப்ரதிபந்தகமாகாதெனனுமிடம சொல்லி, அவை தனக்கு ஸித்தோபாய ஸாமயத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறாமேல (ஸாத்ய ஸமாநம) இத்யாதி வாக்யத்வயத்தாலே.

**93. ஸாத்யஸமாநம விளம்பாஸஹமென்றிறே ஸாதநத்துக்கேற்றம ; ஸாத்யப்ராவண்ய மடியாகவிறே ஸாதநத்திலிழிகிறது.**

அதாவது—ஸாத்ய வஸ்துவே ஸாதநமாகையாலே ஸாத்யத்துக்கு ஸமாநமென்றும, பல விளம்பத்தை ஸஹியாதே சீக்ரமாக கார்யம் செய்து கொடுக்குமென்றுமிறே இதர ஸாதநங்களிற் காட்டில ஸித்தஸாதநத்துக்கேற்றம, ஸாத்யத்தில ப்ராவண்யமடியாகவிறே இந்த ஸாதநபரிக்ரஹத்தனனி விழிகிறது ; அவை இரண்டு மிவற்றுக்கு முண்டென்று கருத்து. எங்ஙனே யெனனில ; மடலெடுக்கை முதலான ப்ரவருத்திகள சேஷிக்கு அதிசயகரங்களாகையாலே கைங்கர்யரூப ஸாத்யத்துக்கு ஸமாநங்களா யிருக்கையாலும், மடலூருதல நோன்பு நோற்குதல செய்வனென்று துணிந்தபோதே ஸர்வேசவரன் த்வரித்துக்கொண்டு வந்து இவர்கள காலிலே விழும்படி பணணிக்கொடுக்கையாலே பலவிளம்பாஸஹங்களா யிருக்கையாலும், ஸித்தஸாதநமபோலே இதரஸாதநங்களிற காட்டிலேற்றத்தையுடைத்தாய், ஸாத்யப்ராவண்ய மடியாக இவற்றி விழிகிற வாகாரமு மொத்திருக்கையாலே, இததால—ஸித்தோபாயத்தை யொழியவு மிதுதானே காரயம செய்யவற்றாகையாலே தத் ப்ரதிபந்தக மெனனும தூஷணமிலலை யென்று கருத்து அனறிக்கே, (உபாய ப்ரதிபந்தகமாகாது) என்றதை யின்னமும முகபேதத்தாலே யுபபாதிக்கிறார் (ஸாத்ய) இத்யாதி வாக்ய த்வயத்தாலே. அதாவது—பால மருந்தாமாப்போலே ஸாத்ய வஸ்து தானே ஸாதநமாகையாலே ஸாரஸ்யத்தில ஸாத்யத்தோடொத்திருக்கு மென்றும, ஸாத்யத்தை ப்ராபிக்கு மளவில காலவிளம்பத்தைப் பொறாது கடுக ப்ராபித்துவிடுமென்றுமன்றோ ஸாதநாந்தரத்திற காட்டில ஸித்த ஸாதநத்துக் கேற்றம ; இப்போதிது சொல்லுகிறது, இவ்வாகார த்வயமும ஸாத்ய ப்ராவண்ய ஹேதுவாமென்று தோற்றுகைக்காக. இப்படியாகையாலே, தானடியாக விளைந்து க்ஷணகால விளம்பம பொறாமல துடிக்கும்படி முறுகடியிடுகிற ஸாத்ய ப்ராவண்ய மடியாகவிறே மடலெடுக்கை முதலான விஸஸாதநத்தி விழிகிறதெனகை. ஆகையாலே, ஏவம்பூத ப்ராவண்யத்தின முறுகுதலாலே கணணுஞ்சுழலை யிட்டுச செய்கிற விப்ப்ரவருத்திகள உபாயம மேல்விழுந்து கார்யஞ்செய்கைக்கு உடலாமித்தனை யலலது தத்ப்ரதிபந்தகமாகா தென்று கருத்து.

ஆக, (இவனுக்கு வைதமாய வருமதிறே த்யஜிக்கலாவது) என்று தொடங்கி இவ்வளவும் வர, பிள்ளை திருநறையூரரையர் ப்ரவ்ருத்தி வ்யாஜத்தாலே, பகவத் ப்ரபந்நனாயிருந்தானேயாகிலும் உபேயபரனானவனுக்கு தத்விஷய ப்ராவண்யத்தால் வரும் ஸ்வதேஹ த்யாகம் துஸ்த்யஜம், உபாய புத்த்யாவநுஷ்டித மல்லாமையாலே அது தானுபாய கோடியிலந்வயியாது, வஸ்துகத்யா அந்வயித்ததாகிலும் ப்ரேம பரவசர்க்கு தோஷாயவன்று. புத்தி பூர்வகமாக வந்யோபாயத்வாதிகள் குலையும் படியான ப்ரவ்ருத்திகள் தெளியக் கண்டவர்கள் பக்கலிலும் காணுகையாலே; இவை தான் அஜ்ஞாந மூலமேயாகிலும் ப்ரேம கார்யமான வஜ்ஞாநத்தாலே வந்தவை யாகையால் அதிசலாக்யங்கள், ஸித்தோபாய ப்ரதிபந்தகமாகாது, அவ்வளவன்றிக்கே அத்தோடொக்கச் சொல்லலாம்படியன்றோ விவற்றின் பெருமையென்று சொல்லு கையாலே உபேயாதிகாரத்தில் (தன்னைப் பேணாமை) என்று சொன்ன விது அந்ய ஸாதநத்வத்துக்குச் சேருமோவென்னு மதிசங்கா பரிஹாரம் பண்ணப்பட்டது. (93)

94. ஏவம்பூதமான ப்ராவண்யம் விஷய வைலக்ஷண்யாதீநமத்தனையன்றோ, சமதமாதி யாத்மகுணங்களன்றோ அதிகாரத்தை மினுக்குவிப்பதென்ன; அவை தன்னையுமிது தானே யுண்டாக்குமென்கிறார் மேல் (இவனுக்கு) என்று தொடங்கி.

94. இவனுக்குப் பிறக்குமாத்மகுணங்க ளெல்லாவற்றுக்கும் ப்ரதாந ஹேது இந்த ப்ராவண்யம்.

*சமதம நியதாத்மா* *அமாநித்வம்* இத்யாதியிற் சொல்லுகிறபடியே—இச் சேதநனுக்குண்டாகக்கடவ வாத்மகுணங்கள் தா னநேக முண்டிறே; அவை யெல்லாவற்றுக்கும் இந்த ப்ராவண்யம்—(ப்ரதாந ஹேதுவாகையாவது)—அநுகூலஸஹவாஸ சாஸ்த்ராப்யா ஸாசார்யோபதேசாதிகளான ஹேத்வந்தரங்களிற் காட்டில் முக்கியஹேதுவாயிருக்கை .. .... ... (94)

95. இவ்வர்த்தத்தில ப்ரமாணோபாதாநம் பண்ணுகிறார். (மாற்பால) என்று தொடங்கி

95. *மாற்பால மனஞ் சுழிப்ப* *பரமாத்மநி யோரக்த:* *கண்டு கேட்டுற்றுமோந்து*

*மாற்பால மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு—நூற்பால மனம்வைக்க நொய்விதாம்* என்று—ஸர்வேச்வரன் பக்கலிலே ஹ்ருதயம் ப்ரவணமாக, போக்யை களான ஸ்த்ரீகளுடைய தோளோடே யணைகையில் நசையற்று, ப்ரமாணங்களிலே மநஸ்ஸை வைக்க வெளிதா மென்றும்; *பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோபரமாத்மநி* என்று—பரமாத்மாவின் பக்கலிலே ரக்தனாய் அத்தாலே பரமாத்மேதர விஷயத்தில் விரக்தனானவ னென்றும்; *ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டு—கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலு மைங்கருவி கண்ட வின்பம் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம் ஒழிந்தேன்* என்று—பெரிய பிராட்டியாரும் தேவருமா யொரு தேசவிசேஷத்திலே யெழுந்தருளியிருக்கிற சேர்த்தியைக் கண்டு அங்கே ப்ரவணனாய், ஐச்வர்ய கைவல்யங்களில் விரக்தனானே னென்றும்; பகவத் ப்ராவண்ய மிதரவிஷய விரக்தி ஹேதுவாகச் சொல்லப்பட்டதிறே. ... .... ... (95)

96. பகவத்ப்ராவண்ய மாத்ம குணங்களெல்லாவற்றுக்கும் ப்ரதாநஹேது வென்று ப்ரஸ்தாவித்து, இதரவிஷய விரக்தி ஹேதுத்வமாத்ரத்தில் ப்ரமாணங்களை

தர்சிப்பிப்பானென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (ஆத்ம குணங்களில ப்ரதாநம சமமும் தமமும) என்று.

96. ஆத்ம குணங்களில ப்ரதாநம சமமும் தமமும.

சமமாவது—அந்த: கரண நியமநம், தமமாவது—பாஹ்ய கரண நியமநம். *சமச் சித்த ப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச்சேந்த்ரிய நிக்ரஹ:* என்னக்கடவதிறே. *க்ஷமா ஸத்யம தமச்சம:* என்கிற விடத்தில, *தமோ பாஹ்ய கரணாநாம் நாதத விஷயேப்யோ நியமநம்—சமோந்த: கரணஸ்ய தந்நியமநம* என்றிறே பாஷ்யகாரரு மருளிச்செய்தது. மாறிச் சொல்லுமிடமுமுண்டு. இந்த சம தமங்களுண்டான விடத்தில அல்லாத குணங்கள தன்னடையே வருமாகையாலே ப்ரதாநமான விவறறுக்கு ஹேதுவென்னுமிடத்தில் ப்ரமாணம காட்டப்பட்டதென்று கருத்து. அன்றிக்கே, கீழச்சொன்ன விரக்தி ஹேதுத்வம, ஸகலாத்ம குணோத்பத்திக்கும ஹேது வென்னு மிடத்துக்கு உபலக்ஷண மாக்கி, இவவாத்ம குணங்களில ப்ரதாந மேதென்கிற சங்கையிலே, (ஆத்மகுணங்களில ப்ரதாநம் சமமும தமமும) என்றருளிச்செய்தாராகவுமாம். .... (96)

97. இந்த சமதமங்க ளுண்டானால இவனுக்கு குண்டாகக்கடவ பலபரம பரையை யருளிச் செய்கிறார் மேல (இவையிரண்டும) என்று தொடங்கி.

97. இவை யிரண்டு முண்டானால் ஆசார்யன கைபுகுரும; ஆசார்யன் கைபுகுந்த வாறே திருமந்த்ரம கைபுகுரும திருமந்த்ரம கைபுகுந்தவாறே ஈச்வரன் கைபுகுரும, ஈசவரன கைபுகுந்தவாறே, *வைகுந்தமாநகர மற்றது கையதுவே* என்கிறபடியே ப்ராப்ய பூமி கைபுகுரும.

பகவத்ப்ராவண்யமடியாகவரும் பரிபூர்ணமான சமதமங்களைக் கீழச்சொல லிற்றேயாகிலும், இவவிடத்தில ஆசார்யாங்கீகாரத்துக்குப் பூர்வ பாவியானவளவிலே யொதுக்கிச் சொல்லுகிறது இந்த சமதமங்க ளிரண்டுமுண்டானால் ஆசார்யன கைபுகுருகையாவது—இவவாத்மகுணம கண்டுகந்து ஸம்ஸாரநிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை ஸார்த்தமாகவுபதேசிக்கும்படி யிவனுக்கு வசயனாகை *தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரசாந்த சித்தாய சமாந்விதாய—யேநாக்ஷரம் புருஷம வேத ஸத்யம ப்ரோவாச தாம தத்வதோ ப்ரஹ்மவித்யாம* என்று சமதமோபேதனையக் கொண்டு உபஸந்நனவனுக்கிறே ப்ரஹ்மவித்யையை தத்வத: உபதேசிக்கச் சொல்லிற்று. இந்த ச்ருதியில ஆசார்யோபஸத்திக்குடலாகச் சொன்ன சமதமங்களுக்கு, *ஏதேந சரவணோபயுக்த மவதாநம விவக்ஷிதம—ந்யூபாஸ நோபயுக்தாதயந்தேந்த்ரிய ஜயாதி:* என்றிறே ச்ருதப்ரகாசிகாகாரர் வ்யாக்யாநம பண்ணிற்று. (ஆசார்யன கைபுகுந்த வாறே திருமந்த்ரம கைபுகுருகையாவது)—*தந்மந்த்ரம ப்ராஹ்மணாதீநம* என்று—திரு மந்த்ரம ஆசார்யாதீநமாகையாலே, உபதேஷ்டாவானவன கைபுகுந்தவாறே, ததுப தேசமுகத்தாலே ஸார்த்தமாக விவனநெஞ்சிலே ப்ரதிஷ்டிதமாகை. *ப்ரஹ்மவித் ப்ராஹ்மணோ விது:* என்கையாலே *ப்ராஹ்மணாதீநம* என்கிற விடத்தில, ப்ராஹ்மண சப்தத்தால—ஆசார்யனைச் சொல்லுகிறது. (திருமந்த்ரம கைபுகுந்தவாறே ஈசவரன் கைபுகுருகையாவது)—*மந்த்ராதீநஞ்ச தைவதம்* என்று—திருமந்த்ர மிட்டவழக்கா யிருக்குமவனாகையாலே, ஆதத ஸஹிதமாக அது கைபுகுந்தவாறே, தத் ப்ரதிபாத்ய னான தா னிவனுக்கு அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வ கேஷ்டப்ராப்திக்கு ப்ராபகனாகை

(ஈச்வரன் கை புகுந்தவாறே, *வைகுந்தமாநகர் மற்றது கையதுவே* என்கிறபடியே—ப்ராப்ய பூமி கைபுகுருகையாவது)—*தைவாதீநம் ஜகத் ஸர்வம்* என்று—உபய விபூதியும் ஈச்வரனிட்ட வழக்காகையாலே, அவனை ப்ராபகனாய் கைபுகுந்தவாறே, ப்ராப்ய பூமியான ஸ்ரீவைகுண்ட மிவனுக்கு கதயந்த ஸுலபமாகை. (97)

98 இப்படி சமதமங்களுண்டாகவே உத்தரோத்தர மிவையெல்லாம் ஸித்திக்கும் ப்ரகாரத்தை ஆரோஹ க்ரமத்தாலே யருளிச்செய்து, இதில் யாதொன்றுக்கு யாதொன்று ஹேதுவாகச் சொல்லிற்று அது நியதமென்னுமிடத்தை அவரோஹ க்ரமத்தாலே யருளிச் செய்கிறார் (ப்ராப்ய லாபம்) இத்யாதியாலே.

98. ப்ராப்யலாபம் ப்ராபகத்தாலே; ப்ராபகலாபம் திருமந்த்ரத்தாலே; திருமந்த்ரலாபம் ஆசார்யனாலே, ஆசார்யலாபம் ஆத்மகுணத்தாலே

இது தனக்கு ப்ரயோஜநம், இந்த ஹேதுபரம்பரையில் ப்ரதமஹேது சமதமங்களாகையாலே, அவச்யமிவை யிரண்டு மிவனுக்குண்டாகவேணு மென்கை. ஈச்வரனே ப்ராபகனாகையாலே, ப்ராப்யலாப மீச்வரனாலே என்கிற ஸ்தானத்திலே (ப்ராபகத்தாலே) என்றருளிச் செய்தது (98)

99. இந்த சமதமாதிகள்தான போகமோக்ஷகாமரெல்லார்க்கும் வேணுமென்கிறார் (இதுதான) என்று தொடங்கி

99. இதுதான ஐச்வர்யகாமர்க்கும் உபாஸகர்க்கும் ப்ரபந்நர்க்கும் வேணும்.

ஐச்வர்யகாமர்க்கு சப்தாதி போகமே புருஷார்த்தமாகிலும், தத் ஸாதநாநுஷ்டாந தசையில் சமதமாதிகள் வேணும், *இந்த்ரியாணி புராஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா* *படிமன்னு பல்கலன் பற்றோடறுத் தைம்புலன் வென்று* என்னக்கடவதிறே. *ஐம்புலன்வென்று* என்றது—மநோ நியமநத்துக்கு முபலக்ஷணம். உபாஸகர்க்கு வித்யாங்கதயா சமாதி வேணும், *தஸ்மாதேவம்வித் சாந்தோதாந்த உபரத ஸ்திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பச்யேத்* *புன்புல வழியடைத் தரக்கிலச்சினை செய்து நன்புல வழி திறந்து ஞான நற்சுடர்கொளீஇ* என்னக்கடவதிறே ப்ரபந்நர்க்கு கதிகாரார்த்தமாக சமாதி வேணும்; *ஏகாந்தீது விநிச்சித்ய தேவதா விஷயாந்தரை:—பக்த்யுபாயம் ஸமம் க்ருஷ்ண ப்ராப்தௌ க்ருஷ்ணைகஸாதந:* *அடக்கரும்புலன்கள் ஐந்தடக்கி யாசையாமவை—துடக்கறுத்து வந்து நின்தொழிற கணின்ற வென்னை* என்னக்கடவதிறே. (99)

100. இப்படி யதிகாரி த்ரயத்துக்கு மபேக்ஷிதமேயாகிலும், அதிகமாக வேண்டுவது ப்ரபந்நனுக்கென்கிறார் (மூவரிலும) என்று தொடங்கி

100 மூவரிலும வைத்துக்கொண்டு மிகவும் வேண்டுவது ப்ரபந்நனுக்கு.

இவனுக்கிதிலாதிக்யம சொல்லுகைக்காகவிறே அல்லாதவர்களை யிவ்விடத்தில் ப்ரஸங்கித்ததும். (100)

101. அவ் வாதிக்யந்தன்னை யருளிச்செய்கிறார் (மற்றை யிருவர்க்கும்) என்று தொடங்கி.

101. மற்றையிருவர்க்கும நிஷித்தவிஷயநிவ்ருத்தியே யமையும; ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநிவ்ருத்தி தனனேற்றம்.

அதாவது—சப்தாதி போகபரனான வைசவர்யகாமனுக்கும், ஸாதநாந்தரபரனான உபாஸகனுக்கும், சாஸ்த்ர நிஷித்த விஷயமான பரதாராதியில நிவருத்தி மாத்ர மமையும, தத்வய வ்யாவ்ருத்தனா யிருக்கிற ப்ரபந்நனுக்கு, சாஸ்த்ர விஹித விஷயமான ஸ்வதாரத்தில நிவருத்தி அவர்களைப்பற்ற வேற்றமெனகை. அவர்களிருவரிலும், ஐசவர்யகாமனுக்கு, ஸ்வதாரத்தில ஸாதந தசையில தர்மபுத்த்யா ப்ரவருத்தியும, பல தசையில போக்யதா புத்த்யாப்ரவருத்தியுமாயிருக்கும், உபாஸகனுக்கு பலம் பகவதநுபவமாகையாலே, அவனைப்போலே பலதசையில் அந்வயமில்லையே யாகிலும், உபாஸநதசையில தர்மபுத்த்யா ப்ரவருத்தி வேணும; ப்ரபந்நனுக்கு, தாமபுத்த்யா ப்ரவர்த்திக்கையும ஸ்வாதிகார பஞ்ஜகமாகையாலே விஹித விஷயத்திலும நிவருத்தி வேணுமென்ற தாயத்து. (101)

102. தாமபுத்த்யா ப்ரவருத்திக்கு பரிஹாரம பண்ணுவது போக்யதா புத்த்யா ப்ரவருத்திதான தவிர்ந்தாலன்றோ, அநாதிகாலம வாஸனை பண்ணிப்போந்த விஷயங்களில நிவருத்திதான பிறக்கும்படி யெங்ஙனே யென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (இதுதான சிலர்க்கு) என்று தொடங்கி.

102. இதுதான சிலர்க்கு அழகாலே பிறக்கும, சிலர்க்கு அருளாலே பிறக்கும; சிலர்க்கு ஆசாரத்தாலே பிறக்கும.

(சிலர்க்கழகாலே பிறக்கும) என்றது—ஸாக்ஷாத்க்ருத பகவத் தத்வரான பக்திபாரவச்ய ப்ரபந்நர்க்கு, ஸகலஜநமோஹநமான தத்விக்ரஹ ஸௌந்தர்யாநுபவத்தாலே பிறக்கு மென்றபடி. (சிலர்க்கருளாலே பிறக்கும) என்றது—தத்வ யாதாத்ம்ய தர்சிகளான ஜ்ஞாநாதிக்ய ப்ரபந்நர்க்கு, "நம்மை யநுபவிக்க இட்டுப் பிறந்த வஸ்து இப்படி அந்யவிஷய ப்ரவணமா யனர்த்தப்படுவதே" என்று அந்ய விஷய ஸங்கமறுமபடி யவன பண்ணும பரம க்ருபையாலே பிறக்குமென்றபடி. (சிலர்க்கு ஆசாரத்தாலே பிறக்கும) என்றது— அளவிலிகளான அஜ்ஞாந ப்ரபந்நர்க்கு, அவதாரங்களில *மாயாதாநாஞ்ச லோகஸ்ய காந்தா காராயிதாச ஸ:* என்கிறபடியே— அதிகாராநுகுணமாக வனுஷ்டித்தும ஆசரிப்பித்தும போந்தபடிகளையும், அளவுடையரான பூர்வாசார்யர்களாசரித்துப் போந்தபடிகளையும, சாஸ்த்ரமுகத்தாலு மாசார்யோபதேச க்ரமத்தாலுமறிகையாலே, அவ்வாசாரங்களை யநுஸந்திக்க வநுஸந்திக்கப் பிறக்கு மென்றபடி. (102)

103. இவ்வோஹேதுக்களால பிறக்கும க்ரமத்தை, தஜ்ஜிஜ்ஞாஸு ப்ரச்நத்தை யநுவதித்துக்கொண்டருளிச் செய்கிறார் (பிறக்கும க்ரமம) என்று தொடங்கி.

103. பிறக்கும் க்ரமமென் என்னில்; அழகு அஜ்ஞாநத்தை விளைக்கும, அருள் அருசியை விளைக்கும்; ஆசாரம அச்சத்தை விளைக்கும

(அழகு அஜ்ஞாநத்தை விளைக்கை யாவது)—சித்தாபஹாரியாகையாலே, விஷயாந்தரத்தனை யொன்றாக வறியாதபடி யாக்குகை. (அருள அருசியை விளைக்கை யாவது)—விஷயாந்தரங்களைக் காணும்போது அருவருத்துக் காரித்துமிழ்ந்துபோம் படி பண்ணுகை. (ஆசாரம அச்சத்தை விளைக்கையாவது)—ருசிசெல்லச்செய்தே, அவர்களாசரித்தபடி செய்யாதபோது நமக்கநர்த்தமே பலிக்கும என்று; விஷயஸா

சத்திலிழிய நடுஙகுமபடி பண்ணுகை. ஆகையால இகக்ரமத்திலே பிறககுமென்று கருத்து ... ... .... ... ... .. (103)

104. இநத த்ரிவித பரபந்நாககும ஸௌந்தர்யாதி த்ரயத்திலொரொன்றே விரகதி ஹேதுவாகச சொலலுகிறதுககு நிதாநத்தை யருளிச்செய்கிறார் (இவையும ஊற்றததைபபற்றச சொலலுகிறது) என்று.

### 104 இவையும் ஊற்றத்தைபபற்றச சொல்லுகிறது

அதாவது —(அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர்) இத்யாதியால் — இவர்களுககுச் சொன்ன ப்ரபத்தி ஹேதுககளானவை ஒரொன்றி னூற்றததைப்பற்றச் சொன்னப்போலே, (அழகாலே பிறககும) என்று தொடஙகிச்சொன்ன விரகதி ஹேதுக்களான விவையும ஒரொன்றி னூற்றத்தைப பற்றச்சொலலுகிறதென்கை. இத்தால —பகதிபாரவசய ப்ரபந்நர்ககு, அருசிககடியான கருமையும அசசததுககடியான ஆசாராநுஸநதாநமு முணடா யிருககச்செய்தே, பகவத விகரஹ வைலக்ஷண்யத்தை ஸாக்ஷாத்கரித தநுபவிககுமவர்களாகையாலே வடிவழகிலே எப்போதும நெஞ்சு பற்றிககிடககையால விஷயாந்தரங்களை யறியாதபடி பண்ணுமவவழகே அவர்கள பககலுறைத்திருககும, ஜ்ஞாநாதிகய ப்ரபந்நர்ககு, அஜ்ஞாநஹேதுவான விகரஹ ஸௌநதர்யததை ஆசசாவதாரத்திலே கண்டநுபவிககையும பயஹேது வான ப்ராகதந ஸிஷ்டாசாராநு ஸநதாநமு முணடாயிருககச்செயதே, அவன் தன கருமையை முழுமடைசெய தெடுத்த விஷயஙகளாகையாலே அருசிககடியான கருமை யவாகளபகக லுறைததிருககும. அஜ்ஞாநப்ரபநநர்ககு, ஆசசாவதாரத் திலே காதாசித்கமாக விகரஹ ஸௌந்தர்யாநுபவமும அருசிஹேதுவான கருமை யும ஒருமர்யாதை யுணடாயிருககச செயதே, பூர்வர்க ளாசாரஙகளையே பலகாலம அநுஸநதித்துக கொணடு போருகையாலே பயஹேதுவான வவவாசாரஙகள அவர் கள நெஞ்சிலே யூன்றியிருககும. இவவூற்றத்தைப்பற்ற ஒரொன்றே விரகதி ஹேதுவாகச சொலலுகிற தென்றதாய்த்து. (104)

105 விஷய வைலக்ஷண்யாதிசயத்தாலே விஷயாநத ராஜ்ஞாநம விளைய வும கூடும ஆப்தரான ஸிஷ்டாகளுடைய வாசாராநுஸந்தாநத்தாலே அவிஹித விஹித விஷய ஸ்பர்சததி லசசம விளையவும கூடும, அநாதிகால மாசைப்பட்டு மேல விழுநது போந்த விஷயஙகளிலே யருசி பிறககை அகடிதமிறே; அப்படிப்பட்ட அருசிதானவனருளாலே பிறககுமபோதைககு அபேக்ஷிதாமசத்தை யருளிசசெய் கிறார் (அருசி) என்று தொடஙகி.

### 105. அருசி பிறக்குமபோதைக்கு தோஷதாசந மபேக்ஷிதமாயிருக்கும்.

(தோஷ தர்சநமாவது)—போகயதா புத்த்யா பரிஷ்வஙகிககிற யோஷித்தேஹம *மாம்ஸாஸ்ருக் பூயவிண் மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்தி ஸமுதாயமாய் சர்மாவகத்தமாய துர்கந்தியாயிருககுமபடியையும், போகநதானலபமாய அஸதிரமாய துகக மிசரமாய் அநர்த்தாவஹமா யிருககுமபடியையும ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களாலே தர்சிககை.

106. ஆனால அதுவோ பின்னை அருசிஹேது வென்ன அருளிசசெயகிறார் (அது) இத்யாதியால்.

106. அது ப்ரதாநஹேது வன்று.

(ப்ரதாந ஹேதுவன்று) என்றது—அதுவுமொரு ஹேது, முக்கியஹேதுவன்றென்றபடி. ... ... ... ... ... ... (106)

107. ஆனால் ப்ரதாந ஹேதுதானேதென்ன (அப்ராப்ததையே ப்ரதாந ஹேது என்கிறார்.

107. அப்ராப்ததையே ப்ரதாநஹேது.

(அப்ராப்ததையாவது)—பகவ தேகபோகமான ஸ்வரூபத்துக்குச் சேராததாயிருக்கை. இத்தால—அருளருசியை விளைக்குமிடத்தில தோஷ தர்சநாதிகளைப் பண்ணுவித்து விளைப்பிக்கையால, தோஷ தர்சநமும அப்ராபதி தர்சநமும ததவனித்துக்களுடைய அருசிக்கு கௌணமுக்கய ஹேதுக்களா யிருக்கு மென்றதாயத்து.

108. *மாற்பால் மனஞ் சுழிப்ப* இத்யாதிப்படியே ப்ராவண்ய விஷயமாகச் சொன்ன பகவத் விஷயத்தில குணங்கண்டிழிகிறவோபாதி, இதுவும தோஷங் கண்டே விடுகிறதானாலோ வென்ன (பகவத் விஷயத்தி லிழிகிறதும குணங் கண்டன்று) என்கிறார்.

108. பகவத்விஷயத்தி லிழிகிறதும் குணங்கண்டன்று, ஸ்வரூபப்ராப்த மென்று.

ஆகிலெத்தாலேயென்ன (ஸ்வரூப ப்ராப்த மென்று) என்கிறார். அதாவது—பகவத் விஷயத்தைப் பற்றுகிறது அத்தலையில் கல்யாண குணங்களடியாக வன்று. இவ்வாத்மாவுக்கு வகுத்த விஷயமென்னுமத்தாலே என்கை. .. ... (108)

109. கீழ தாமருளிச் செய்தபடியே யர்த்தத்தை யங்கீகரியாதபோதைக்கு விரோதங் காட்டுகிறார் (இப்படி) என்று தொடங்கி.

109. இப்படி கொள்ளாதபோது, குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷய ப்ரவ்ருத்தியும, தோஷாநுஸந்தாநதசையில் ஸம்ஸாரத்தில ப்ரவ்ருத்தியும் கூடாது.

(இப்படி கொள்ளாதபோது) என்றது—இதர விஷயங்களி லருசிக்கு ஹேது அப்ராப்ததை; பகவத் விஷயத்தில் ருசிக்கு ஹேது ப்ராப்ததை என்று கொள்ளாதே, தோஷ தர்சநத்தையும குண தர்சநத்தையும இவற்றுக்கு ஹேதுவாகக் கொள்ளும போதென்றபடி. (குண ஹீநமென்று நினைத்த தசையில் பகவத் விஷய ப்ரவ்ருத்தியாவது)—பிரிவாற்றாமை கரைபுரண்டு பெருவிடாய்ப்பட்டுத துடித்து அலமராநிற்க சடக்கென வந்து முகங்காட்டாமையாலே குண ஹீநமென்று சிந்தித்த தசையிலே, பின்னையும *அவனை யல்லல் தறியேன்* என்று அவன் பக்கலிலே அத்யபிநிவேசத்தைப் பண்ணுகை. (தோஷாநு ஸந்தாந தசையில ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியாவது)—மாதா பித்ராதிகளும் பார்யா புத்ராதிகளும ஜ்ஞாதிகளும பந்துக்களும க்ருஹ க்ஷேத்ராதிகளுமாய் சப்தாதி போகங்களை யநுபவித்திருக்கையாகிற ஸம்ஸாரத்தின் துக்க பஹுளத்வாதி தோஷத்தை ப்ரத்யக்ஷாதிகளாலே யறிந் தநுஸந்தியா நிற்கச் செய்தேயும், அதிலே அபிநிவேசம நடந்து செல்லுகை. இவை யிரண்டும கூடாதென்றபடி. அன்றிக்கே, (தோஷாநுஸந்தாந தசையில ஸம்ஸாரத்தில ப்ரவ்ருத்தியாவது)—தத்வ வித்துக்களான மஹர்ஷிகள தொடக்கமானார் ஸாராஸார விவேகவத்தயா விஷய தோஷாநுஸந்தாந முண்டாயிருக்கச்செய்தே, சாஸ்த்ர விஹித

தயா ப்ராப்தமென்கிற புத்தியாலே பண்ணுகிற ப்ரஜோத்பாதநாதிரூப ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியாகவுமாம். இப்படி கொள்ளாதபோதிவை கூடாதென்று விரோதங் காட்டுகையாலே இப்படி கொள்ளவேணு மென்னுமிடம் ஸதாபிக்கப்பட்டது. (109)

110. குண ஹீநமென்று நினைத்த தசையில பகவத் விஷய ப்ரவ்ருத்தி எங்கே கண்டதென்னவருளிச்செய்கிறார் (கொடியவெனனெஞ்சம) என்று தொடங்கி.

**110. *கொடிய வென்னெஞ்ச மவனென்றே கிடக்கும்* *அடியேன நான் பின்னு முன்சேவடி யன்றி நயவேன்* என்றுநீனருாகளிறே.**

அதாவது—*கடியன்* என்று தொடங்கி *அறிவரு மேனி மாயத்தன்* என்னு மளவும்—ஸ்வகார்யபரன, பிறர்நோ வறியாதவன், ஒருவர்க்கு மெட்டாதவன, வஞ்சகன, துர்ஜ்ஞேய ஸ்வபாவன என்று அவன் குண ஹாநியைசசொல்லி, இப்படி யிருந்தானாகிலும், அதிலோக க்ரூரமான வெனனெஞ்சு அவனையலலை தறியாதே யிருக்குமெனறும, வேமபுக கிட்டுப்பிறந்த புழு அந்த வேமபையே புஜிக்குமதொழிய கருமபைக் கண்டாலும விருமபாது, அப்படியே, *கடல்மல்லைக் கிடந்த கரும்பு* என்னுமபடி நிரதிசயபோக்யனானநீதானே வேமபுபோலே விரஸனானவனறும், த்வத நந்யார்ஹ சேஷ பூதனான நான எனக்கு வகுத்தசேஷியான உன் திருவடிகளை யொழிய வாசைப் படேனென்றும *மயர்வற மதிநல மருளப பெற்றவர்கள அருளிச் செய்யா நின்றார்களிறே எனகை. .... .... .... .... (110)

111. *குணை꞉ தாஸ்ய முபாகத꞉* என்றுரு மில்லையோவென்ன வருளிச்செய்கிறார் (குணகருத தாஸ்யத்திலும்) என்று தொடங்கி.

**111. குணகருத தாஸயத்திலுங்காட்டில் ஸ்வருபப்ரயுக்தமான தாஸயமிறே ப்ரதாநம்.**

(குணக்ருத தாஸயமாவது)—அவன் குணங்களுக்குத் தோற்றடிமையா யிருக்கை. (ஸவரூப ப்ரயுக்தமான தாஸ்யமாவது)—சேஷத்வைக நிருபணீயமான தன ஸவரூபத்தைப் பார்த் தடிமையாயிருக்கை. ஸவரூப மிப்படி யிருந்தாலும, குணாதிக விஷயமாகையாலே குண க்ருத தாஸ்யமு மிவ்விஷயத்திலே யநுவர்த்தியா நிற்கும; ஆகையிறே, சேஷத்வைக நிருபகரான இளையபெருமாள தாமப்படி அருளிச செய்ததும. ஆனாலும், குணக்ருதமானது ஔபாதிக மாகையாலே அப்ரதாநமாய், மற்றையது நிருபாதிகமாகையாலே ப்ரதாநமா யிருக்கும; அததைப்பற்ற விறே தத் ப்ராதாந்ய ப்ரஸித்தி தோற்ற வருளிச்செய்தது. .... .... (111)

112. இவ்வர்த்தத்துக்கு ஸமவாதமாக பிராட்டிவார்த்தையை ஸ்மரிப்பிக்கிறார் மேல (அநஸூயைக்கு) என்று தொடங்கி.

**112. அநஸூயைக்குப் பிராட்டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

அதாவது—அத்ரி பகவா னாச்ரமத்திலே பெருமாளெழுந்தருளி மஹர்ஷியையு மநுவர்த்தித்திருந்த வநந்தரம, தத்பத்நியான அநஸூயையைப் பிராட்டி சென்று அநுவர்த்தித்திருக்கிற வளவிலே அவள பிராட்டியைப் பார்த்து. *பந்துஜநத்தையும அபிமாநத்தையும் ஐச்வர்யத்தையும விட்டுப் பெருமாள பினனே காட்டிலேபோந்த விது தைவயோகத்தாலேயுமக்கு நன்றாகக் கூடிற்று, நகரஸ்தனாகிலுமாம, வநஸ்தனாகிலுமாம் நல்லவனாகிலுமாம தீயவனாகிலுமாம, ஸத்ரீகளுக்கு தைவம் பர்த்தாவேகிடீர்,

நீரிப்படி எப்போதும் பெருமாள் விஷயமாக வநுகூலித்துப் போரும என்ன; பிராட்டி, லஜ்ஜித்துக் கவிழ்தலை யிட்டிருந்து, எனக்குப் பெருமாள் பக்கல் பாவபந்தம் ஸ்வதः உண்டாயிருக்கச்செய்தே, அவர்தாம குணாதிகரா யிருக்கையாலே, என்னுடைய பாவபந்தத்தை குணநிபந்தநமே யென்றிருப்பர்கள் நாட்டார், அவ்வாச்ரயத்தை குணங்களோடு வ்யதிரேகித்துக்காட்ட வொண்ணாமையாலே நானவர்பக்க லிருக்கு மிருப்பை யறிவிக்கப் பெறுகிறிலேன், அவர் குணஹீநருமாய விரூபருமானவன்றும் நானவர்பக்க லிப்படி காணு மிருப்பது” என்றருளிச்செய்த வார்த்தை. .... (112)

113. இப்படி ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமே ப்ரதாநமாகில, சேஷி செய்த படி கண்டிருக்குமதொழிய, அநந்யோபாயத்வாதிகள் குலையும்படி யவ்விஷயத்தைக் குறித்துப் பண்ணுகிற ஸ்வபரவ்ருத்தி சேருமோ வென்கிற சங்கையை யநுவதிக்கிறார் (பகவத்விஷய ப்ரவ்ருத்தி) இத்யாதியால. அத்தைப் பரிஹரிக்கிறா (அதுக்கடி ப்ராவண்யம்) என்று தொடங்கி.

113. பகவத்விஷயப்ரவ்ருத்தி பின்னைச் சேருமோ வென்னில, அதுக்கடி ப்ராவண்யம; அதுக்கடி ஸம்பந்தம; அதுதான் ஔபாதிக மன்று; ஸத்தாப்ரயுக்தம

ப்ராவண்யமாவது—அதிமாத்ர ஸ்நேஹம. அந்த ப்ராவண்யத்துக்கடி விஷய வைலக்ஷண்யமன்றோ வென்ன, (அதுக்கடி ஸம்பந்தம) என்கிறார். (ஸம்பந்தமாவது)—சேஷசேஷிபாவம. அதுதான குணக்ருதமாயும வாராதோ வென்ன, (அதுதான ஔபாதிகமன்று, ஸத்தா ப்ரயுக்தம) என்கிறார். (ஸத்தா ப்ரயுக்தம) என்றது—இவ்வாத்மாவினுடைய ஸத்தையையே பிடித்துள்ளதொன்றென்கை. .... (113)

114. இத்தால கீழ்ப் பண்ணின சங்கைக்குப் பரிஹாரமானதே தென்ன வருளிச்செய்கிறா மேல வாக்யத்ரயத்தாலே.

114. அந்த ஸத்தை ப்ராவண்யகார்யமான அநுபவமில்லாதபோது குலையும், அது குலையாமைக்காக வருமவை யெல்லாம அவர்ஜநீயங்களுமாய் ப்ராப்தங்களுமாயிருக்கும; ஆகையாலே பகவத்விஷயப்ரவ்ருத்திசேரும்.

(அந்த ஸத்தை ப்ராவண்ய கார்யமான வநுபவ மில்லாதபோது குலையும) என்றது—அப்படிப்பட்ட ஸத்தைதான, ஸ்வப்ரயுக்த ஸம்பந்தமடியாய வருகிற ப்ராவண்ய கார்யமான பகவதநுபவ மில்லாதபோது க்ஷணகாலமும நில்லா தென்றபடி. (அது குலையாமைக்காக வருமவை யெல்லாம அவர்ஜநீயங்களுமாய் ப்ராப்தங்களுமா யிருக்கும) என்றது—அந்தஸத்தை யழியாமைக்குறுப்பாக வருகிற மடலெடுக்கை முதலான ஸகல ப்ரவ்ருத்திகளும, பகவதநுபவமொழியத் தரிப்பில்லாமையாலே தவிருவோமென்றாலும தவிரப்போகாதவையுமாய், எல்லாம சேஷிக அதிசயகரங்களாகையாலே ஸ்வரூப ப்ராப்தங்களுமா யிருக்குமென்றபடி. ஆகையாலே பகவத்விஷயப்ரவ்ருத்தி சேரும) என்று—உக்தத்தை ஹேதுவாக்கிக்கொண்டு ப்ரக்ருத சங்கையைப் பரிஹரித்தத் தலைக்கட்டுகிறா. .... .... (114)

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம.

ஜீயர் திருவடிகளே சரணம. ப்ரதம ப்ரகரணம் ஸமபூர்ணம்.

## த்விதீயப்ரகரணம்

### ப்ராபகாந்தரபரித்யாக விவரணம்

115. *இதரவிஷயபரித்யாகத்துக்கும பகவத்விஷய பரிகரஹத்துக்கும ப்ர தாநஹேதுககளினனதெனருர் கீழ; இநத ப்ரஸஙகத்திலே, இதரோபாய பரித் யாகத்துககு ப்ரதாநஹேதுவினனதெனகிருர் மேல (ப்ராபகாநதர பரிதயாகத்துக கும) எனறு தொடஙகி.*

**115. ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கும அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதான ஹேது.**

*ப்ராபகாநதரங்களாவன—ப்ரபத்த்யுபாயததை யொழிநத உபாயஙகள. (அஜ் ஞாநாசகதிகளனறு) எனறது—அவறறையறிகைககும அநுஷ்டிக்கைககுமீடான ஜ்ஞாந சகதிகளிலலாமை தத்யாகத்துக்கு ப்ரதாநஹேதுவனறு என்றபடி. ஸ்வரூப விரோதமே ப்ரதாநஹேது) எனறது—பகவததயநதபாரதநதர்யமாகிற ஸ்வரூபத் துககுச் சேராதெனனுமதுவே முககயஹேதுவெனறபடி. இததால்—"அஜ்ஞாநத தாலே ப்ரபநநர்" என்கிறவிடத்தில சொனன அஜ்ஞாநாசகதிகள முக்கயஹேது வனறெனனுமிடம சொலலுகிறது. அஜ்ஞாநாசகதிக ளடியாக விடில் ஜ்ஞாநசகதிக ளுணடாகில பரிகராஹயமாமிறே, ஸ்வரூபவிரோதமென்று விடடாலிறே மறுவலிடா தொழிவது.* .... ... .... .... .... (115)

116. *இப்படி ப்ராபகாநதரத்தை விரோதியெனறு தளளலாமோ, அதுவும மோக்ஷோபாயமாயனறோ போருகிறது, அது பினனை யார்கது உபாயமெனன வருளிசசெய்கிருர் (ப்ராபகாந்தரம) எனறு தொடஙகி.*

**116. ப்ராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம்.**

*(அஜ்ஞர்க் குபாயம) எனறது—ஸ்வரக்ஷணே ஸ்வயத்ந கர்தாஸஹமான ஸ்வரூபத்தை யுளளபடி தர்சிபபிக்கைககீடான ஜ்ஞாநமிலலாதவர்களுககு உபாயமா யிருக்கு மெனறபடி.* ... .... .... .... .... (116)

117. *ஆனல், ஜ்ஞாநிகளுககு இது எஙஙனேயெனன (ஜ்ஞாநிகளுககபாயம) எனகிருர்.*

**117. ஜ்ஞாநிகளுக்கு அபாயம்.**

*அதாவது — ஸ்வரூபயாதாதமயஜ்ஞாநமுடையவர்களுககு அபாயமாயிருக்கு மென்கை.* .... .... .... .... ... .... (117)

118. *இவர்களுககு அபாயமாவானெனனென்ன (அபாயமாய்த்தது ஸ்வரூப நாசக மாகையாலே) எனகிருர்.*

**118. அபாயமாயிற்றது ஸ்வரூபநாசக மாகையாலே.**

*ஸ்வரூபமாவது—அத்யந்த பாரதந்த்ர்யம; இதுக்கு ஸ்வயத்நரூபமானவது நாசகமிறே.* ... ... ... ... ... ... (118)

119, தத்பாயத்வததை ஜ்ஞாநிநாமகரேஸரரான வாழுவார் பாசுரத்தாலே தர்சிப்பிக்கிறார் (நெறிகாட்டி) என்று தொடங்கி.

119. "நெறிகாட்டி நீக்குதியோ" என்றாரிறே.

அதாவது—உன்னையொழிய வேறோருபாயததைக் காட்டி உனபக்கலினின்றும் அகற்றப்பார்க்கிறாயோவெனகையாலே, பராபகாந்தராபாயத்வம ஸித்தமிறே என கை. நீககுகையாவது—பரதந்த்ரமான வஸ்துவை ஸ்வதந்த்ரகருத்யமான உபாயா நுஷ்ட்டாநததிலே மூட்டித் தனககு அசலாககுகையிறே. ... ... (119)

120. இதினுடைய ஸ்வரூபநாசகத்வப்ரயுக்தமான தூஷணவிசேஷங்களை யருளிச்செயகிறா (வர்த்ததே) இத்யாதி வாக்ய தவயத்தாலே.

120. "வாத்ததே மே மஹத் பயம" என்கையாலே பயஜநகம; "மா சுச:" என்கையாலே சோக ஜநகம்.

அதாவது—*காலேஷ்வபிச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாசயுத, சரீரேச கதௌசாபி வர்த்ததே மே மஹத் பயம* என்று—உபாயாந்தராநுஷ்ட்டாநத்துக்கு யோக்யமான கால தேச தேஹ விஷயமாகவும, உபாயாந்தரஙகள் தன்விஷயமாகவும எனக்கு மஹாபயம வர்த்தியாநின்றதென்கையாலும; உபாயாந்தர ச்ரவணாநந்தரம் அர்ஜுநனுக்கு சோகம்பிறக்க, ஸ்வரூபாநுரூபோபாயததை யுபதேசித்து *மாசுச:* என்று சோகாபநோதநம பண்ணியருளுகையாலும ஸ்வரூப விரோதியான ப்ரா பகாந்தரம ஜ்ஞாநிகளுக்கு பயஜநகமுமாய சோகஜநகமுமா யிருக்குமெனகை. (120)

121. கீழ்ச்சொன்னபடியே அர்த்தத்தை அங்கீகரியாதவளவில் விரோதங் காட்டுகிறார் (இப்படி கொள்ளாதபோது) என்று தொடங்கி.

121. இப்படி கொள்ளாதபோது ஏதத்ப்ரவருத்தியில் ப்ராயசசித்தவிதி கூடாது.

(இப்படிகொள்ளாதபோது) என்றது—ஸ்வரூப நாசகமென்று கொள்ளாத போதென்றபடி. (ஏதத் ப்ரவருத்தியில பராயசசித்தவிதி கூடாது) என்றது—*ஸகருதேவஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம தாரயேந நரம, உபாயாபாய ஸமயோகே நிஷ்டயா ஹீயதே அநயா; அபாயஸமப்லவே ஸத்ய: ப்ராயச்சித்தம ஸமாசரேத். ப்ராயசசித்திரியம ஸாத்ர யத்புநச சரணம வரஜேத்; உபாயாநாமுபாயத்வ ஸ்வீகா ரேப்யேததேவஹி* என்று ப்ரபந்நனுக்கு ப்ராமாதிகமாக உபாயாந்தர ப்ர வ்ருததி வந்த காலத்தில, அபாய ப்ரவருத்தியிலபோலே புந:ப்ரபதநரூபப்ராயசசித் தததை விதிககக கூடாதென்கை. புந:ப்ரபதநமாவது—பூர்வப்ரபதந ஸ்மரணமு; புந:ப்ரயோகமன்று. ... ... ... .. ... (121)

122. இப்படி ஸ்வரூப நாசகமான உபாயாந்தரத்தினுடைய அத்யந்த நிஷித் தத்வத்தை அபியுக்த வசநத்தாலே தர்சிப்பிக்கிறார் (திருக்குருகைப்பிரான்பிள்ளான்) என்று தொடங்கி.

122. திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிக்குமபடி—மதிராபிந்துமிசரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலமபோலே அஹங்காரமிச்ரமான வுபாயாந்தரம்.

திருக்குருகைப்பிரான பிள்ளானுகிறார்—ஸர்வஜ்ஞரான பாஷ்யகாரர் திருவடிகளிலே ஸேவித்து ததபிமத விஷயமாய ஸகலசாஸத்ரங்களையுமாராய்ந்தறுதியிட்டிருக்குமவ ராகையாலே, ஆப்த தமரா யிருக்குமவரிறே. (பணிக்குமபடி) என்றது - அருளிச்செயயும ப்ரகாரமென்றபடி. (மதிரையாவது) - அத்யந்த நிஷித்த த்ரவயமாய் ஸ்வஸ்பர்ச லேசமுள்ள வஸ்துக்களையும தன்னைப்போலே நிஷித்தமாக்குமதிறே; இததை அஹங்காரத்துக்கு தருஷ்டாந்த மாக்குகையாலே - அதினுடைய அத்யந்த நிஷித்ததவமும; ததஸ்பாசலேசமுள்ள வஸ்துவும தத்வத் நிஷித்தமென்னுமிடமும தோற்றுகிறது; (சாதகும்பமாவது) - ஸுவர்ணம. (தத்மயகும்பம்) என்றது - உள்ளு த்ரவயாந்தரமாய் ஸுவர்ணம மேலபூசசா யிருக்கையன்றிக்கே, அதுதானே உபாதானமாகப பணணின குடமென்றபடி, இத்தால - பாத்ரசுத்தி சொலலுகிறது. (தத்கததீர்தத ஸலிலம்) என்கையாலே - அதுக்குள்ளிருக்கிற ஜலத்தின பாவநத்வம சொல்லுகிறது. (அதுபோலே அஹங்கார மிசரமான உபாயாந்தரம்) என்கையாலே இங்கும பாத்ர சுத்தியும தத்கத பதாதத சுத்தியும சொலலவேணும. அதாவது * ஆதமா ஜ்ஞாநமயோமலஃ * என்கிற ஸ்வதோ நிர்மலதையாலும பகவதநந்யார்ஹ சேஷதையாலும பரிசுத்தமாயிறே பகத்யாசரயமான வாத்மவஸ்து விருப்பது, தத்கத பக்தியும் பகவதேகாகாரதயா பரிசுத்தையிறே, அஹங்காரம கலசிறறிலலையாகி லொரு குறையிலலையே ஆக, இத்தால சொலலிற்றாயத்த தென்னென்னில்; ஸுவர்ணபாத்ர கதமான தீர்த்தஜலம, பாத்ரசுததியுமுண்டாய்த தானும் பரிசுத்தமாயிருக்க, ஸுரா பிந்து மிசரதையாலே - நிஷித்தமாமாப்போலே, ஸ்வதோநிர்மலத்வாதிகளாலே பரிசுத்தமான ஆதமவஸ்துக்கதையாய பகவதேகவிஷயதயா பரிசுததையாயிருக்கிற பக்திதான, ஸ்வயதந மூலமான வஹங்கார ஸ்பர்சத்தாலே ஜ்ஞாநிகளங்கீகரியாதபடி நிஷித்தையா யிருக்குமென்றதாயத்து. (பணிக்குமபடி) என்றதுக்குச சேர, வாக்யத்தின முடிவிலே, என்று என்கிற விததையும கூட்டி நிர்வஹிப்பது. .... (122)

123. இன்னமு மிதுக்குப் பலவிஸத்ருசத்வ மென்பதொரு தூஷணமுண்டென்கிறார் (ரதநத்துக்கு) என்று தொடங்கி.

**123. ரதநத்துக்குப் பலகறைபோலேயும் ராஜயத்துக்கு எலுமிச்சம்பழம் போலேயும பலத்துக்கு ஸத்ருசமன்று.**

அதாவது - த்வீபாந்தரங்களிலே சிலர் பலகறையை ஆபரணமாகப் பூண்கையாலே, பலகறையைக் கொடுத்தவர்களுக்கு ரத்நததைக் கொடுப்பர்கள்; உதாரரான ராஜாக்கள ராஜயார்த்தியாய் வநது ஒரெலுமிச்சமபழததைக் கொடுத்தவனுக்கு ராஜ்யத்தைக கொடுப்பர்கள, இப்படி கொடுபபர்களென்றால, மஹார்க்கமான ரத்நததுக்கும மஹா ஸமபத்தான ராஜ்யததுக்கும, பலகறையு மெலுமிச்சமபழமும ஸத்ருசஸாதநமலலாதாப்போலே, *பகத்யா லப்யஸ் த்வநந்யயா* *பகத்யா த்வநந்யயா சக்யஃ* என்கிறபடியே - பக்தி சபலனுய பரமோதாரனுன ஈச்வரன இவன் பக்கல பக்தி மாத்ரமே பற்றாசாக பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷத்தைக் கொடுத்தாலும, பலத்துக்கிது ஸத்ருச ஸாதநமன்றென்கை. ... ... ... (123)

124. ஆனால விஸத்ருசமான பலகறையையு மெலுமிச்சமபழத்தையு முபஹாரமாகக்கொடுதது, ரத்நத்தையும ராஜ்யததையும பெறுகிறவர்களதான பெறுகிற

படியென், அவவோபாதி யாகிறதென்ன ; அதுதனக்கும் யோக்யதை யில்லையென்கிறார் (தான) என்று தொடங்கி.

124. தான தரித்ரனாகையாலே தனக்குக் கொடுக்கலாவதொன்றில்லை.

அதாவது-அங்கு தானும் தனக்குரியனாய் தனக்கென்ன வொரு பலகணிறையும் எலுமிச்சம் பழமுமுண்டாகையாலே அது செய்யலாம், இங்கு அப்படியன்றிக்கே * யானே நீ என்னுடைமையும் நீயே * என்கிறபடியே - ஆத்மாத்மீயங்களிரண்டும் அங்குத்தையதாய், தனக்கென்ன ஒன்றுமில்லாத அகிஞ்சநனாகையாலே, பேற்றுக்கு ஹேதுவாக அவன் விஷயத்தில் தனக்கு ஸமர்ப்பிக்கலாவதொன்றுமில்லை என்கை.

125. கோதானத்தில் பிதாவுக்குப் புத்ரன் தக்ஷிணை கொடுக்குமாப்போலே, அவன் தந்ததுதன்னை அவனுக்குக் கொடுத்தாலோவென்ன வருளிச்செய்கிறார் (அவன்) என்று தொடங்கி.

125. அவன் தந்தந்தைக் கொடுக்குமிடத்தில், அடைவிலே கொடுக்கில் அநுபாயமாம், அடைவுகெடக் கொடுக்கில் களவு வெளிப்படும்.

(அவன் தந்தத்தைக் கொடுக்கையாவது) *விசித்ரா தேஹ ஸம்பத்தி ரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்த பாதாதி ஸம்யுதா* என்றும், *அந்நாள் நீ தந்த வாக்கை* என்றும் சொல்லுகிறபடியே—அடியிலே அவன் தந்த கரணகளேபரங்களை *மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு* என்றும் *ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா:* என்றும் சொல்லுகிறபடியே த்யாநார்ச்சந ப்ரணாமாதிகளாலே தச்சேஷமாம்படி பண்ணுகை. (அடைவிலே கொடுக்கையாவது)—ததீயமென்னும் புத்தியாலே ஸமர்ப்பிக்கை. இப்படி கொடுக்கில் (அநுபாயமாம்) என்றது—அவனதை யவனுக்கே கொடுத்தவித்தனை யொழியத் தானொன்று கொடுத்ததாகாமையாலே, அது பேற்றுக்கு ஸாதநமாகா தென்றபடி. (அடைவுகெடக் கொடுக்கையாவது)—மதீயமென்னும் புத்தியாலே ஸமர்ப்பிக்கை. இப்படி செய்யில் (களவு வெளிப்படும்) என்றது—பகவத் த்ரவ்யாபஹாரம் ப்ரகாசிக்கு மென்றபடி. *ராஜமஹேந்த்ரனபடியை ரஹஸ்யத்திலே களவுகண்டு ஓலக்கத்திலே கொடுக்குமாப்போலேயிறே இவன் கொடை. .... (125)

126. இன்னமு முபாயாந்தரத்துக்கொரு தூஷணம் சொல்லுகிறார் (பர்த்ரு போக) இத்யாதியாலே.

126. பர்த்ருபோகத்தை வயிறு வளர்க்கைக்கு உறுப்பாக்குமாபோலே இருவர்க்கும் அவத்யம்.

அதாவது—பார்யையானவள் ஸ்வயம் ப்ரயோஜநமான பர்த்ருபோகத்தை ஸ்வோதர போஷணத்துக்கு ஸாதநமாக்கிக்கொள்ளுமளவில், தன்னை பார்யையாக விரும்பின பர்த்தாவுக்கும் தத்பார்யையென்று பேரிட்டிருக்கிற தனக்கும் அவத்யமா மாப்போலே, பகவத் வைலக்ஷண்யாநுபவத்தாலே விளைந்த போக ரூபையான பக்தியை மோக்ஷஸாதநமாக்குமளவில் தன்னை சேஷபூதனாக விரும்பித் தன்னோடே கலந்து பரிமாறின ஈச்வரனுக்கும் தச்சேஷபூதனென்று பேரிட்டிருக்கிற தனக்கு

மவத்யமாய்த் தலைகட்டுமெனகை. *ராதரி பர்த்தாவோடே ஸம்ச்லேஷித்து விடிவோறே கைக்கூலி தரவேணும் என்று வளைக்குமாப்போலே, பகதியை யபாயமாகக் கொள்ளுகை* என்றிறே பிள்ளானு மருளிச்செயதது. .. .... (126)

127. இப்படி ஸ்வரூபவிரோதாதி தோஷ துஷ்டமான வித்தை, ஹிதாநுசாஸநம் பண்ணுகிற வேதாந்தங்கள் *ஓமித யாத்மாநம த்யாயத* *ஆத்மாநமேவ லோக முபாஸீத* *ஆத்மாவா அரே த்ரஷ்டவ்யச் ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதிந்யாஸிதவ்ய:* என்று இசசேதநனுககு மோக்ஷோபாயமாக விதிககிறதுக்கு நிதாந மருளிச்செய்வதாக, தஜ்ஜிஜ்ஞாஸு ப்ரசநத்தை யநுவதிககிறார் (வேதாந்தங்கள்) என்று தொடங்கி.

127. வேதாந்தங்கள் உபாயமாக விதிக்கிறபடியென் என்னில்;

128. தந்நிதாநந்தன்னை யருளிச்செய்கிறார் (ஔஷதஸேவை) இத்யாதியாலே.

128. ஔஷதஸேவை பண்ணுதவர்களுக்கு அபிமத வஸ்துக்களிலே அந்தைக் கலசியிடுவாரைப்போலே ஈசவரனைக் கலநது விதிக்கிறவித்தனை.

அதாவது—அத்யந்தருகணராயத் திரியாநிற்கசசெய்தே அத்தை அவிளம்பேந போக்குமாப்தமான மஹெளஷதததை ஸேவிககச்சொன்னு லதுகநிசையாத பால புத்ராதிகளுககு அவர்களாசைப்பட்டு விநியோகங்கொளளும வஸதுககளிலே அந்த ஔஷதத்தைக் கலசியிடும் வத்ஸலரான மாத்ராதிகளைப்போலே, சீக்ரமாக ஸம்ஸார வயாதியைத் தீர்க்கும் ஸித்தோபாயமாகிற *நச்சுமாமருந்தை ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பூர்வகமாக ஸேவிககசசொலலி முதலிலே யுபதேசித்தால், அநாதியாய் வருகிற ஸ்வயதந வாஸநையாலே அதுகநிசையாத சேதநரையும விடமாட்டாமையாலே அவர்களுக கபிமதமான ஸவயத்நரூபமாயிருககிற உபாஸநத்திலே தநங்கதவேந ஸித்தோபாயமான ஈச்வரனைக கலந்து தாத்ருசமான உபாஸநததை யவர்களுககு மோக்ஷோபாயமாக விதிககிற விததனையென்கை. த்ருஷ்டாந்தத்தில் அபிமத வஸது வ்யாதிஹரமன்றியே தநமிச்ரமாக ப்ரயோகிதத ஔஷதமே வ்யாதி ஹரமாகிறாப்போலே, தார்ஷ்டாநதிகத்திலும, உபாஸநமன்றிக்கே தந் மிச்ரனை ஈச்வரனே யுபாயமென்னுமிடம ஸமபரதிபநநம். ஆவயவுதாலேந ஸேவிககுமளவில் அவிளமபேந வயாதியைப்போககும ஔஷதம் அபிமத வஸ்து மிச்ரமானபோது விளமபேந கார்யகரமாகிறாப்போலே யாய்த்து, உபாஸந மிச்ரனானபோது ஈச்வரன் விளமப்ய பலப்ரதனாகிறதும. ... ... ... ... (128)

129. இனி இப்படி யிதுதன்னை விதித்தது கீழ்நின்ற நிலையைக் குலைத்து மேலே கொண்டு போகைககாக வித்தனை யென்கிறார் (இத்தை) என்று தொடங்கி.

129. இதனை ப்ரவர்த்திப்பித்தது பராஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காக.

அதாவது—சாஸ்த்ரமாகிறது, *த்ரைகுண்ய விஷயா வேதா:* எனகிறபடியே பெற்ற தாய் அந்த பதிராதிகளான விகலகரணரோடு படுகரணரோடு வாசியற வத்ஸலையா யிருககுமாப்போலே, மாதாபித்ரு ஸஹஸ்ரங்களிற காட்டிலும் வதஸலதரமாகையாலே, தம:ப்ரசுரரோடு ரஜ:ப்ரசுரரோடு ஸத்வப்ரசுரரோடு வாசியற அவர்கள் அபதேப்ரவ்ருத்தராய் நசிககவிட க்ஷமமல்லாமையாலே, அவரவர்நடைய குணாநுகுணமாக புருஷார்த்தங்களையும் தத்ஸாதநங்களையு முபதேசித்து, கொள்கொம்பிலே

யேற்றுகைக்குச சுள்ளிக்கால நாட்டுவாரோபாதி, இவவோமுகங்களால தன்னுடைய தாதபர்யாம்சத்திலே யாரோபிக்கைக்காக ப்ரவர்த்திப்பிக்கிறதாகையாலே, சயேந விதி தொடங்கி ப்ரபத்தி பர்யந்தமாக வருமளவும, சேதநர் நின்றநின்றவளவுக கீடாக உத்தரோத்தர புருஷார்த்த ஸாதநங்களிலே ப்ரவர்த்திப்பித்து பூர்வபூர்வங்களை நிவர்த்திப்பிக்கக கடவதாயிருக்கும; ஆகையாலே இவவுபாஸநத்தை ப்ரவர்த்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்த்திப பிக்கைக்காக (பரஹிம்ஸை) என்றது—மேலான ஹிம்ஸை யென்றபடி, பரதேவதை, பரகதி என்கிற விடங்களில—மேலான தேவதை, மேலான கதி என்றர்த்தமாகிறப்போலே. அதாவது—ச்யேந விதிக்கு மேலாக விதிக்கப்பட்ட பசவாலமபநாதிகளைச சொன்னபடி. அதத்தை ஹிம்ஸையென்னலாமோ வென்னில; விஹித ஹிம்ஸை யென்னக்கடவதிறே. *அக்நீஷோமீயம பசுமாலபேத* என்கிற விடத்தில, ஆலமபசப்தம, *ஆலமப: ஸபாச ஹிம்ஸயோ:* என்கையாலே ஹிம்ஸா வாசியிறே. இததால—காமயகர்மததைச சொன்னபடி. (பூர்வ விஹித ஹிம்ஸை) என்று சயேந விதியைச சொல்லுகையாலும், தத்பரி விஹிதமான காமயமே இவ விடத்தில விவக்ஷிதம.

அன்றிக்கே, விஹிதமேயாகிலும, பகவச்சேஷத்வ ஜ்ஞாநபூர்வகமாக அநந்யப்ரயோஜநனாயக்கொண்டு அக்நீந்த்ராதி தேவதாநதர்யாமி ஸமாராதநமாகவே பண்ணும பச்வாலமபநாதியுக்த யாகாதி காமத்தைபபற்ற, ஸவதந்த்ரனாய்க்கொண்டு ஸவர்காதி பலஸாதநமாக அக்நீந்த்ராதி தேவதாமாத்ரங்களை யுத்தேசித்துப பண்ணும பசவாலமபநாதி யுக்த காமய காமம விசேஷஜ்ஞர்க்கு பரஹிம்ஸாப்ராய மென்னலாம படி யத்யந்த நிக்ருஷ்டமா யிருக்கையாலே, இவவாகாரத்தை யிட்டு அதுதன்னை பரஹிம்ஸை யென்றருளிச்செய்ததா ராகவுமாம. சாஸ்த்ரவிஹிதமுமாய் பகவத்தேக விஷயமுமா யிருக்கிற ப்ராபகாந்தரத்தை ஜ்ஞாநிகளுக்க கபாய மென்றவோபாதி, இதுவு மதிகாரி விசேஷத்தையிட்டுச சொல்லலாமிறே *அத பாதகபீதஸ் தவம* என்று—உபாயாந்தரத்தை பாதகமாகச சொல்லிற்றிறே தாமதேவதையும், புபுக்ஷுவுக்கு குபா தேயமான புண்யந்தானே முமுக்ஷுவுக்கு பாபசப்த வாசயமாகா நின்றதிறே. ஆக, எல்லாவற்றாலும—இவவிடத்தில காமய கர்மத்தையே சொல்லுகிறது இபபடி தான யோஜிக்கிறது—உபாஸந விதிக்கு நிவாத்யம காமய கர்மமாக விவர்தாமே பரந்த [படி] ரஹஸ்யத்திலே யருளிச்செய்கையாலே (129)

130. ஆனால இப்படி விதித்ததைப் பின்னை நிஷேதிக்கிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (இதுதான்) என்று தொடங்கி.

**130. இதுதான் பூர்வவிஹிதஹிம்ஸைபோலே; விதி நிஷேதங்களிரண்டுக்கும் குறையில்லை.**

(இதுதான) என்கிறது—கீழச்சொன்ன உபாஸநத்தை. (பூர்வ விஹித ஹிம்ஸையாவது)—*சயேநேநாபிசரந யஜேத* என்று ப்ரதமத்திலே விதிக்கப்பட்ட அபிசார கர்மம, அது, தம:ப்ரசுரராய நாஸதிகராயிருப்பாரைப்பற்ற விதிக்கப்பட்டு ஆஸ்திகராய் காரீர்யாதி காமய காமங்களிலே யிழிகைக்கு யோக்யரான ரஜ:ப்ரசுரரைப்பற்ற நிஷேதிக்கப்படுகிறப்போலே, உபாஸநமும ஸ்வாதந்த்ர் யாநயசேஷத்வ நிவ்ருத்திபூர்வகமாக பகவச்சேஷத்வத்திலே யூன்றுவிக்கைக்கு யோக்யரான ஸத்த்வப்ரசுரரைப்பற்ற விதிக்கப்பட்டு, பாரதந்த்ர்யஜ்ஞாநம பிறந்து பகவத்தேகோபாயத்

வத்திலே யூன்றுகைககு யோக்யரான பரமஸத்வ நிஷ்டரைப்பற்ற நிஷேதிக்கப் படவும் குறையில்லை. ... ... ... (130)

131. இப்படி நிஷேதிக்கப்படுமவையான விவைதன்னை அடியிலே யெதுக் காக விதித்ததென்ன வருளிச்செய்கிறார் (அத்தை) என்று தொடங்கி.

**131. அத்தை சாஸ்த்ரவிசவாஸத்துக்காக விதித்தது. இத்தை ஸ்வரூபவிச்வாஸத்துக்காக விதித்தது.**

அதாவது—*சடசித்த சாஸத்ர வசதோபா யோபிசார ச்ருதிঃ* என்கிறபடியே அபிசாரகர்மத்தை விதித்தது, சாஸதரத்தை யில்லையென்றிருககும நாஸ்திகனுககு சாஸத்ர விச்வாஸம் பிறக்கைககாக; உபாஸநத்தை விதித்தது, தன்னை ஸ்வதந்த்ர னென்றும அநயசேஷபூதனென்றும் ப்ரமித்துப் போந்த சேதநனுககு, அவை யிரண்டும வந்தேறி, பகவச்சேஷத்வமே நிலைநின்ற வேஷமென்று தன் ஸ்வரூபத்தில் விச்வாஸம் பிறககைககாக வென்கை. ... ... ... (131)

132. இப்படி யோரோ விச்வாஸத்துக்காக விதித்து நிஷேதித்தமை யொத் திருந்ததாகிலும, இவ்வுபாஸநத்தை விடாமல்பற்றி நின்றால அபிசார கர்மமபோலே க்ரூரமனறோ யிதுவென்ன; அதிலுங்காட்டில் க்ரூரமென்கிறார் (அது) என்று தொடங்கி.

**132. அது தோல்புரையே போம்; இது மர்மஸ்பர்சி.**

பரஹிம்ஸா ரூபமான அந்த அபிசார கர்மம், தேஹாத்மாபிமாநி செயலாய் விசிஷ்ட வேஷ விரோதியாய் அத்தால் வரும பலமும சில துக்காநுபவ மாத்ரமாய்க் கொண்டு மேலெழப் போகையாலே, (தோல்புரையே போம்) எனகிறது; அஹங்கார கர்ப்பமான விந்த வுபாஸநம், ஆத்ம ஜ்ஞாநம் பிறந்தவன் செயலாய நிஷ்கருஷ்டவேஷ விரோதியாய் பகவதேக பாரதந்த்ர்யரூப ஸ்வரூபநாசக மாகையாலே (மர்ம ஸ்பர்சி) என்கிறது. ... .. ... ... ... ... (132)

133. இவ்வளவே யன்று, இதுதான் துஷ்கரமுமென்கிறார் (இதுதான்) இத்யாதியாலே.

**133. இதுதான் கர்மஸாத்ய மாகையாலே துஷ்கரமுமா யிருக்கும்.**

இப்படி ஸ்வரூபவிரோதியாயிருககிற விவ்வுபாஸநதான், *யஜ்ஞேந தாநேந தபஸா அநாசகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி* *அவித்யயா மருத்யும தீர்த்வா வித்ய யாம்ருத மச்நுதே* *ஸர்வாபேக்ஷாச யஜ்ஞாதி ச்ருதே ரசவவத்* *கஷாய பங்கதே கர்மாணி ஜ்ஞாநந்து பரமா கதிঃ* *கஷாயே கர்மபிঃ பகவே ததோ ஜ்ஞாநம் ப்ர வர்த்ததே* *ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ ஜ்ஞாந ஸமாதிபிঃ, நராணும் க்ஷீண பாபாநாம க்ருஷ்ணே பக்திঃ ப்ரஜாயதே* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே காய க்லேசகரமான கர்மாநுஷ்ட்டாநத்தாலே ஸாதிககப்படுமதாகையாலே, அசக்தனை விவனல் செய்து தலைககட்ட அரிதாயிருக்குமென்கை. ஆக, (ப்ராபகாந்தர பரித் யாகத்துக்கும்) என்று தொடங்கி இவ்வளவாக உபாயாந்தர தோஷம் விஸ்தரேண ப்ரதிபாதிககப்பட்டது. ... .. ... ... ... (133)

## ப்ரஸங்காத் ப்ரபத்தி வைலக்ஷண்ய கதநம்

134. இப்படி ப்ராப்யாந்தரத்துக்கு அநேகம் குற்றங்களை ப்ரதிபாதித்தீர், ப்ரபத்த் யுபாயத்துக்கு ஒரு குற்றமுந்தானில்லையோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ரபத்த்யுபாயத்துக்கு) என்று தொடங்கி.

**134. ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை.**

(இக்குற்றங்கள்) என்று—ஸ்வரூப விரோதம் முதலாக துஷ்கரத்வ பர்யந்தமாகச் சொன்னவை யெல்லாவற்றையும் பராமர்சிக்கிறது. (ஒன்றுமில்லை) என்றது—ஒரு தோஷமும் இதினபக்கலில்லை என்றபடி (இக்குற்றங்க ளொன்றுமில்லை) என்கையாலே மற்றொரு குற்ற முண்டென்னுமிடம் தோற்றுகிறது. அதாவது—வஸ்துத: உபாயத்வம் தனக்கின்றிக்கே யிருக்கச்செய்தே ஆபாதப்ரதீதியிலே உபாய ப்ரதிபத்த் யர்ஹமாம்படி யிருக்கை (134)

135. இக்குற்றங்க ளிதுக்கில்லையென்னுமத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக இதினுடைய ஸ்வரூபோசிதத்வ ஸௌகரத்வங்களை யருளிச் செய்கிறார் (ஆத்ம யாதாத்ம்ய) இத்யாதியாலே.

**135. ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநகார்ய மாகையாலே ஸ்வரூபத்துக்கு உசிதமுமாய், "சிற்றவேண்டா" என்கிறபடியே நிவ்ருத்திஸாத்ய மாகையாலே ஸௌகரமுமாயிருக்கும்.**

இப்ப்ரபத்தி (ஆத்ம யாதாத்ம்யஞாந கார்யமாகையாவது)—திருமந்த்ரத்தில மத்யம பதத்தில சொல்லுகிறபடியே ஆத்மாவினுடைய யதாவஸ்தித வேஷமான பகவதத்யந்த பாரதந்த்ர்யத்தை யுணருகையாலே வந்ததாயிருக்கை. (ஸ்வரூபத்துக் குசிதமாகையாவது)—அந்த பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்துக் கநுரூபமாயிருக்கை. (சிற்றவேண்டா) என்கிறது, சிற்றுதல—சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை அதாவது ஒரு வ்யாபாரமும் பண்ணவேண்டா வென்றபடி. (நிவ்ருத்தி ஸாத்யமாகையாலே ஸௌகரமுமா யிருக்கும்) என்றது—*பகவத ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:* என்கிறபடியே—ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாலே ஸாதிக்கப் படும் தாகையாலே எளிதாகச் செய்யலுமா யிருக்குமென்கை

இவை யிரண்டையும் சொல்லவே, கீழ்ச்சொன்ன தோஷங்களொன்று மிதுக்கில்லை யென்னுமிடம் ஸித்தித்தபடி யென்னென்னில்; அபாயத்வ பயஜநகத்வ சோக ஜநகத்வ அஹங்கார மிச்ரதயா நிஷித்தத்வ அவத்யகரத்வங்கள ஸ்வரூபவிரோதித்வத்தைப் பற்றி வருகிறவை யாகையாலும பலவிஸதருசத்வம். இது பலஸாதந மன்றிக்கே ஸித்தோபாயமே பலஸாதநமாய் இது தத்வரணமாத்ரமாய அதிகாரி விசேஷணமாயிருப்ப தொன்றாகையாலே இதின பக்கல வருகைக் கவகாசமில்லாமையாலும், இவவாறு தோஷமுமிதுக்கில்லாமை (ஸ்வரூபத்துக் குசிதம்) என்றதிலே ஸித்தமாமிறே. கர்மஸாத்யதயா வரும் துஷ்கரத்வமில்லை யென்னுமிடம் (நிவ்ருத்தி ஸாத்யமாகையாலே ஸௌகரம்) என்றதிலே ஸுஸ்பஷ்டமிறே. ஆகையால, ஸ்வரூபௌசித்ய ஸௌகரத்வங்களாகிற விவையிரண்டு மிதுக்குண்டென்னவே, கீழ்ச்சொன்ன தோஷங்களொன்று மிதுக்கில்லை யென்னுமிடம் ப்ரகாசிதமாய்த்து. .... (135)

136. இப்படி உபாயமவனென றத்யவஸித்து ஸவப்ரவருததியில நிவருத்தனு யிருந்துவிட வமையுமோ, ததஸநதோஷாாததமாக விவன சில பசசையிடவேண்டா வோவென்ன வருளிச்செயகிறா (பூர்ணவிஷயம) என று தொடஙகி

136. பூாணவிஷய மாகையாலே பெருமைக்கீடாகப பசசையிட வொண்ணாது.

அதாவது—லோகததில பசசையிடுவார் அவவோவிஷயஙகளின் தரத்துக கீடாகவிறேயிடுவது, இஙகும பசசையிடப்பார்ககில லபபடியிடவேணுமிறே, அவன அவாப்தஸமஸ்தகாமதயா பரிபூாணனு யிருககுமவனுகையாலே, அவனுடைய வைப வத்துக கநுகுணமாக விவனுலொரு பசசையிடபபோகா தெனகை. .... (136)

137. ஆனால அவனுககிவனளவில ஸந்தோஷம விளையுமபடி யெனன வருளிசசெய்கிறார் (ஆபி முககய) இத்யாதியாலே.

137. ஆபிமுகக்யஸூசக மாதரத்திலே ஸநதோஷம் விளையும.

அதாவது—அநாதிகாலம *யாதானுமபறறி நீஙகும விரததததை யேறிட்டுக கொணடு தனபககல விமுகனுயபபோநத விவன, அஙகினைவு குலைநது தன பககலபி முகனுனமைககு ஸூசகமானதொரு வயாபாரமபெறற வளவிலே, * இத்தனை காலம விமுகனுயப்போநதவன இன றபிமுகனுகப பெறுவதே* என று அவன திருவுளளம மிகவுமுககு மென றபடி. ... .... .. . .... (137)

138. அவனப்படி யிருநதாலும; அவன பூர்த்தியானது, அகிஞ்சநரான நம மாலவனை யுகப்பித் தனுகபபோகாது என று இவன கைவாஙகுமபடி பண்ணுதோ வென்ன வருளிசசெயகிறார் (பூர்ததி) என று தொடஙகி.

138 பூாத்தி கைவாஙகாதே மேலவிழுகைக்கு ஹேது வித்தனை.

அதாவது—அவனுடைய அவாபதஸமஸதகாமத்வம, ஆசரயணைகமுகனுன விவன * நமமாலவனை யொருபடியாலும ஸந்தோஷிபபிககபபோகாது * என று ததாசரயணத்தினின றும மீளுகையன றிககே, நாமிடடதுகொணடு த்ருப்தனுக வேண் டாத பரிபூர்ணனுகையாலே, நமபககல பெறறதுகொணடு ஸநதோஷிககுமென று அபிநிவேசிததுப பறறுகைககுடலாமித்தனை யென்கை.

அன றிககே, அவன பூர்ததி அவனை யிப்படி ஸநதோஷிகக வொட்டுமோ, உபேக்ஷித்துக கைவாஙகப்பணணுதோவெனன; (பூர்த்தி) இதயாதியாலே யருளிச செய்கிறாராகவுமாம. அதாவது—அவனுடைய பூாததியானது, * இவன பசசையிட் டிலன் * என று அநாதரித்து அஙகீகாரத்தினின றும கைவாஙகாதே, *ஆபிமுககய ஸூசகமாத்ரததுககு மேறபட நமககிவன சில செயயவேணடுவதுணடோ* என று விருமபிக கைககொளளுகைக குடலாமித்தனை யெனகை. .. .... (138)

139. இப்படியவன அலபஸந்துஷட னெனனுமதுககு ப்ரமாணமுண்டோ வென்ன வருளிசசெயகிறார் மேல (பத்ரம புஷபம) என று தொடஙகி.

139. "பதரம புஷபம" "அந்யத பூாணுத்" "புரிவதுவும் புகை பூவே".

*பத்ரம புஷ்பம பலம தோயம யோ மே பகத்யா ப்ரயசசதி, ததஹம பகத்யுப ஹ்ருத மசநாமி ப்ரயதாத்மநः* என் று—பதரத்தையாகவுமாம, பலத்தையாகவுமாம,

ஜலத்தையாகவுமாம், யாவனொருவ னெனக்கு பக்தியாலே தருகிறான், அநந்யப்ர யோஜநதையாகிற சுத்தியோடே கூடின மநஸ்ஸையுடையனானவனுடைய வப்படிப் பட்ட பக்தியோடே தரப்பட்டவத்தை, அவாப்தஸமஸ்தகாமனா யிருக்கிற நான், அவன் ப்ரேமத்தாலே கலங்கித் தருமாப்போலே, வ்யாமோஹத்தாலே கலங்கி அடைவுகெட விநியோகங் கொள்ளுவன் என்று தானே யருளிச்செய்தானிறே.

*அநயத் பூர்ணாதபாம் கும்பா தநயத் பாதாவநேஜநாத், அநயத் குசல ஸம்ப் ரச்நாத் நேச்சசதி ஜநார்தந:* அதாவது—ஸ்ரீதூதெழுந்தருளுகிறபோது, த்ருத ராஷ்ட்ரன், *பாண்டவ பக்ஷபாதியா யிருக்கிற க்ருஷ்ணன் வாராநின்றான், அவனுக் குச் சில நாட்டையுங் கொடுத்துப் பொன்னையுங் கொடுத்து நமக்காக்கிக் கொள்ளு கிறோம்* என்றாப்போலே சிலவற்றைச் சொல்ல, நினைவுஞ் சொல்வு மொத்திராத வஞ்சகனான வவன் கருத்தை யறிந்த ஸஞ்ஜயன், *வருகிறவ னங்ஙனொத்தவனல்ல காண், அவனுக்கு வேண்டுவ திவ்வளவு* என்கிறான், அதாவது—தான் குடிக்கும் தண்ணீரை யொரு குடத்திலே நிறைத்துக் குளிரவைக்கக் கடவனே, அத்தை அவன் வருகிற வழியிலே வாசலிலே வைக்கவமையும், அதுக்குமேலொன்றும் வேண்டா; தன் க்ருஹத்திலே அதிதி வந்து புகுந்தால் காலைக் கழுவுவதாக ஸாமாந்ய சாஸ்த்ரம் விதித்து வைத்ததிறே, அவ்வோபாதி அவன் திருவடிகளை விளக்கவமையும், அவனை வாசிக்கு விசேஷித் தொன்றும் செய்யவேண்டா, நெடுந்தூரம் வந்தவனைக் குசலப் ரச்நம் பண்ணக்கடவதிறே, அவ்வோபாதி யோரினசொல் சொல்லவமையும், ஏற்ற மாக வொன்றும் வேண்டா, இவ்வளவுகளையொழிய மற்றொன்றை இச்சியான்காணவ னென்கை இதத்தால—நீ கொடுக்க நினைக்கிற நாட்டையும் பொன்னையு மவனொரு சரக்காக நினைத்திருக்குமோ, வல்லையாகில உன் ஆபிமுக்ய ஸூசகமாக விவ்வளவு களைச் செய்யப்பாரென்றபடி.

* பரிவதிலீசனை * என்று தொடங்கி * புரிவதுவும் புகைபூவே * என்று—[ஹேப ப்ரத்யக்ஷனான ஸர்வேச்வரனை ஸம்ஸாரநமுக்தரா யநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீதியாலே *ஏதத்ஸாமகாயந் நாஸ்தே * என்கிறபடியே பாடி, விஸ்தருதராகையைப் பெறவேண்டியிருப்பீர், உபகரணங்களில குறைவுபாரத் தகலுகை தவிர்ந்து, அஸ்மஸ கருதமான ஜலத்தை யேதேனு மொருபடி ப்ரயோகித்து, பின்னை யவனுக்கு அருள் கொடையாகச் கொடுப்பதுவு மேதேனுமொரு புகையும் ஏதேனுமொரு பூவும், இவ் வளவு மமையுங் கிடிகோ ளவனுக்கு]* என்று அவனுடைய ஸ்வாராதநதையை ஸுஸ்பஷ்டமாக ஆழ்வா ரருளிச்செய்தாரிறே. (139)

140. (பூர்ண விஷய) என்று தொடங்கி இவ்வளவும்—ப்ரஸகதாநுப்ரஸகத மாக வந்தவித்தனையிறே ப்ரபத்தி வைலக்ஷண்யமிறே கீழ்ச்சொல்லப்பட்டது, ஆகையாலே அதுக்கின்னமுமொரு வைலக்ஷண்யம் சொல்லுகைக்காக ஸித்தோ பாயத்துக்கும் பலத்துக்கு முண்டான ஐக்யத்தை மூந்தற வருளிச்செய்கிறார் (புல்லைக் காட்டி) என்று தொடங்கி

**140. புல்லைக்காட்டி யழைத்துப் புல்லையிடுவாரைப்போலே பலஸாதநங்களுக்கு பேதமில்லை.**

அதாவது—கோவை வரவழைத்துப் பின்னையதுக்கு தாரகாதிகளையிட்டு நோக்க நினைப்பார் தத்போக்யமான புலலுதன்னையே தத்வசீகார ஸாதநமாக

முன்னிட்டழைத்துககொண்டு, அதுதனனையே மேலுமிடுமளவில் பலஸாதநங்களுககு பேதமில்லாதாப்போலே, விலக்ஷணகுண விகரஹ விசிஷ்டனுனதானே முந்துற விவனைச் சேர்த்துககொளளுகைக குபாயமாய, பின்னை யென்றுமொக்க விவனுக குபேயமாயிருககையாலே பலஸாதநங்களிரண்டும ஏகவஸ்துவா யிருக்குமென்கை.(140)

141. இத்தால ப்ரபததிககு வைலக்ஷண்யம பலிததபடியை யருளிசசெய்கிறார் (ஆகையாலே) எனறு தொடஙகி.

**141. ஆகையாலே ஸ்வரூபமாயிருக்கும்.**

அதாவது—ஸாத்ய வஸ்துதானே ஸாதநமாகையாலே, தத் வரணரூபமான விது தேவையாயிராதே ஸ்வரூபமாயிருககு மெனறபடி.

அனறிககே, இனனமும ப்ரபத்திககொரு வைலக்ஷண்ய மருளிச்செய்கிறார்.

(புலலை) இத்யாதியாலே. அதாவது—புலலைககாட்டி தேறுவை அழைத்துக் கொண்டு பினனை அப்புலலையே யிடுமளவில் பலஸாதநங்களுக்கு பேதமில்லாதாப் போலே, *ஸகருத கருதோஞ்ஜலி:* *நமச சகருர் ஜநார்தநம* இத்யாதிகளிற் சொலலுகிறபடியே அஞ்ஜல்யாதி ரூபையான ப்ரபததியை முன்னிட்டு ஈச்வரனை வசீகரித்தால் பினனை யவனுககுகப்பாகசசெயயு மடிமையும், *பத்தாஞ்ஜலி புடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந:* *கைகளாலாரத் தொழுது தொழுதுனனை* இத யாதிகளிற் சொலலுகிறபடியே தன ஸ்வரூபாநுரூபமான அஞ்ஜல்யாதி வருத்தி விசேஷங்களாகையாலே பலஸாதநஙகளுக்கு பேதமில்லை. இப்படி பலமானது தானே ஸாதநமாகையாலே, இப்ப்ரபத்திதான தேவையாயிராதே இவனுககு ஸ்வ ரூபமாயிருககுமெனகை.

ஆக, (ப்ரபத்த யுபாயத்துககு) எனறு தொடங்கி, இவ்வளவாக—ப்ரபத்தியி னுடைய தோஷராஹித்யமும குணஸாஹித்யமும சொல்லபபட்டது. .... (141)

## ஸித்தோபாய நிஷ்ட்டர் வைபவம்

142. இப்படி ப்ரஸ்துதையான ப்ரபத்தியினுடைய அநுபாயத்வத்தையும், தத்ப்ரதிகோடியான பரகத ஸ்வீகாரோபாயத்வத்தையும், (இதுதன்னைப் பார்த்தால) இத்யாதியாலும, (ப்ராப்திககுபாயம அவன நினைவு) இத்யாதியாலும் கீழருளிசசெய்த படி யன்றியே, முகாந்தரேண வருளிசசெயகிறார்மேல். அதில், இப்படி ஸ்வரூபாநு ரூபமான வித்தை ஸாதநமாகக்கிககொண்டு ஸ்வதநத்ரனை வவனை யிவன பெறப் பார்க்குமனறு, அவன் நினைவு கூடாதாகில் இது விபலிககுமென்கிறார் (இவனவனை) என்று தொடஙகி.

**142. இவன் அவனைப்பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியு முபாயமன்று.**

அதாவது—உடைமையை உடையவன்சென்று கைககொளளுமாப்போலே, ஸ்வாமியான அவன்றானே வந்து அங்கீகரிககக்கண்டிருககக்கடவ பரதந்தரனை விச்சேதநன், தான் பலியாய் தன ஸ்வீகாரததாலே ஸ்வதந்த்ரனை வவனைப்பெற நினைககுமளவில் அவன் நினைவு கூடாதாகில். இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் நல்லாப ஸாதநமாகாதென்றபடி. .... .... .... (142)

143. இனி அவனே ஸ்வீகரிக்குமளவில் உள்ள வாசி சொல்லுகிறார் (அவ னிவனை) என்று தொடங்கி.

143. அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று.

அதாவது—ஸ்வாமியாய ஸ்வதந்த்ரனானவன் ஸ்வமமாய பரதந்த்ரனா யிருக்கிற விவனை ஸ்வேச்சையாலே பெறநினைக்குமளவில், பாபங்களில ப்ரதானமாக வெண்ணப்படும் பாதகமும ப்ரதிபந்தகமாகமாட்டா தென்கை இவை யிரண்டாலும் ஸ்வகத ஸ்வீகாரானுபாயத்வமும், பரகத ஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது. *சிதஃ பரம நில்லாபே ப்ரபத்திரபி நோபதிஃ, விபர்யயேது நைவாஸ்ய ப்ரதிஷேதாய பாதகம்* என்னக்கடவதிறே. .... ... ... .... ... (143)

144. இப்படி யிவை யிரண்டும காணலாமிடமுண்டோ வென்ன வருளிச் செய கிறார் (இவை) என்று தொடங்கி.

144. இவை யிரண்டும ஸ்ரீ பரதாழ்வானபக்கலிலும ஸ்ரீ குஹப்பெருமாள பக்கலிலும காணலாம.

145. அவர்கள தங்களபக்க லிவைகண்டபடி என்னென்ன வருளிச்செய்கிறார் (ஸ்ரீபரதாழ்வானுக்கு) இத்யாதி வாக்ய த்வயத்தாலே

145. ஸ்ரீ பரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாயிற்று; ஸ்ரீ குஹப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாயிற்று.

அதாவது—பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம பண்ணுவித்துத் தன ஸ்வரூபானுரூபமானவடிமையைப்பெற்று வாழுகைக்காக, *ஏபிச்ச ஸசிவைஸ ஸார்த்தம இத்யாதிப்படியே-வழியேபிடித்து மநோரதித்துக்கொண்டு சென்று பெரிய வாத்தியோடேயவர் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணின ஸ்ரீ பரதாழ்வானுக்கு, அப்படி பண்ணின ப்ரபத்தியாகிற நன்மைதானே, சரணயரான பெருமாள திருவுள்ளத்துக் கநிஷ்டமாகையாலே தீமையாய்விட்டது. *ஏழை யேதலன* இத்யாதிப் படியே பெருமாள தாமேவத்தங்கீகரிக்கப்பெற்ற ஸ்ரீ குஹப்பெருமாளுக்கு, தோஷமே பசசையாக வங்கீகரிக்கையாலே, பாதகமாகிற தீமைதானே நன்மையாய்விட்ட தென்கை. *யத த்வத்ப்ரியம் ததிஹ புண்யம புண்ய மந்யத்* என்றிறே புண்யபாப லக்ஷணம , ஆகையா லிவர்கள பக்கலிலே காணலாமென்கை. .... (145)

146. இவன பண்ணும ப்ரபத்தம சரண்ய ஹ்ருதயானுஸாரி யல்லாதபோது அபராதகோடி கடிதமாமென்னுமிட மருளிச்செய்தார் கீழ; இதுதா னிவனுடைய பூர்வவருத்தத்தைப் பார்த்தாலும அபராதகோடியிலேயா யிருக்குமென்னு மிடத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக பாஷ்யகாரருடைய வநுஷ்டாந ப்ரகாரத்தை யருளிச செய்கிறார் மேல (ஸர்வாபராதங்களுக்கும) என்று தொடங்கி.

146. ஸர்வாபராதங்களுக்கும ப்ராயச்சித்தமான ப்ரபத்தி தானும் அபராத கோடியிலேயாய க்ஷாமணம பண்ண வேண்டும்படி நில்லாநின்றதிறே.

அதாவது—*அஹமஸ்மயபராதாநா மாலய* என்கிறபடியே—அபராதங்களுக் கெல்லாம், கொள்கலமா யிருக்கிற விசசேதநன ப்ரபத்தி பண்ணவே, *ஸர்வ

பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்னும்படி இவனளவில ஸர்வேசவரன் திருவுள ளம் பரஸந்நமாய் விடுகையாலே, ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமாயிறே ப்ரபததிதா னிருப்பது; இப்படி யிருந்துள்ள ப்ரபத்தியை, *த்வத் பாதாரவிந்த யுகளம் சரணமஹம் ப்ரபத்யே* என்று பண்ணியருளின பாஷ்யகாரர்க்கு, ஸ்வபூர்வ வ்ருத்தத்தை யநுஸந்திக்கவாறே அதுதானும அபராத கோடியிலேயாய் *தவமேவ மாதாச* என்று தொடங்கி இததலையிலபராததததைப் பொறுக்கைக்க குறுபபான பந்தவிசேஷங்களை யெல்லாம விண்ணப்பஞ் செயதுகொண்டு, *தஸ்மாத் பரணம்ய* இத்யாதியாலே இபபடி திருமுனபே கூசாமல் வந்துநினறு ப்ரபத்தி பண்ணின இவ்வபராதத்தைப் பொறுத்தருளவேணுமெனறு க்ஷாமணம் பண்ணவேண்டும்படி நில்லாநினறதிறே யெனகை; ஆகையால, இவவழியாலுமிது அபராதகோடி கடிதமா யிருக்கு மென்கை. அநாதிகால மபராததததைப்பண்ணிப பினபொருநாளிலே ஆபி முக்க்யம பண்ணினேனேயாகிலும், *நிபூணமபி வத்ஸலः* *யதிவா ராவணஸ ஸ்வயம*  எனறிருக்கு மீச்வர ஹ்ருதயத்தைப பார்ததால், அவன்கைககொள்ள ஒரு குறை யிலலை. அவனப்படி யிருந்தானே யாகிலும், தன பூர்வவ்ருத்தத்தை யுணர்ந்தால் இவனித்தை அபராதமாகவே நினைத்து க்ஷாமணம பண்ணவேண்டுமபடியாயிறே யிருப்பது. .. ... .. .... .... .... (146)

147. இவன பண்ணும ப்ரபத்தி, ஸவபூர்வ வருத்தத்தை யநுஸந்தித்தால அபராதகோடியிலேயா யிருக்குமென்னுமத்தை தருஷடாந்தமுகேந தர்சிப்பிக்கிறார் மேல் (நெடுநாள்) என்று தொடங்கி.

**147. நெடுநாள் அந்யபரையாய்ப் போந்த பார்யை லஜ்ஜாபயங்களின்றிக்கே பர்த்ருஸகாசத்திலே நின்று என்னை யங்கீகரிக்கவேணுமென்று அபேக்ஷிக்குமா போலே யிருப்பதொன்றிறே யிவன் பண்ணும் ப்ரபத்தி.**

அதாவது—நெடுங்காலம பர்த்தாவோடு ஒட்டறறு பரபுருஷகாமிநியாய் தந் நிக்ரஹ பாத்ரமாய்பபோந்தா ளொருபார்யை, *இபபடிப்பட்டநா மவன ஸந்நிதி யிலே கூசாமல்செனறு நிற்குமபடியென!* எனகிற லஜ்ஜையும், *இத்தனை கால மும் நாம செயதுதிரிந்ததெல்லாம கண்டிருக்கிறவன, இப்போது நம்மைவந்திபபடி யபேக்ஷிப்பதே! என்று தண்டிக்கில செய்வதென்!* என்னும பயமுமினறிக்கே, அவன முனனேசென்று நினறு என்னை யங்கீகரிக்கவேணும் என்றபேக்ஷிக்கு மளவில் எததனை யபராதமுண்டு; அப்படியே யிருப்பதொன்றிறே, பகவதநந்யார்ஹ னய்வைத்து அநாதிகாலம் அவனுடன் பறறினறிக்கே அந்யபரனாய்ப்போந்த விவன, ஸ்வபூர்வவ்ருத்தாந்தாநுஸந்தாநத்தால் வரும லஜ்ஜையும் ஸ்வதந்த்ரனை வவன் தண்டிக்கில் செய்வதென் என்னும பயமுமினறிக்கே, தத்ஸந்நிதியிலே சென்று நின்று தன்னை யங்கீகரிக்கவேணுமென்று பண்ணுகிற சரண வரண மெனகை. ஆக இவ்வளவும, ஸ்வகத ஸ்வீகாராநுபாயத்வமும, பரகத ஸ்வீகாரோபாயத்வமும் ப்ரதிபாதிக்கப்பட்டது. ... ... ... ... ... (147)

148. இனி, இவன் ஸ்வீகாரங்கண்டிரங்கி யவனிவனுக்கு பரதந்த்ரனாவதிலும் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலவந்து பரதந்த்ரனாவதே ப்ரபலமென்கிறார். (க்ருபையாலே) என்று தொடங்கி.

148. க்ருபையாலே வரும் பாரதந்த்ர்யத்திற்காட்டில் ஸ்வாதந்த்ர்யத்தாலே வரும் பாரதந்த்ர்யம் ப்ரபலம்.

அதாவது—ஆர்த்தராய் அநந்ய சரணராய் தன் திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தவர்களளவில் தனக்குண்டான க்ருபையாலே அவர்கள் சொன்னதே செய்யும்படி பரதந்த்ரனாகையும், பட்டத்துக்குரியவனைப் மரசுமபோலே தன்கிரங்குச ஸ்வாதந்த்ர்யத்தாலே நிர்ஹேதுகமாகச் சிலரை யங்கீகரித்துத் தன்னை யவர்களிட்டது வழக்காக்கி வைக்கையும், இரண்டு மீசவரனுக் குள்ளதொன்று; இதில் முற்பட்டது, ஒரோ தசைகளிலே ஸ்வாதந்த்ர்ய நிருத்தமாய விபலிக்கவுங் கூடும்; பிற்பட்டது, அப்ரதிஹதமாகையாலே ஒருகாலும் கண்ணழிவில்லை. ஆகையாலே, அதிலுங் காட்டி லிதுப்ரபலமென்கை. ... ... ... (148)

149 இவ்வர்த்தந்தான் வேதாபிமதமென்கிறார்மேல (இவ்வர்த்தத்தை) என்று தொடங்கி.

149. இவ்வர்த்தத்தை வேதபுருஷ னபேக்ஷித்தான்.

(இவ்வர்த்தம்) என்கிறது—கீழ் ப்ரபலமாகச் சொல்லப்பட்ட பரகதஸ்வீகாரத்தை. (வேதபுருஷனித்தை யபேக்ஷித்தான்) என்றது—*நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: நமேதயா நபஹுநா ச்ருதேந—யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்* என்று கடவல்லியிலும் முண்டகோபநிஷத்திலும் சொல்லுகையாலே யாதரித்தானென்கை. அஸகருத கீதத்த மபேக்ஷா கார்யமிறே. ... .. . .. . ... (149)

150. இத்தலையி லபேக்ஷையின்றிக்கே யிருக்க இவ்விஷயீகாரம் ஸித்திக்கப் பெற்றவர்க ளுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (அபேக்ஷா நிரபேக்ஷமாக) என்று தொடங்கி.

150. அபேக்ஷா நிரபேக்ஷமாகத் திருவடிக்கும் ஸ்ரீகுஹப் பெருமாளுக்கும் இது உண்டாயிற்று.

அதாவது—தந்தாமபக்கல் அபேக்ஷையின்றிக்கே யிருக்கச்செய்தே, பம்பா தீரத்திலும் கங்காகூலத்திலும் பெருமாள் தாமே சென்றங்கீகரிக்கப்பெற்ற திருவடிக்கும் ஸ்ரீகுஹப்பெருமாளுக்கும் இந்த பரகதஸ்வீகார முண்டாய்த்தென்கை (150)

151. இப்படி ஸ்வதந்த்ரனை யிவர்களை யங்கீகரிக்கிற விடத்திலும், *தமப்ய பாஷ ஸௌமித்ரே ஸுக்ரீவ ஸசிவம் கபிம்* *மாழைமான மடநோக்கி யுன்தோழி யும்பி யெம்பி *என்று இளையபெருமாளையும் பிராட்டியையும் முன்னிட்டாப்போலே, மற்றும் புருஷகாரத்தை முன்னிட்டு அங்கீகரித்தவிடம் காணலாமோவென்ன வருளிச்செய்கிறார் (இவன்) என்று தொடங்கி.

151. இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடுமென்னுமிடம் அபய ப்ரதாநத்திலும் காணலாம்

அதாவது—இச்சேதநன் தான் ஆச்ரயிக்கிறபோது புருஷகாரமாக முன்னிடுமவர்களை, அவனு மங்கீகரிக்கும்போதும் முன்னிடு மென்னுமிடம், திருவடியையும

ஸ்ரீகுஹப்பெருமாளையும் அங்கீகரித்த ஸ்தலங்களை மாத்ரமன்றிக்கே, ஸ்ரீ விபீஷணாழ்வானை யங்கீகரித்த ஸ்தலத்திலும் காணலாமென்கை. எங்ஙனே யென்னில்? *ஸோஹம்பருஷிதஸ்தேந தாஸவச் சாவமாநித:—த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம்கத:* என்று சரணம் புகுந்து, ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே—நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்* என்று நின்ற விபீஷணாழ்வானை அப்யபராதாநபூர்வகமாக அங்கீகரிக்கிறவிடத்தில், *ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா—விபீஷணோவா ஸுக்ரீவ யதிவா ராவண ஸ்வயம்* என்று முதலிகளுக்கெல்லாம் மூலபூதரான மஹாராஜரை முன்னிட்டிறே அங்கீகரித்தது திருவடியையும் ஸ்ரீவிபீஷணாழ்வானையு மங்கீகரிக்கிற விடத்தில் பிராட்டி ஸந்நிதியில்லாமையாலே யவளை முன்னிட்டமை தோற்றிற்றில்லையே யாகிலும், பிராட்டி லங்கைக்கெழுந்தருளுகிறபோது மஹாராஜநும் திருவடியும் நிற்கிற விடத்திலே திருவாபரணங்களைப் பொகட்டு கடாக்ஷித்து வைத்துப் போகையாலும், லங்கையிலே எழுந்தருளினபின்பு ஸ்ரீவிபீஷணாழ்வானைப் பெருமாள் திருவடிகளிலே வரும்படி கடாக்ஷித்தருளுகையாலும், பெருமாளிருவரையு மங்கீகரிக்குமிடத்தில் பிராட்டியை முன்னிட்டே யங்கீகரித்தாரென்று கொள்ளவேணும். பரதந்த்ரையான வவளுக்கு இத்தலையில் நினைவொழியத் தனித்தொரு ப்ரவ்ருத்தி கூடாதிறே; ஆகையாலேயிறே, பரகத ஸ்வீகாரம் சொல்லுகிறவிடத்திலே ஸ்ரீவிபீஷணாழ்வானை யங்கீகரித்ததையுமிவர் ஸஹபடித்தது. .... .... .... (151)

152. இவன் நிருபாதிக சேஷபூதனாய் அவன் நிருபாதிகசேஷியா யிருக்கையாலே அவ்யவதாநேந ஆச்ரயிக்கவும் அங்கீகரிக்கவு மமைந்திருக்க, இப்படி யிருவரும் புருஷகாரத்தை முன்னிடுகிற தெதுக்காகவென்ன வருளிச்செய்கிறார் (இருவர்) என்று தொடங்கி.

152. இருவர் முன்னிடுகிறதும் தந்தாம் குற்றங்களை சமிப்பிக்கைக்காக.

சேதனனுக்குக் குற்றமாவது—அநாதிகால மவன்பக்கல் விமுகனாய் அந்ய விஷயப்ரவணனாய் தத்தாஜ்ஞாதிலங்கநமே பண்ணிக் கூடிபூரித்து வைத்த வபராதம்; ஈச்வரனுக்குக் குற்றமாவது—அவர்ஜநீயமான ஸம்பந்த முண்டாயிருக்க அபராதத்தையே கணக்கிட்டு அநாதிகாலமிவனை யகலவடித்திருந்தவிது. இவன்றன் குற்றத்தை சமிப்பிக்கையாவது—இத்தைப்பார்த்து ஈச்வரன் சீறும்படி பண்ணுகை; அவன்றன் குற்றத்தை சமிப்பிக்கையாவது—இத்தை நினைத்து சேதநன் வெருவாதபடி பண்ணுகை. .... .... . ... .... (152)

153. இவ்வளவேயன்று, இன்னமுமிதுக்கொரு ப்ரயோஜநமுண்டென்கிறார் (ஸ்வரூப) இத்யாதியாலே.

153. ஸ்வரூபஸித்தியு மதநாலே.

ஸ்வரூபமாவது—இவனுக்கு ததீய பாரதந்தர்யம்; அவனுக்கு ஆச்ரிதபாரதந்த்ர்யம்; *தேவுமெத்தனையும்* என்று ஆச்ரித பாரதந்த்ர்யத்தையிறே யவனுக்கு தானான தன்மையாக வாழ்வாரருளிச்செய்தது. இவையிரண்டு மிருவர்க்கும் ஸித்திப்பது புருஷகார புரஸ்கரணத்தாலே என்கை. .... .... ... (153)

154. கீழே * ஸ்வரூபம * என்று சொன்னததை உபபாதிககிருர் (ஔபாதி கமுமாய) என்று தொடஙகி.

154. ஔபாதிகமுமாய நித்யமுமான பாரதந்த்ர்யம இருவாக்கு முண்டிறே.

அதாவது—சேதநனுக்கு இவ்விஷயததில பாரதந்த்ர்யம தத்யத்வப்ரயுக்த மாகை யாலே ஔபாதிகமுமாய, அவவுபாதிதான நித்யமாகையாலே நிருபாதிக பகவத் பாரதந்த்ர்யத்தோபாதி நித்யமுமாயிருக்கும்; ஈச்வரனுக்கிவ்விஷயததில பாரதந்த்ர் யம ஆச்ரிதத்வ ப்ரயுக்தமாகையாலே ஔபாதிகமுமாய அவவுபாதி நித்யமாகையாலே அதுதானும நித்யமாயிருக்கு மென்கை (இருவர்க்கு முண்டு) என்னுதே, (உண்டிறே) என்றது—இவவர்த்ததகதில ப்ரமாணபரஸித்தியைத் தோற்றுவிக்கைக்காக. (154)

155. இவவளவன்று. இன்னமுமித்துக்கொரு ப்ரயோஜநமுண்டென்கிருர் (அநித்யமான) என்று தொடஙகி.

155. அநித்யமான இருவர்பாரதந்த்ர்யமும குலைவதும் அத்தாலே.

அநித்யமான பாரதந்த்ர்யமாவது—கர்மபாரதந்த்ர்யம அதில சேதநனுக்கு கர்மபாரதந்த்ர்யமாவது—அவசய மநுபோக்தவ்யஙகளான சுபாசுப கர்மஙகளின வசத்திலே இழுப்புண்டு ஸமஸரிக்கை, ஈச்வரனுக்கு கர்மபாரதந்த்ர்யமாவது—தான செய்தகர்மம தானநுபவிக்கிருனில நாம செய்வதென? என்று இவன செய்த கர்மத்தையே ப்ரதாநமாக்கி அதுக்கீடாகவே நிர்வஹித்துக்கொண்டு போருகை. இது நடப்பது *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்னுமளவுமாகையாலே, இத்தை அநித்யமென்கிறது. இவை புருஷகார புரஸ்கரணத்தாலே குலைகையாவது—இவன முன்னிடுமளவில அததலையைத் திருத்தியும், அவன முன்னிடுமளவில இத தலையைத் திருத்தியும், இரண்டு தலையும ரக்ஷ்யரக்ஷகபாவேந சேருமபடி பண்ணுகை யாலே இவை தன்னடையே நிவ்ருத்தமாகை. ... ... .. (155)

156. அநாதிகாலம ஸ்வதந்த்ரனுய *யாதானும பற்றி நீங்கித் திரிந்தவிவன் இன்றிறே ஆபிமுக்கயம பண்ணிற்று; பரகருதியோடே யிருக்கையாலே। துர்வாஸனை மேலிட்டு ஆச்ரயணுஙகீகாரஙகளாலே உத்பூதமான இந்தரக்ஷ்ய ரக்ஷக பந்தத்தை யிலலைசெய்து பழையபடியே போகப்பார்க்குதல, நிரஙகுச ஸ்வதந்த்ரனுய் கர்மாநு குணமாக விவனை லீலையிலே யநாதிகாலம விநியோகஙகொண்டு போந்த வீச்வரனுனிப்பந்தத்தை யிலலைசெய்து முனபு போலே இவனை கர்மாநுகுணமாக நிர்வஹிக்கப் பார்க்குதல செய்யிலோவென்ன வருளிச்செய்கிருர் (ஸஸாக்ஷிகம) என்று தொடஙகி.

156. ஸஸாக்ஷிகமாகையாலே இபபந்தத்தை யிருவராலுமிலலைசெய்யப்போகாது.

அதாவது—இந்த ரக்ஷ்யரக்ஷக ஸமபந்த மிரண்டு தலையுமறிந்ததாக வந்த தன்றிக்கே புருஷகாரரூப ஸாக்ஷி ஸஹிதமாக வந்ததாகையாலே, இத்தை இருவ ராலு மழியமாறப் போகா தென்கை. .... .... .... (156)

157. இதுக்கு ப்ரமாணங் காட்டுகிருர் மேல (என்னை) என்று தொடங்கி,

157. "என்னை நெசிழ்க்கிலும்" "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய"

நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக நித்ய ஸூரிகள் நடுவே யென்னை யங்கீகரித்த பின்பு ஸர்வசக்தியான தானும் கைவிடமாட்டா னென்கையாலே, * என்னை நெகிழக்கிலும் * என்கிற பாட்டு அவனாலே இப்பந்தத்தை யிலலைசெய்யப் போகாமைக்கு ப்ரமாணம். பெரிய பிராட்டியாருக்கு ஸ்நேஹியாகையாலே அவள் பரிகரஹமான என் பக்கலிலே அதிஸ்நேஹியாய், அரியன செய்துவந்து என்னோடே கலந்த வுன்னைப் பெற்றுவைத்து இனி நழுவவிடுவேனோ வென்கையாலே, * கோலமலர்ப்பாவைக்கு * என்கிற பாட்டு புருஷகாரமுமனுகவந்த இப்பந்தத்தை சேதநனாலு மிலலைசெய்யப் போகாதென்னுமதுக்கு ப்ரமாணம் ... (157)

158. (ஸஸாக்ஷிகமான விபபந்தத்தை யிலலை செய்யப் போகாது) என்றது— ஸாக்ஷியான புருஷகார விஷயத்தி லிருவர்க்குமுண்டான நித்யபாரதந்த்ர்யத்தைப் பற்ற வகையாலே, இருவர்க்கு மிவ்விஷயத்திலுண்டான நித்ய பாரதந்த்ர்யத்தில் ப்ரமாணங் காட்டுகிறார் மேல் (காமணி) என்று தொடங்கி

158. கர்மணி வ்யுத்பத்தியில் ஸ்வரூபகுணங்களால் வருகிற காதருஸங்கோச ராஹித்யத்தை நினைப்பது.

(கர்மணி வ்யுத்பத்தி) யாவது-*ச்ரீஞ—ஸேவாயாம* என்கிறதாதுவில், *ஸ்ரீயதே* என்கிற வ்யுத்பத்தி. இதுக்கர்த்தம—ஸேவிக்கப்படாநின்றாளென்றிறே இவ்வயுத்பத்தியில், (ஸ்வரூப குணங்களால் வருகிற காதரு ஸங்கோச ராஹித்யமாவது)— சேஷத்வமாகிற ஸ்வரூபத்தாலும் ப்ரணயித்வமாகிற குணத்தாலும் வருகிற சேதந பரமசேதநர்களாகிற ஸேவாகர்த்தாக்களுக்கு ஸங்கோசமில்லாமை அதாவது— இரண்டு தலைக்கு மிவள் விஷயத்தி லுண்டான ஸேவை அவிச்சிந்நமாய்ச் செல்லுகை. இதனை (நினைப்பது) என்றது—இவ்விஷயத்தி லிரண்டு தலைக்கு முண்டான பாரதந்த்ர்யத்தை ஸ்மரிப்பதென்றபடி. ... .... .. .... (158)

159. இப்படி யிருக்கையால இப்புருஷகாரம ப்ரபத்த்யதிகாரிகளெல்லார்க்கும அவச்யாபேக்ஷிதமென்கிறார் மேல (அதிகாரி) இத்யாதியாலே

159. அதிகாரித்ரயத்துக்கும புருஷகார மவர்ஜநீயம.

(அதிகாரி த்ரயமாவது)—அஜ்ஞர், ஜ்ஞாநாதிகர், பக்தி விவசர் என்கிற மூன்றதிகாரிகளும. இவர்களுக்கு (புருஷகார மவர்ஜநீயம) என்றது—குற்றத்தைசமிப்பிக்கை முதலானவற்றுக்கு புருஷகாராபேக்ஷயம வேண்டுகையாலே, ஸர்வதா கைவிடவொண்ணாதென்கை. அதவா, இப்புருஷகாரந்தான அநந்யப்ரயோஜநராய் ப்ரபத்தி பண்ணுமவர்களுக்கேயோ, ப்ரயோஜநாந்தரபரராய்ப் பண்ணுமவர்க்கும வேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அதிகாரி) இத்யாதியாலே. (அதிகாரித்ரயம) என்கிறது ஐச்வர்ய கைவல்ய பகவச் சரணார்த்திகளை. இவர்கள மூவர்க்கும (புருஷகார மவர்ஜநீயம) என்றது—ஸ்வஸ்வாபிலஷித ஸித்திக்கு ஈச்வரனை யுபாயமாக ஸ்வீகரிக்குமளவில இவர்களபராதங்களைப் பொறுத்து அவனங்கீகரிக்கும்படி பண்ணுகைக்கு புருஷகார மவச்யாபேக்ஷித மென்கை. (* பூர்வவாக்யத்தில புருஷகார பூர்வகமான

உபாய வரணம ப்ரயோஜநாநதரபரர்ககும பொதுவாகையாலேயிறே, உத்தரவாகயத்தாலே அநநய ப்ரயோஜநதவத்தைப்ரகாசிபபிகக வேணடுகிறது; பூர்வ வாகயத்தில ப்ரதிபாதிதமான ஸாதந விசேஷம பலசதுஷடய ஸாதாரணமாயிறே யிருப்பது. அதில இவவதிகாரிககு அபிலஷிதமான பல விசேஷமினனதெனனுமிடத்தை ப்ரகாசிப்பிககிறது இவவாகயம *) எனறு பரந்தபடியிலும்; (* கீழசசொன்ன ஸாதநம பல சதுஷ்டய ஸாதாரணமா யிருககையாலே இவனுக கபேக்ஷிதமான பல விசேஷத்தைச சொலலுகிறது *) எனறு சரியஃபதிபபடியிலும்; (* உத்தர வாகயத்தாலே ப்ராபயம சொலலுகிறது, ப்ராப்யாநதரததுக கனறெனகை.*) இதயாதியாலே முமுக்ஷுப்படியிலும் இவர்தாமே யருளிசசெயதாரிறே. * திருமாலைக கைதொழுவர் * * அடியாரைச சேர்தல தீர்ககுந் திருமாலை * எனகிறபடியே, புருஷகாரம முனனுகப் பற்றி பரயோஜநஙகளைககொணடகலாதே அவறறை யொழிநது (* ஒணடொடியாள திருமகளுமவனுமான சேர்த்தியி லடிமையைப் பேறெனறு கீழசசொனனவுபாய பலத்தைக காட்டுகிறது பிறகூறு *) எனறிறே இவர் திருத்தமபியாரும அருளிச செயலரஹஸயத்திலருளிசசெயதது. ஆக, (இவனவனை) எனறு தொடஙகி இவவளவாக—ஸ்வகத ஸவீகாரா நுபாயத்வமும, பரகத ஸவீகாரோபாயத்வமும, ததப்ராபலயமும, அவனே ஸவீகரிககுமளவிலும புருஷகாரம முனனுகவே ஸவீகரிககுமபடியையும, இருவரு மிப்புருஷகாரததை முனனிடுகிறது தனககு ப்ரயோஜந மினனதெனனுமிடமும, ப்ரபத்த யதிகாரிகளெலலாருககும புருஷகார மவர்ஜநீய மெனனுமதுவும சொலலப்பட்டது

ப்ரதம ப்ரகரணத்திலே, புருஷகார வைபவகதநமுகேந ஸ்ரீமத பதார்த்தத்தையும உபாயவைபவகதநமுகேந * நாராயண சரணௌ சரணம * எனகிற பதஙகளிலர்ததஙகளையும ப்ரதிபாதிதத வநநதரம, (ப்ரபத்திககு தேச நியமமும) எனறு தொடஙகி * ப்ரபத்யே * எனகிற பதததால சொலலப்பட்ட ப்ரபத்தியினுடைய தேச காலாதி நியமாபாவத்தையும, அதுககு விஷய நியமம சொலலுகைககாக (குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை) எனறு தொடஙகி முகதகண்டமாக மீளவும நாராயண பதார்த்ததையும, (இதில ப்ரபத்தி பணணு மதிகாரிகள மூவர்) எனறு உத்தமனிலே ஆக்ஷிபதனை வதிகாரியையும, ப்ரபத்தியில ஸாதநதவமிலலாமையையும, ப்ரபத்த்யதிகாராபேக்ஷிதமான சகதி லஜ்ஜா யதந நிவருத்தி சமதமாதிசயம முதலானவற்றையும, ப்ரபத்த்யங்கதயா த்யாஜ்யமான உபாயாநதரத்தினுடைய தோஷ பூயஸதவத்தையும, தத்ப்ரதிகோடிதயா ப்ரபத்தியினுடைய நைர்தோஷ்யாதிகளையும, ப்ரபத்தி ப்ரஸஙகததாலே முகபேதேந ஸவகத ஸவீகாராநுபாயத்வத்தையும பரகத ஸவீகாரோபாயதவததையும, தத்ப்ராபல்யததையும, அவனே ஸவீகரிககுமளவிலும புருஷகாரத்தை முனனிட்டே ஸவீகரிககு மெனனுமிடததையும, உபயரும புருஷகாரததை முனனிடுமதுககுணடான ப்ரயோஜந விசேஷஙகளையும, அதிகாரி த்ரயத்துககும புருஷகார மவர்ஜநீய மெனனுமததையும ப்ரதிபாதிககையாலே, இவவளவும பூர்வகண்டார்ததததை யருளிசசெயதாராயத்து .... .... (159)

160. இப்ப்ரகரணததியிலே (உபாயததுககு) எனறு தொடஙகி உபேயாதிகாரமும சில சொலலிற்றேயாகிலும அது ப்ராஸஙகிக மிததனை, இனி உபேயாதிகாரபர

மான ப்ரகரண சேஷத்தாலும உத்தரகண்டார்த்ததை யருளிச்செயகிறார். அது செயகிற விடத்தில், பாஷ்யகாரர் கத்யத்தில உத்தரகண்டார்தத மநுஸந்தித்தருளின கரமத்திலே, நமச்சப்தார்த்தம முனனாக வருளிச்செயகிறார். அதில இந்த நமஸ்ஸூ—தான ப்ராப்யவிரோதி நிவ்ருததி ப்ரதிபாதகமாகையாலே, ப்ராப்ய விரோதிகளானவற்றை தர்சிப்பிப்பதாகத் திருவுள்ளமபற்றி ப்ரதமம அவற்றிலே யொன்றை யருளிச்செயகிறார் (தனககுத்தான) என்று தொடஙகி.

160. தனக்குத்தான் தேடும் நனமை தீமையோபாதி விலக்காயிருக்கும்

கீழ (ஸ்ரீபரதாழ்வானுககு நனமைதானே தீமையாய்தது) என்று - ஸ்வகத ப்ரபததி 'சரணயஹ்ருதயாநுஸாரி யலலாதபோது தீமையாயத தலைககட்டுமபடி சொனன விததாலே, உபாய தசையில தனககுத்தான தேடும நனமை தீமையாமெனனுமிட மருளிச்செயதாராய், இபபரஸஙகத்திலே உபேய தசையிலும தான் தனககுத்தேடும நனமை தீமையாய் விடுமெனனுமிட மருளிச்செயகிறாரெனறு கீழோடிதுககு ஸஙகதி. (தனககு) இத்யாதி அதாவது—சேஷியானவன போகதசையில தன வ்யாமோஹததாலே "ஆருயிர்பட்ட தெனதுயிர் படடது" எனனுமபடி தன திறததில மிகவும தாழநினறு பரிமாறுமளவில, "நாம சேஷபூதரனறோ, நம சேஷத்வத்தை நோககவேண்டாவோ" என்று ஸ்வகைஙசயாநுஸநதாநததாலே பிறகாலிதது, தனககுத்தான தேடுகிற சேஷத்வமாகிற நனமை, அநாதிகாலம "ஸ்வதநதரோஹம" என்றிருந்த தீமையோபாதி அவன போகத்துககு ப்ரதிபந்தகமா யிருககுமென்கை. (தீமை) என்று—அகருதய கரணாதிகளைச சொல்லவுமாம. (160)

161. சேஷியுடைய விருப்பத்துககுடலாய ஆத்மாவுககு அலங்காரமா யிருக்கிற சேஷத்வம, போகவிரோதியாகிறபடி யெஙஙனேயெனன வருளிச்செய்கிறார் (அழகுககு) என்று தொடஙகி.

161. அழகுக்கிட்ட சட்டை அணைக்கைக்கு விரோதியாமாபோலே.

அதாவது—ஸத்ரீககு அழகுககிடடசட்டை நாயகனுகப்புககு விஷயமுமாய அவளுக் கலஙகாரமுமா யிருந்ததேயாகிலும, போகதசையில ஆலிஙகன விரோதியாமாப்போலே, இதுவும போகவிரோதியா மெனறபடி. .... .... (161)

162. அழகுக்குடலானது அநுபவ விரோதியா மெனனுமிடம சேஷி வசநத்தாலே தர்சிப்பிககிறார் மேல் (ஹாரோபி) என்று.

162. * ஹாரோபி *

*ஹாரோபி நார்ப்பித: கண்டே ஸ்பர்சஸம்ரோத பீருணா, ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ ஸரிதோ த்ருமா:* என்று ஸமசலேஷதசையில ஸபர்ச விரோதியாமெனனுமசசத்தாலே பிராட்டி திருக்கழுததி லொரு முததுவட முடபடப் பூண்பதிலலை எனறாரிறே பெருமாள. *பீருணா* எனகிற விஙகவயத்யயம ஆர்ஷம. அனறிககே, அழகுக கிட்டது அணைககைககு விரோதியாமெனனுமிட மறிவிககைககே ப்ரயோஜநமாக்கி, லிங்காநுகுணமாகப் பெருமாள தமமளவிலே யோஜிககவுமாம. .... (162)

163. ஆனால் பின்னை பாரதந்த்ர்யமேயோ நலலதென்ன வருளிச்செயகிறார் மேல் (புண்யமபோலே) என்று தொடங்கி.

**163. புண்யம்போலே பாரதந்த்ர்யமும் பராநுபவத்துக்கு விலக்கு.**

(புண்யம) எனகிறது—கீழ (நன்மை) என்கிற சொலலாலே சொனன சேஷத்வத்தை; அது கீழ்ச்சொனனபடியே ஸ்வஸ்வயாநுஸநதாநததாலே யிருய்ககைக் குறுப்பாய்ககொண்டு யாதொருபடி போகவிரோதியாகா நிறகும அப்படியே, போக தசையில அவனுககு எதிர் விழிகொடாதே அசித்துப்போலே கிடககைக குறுப்பான கேவல பாரதந்த்ர்யமும் எதிர்விழி ஸாபேக்ஷனை வீசவரனுடைய போகத்துககு மிடறுபிடியா மெனறபடி.

அனறிககே. (புண்யம) எனகிறது—ஸத்கர்மத்தையாய், அது யாதொருபடி பாபத்திற்காட்டில வ்யாவருத்தமா யிருககசசெய்தே பகவத ப்ராப்தி ப்ரதிபந்தகமாகா நிற்கும, அப்படியே, இருய்க்கைக குறுப்பான சேஷதவத்திறகாட்டில் அசித்துப் போலே எதிர்த்தலையிட்டது வழககாயிருககைக குறுப்பாகையாலே வ்யாவருததமான பாரதந்த்ர்யமும் எதிர்விழிகொடுக்கைக குறுப்பலலாமையாலே பரனுடைய வநுபவத்துக்கு ப்ரதிபந்தகமா மெனனவுமாம. இததால—கேவல சேஷத்வமும கேவல பாரதந்த்ர்யமும ஓரோ ராகாரஙகளாலே போகவிரோதியாகா நிறகும ; பாரதந்த்ர்யத் தோடே கூடின சேஷதவமே உத்தேசயமெனகை. ... .... (163)

164. இப்படி உபேய தசையில் சேஷத்வ பாரதந்த்ர்யங்கள் பராநுபவத் துககு விலக்காம்படியை யருளிசசெய்த அனந்தரம ப்ராப்தி தசையில் இவனுடைய நிர்பந்தமூலமாக வுண்டான தோஷ நிவருததி பராநுபவத்துககு விலககாம்படியை யருளிச் செயகிறார் (குணமபோலே தோஷ நிவருததி) எனறு

**164. குணம்போலே தோஷ நிவருத்தி**

(குணம) எனகிறது—கீழ விரோதியாகச சொனன சேஷத்வ பாரதந்த்ர்யங்க ளிரண்டையும். இவைதான ஆதமாவுககு அந்தரஙக குணமாயிறே யிருப்பது. இதுபோலே (தோஷ நிவருததி) எனறது—இவவாத்ம குண தவயமும கீழச்சொன்ன படியே யாதொருபடி பராநுபவத்துககு விலககாகிறது. அப்படியே, இவன் நிர்பந்திததுப் பண்ணுவித்துககொளளுகிற ப்ரகருதி ஸமபந்தமாகிற தோஷத்தி னுடைய நிவருத்தியும, சரமசரீரமாகையாலே இததோடே சிறிது தான் வைத்தநுப விகக விச்சிககிற வவனுடைய வநுபவத்துககு விலககாமெனகை. (குணம்போலே) என்று—பாரதந்த்ர்யமொன்றையும த்ருஷ்டாந்திககிற தாகவுமாம. ... (164)

165. தோஷநிவ்ருததியி லாத்மஸ்வரூபம அதயந்தபரிசுத்தமாய் போக்யமா யிருக்குமத்தனை யனறோ, ஆனபினபு தோஷநிவருத்தி அநபிமதமாய் தோஷமபி மதமா யிருககககூடுமோவெனன வருளிசசெய்கிறார் (ஆபரணம) என்று தொடங்கி.

**165. ஆபரணம் அநபிமதமாய் அழுக்கு அபிமதமாயிரா நின்றதிறே.**

அதாவது—லோகத்தில் விஷய ப்ரவணரா யிருப்பார்க்கு, அபிமத விஷயத்தி னுடைய ஔஜ்ஜ்வல்ய ஹேதுவான ஆபரணம் அநபிமதமாய், அனௌஜ்ஜ்வல்ய ஹேதுவான அழுக்கு அபிமதமா யிராநின்றதிறே என்கை. ... ... (165)

166. இதுதான லௌகிகத்தி லன்றிக்கே பிராட்டி திறத்தில் அவன்றனக்கு மிப்படி யிருந்தமைக்கு ஸூசகமான வார்த்தையை ஸ்மரிப்பிக்கிறார்மேல் (ஸ்நாநம என்று தொடங்கி.

166. 'ஸ்நாநம ரோஷஜநகம்' என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது.

அதாவது—பிராட்டி திருமஞ்ஜநம செய்து வந்தது பெருமாளுக்கு ரோஷஜ நகம என்னுமத்தை ப்ரகாசிப்பிக்கிற *தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருவம* என்கிற வார்த்தையை இவவர்த்தத்துக்கு குடலாக ஸ்மரிப்பதென்கை. *ஸ்பங்கா மலங்காராம* இத்யாதிப்படியே—பத்து மாஸம திருமஞ்ஜநம பண்ணும் மழுக்கடைந்திருந்த வடிவைக்காண வாசைப்பட்டிருந்தவர்க்கு, இவள் திருமஞ்ஜநம பண்ணிவந்தவிது ரோஷஜநகமாகச் சொல்லவேண்டாவிறே. ஆனால், *தீர்க்கமூஷணம் விசிசவஸ்ய மேதிநீமவலோகயந, உவாச மேகஸங்காசம விபீஷண முபஸ்திதம்; திவ்யாங்கராகாம வைதேஹீம திவ்யாபரண பூஷிதாம, இஹஸீதாம சிரஸ்ஸ்நாதா முபஸ்தாபய மாசிரம* என்று இவாதாமேயன்றோ திருமஞ்ஜநமபண்ணி யலங்கரித் துக்கொண்டு வரும்படி ஸ்ரீவிபீஷணாழ்வானைப பார்த்தருளிச் செய்தது; இப்படி யிருக்கச்செய்தே பின்னைரோஷம ஜநிப்பா னென்னென்னில்; தாம சலலவார்த்தை சொல்லிவிடக்கடவோம, தானே யறியாளோ என்று சொல்லிவிட்டாரித்தனை போக்கி, அது ஸஹ்ருதயமாகச் சொன்ன வார்த்தையல்ல, அல்லாதபோது ருஷ்டராகக் கூடாதிறே. அவள் தான *அஸ்நாதா தரஷ்டுமிச்சாமி பர்த்தாரம் ராக்ஷஸாதிப* என்றிருக்கச் செய்தே, *யதாஹ ராமோ பர்த்தா தே ததா தத் கர்த்து மர்ஹஸி* என்று ஸ்ரீவிபீஷணாழ்வான நிர்ப்பந்தித்துச் சொன்னபின்பன்றோ திரு மஞ்ஜநம பண்ணிற்றென்னில்? அவன் பெருமாள திருவுள்ளக் கருத்தை யறியாதே, அருளிச்செய்த வார்த்தையைக்கொண்டு சொன்னானித்தனையிறே. எல்லாஞ் செய் தாலும், பத்துமாஸம ராவண பவநத்திலே யிருந்த இவள் சிறையிருந்த வேஷத் தோடே சென்று காணுமித்தனையல்லது, திருமஞ்ஜநம பண்ணேன என்றிருக்க வேணுமிறே, அது செய்யாதே, சடக்கென திருமஞ்ஜநம பண்ணி வந்தாளிறே; அது, அவ விருப்புக்காண வாசைப்பட்டவர்க்கு ரோஷ ஹேதுவாய்த்து. ஆகையாலே, (ஸ்நாநம ரோஷஜநகம) என்னக் குறையில்லை

அன்றிக்கே, (ஸ்நாநம ரோஷ ஜநக மென்கிற வார்த்தையாவது)—ஸ்ரீவிபீஷ ணாழ்வான திருமஞ்ஜநம செய்தருளச் சொன்னபோது, பெருமாள திருவுள்ளத்தை யறியுமவ ளாகையாலே, 'அவர்க்கிது அநபிமத மாகையாலே ரோஷ ஜநகமாய் வந்து முடியும்' என்று நினைத்து, *அஸ்நாதா தரஷ்டுமிச்சாமி பர்த்தாரம் ராக்ஷஸாதிப* என்று பிராட்டி யருளிச்செய்த வார்த்தையாகவுமாம். ரோஷ ஜநக மென்னுமதை ப்ரகாசிப்பிக்கிற வார்த்தையென்று கீழ்ச்சொன்ன ந்யாயமிங்கு மொக்கும். .... (166)

167. இப்படி யபிமத விஷயத்தி லழுக்குக்கழுமாப்போலே, ஆத்மஜ்ஞாநம் பிறந்த விவன் *அழுக்குடம்பு* என்று கழிக்கிற வித்தேஹத்தை ஈச்வரன் விரும்ப எங்கேக்கண்டதென்ன வருளிச்செய்கிறார் (வஞ்சக் கள்வன்) இத்யாதியாலே.

167. "வஞ்சக்கள்வன்" "மங்கவொட்டு"

அதாவது—*வஞ்சக் கள்வன்* என்று தொடங்கி *மங்கவொட்டு* என்னுமள வாக—தம்முடைய திருமேனியிலே அத்யாதரத்தைப் பண்ணியவனநுபவித்தபடி களையும்; அவ்வளவன்றிக்கே, அதிசாபலத்தாலே இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொடுபோவதாக வவன் அபிநிவிஷ்டனா யிருக்கிறபடியைக் கண்டு, *பிரானே! இப்படி செய்தருளவொண்ணாது* என்று நிர்ப்பந்தித்து, இதினுடைய தோஷத்தை யவனுக்கு குணர்த்தி, இப்படி ஹேயமான விது மங்கும்படி யிசைய வேணும் என்று கால்கட்டி, அவனிதத்தை விடுவித்துக்கொண்டு போம்படி வருந்தி இசைவித்துக்கொண்டபடியையு மருளிச்செய்தாரிறே யாழ்வார். ... (167)

168. அபிமத விஷயத்தி லழுக்குப்போலே யாதரிக்கிறமாத்ர மன்றிக்கே, இவனுடைய ஜ்ஞாநபரிமளம இத்தேஹத்திலே ப்ரகாசிக்கையாலும இத்தையாதரிக்கு மென்னுமிடத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (வேர்) இத்யாதியாலே.

168. வேர்சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்ரஹத் தோடே ஆதரிக்கும.

அதாவது-மணத்தின வாசியறிந்து வேர்சூடும போகிகளானவர்கள், மண்ணை யுதறில மணங்குன்றும என்று மண்பற்றுக் கழற்றாதே சூடுமாப்போலே, பரமபோகி யான ஸர்வேச்வரன ஜ்ஞாநியானவிவனை விரும்பி யநுபவிக்குமிடத்தில, *ஆஹ்லாத சீத நேத்ராம்பு:* இத்யாதிப்படியே ஜ்ஞாந கார்யமான விகருதிகளுக்கெல்லா மாச்ரயமாய்க்கொண்டு இவனுடைய ஜ்ஞாந பரிமளமெல்லாந் தோற்றும்படி யிருக்கிற விக்ரஹத்தோடேகூட விரும்புமென்றபடி. ... ... ... 168)

169. இன்னம் முகாந்தரத்தாலே இவன் தேஹத்திலவன் விருப்பத்தை தர்சிப்பிக்கிறார் (பரமார்த்தன்) என்று தொடங்கி.

169. பரமார்த்தனென் றிவனுடைய சரீரஸ்திதிக்கு ஹேது கேவல பகவதிச்சையிறே.

(பரமார்த்தனென்கிறன)—*இங்கின்ற நீர்மை யினி யாமுறாமை* *எந்நாள யானுன்னை யினி வந்து கூடுவன்* *எங்கினித் தலைப்பெய்வன்* *நாளே லறியேன்* *தரியே னினி* *கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ* என்று ஸம்ஸாரத் தில் அடிக்கொதிப்பாலும், பகவதநுபவத்தில் பெருவிடாயாலும இதுக்குமே லில்லை என்னும்படி யார்த்தி விளைந்தவன், ஏவம பூதனானவனுடைய சரீர ஸதிதிக்கு ஹேது ப்ராரப்தகர்ம மென்னவொண்ணாதிறே, *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ் யாமி* என்றத்தோடு விரோதிக்கையாலே; *ஆர்த்தாநா மாசுபலதா ஸக்ருதேவ க்ருதா ஹ்யஸௌ, த்ருப்தாநாமபி ஜந்தூநாம் தேஹாந்தர நிவாரிணீ* என்றிறே ப்ரபத்தி ஸ்வபாவந்தா னிருப்பது. ஆகையால, இவனுடைய சரீர ஸ்திதிக்கு ஹேது, "இன்னமும சிலநாளிவனை யிச்சரீரத்தோடே வைத்தநுபவிக்கவேணும" என்கிற

ஈச்வரேச்சையொழிய வேறொன்றில்லாமையாலே (கேவல பகவதிச்சையிறே) என்கிறார். ப்ராரப்த கர்மமடியாக விருககிற த்ருப்த விஷயததிலும பகவதிச்சை யுண்டாகையாலே அத்தை வயாவர்த்திககிறது கேவல சப்தத்தாலே. ... (169)

170. இப்படி தன் விருப்பத்துககு விஷயமான விவன சரீரத்தை அவன் விரும்பும் ப்ரகார மருளிசசெய்கிறார் மேல் (திருமாலிருஞ்சோலைமலை) என்று தொடஙகி.

170. "திருமாலிருஞ்சோலை மலையே" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவறறிலும் பண்ணும் விருப்பததை இவனுடைய சரீரைகதேசத்திலே பண்ணும்.

அதாவது—தெற்குத் திருமலையையும திருப்பாற்கடலையும என் உத்தமாங்கத்தையுமொகக விரும்பா நின்றான். ஸ்ரீ வைகுண்டத்தையும வடககுத் திருமலையையும எனனுடைய சரீரத்தையுமொகக விருமபாகின்றான என்றாரிறே ஆழவார். இப்படியோரோ ரவயவஙகளிலே இரண்டிரண்டு திருப்பதியில பண்ணும விருப்பததைப் பண்ணினானென்றவிது, எலலாத் திருப்பதிகளிலும பண்ணின விருப்பத்தை ஓரோ ரவயவங்களிலே பண்ணிநின்றா னென்னுமதுககுபலக்ஷணம. ஆகையாலே, அப்பாட்டிற் சொல்லுகிறபடியே. தனககபிமதமான திவய தேசங்களெல்லாவற்றிலும பண்ணும் விருப்பத்தை ஜ்ஞானியான விவனுடைய சரீரைகதேசத்திலே பண்ணுமெனகிறார். ... .... .... ... ... (170)

171. உகந்தருளின நிலங்களி லெலலாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவ்விஷயமொன றிலுமே பண்ணுமெனறார் கீழ; இவ்விஷயம ஸித்தித்தால் உகந்தருளின நிலஙகளி லாதரம அவனுககு ஸங்குசிதமா மெனனுமிட மருளிச்செய்கைக்காக, இரண்டிடத்துககு முணடான வாசியை யருளிசசெயகிறார் (அங்குததை) என்று தொடஙகி.

171. அங்குத்தைவாஸம் ஸாதநம்; இங்குத்தைவாஸம ஸாத்யம்.

உகந்தருளின நிலங்களில் விரும்பிவர்த்திககிறது உசிதோபாயங்களாலே சேதநரையகப்படுத்திககொள்ளுகைக காகையாலே (அஙகுத்தை வாஸம ஸாதநம) எனகிறது. இச்சேதநன திருந்தி இவன ஹ்ருதயததினுள்ளே தான் வஸிககப் பெற்றவிது அங்குநின்று பண்ணின க்ருஷிபலமாகையாலே (இங்குத்தை வாஸம் ஸாதயம) என்கிறது. *நாகத்தணைக் குடந்தை* *மலைமேல தான் நின்று* *பனிக்கடலில் பள்ளிகோளை* இத்பாதிகளிலே, இவற்றினுடைய ஸாதநஸாத்யத்வங்கள் தோற்றுகின்றதிறே. ... .... .... .... .... (171)

172. இந்த ஸாதந ஸாத்யத்வ ப்ரயுகதமான ஆதரதாரதம்யத்தை யருளிச் செய்கிறார் (கல்லும) என்று தொடங்கி.

172. "கல்லும் கனைகடலும்" என்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றிலாதரம் மட்டமாயிருக்கும்.

அதாவது—தன திருவுள்ளத்தில புகுந்தபினபு, தனககுப் புறம்பொனறிலு மாதரமிலலை என்று தோறறுமபடி அவனிதிலே அத்யாதரத்தைப் பண்ணி நித்ய வாஸம் பண்ணுகையாலே, திருமலையும, தன ஸநநிதாநத்தாலே கோஷிககிற திருப் பாறகடலும, ஒருத்தர்க்குமெட்டாத பரமபதமான தேசமும புல்லியவாய்ததினவோ எனறாரிறே யாழவார்; இப்படியே, ஸாத்யமான இசசேதநஹ்ருதயம ஸித்தித்தால, இதுககு ஸாதநமாக முனபு விருமபிப்போநத திவயதேசங்களி லாதரம ஸங்கு சிதமாயிருககு மென்கை. ஸாத்யம கைபுகுரு மளவுமிறே ஸாதநததி லாதரம மிககிருப்பது. .... ... .... .... ... (172)

173. ஆதரம் மட்டமாம்படிககு அவதியை தர்சிப்பிககிறார் (இளங்கோயில) இத்யாதியாலே.

173. "இளஙகோயில் கைவிடேல" எனறிவன ப்ரார்த்திக்க வேணடும படியாயிருக்கும.

அதாவது—ஸ்ரீபூதத்தார், தமமைப் பெறுகைக குறுப்பாக முனபு தான் விருமபின திவயதேசங்களில முனபுத்தை யாதரமினறிககே தனதிருவுளளத்திலே அத்யாதரததைப்பண்ணிச் செல்லுகிறபடியைக கண்டு, அவவோ திவயதேசஙகளைக கைவிடப்புகுகிறானே எனறதிசஙகை பணணி, என ஹ்ருதயத்திலே புகுநதிருக கைககு பாலாலயமான திருப்பாறகடலைக கைவிடாதொழிய வேணும எனறாரிறே ஆகையால, இப்படி யிவன ப்ரார்ததிகக வேண்டுமபடியாய்த்து அவனுககவறறி லாதரம் மட்டமாம்படி எனகை. ... ... .. .... (173)

174. இப்படி யிவனர்த்தித்தாலும், ஸாத்யம ஸிததித்த பினபு அவனுக்கவை அபிமதங்களா யிருககுமோ வென்ன வருளிசசெயகிறார் (ப்ராப்ய) இத்யாதியாலே.

174. ப்ராப்யப்ரீதி விஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பவை அபிமதங்களாயிருககும

(ப்ராப்யப்ரீதி விஷயத்வமாவது)—தனககு ப்ராப்யபூதனன இசசேதநனுடைய வுகப்புககு விஷயமா யிருககை. * கண்டியூ ரரங்கம மெயயம் கசசி பேர்மலலையெனறு மண்டியிறே யிவனிருப்பது. க்ருதஜ்ஞதையாவது—இவ்வோதேசவாஸத்தாலேயனறோ நாமிவனைப் பெற்றது * எனறு அத்தேசம் தனககுப் பண்ணின வுபகாரத்தை யநு ஸந்திககை. இவையிரணடாலும். ஸாத்யமான இச்சேதநன கைபுகுநதிருககச் செய தேயும் அவனுககு அவ்வோ தேசங்கள் அபிமதஙகளா யிருககு மெனகை.

ஆக, (குணம்போலே தோஷநிவருத்தி) எனறு கீழசசொன்ன சேஷத்வ பார தநதர்யரூப ஆத்மகுணமபோலே தோஷ நிவ்ருததியும, (பராநுபவத்துககு விலககு) எனறு ப்ரதிஜ்ஞை பண்ணி ததுபபாதநார்த்தமாக அபிமதவிஷயததில அழுககபி மதமா யிருககுமபடியையும, இவன * அழுககுடமபு * எனறு கழிக்கிறவிதிலே யவன தயாதரததைப பண்ணுமபடியையும, ஜ்ஞாநியான விவனை ஸவிகரஹமாக வாதரிக கைககு ஹேதுவிசேஷததையும், பரமார்த்தனன விவன தேஹ ஸதிதி கொணடே இவன் தேஹத்தி லவன விருப்பமறியலா மெனனுமததையும், அவனிவனுடைய

தேஹத்தை விரும்பும ப்ரகாரத்தையும, ஸாத்யமானவிது ஸித்தித்தால் ஸாதநாதரம் மட்டமாமபடியையும, அதி னெலலையையும, இவன அவவோதேசஙகளைக கைவிடா தொழியவேணும எனறு அர்தநித்தால ஸ்வஸாத்யம ஸித்திதநிருககச்செய்தேயும ஹேது த்வயத்தாலே அவனுக கவை அபிமதஙகளா யிருககும்படியையு மருளிச் செய்தாராயிற்று. ... .... .... ... .. (174)

**175.** இப்படி தோஷநிவருத்தி பராநுபவததுக்கு விலககெனனுமிடம ஸுஸ் பஷ்டமாமபடியான ஹேதுககள் பலவற்றையும அருளிசசெய்கையாலே அத்தை ஸித்திப்பித்தாராய், அது தனனை த்ருஷ்டாந்தமாககி ஸிம்ஹாவலோகந ந்யாயத் தாலே கீழச் சொன்ன சேஷத்வபாரதநதர்ய ரூபாத்மகுணத்தினுடைய பராநுபவ விரோதித்வத்தை ஸ்திரீகரிககிறார் (ஆகையாலே) என்று தொடஙகி.

**175. ஆகையாலே தோஷநிவருத்திபோலே ஆந்தர குணமும் விரோதியாயிருக்கும்.**

(ஆகையாலே) எனறு—கீழே ஸித்திப்பித்தவர்த்தத்தை யநுவதிககிறார். (தோஷ நிவ்ருததிபோலே) என்றது—தோஷங் கழிகை ஸவரூபௌஜ்ஜவலயததுக குறுப்பா யிருக்கசசெயதேயும தோஷத்தையே போகயமாக விரும்புகிற பரணயியான வவனுக் கநபிமதமாகையாலே யாதொருபடி பராநுபவததுககு விரோதியாகிறது, அதுபோலே யெனறபடி. (ஆந்தர குணம) எனகிறது—சேஷத்வ பாரதந்த்ர்யங்களை. இவற்றை (ஆந்தர குணம) எனகிறது—ஜ்ஞாநாநந்தஙகளிலுங்காட்டில ஆத்மாவுக்கு அந்தரங்கமாகையாலே. இதினுடைய பராநுபவ விரோதித்வப்ரகாரம் கீழச சொல்லப் பட்டதிறே. இவவிடத்திலும் (ஆந்தர குணம) என்கிறது—பாரதந்த்ர்ய மொன்றையு மாகவுமாம. .... .... ... ... .... (175)

**176.** இப்படிச சொல்லுகைக்கு தோஷ நிவருத்தியில் வரும்தோஷமே தென்ன; வேறொரு தோஷமும வேண்டா, இது தானே தோஷமா மெனகிறார் (தோஷ) இத்யாதியாலே.

**176. தோஷநிவ்ருத்திதானே தோஷமாமிறே.**

அதாவது—காமிநியானவள் தனனுடமபி லழுககுக் கழற்றி போகத்திலே யந்வயிக்க இசசிககுமாப்போலே, ஸவதஃ பரிசுததமான வாத்மஸ்வரூபத்துககு வந்தேறியான தோஷத்தைக கழித்து ஸ்வசேஷிககு போகயமாக விநியோகப்பட வேணும் என்று ஸ்வநிர்ப்பந்தத்தாலே இவன் பண்ணுவித்துககொள்ளுகிற தோஷ நிவ்ருத்திதானே, காமிநியுடைய வழுககுக்கும் காமுகனைப்போலே தோஷமே யபி மதமாய் இத்தோடே தனனை புஜிகக வாதரிககிற வவனுடைய போகததுககு விலக் காகையாலே தோஷமாமிறே யெனகை. அவனுககு அநிஷ்டமாமதிறே தோஷ மாவது. (இறே) என்று ப்ரஸித்தி தோற்ற வருளிச்செய்தது கீழுபபாதித்தத்தை யெல்லாம் நினைத்து. .... .... .... .... .... (176)

**177.** ஆக, (நன்மைதானே தீமையாயிறறு) என்றும், (தனககுத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலககாயிருககும்) என்றும், (தோஷ நிவ்ருத்திதானே தோஷமாமிறே) என்றும்—தான் தனககுத் தேடும நன்மை ஹேயமென்னுமிடம்

சொல்லுகையாலே, அவன் தேடும் நன்மையே யுபாதேயமென்னுமிடம் பலித்ததிறே; இப்படி தான் தனக்குத் தேடும் நன்மை ஹேயம் அவன் தேடும் நன்மை யுபாதேய மென்னுமிடத்தை ஆப்த வசநத்தாலே தர்சிப்பிக்கிறார்மேல் (தன்னால்) என்று தொடங்கி.

177. "தன்னால் வரும் நன்மை விலைப்பால்போலே; அவனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று பிள்ளானவார்த்தை.

(தன்னால் வரும் நன்மையாவது)— ஸ்வயத்நத்தாலே தான் தனக்குண்டாக்கிக் கொள்ளும் நன்மை. (விலைப்பால்போலே) என்றது—ஔபாதிகமுமாய், விரஸமுமாய், அப்ராப்தமுமா யிருக்குமென்கை. (அவனால் வரும் நன்மையாவது)—நிருபாதிக ஸ்வாமியான வவன்றானே இவனுக்கிது வேணும் என்றுண்டாக்கும் நன்மை. முலைப் பால் போலே என்றது—நிருபாதிகமுமாய், ஸரஸமுமாய், ப்ராப்தமுமா யிருக்கு மென்கை. ... ... ... .. .. ... (177)

178. இவ்வளவன்றிக்கே, எம்பெருமானை யொழியத் தான் தனக்கு நன்மை தேட விழிந்தால் ஸ்வவிநாசமே பலிக்குமென்னுமிடத்தை ஸநிதர்சநமாக அருளிச் செய்கிறார் (அவனை என்று தொடங்கி).

178. அவனையொழியத் தான் தனக்கு நன்மை தேடுகையாவது—ஸ்தநந்தய ப்ரஜையை மாதாபிதாக்கள் கையில்நின்றும் வாங்கி காதுகனை ஆட்டு வாணியனகையிலே காட்டிக் கொடுக்குமா போலே யிருப்பதொன்று.

அதாவது—ப்ராப்தனுமாய்ப்தனுமானவவன் இவனுக்கு நன்மை தேடும் தொழிய, அதுக்கெதிர்த்தட்டான தான் தனக்கு ஸ்வோஜ்ஜீவநார்த்தமான நன்மை ஸம்பாதிக்கையாவது — ஸ்வரக்ஷணோபயோகியான ஜ்ஞாநசக்திகளொன்றுமின் றிக்கே ஸ்வமாதராதிக ளுணர்ந்து நோக்கவேண்டும்படியான ஸ்தநந்தய ப்ரஜையை, ரக்ஷகரான மாதாபிதாக்கள் கையில் நின்றும் வலிய வாங்கி, கொலைக்குக் கூசாதே உயிர்க்கொலையாகக் கொன்று மாமஸங்களோடே கலசி விற்றுவிடும் காதுகனை ஆட்டுவாணியன் கையிலே இத்தை நோக்கிக்கொள் என்று காட்டிக்கொடுக்குமாப் போலே யிருப்பதொன் றென்கை. இத்தால—ஸர்வேச்வரனே ரக்ஷகன், தான் தனக்கு நாசகன் என்னுமிடம் சொல்லப்பட்டது. ... .. .... (178)

179. இப்படி இவன் தன்னைத்தானே முடித்துக் கொள்ளுமோவென்ன வருளிச்செய்கிறார் (தன்னைத் தானே) என்று தொடங்கி.

179. தன்னைத் தானேயிறே முடிப்பான்.

அதாவது—ஸர்வேச்வரனிவனை யுஜ்ஜீவிப்பிக்கைக்கு அவஸர ப்ரதீக்ஷனாய்ப் போருமவனாகையாலே இவனுடைய விநாசத்துக்கு ஒருநாளுமவன் ஹேதுவன்று, இனி *அஸந்நேவ* என்னும்படி தன்னை நசிப்பித்துக்கொள்ளுவான் தானேயிறே யென்கை. *யானே என்னை* என்கிற பாட்டிலே, *யானே* என்று—என்னிழவு பகவத் க்ருதமல்ல, அவன் எதிர் சூழல்புக்குத் திரியாநிற்க நானே கிடர் விநாசத் தைச் சூழ்த்துக்கொண்டேன் என்றாரிறே யாழ்வார். .... ... (179)

180. இவன தனனைத தானே முடிககையாவது ஏதென்னு மாகாங்க்ஷையிலே யருளிசசெயகிறுர் (தனனைத் தானே) எனறு தொடங்கி.

180. தன்னைத் தானே முடிக்கையாவது—அஹங்காரத்தையும் விஷயங்களையும் விரும்புகை.

(அஹங்காரமாவது)—தேஹாத்மாபிமாநமும, ஸ்வாதந்த்ர்யாபிமாநமும ; (விஷயங்களாவன)—விஹிதநிஷித்த விஷயஙகள, இவற்றை (விருமபுகையாவது)—இவற்றிலே மிகவும் ப்ரவணனுகை. ஆத்ம ஸ்வரூபந்தான் பகவதநந்யார்ஹசேஷமாய் பகவதேகபோகமாயிறே யிருப்பது, தாதருச ஸ்வரூபததை நசிப்பிக்கையிறே—இவற்றிலே இவன் ப்ரவணனுகையாவது. உத்தரவாகய நமசசப்தார்த்தஙு சொல்லுகிறுராகில் இவை எல்லா மென்னெனனில, உத்தர வாகயத்தில் நமஸ்ஸிலே புருஷார்த தத்துக கிடைசகுவரான விரோதிகளெல்லாம் தளளுண்ணுமெனனுமிடந தோற்ற விறே "மநோவாக காயைஃ" என்று தொடங்கி மூன்று சூர்ணையாலே ஸகல விரோதி நிவ்ருததியையும பாஷ்யகார ரருளிசசெய்தது. இவர்தாமும மூமுக்ஷுப்படியிலே இநத நமசசப்தார்த்தம சொல்லுகிறவளவில, *இதிலே அவித்யாதிகளும கழியுண்ணும்* எனறுரிறே. ஆகையாலே இவ்விடததிலும் தேஹாதமாபிமாநாதிரூபமான அஹங்காரம, தத் கார்யமான விஷயப்ராவண்யம, தது பயகார்யமான பாகவதாபசாரம முதலான விரோதிகளை யெல்லாம ப்ரஸக்தாநு ப்ரஸகதமாக வருளிச செய்கிறுர் ; ஆகையாலே விரோதமில்லை. .... .... .... (180)

181. இவ்வஹங்காராதிகளின கொடுமையை விஸதரேணுபபாதிப்பதாகத் திருவுள்ளமபற்றி ப்ரதமம அஹங்காரத்தின கொடுமையை அருளிச்செய்கிறுர் (அஹங்காரம) என்று தொடங்கி.

181. அஹங்கார மக்நிஸ்பர்சம் போலே.

(அகநி ஸபர்சம் போலே) என்றது—அகநி ஸபர்சமானது அங்வயித்த விடமெங்கும் சுட்டுருவழிககுமாப்போலே, இதுவும ஆச்ரயாசியாய் ஸ்வரூபத்தை நேராக வுருவழித்துவிடு மென்கை. ... ... ... ... (181)

182. இவ்வஹங்காரத்தினுடைய கரெளர்யத்துக்கு ப்ரமாணங்கள் காட்டுகிறுர் மேல்.

182. "ந காமகலுஷம் சித்தம்" "நஹி மே ஜீவிதேநார்த்தஃ" "ந தேஹம்" "எமமாவீட்டுத் திறமும".

அதில் ப்ரதமத்திலே, ருக்வேதகிலமான ஜிதந்தாவசநத்தை யருளிசசெய்கிறுர் ; *நகாமகலுஷம சித்தம் மமதே பாதயோஸ்ஸ்திதம், காமயே வைஷ்ணவதவந்து ஸர்வ ஜந்மஸு கேவலம* இதுககர்த்தம்—நிருபாதிக சேஷியாய் நிரதிசய போகயரான தேவரீர் திருவடிகளிலே வ்யவஸிதமான வென்னெஞ்சானது, ஸ்ரீ வைகுண்டாதிகளாகிற வேறென்றை ஸவயம புருஷார்த்தமாக நினைத்துக கலங்கியிருக்கிற தன்று, ஸர்வ ஜந்மங்களிலும தேவர்க்கே ரஸமாமபடியிருககிற தாஸயத்தை யே யாசைப்படாநின்றது தெனறு. கேவலபதத்தால்—இத்தலைககுமா யிருககுமிருப்பைக் கழிக்கிறது ;

துசப்தம அவதாரணார்த்தம். இத்தால—மோக்ஷோபாயந்தமாகத் தன்னுகப்பால வரும தெல்லாம அஹங்கார கர்ப்பமாகையாலே த்யாஜ்யமென்னுமிடம சொல்லப்பட்டது. அநந்தரம, பிராட்டி வசநத்தை யருளிச்செய்கிறார். *கஹிமே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர் நச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம* இதுகக்கர்த்தம—மஹாரதரான பெருமாளைப் பிரிந்து ராக்ஷஸிகள நடுவே வஸியா நிற்கிற வெனக்கு ப்ராணனுலொரு ப்ரயோஜந மில்லை. அர்த்தங்களாலுமொரு ப்ர யோஜநமில்லை, ஆபரணங்களாலு மொருப்ரயோஜநமில்லை என்று இத்தால— ப்ராணாதிகளெல்லாம அத்தலையில விநியோகத்துக்காக வன்றிக்கே தனக்கான போது அஹங்கார ஸ்பர்சியாகையாலே த்யாஜ்யமென்னுமிடம் சொல்லப்பட்டது. அநந்தரம. பரமாசார்யரான ஆளவந்தார் வசநத்தை யருளிச்செய்கிறார், *நதேஹம நப்ராணாந் நசஸுக மசேஷாபிலஷிதம நசாத்மாநம நாந்யத கிமபி தவ சேஷத்வ விபவாத், பஹிர்ப்பூதம நாத! க்ஷணமபிஸஹே யாது சததா விநாசம தத்ஸத்யம் மது மதந விஜ்ஞாபந மிதம* இதுகக்கர்த்தம—எனக்கு வகுத்த சேஷியானவனே, உன் னுடைய சேஷத்வமாகிற வைசவர்யத்துக்குப் புறம்பான தேஹத்தையும க்ஷணமும் ஸஹியேன, இத்தேஹத்துக்குத்தாரகங்களான ப்ராணங்களையும ஸஹியேன், எல்லா ராலுமாசைப்படப்பட்ட ஸுகத்தையும ஸஹியேன, புத்ர மித்ர களத்ராதிகளான மற்றென்றும ஸஹியேன், இவையித்தனைக்கும போக்தாவான ஆத்மாதன்னையும் ஸஹியேன, இதெல்லா முருசுகாணவொண்ணுதபடி சததாவாக நசித்துப்போக வேணும், இந்த விஜ்ஞாபநம் ஸத்யம, இங்ஙனன்றாகில தேவாக்குப் பொய்யனை மது பட்டது படுகிறேன என்று இத்தால—அத்தலையில சேஷத்வத்துக்குப புறம பானதெல்லாம அஹங்கார துஷ்டமாகையாலே த்யாஜ்யமென்னுமிடம சொல்லப் பட்டது.

அநந்தரம, மயர்வற மதிநல மருளப்பெற்றவர்களில தலையானவர் வசநத்தை யருளிச்செய்கிறார் (எமமாவீட்டுத திறமும) என்று. அதாவது—' ஆழிவீர்! மோக்ஷத்தைக் கொள்ளும்' என்ன; என்னுகப்புக்காகத் தருகிற மோக்ஷம எப்ப்ரகாரத் தாலும விலக்ஷணமா யிருந்ததேயாகிலும, அதின இடையாட்டமும ப்ரஸங்கிக்கக் கடவோ மல்லோமென்கை. இத்தால—தன்னுகப்பால வரும மோக்ஷமும் அஹங்கார கர்ப்பமாகையாலே, ஐசவர்யாதிகளோபாதி த்யாஜ்யமென்னுமிடம் சொல்லப்பட்டது.

183. ஆக, அஹங்காரத்தின் கொடுமையை யருளிச் செய்தார் கீழ்; அநந் தரம் விஷயங்களின கொடுமையை யருளிச் செய்கிறார் மேல (ப்ரதிகூலவிஷய ஸ்பர் சம) என்று தொடங்கி.

**183. ப்ரதிகூலவிஷயஸ்பர்சம விஷஸ்பர்சம போலே, அநுகூலவிஷயஸ்பர்சம விஷமிச்ரபோஜனம போலே.**

(ப்ரதி கூல விஷயமாவது)—லோகவிருத்தமுமாய் நரகஹேதுவுமா யிருந்துள்ள நிஷித்த விஷயம்; தத்ஸ்பர்சத்தை விஷஸ்பர்சமபோலே என்றது—ப்ராணபாதகத் வேந ப்ரஸித்தமாகையாலே ப்ராதிகூல்யந் தோற்றநின்று ப்ராணனை முடிக்கும விஷஸ்பர்சமபோலே, சாஸ்த்ர நிஷித்தத்தயா ப்ரஸித்தமாகையாலே ப்ரதிகூல

மென்றே தோற்றியிருந்து ஸ்வரூப நாசத்தைப் பண்ணுகையாலே. (அநுகூல விஷயமாவது)—லோகவிருத்தமு மன்றிககே நரகஹேதுவுமன்றிககே விசிஷ்ட வேஷாநுகூலமா யிருந்துள்ள விஹிதவிஷயம்; தத்ஸ்பர்சத்தை (விஷமிச்ர போஜனம போலே) என்றது—விஷமிச்ராந்ந போஜநம அதறியாதவனுக்கு அநுகூல மெனறே தோற்றியிருநது அவன் ப்ராணனை முடித்துவிடுமாப்போலே, சாஸ்த்ரவிஹிததயா ப்ரஸிதகமாகையாலே அநுகூலமபோலே தோற்றியிருந்து ஆத்மாவினுடைய அநந்யபோகதவரூபமான ஸ்வரூபத்தை நசிப்பிககையாலே *விஷஸ்ய விஷயாணாஞ்ச தூரமத்யந்த மந்தரம், உபபுகதம விஷமஹந்தி விஷயாஸ் ஸ்மரணாதபி* என்று—புஜிககவும வேண்டாதே ஸமரணமாத்ரத்தாலும் முடிககையாலே, விஷததிற்காட்டில் விஷய மதிகரூரமெனனுகின்றதிறே. .... .... .... (183)

184. இப்படி விநாசகரமான விஷயங்களிலே ப்ரவணனாய் ஸுகிககநினைக்கு மது விபரீதஜ்ஞாந கார்யமென்னுமத்தை ப்ரமாண ப்ரஸித்த த்ருஷ்டாந்தமுகேந வருளிச்செய்கிறார் (அக்நி ஜ்வாலையை) என்று தொடங்கி.

**184 அக்நிஜ்வாலையை விழுங்கி விடாய் கெட நினைக்குமா போலேயும் ஆடுகிற பாமபின் நிழலிலே யொதுங்க நினைக்குமாபோலேயும் விஷய ப்ரவணனாய் ஸுகிக்க நினைக்கை.**

அதாவது—* ஆஸ்வாத்ய தஹந ஜ்வாலா மூதந்யாசமநம் யதா—ததா விஷய ஸமஸாகாத் ஸுகஸிநதா சரீரிண:* என்றும் *விஷயாணாந்து ஸம்ஸர்காத் யோபிபர்த்தி ஸுகம நர:, ந்ருத்யத: பணிநச்சாயாம் விச்ரமாயாசரயேத ஸ:* என்றும் சொலலுகிறபடியே—தண்ணீர்கது விடாய்ப்பட்டவன், விபரீத ஜ்ஞாநத்தாலே தாபஹேதுவான அகநி ஜவாலையை விழுஙகித் தனவிடாய் தீர நினைககுமாப்போலேயும்; ஆதிதய கிரணஙகளாலே அதிமாத்ர தப்தனானவன அநத தாபத்தை யாற்றுகைககாக நிழலெனகிற மாத்ரத்தைககொணடு, ஆகாமயார்தததத்தை நிரூபியாதே, அத்யந்த குபிதமாய்ப் படத்தை விரிதது நின்றாடுகிற பாமபின நிழலிலே யொதுங்க நினைககுமாப்போலேயும இருப்பதொன்று, பாதகமான விஷயங்களை ஸுகாவஹமாக ப்ரமித்து அவற்றிலே ப்ரவணனாய் அவற்றை யநுபவித்து ஸுகிகக நினைககும தெனறபடி. .... .... ... .... .... (184)

185 விஷய ஸ்பர்சம ஸ்வரூப நாசகம, விஷய ப்ரவணனாய் ஸுகிகக நினைககுமது விபரீத ஜ்ஞாநகார்ய மென்றிறே கீழ்ச்சொலலிநின்றது; இவ்விஷய ஸ்பாசம வேண்டா, பகவத் குணங்களிலே நைந்திருககுமவன் இவற்றைக காணவே முடியுமெனகிறார் மேல (அசுணமா) என்று தொடங்கி.

**185. அசுணமா முடியுமாபோலே பகவதநுபவைகபரனாய் ம்ருதுப்ரக்ருதியா யிருக்குமவன் விஷயதாசநத்தாலே முடியும்படி.**

அதாவது—அசுணமாவென்கிற பக்ஷி அதிமதுரமான காந ச்ரவணத்தாலே நெஞ்சு நீர்ப்பண்டமா யிளகின தசையிலே அதிகடிநமான பறையையடிககக் கேட்டுப் பட்டுக்கிடககுமாப்போலே பாய்த்து, பகவததுபவமொன்றிலுமே தத்பரனாய தத்குண

ரஸத்திலே நைந்து இதர விஷயங்களின் பேர் கேட்கிலும் மாந்துமபடி மருந்து ப்ரக்ருதியா யிருக்குமவன பகவதேககபோகதவரூப ஸவரூபநாசகங்களான விஷயங்களைக கண்ட மாத்ரததிலே யேங்கி முடியுமபடி யெனகை. (185)

186. இவவர்த்தத்தை ஆப்தவசநத்தாலே யிசைவிககிறார் (காட்டி) என்று தொடங்கி.

186 "காட்டிப் படுப்பாயோ" என்னக கடவதிறே

அதாவது—அலப ரஸங்களாய அநேக விதங்களாயிருநதுள்ள துர்விஷயங்களைக காட்டி, அவறறோடே பொருநதாதபடியாய அவறறுககுப் பாங்கான நிலத்திலே யிருககைககீடான பாபத்தைப பணணின வென்னை முடிககப் பார்க்கிறாயோ வென்றபடி. (186)

187. ஏவமபூத விஷய தோஷததை யறியாமையாலே யிதிலே ப்ரவணனும அவனுககும, இததை யறிநதுவைத்தே பரவணனுமவனுககும வாசியை யருளிசசெய்கிறார் மேல (அஜ்ஞனன) என்று தொடங்கி.

187. அஜ்ஞனன விஷயப்ரவணன் கேவல நாஸதிகனைப் போலே, ஜ்ஞாநவானன விஷயப்ரவணன் ஆஸதிக நாஸதிகனைபபோலே

(அஜ்ஞனன விஷய ப்ரவணனாகிறான)—விஷயங்களினுடைய தோஷ பூயஸ்தையையும ஸவரூப விருததததையையும அறியாதே, அவறறை யாசைபபட்டு மேல விழுகிறவன. (கேவல நாஸதிகனாகிறான)—தர்மாதர்ம பரலோக சேதநேசவராதிகளுககு ப்ரதிபாதகமான சாஸத்ரத்தில ப்ராமாண்ய புத்தியொன்று மினறிககே ஸ்வைர ஸஞசாரபரனாயத் திரிகிற சுத்த நாஸதிகன. (ஜ்ஞாநவானன விஷய ப்ரவணனாகிறான)—விஷயங்களினுடைய தோஷதுஷடதையையும ஸவரூப விருத்ததையையு மறிநதுவைத்தே, அவறறை விருமபி மேலவிழுகிறவன (ஆஸதிக நாஸ்திகனாகிறான)—தாமாதாமாதி ஸகல பரதிபாதகமான சாஸதரத்தை ப்ரமாணமென றிசைகையாலே யாஸதிகனென்று சொலலலாமபடி யிருபபானாய. அநத சாஸத்ர மர்யாதையி லடங்காதே தோறறிற்றுச செயது திரிகையாலே நாஸதிக ஸமனாயிருககுமவன. (187)

188. தருஷடாந்தபூதரான விவர்க ளிருவாககும விசேஷமேதென்ன வருளிச்செயகிறார் (கேவல) இத்யாதியாலே.

188. கேவல நாஸதிகனைத் திருததலாம, ஆஸ்திக நாஸதிகனை யொருநாளும் திருத்த வொணணாது

அதாவது—சாஸ்தரத்தை யிலலையென்று, தோறறிறறுச செயது திரிகிறவனை சாஸதராஸதிகயம பிறககைக குறுபபான உபதேசஙகளைப் பணணி விதிநிஷேத வச்யனும்படி திருததலாம; சாஸத்ராஸதிகயமுடையனை ததப்ரதிபாத்ய பரமேயங்களையும அறிந்துவைததும, பாப பயமினறியே, நாஸ்திகவத ஸவைரம ஸஞசரிக்கிறவனைச சொலலி யறிவிக்கத்தகக தொன றிலலாமையாலே உபதேச முகததா லொரு

நாளும் திருத்தவொண்ணா தென்கை. இத்தால—அஜ்ஞனான விஷய ப்ரவணனை, விஷயதோஷாத்யுபதேச முகத்தாலே விரக்தனாம்படி திருத்தலாம்; ஜ்ஞாநவானான விஷயப்ரவணனை, விஷயதோஷாதிகளை யதாதமாக வறிந்துவைத்தே ப்ரவர்த்திக்கிறவனாகையாலே ததுபதேசத்தா லொருநாளும் திருத்த வரிதென்றதாய்த்து. *அஜ்ஞஸ் ஸுகமாராத்யஸ் ஸுகதர மாராத்யதே விசேஷஜ்ஞ:, ஜ்ஞாநலவ துர்விதக்தம ப்ரஹ்மாபி நரம் நரஞ்ஜயதி* என்னக்கடவதிறே ஆகையால, அவனிலு மிவன் நிக்ருஷ்டதமனென்னறு கருத்து. (188)

189. (தன்னைத்தானே) என்கிற வாக்யத்தில ஸ்வரூப நாசகங்களாகச் சொன்ன அஹங்காரத்தினுடையவும விஷயங்களினுடையவும க்ரௌர்யத்தைத் தனித்தனியே யருளிச்செய்தார் கீழ்; உபயத்துக்கு முளளதொரு க்ரௌர்ய விசேஷத்தை தந்த்ரேண வருளிச்செய்கிறாரமேல (இவை) என்று தொடங்கி.

189. இவையிரண்டும ஸ்வரூபேண மூடிக்குமளவன்றிக்கே பாகவத விரோதத்தையும் விளைத்து மூடிக்கும

அதாவது—உக்த தோஷ யுக்தமான விவ்வஹங்காரமும விஷயப்ராவண்யமுமாகிற விரண்டும, தானானவாகாரத்தாலேநின்று நசிப்பிக்குமளவன்றிக்கே, பாகவதாபசாரமாகிற மஹாநர்த்தத்தையும விளைத்து ஸ்வரூபநாசத்தைப பண்ணுமென்கை. (ஸ்வரூபேண) என்றது—ஸ்வேனரூபேண வென்றபடி. அஹங்காராதிகளிலே ப்ரவணனானுளள வளவன்றிறே பாகவதாபசாரம பண்ணினானுள்ள பகவந் நிக்ரஹம. (189)

190. ஆனால பாகவத விரோதம விளைந்தபோதே ஸ்வரூப நாசம பிறக்குமாகில், பாகவத விரோதத்தைப் பண்ணிப் போராநிற்கச்செய்தே ஸ்வரூபாநுரூபமான நாமரூபங்களையுடையராயக்கொண் டிருக்கிறபடி யெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (நாமரூபங்களை) என்று தொடங்கி.

190. நாமரூபங்களையுடையராய் பாகவதவிரோதம் பண்ணிப் போருமவர்கள் தக்தபடம் போலே.

அதாவது—வைஷ்ணவத்வ சிஹ்நமான தாஸ்ய நாமத்தையும தத்நுகுணமான ரூபத்தையுமுடையராய்க்கொண்டு, உள்ளொரு பசையின்றிக்கே அஹங்காராதி வச்யராய் பாகவதர்கள திறத்திலே விரோதத்தைபபண்ணிப் போருமவர்கள, உருக்குலைய வெந்திருக்கச்செய்தே உருவுடைத்தாய்ப்போலே தோற்றியிருக்கும தக்தபடத்தோடு ஸத்ருசரென்கை (190)

191. தக்தபடத்தின்படி தன்னை தர்சிப்பிக்கிறார்மேல் (மடி) என்று தொடங்கி.

191. மடிபுடவை வெந்தால் உண்டையும பாவுமொத்துக் கிடக்கும்; காற்றடித்தவாறே பறந்துபோம்.

அதாவது—தட்டிமடித்திருக்கிற புடவையானது தட்டுருவ வெங்கும் வெந்திருக்கச்செய்தே உண்டையும பாவும முன்புபோலே யொத்திருக்கும், ஒருகாற்று வந்து

சிதறவடித்தவாறே யுருககாணவொண்ணுதபடி. பாறிப பறந்துபோமெனகை. அப்படியே, அபசாராகளி தகதராயவைதது நாமரூபஙகளோடே யிருககிறவர்களும பகவந நிகரஹ விசேஷத்தாலே பாறவடியுணடு உருமாய்நது போவர்களென்று கருத்து. (191)

192. பாகவதாபசாரம பணணினல ஈசவரன அஸஹமாநனய் உசிததணடம் பண்ணுமெனனுமதனை ஆபதவசநத்தாலே யருளிசசெயகிறா (ஈசவரன) எனறு தொடஙகி.

192. "ஈசவர னவதரிததுப பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம பொருமை" என்று ஜீயரருளிச் செய்வா.

அதாவது—ஸங்கலப மாதரத்தாலே ஸர்வததையும நிர்வஹிககவலல ஸர்வ சகதியான ஸர்வேசவரன தனனையழியமாறி இதர ஸஜாதீயனு யவதரித்துக கை தொடனுயநின்று செயத ஹிரணய ராவணுதி நிரஸநரூபாதயதிமாநுஷ சேஷடிதஙக ளெலலாம, ப்ரஹ்லாதன மஹர்ஷிகள தொடககமான அவவோ பாகவத விஷயங களில அவவவர் பண்ணின வபசாரம ஸஹியாமைபாலே யென்று ஆப்ததமரான நஞ்ஜீய ரருளிசசெயவரெனகை. (192)

193 இநத பாகவதாபசாரததினுடைய கரௌர்யத்தில பகவ துகதியை தர்சிப்பிககிறுர் (அவமாநகரியா) எனறு.

193 "அவமாநக்ரியா"

*யா ப்ரீதிா மயி ஸம்வருததா மதபகதேஷு ஸதாஸதுதே, அவமாந கரியா தேஷாம ஸமஹரதயகிலம ஜகத்* எனருளிறே (193)

194. இபபடிப்பட்ட பாகவதாபசாரததினுடைய வைவிதயததை யருளிச செயகிறுர் (பாகவதாபசாரந்தான) எனறு தொடஙகி

194 பாகவதாபசாரநதான அநேகவிதம்

(அநேக விதம) எனறது—ஜநம நிருபணம, ஜஞாந நிருபணம, வருதத நிருபணம, ஆகார நிருபணம, பநது நிருபணம, வாஸ நிருபணம இதயாதிகளாலே பலபடிப்பட்டிருககு மெனறபடி (194)

195. அவற்றில் வைத்துககொண்டு, ஜந்மநிருபணத்தினுடைய கரௌர் யத்தை யருளிசசெயவதாக, அதனை யுபாதாநம பணணுகிறுர் (அதிலே யொனறு அவர்களபககல ஜந்ம நிருபணம) எனறு.

195. அதிலே யொன்று அவாகளபககல் ஜநமநிருபணம்

(ஜநம நிருபணமாவது)—நிகருஷ்ட குலஙகளிலே யவதீர்ணரான பாகவதர் களை, பகவதீயதவ ப்ரயுகதமான மாஹாதமயததைப் பாராதே நிகர்ஷ புத்த்யா தத் தஜ்ஜந்மஙகளை நிருபிககை. (195)

196. இதினுடைய க்ரௌர்யத்தை யருளிச்செய்கிறார் (இதுதான்) என்று தொடங்கி.

**196. இதுதான் அர்ச்சாவதாரத்தி லுபாதாநஸ்மருதியிலுங்காட்டில் க்ரூரம்.**

(இதுதான்) என்று—பாகவதஜந்ம நிரூபணத்தைப் பராமர்சிக்கிறது.

(அர்ச்சாவதாரத்தி லுபாதாந ஸ்மருதியாவது)-ஆச்ரிதருகந்ததேதேனு மொரு த்ரவ்யத்தைத் தனக்குத் திருமேனியாகக் கொண்டு அதிலே அப்ராக்ருத திவ்ய விக்ரஹத்தில் பண்ணும் விருப்பத்தைப்பண்ணி எழுந்தருளியிருக்கிற வைபவத்தை யறியாதே நிகர்ஷ புத்திபண்ணி விக்ரஹோபாதாந த்ரவ்ய மின்னதென்றேயென்று சிந்திக்கை; அதிலுங் காட்டில் க்ரூரமாகையாவது—அத்தைப் பற்றவும் ஸர்வேச்வரனுக்கு அத்யந்த நிக்ரஹ ஹேதுவாகை (196)

197. அது தன்னினுடைய க்ரௌர்யந்தா னெவ்வளவென்ன வருளிச்செய்கிறார் (அத்தை) இத்யாதியாலே

**197. அத்தை மாத்ருயோநிபரீக்ஷையோ டொக்கும் என்று சாஸ்த்ரம் சொல்லும்.**

*அர்ச்சாவதாரோபாதாந வைஷ்ணவோத்பத்தி சிந்தநம்—மாத்ருயோநி பரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிண:* என்றுநின்றதிறே. இப்படி உபயத்தையும் மாத்ருயோநி பரீக்ஷா ஸமமாக சாஸ்த்ரஞ் சொல்லிற்றேயாகிலும், அது அர்ச்சாவதாரத்தி லுபாதாந ஸ்மருதிக்கு நிதர்சநமாமித்தனை; வைஷ்ணவோத்பத்தி சிந்தனமதிலும் க்ரூரமென்றிவர்க்குக் கருத்து. (மாத்ருயோநி பரீக்ஷையாவது)—அந்ய ஸ்த்ரீயோநி வைலக்ஷண்யாவைலக்ஷண்ய நிரூபண வாஸனையாலே யித்தைபுமப்படி நிரூபிக்கை. (அத்தோடொக்கும்) என்றது—இப்படி நிரூபித்தால் அதுக்கு எத்தனை பாபமுண்டு, அர்ச்சாவதார விக்ரஹோபாதாந சிந்தநத்திலு மத்தனைபாப முண்டென்றபடி. (197)

198. இவ்வபசாரத்துக்குப் பலம்—தக்தபடம்போலே நஷ்ட கல்பனுயிருந்து தேஹாவஸாநத்திலே யுருமாய்ந்து போமளவேயல்ல, இவ்வபசாரம் பண்ணினபோதே கர்ம சண்டாளனுய் விடு மென்கிறார் (த்ரிசங்குவைப்போலே) என்று தொடங்கி.

**198. த்ரிசங்குவைப்போலே காமசண்டாளனுய் மார்விலிட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய்விடும்.**

அதாவது—இக்ஷ்வாகு வம்சயனுயிருக்கிற த்ரிசங்குவாகிற ராஜா, தன் குல குருவாயிருக்கிற வஸிஷ்ட மஹர்ஷியை, "ஸசரீர ஸ்வர்காவாப்த்யர்த்தமாக வென்னை யஜிப்பிக்கவேணும்" என்றபேக்ஷிக்க; மஹர்ஷி, 'அது நமக்கசக்யம்' என்ன; அங்கு நின்றும் தத்புத்ரர்கள் தபஸ்ஸு பண்ணுகிற விடத்திலேசென்று இச்செய்தியைச் சொல்லி அவர்களை மிகவு மநுவர்த்தித்து, "நீங்களென்னை யிப்படி யஜிப்பிக்க வேணும்" என்று நிர்பந்திக்க; "நீ துர்புத்தியா யிருந்தாய். மஹர்ஷி 'போகாது' என்றத்தை எங்களாலே செய்யப்போமோ" என்ன; *தேஷாம தத்வசநம் ச்ருத்வா க்ரோத பர்யாகுலாக்ஷரம—ஸராஜா புநரேவைதா நிதம் வசந மப்ரவீத. ப்ரத்யாக்

கயாதோ பகவதா குருபுத்ரைஸ் த்தைவச—அநயாம்கதிம கமிஷ்யாமி ஸ்வஸ்தி வோஸ்து தபோதநா:* என்று—அவன கருத்தனுய, "குருவானவவரும தத்புத்ரர்களான நீஙகளும மாட்டோ மென்றிகோளாகில நான மற்றோரிடததிலே போகிறேன, நீங்கள ஸுகமே யிருங்கோள" என்ன, *ருஷிபுத்ராஸ்து தச்சருத்வா வாக்யம கோராபிஸமஹிதம—சேபு: பரம ஸங்க்ருத்தாச சண்டாளத்வம கமிஷ்யஸி * என்று ஸ்வாசார்யனையும ததபுத்ரர்களான தஙகளையு மிவன் அவமதிபண்ணிச சொன்ன வார்த்தையைக கேட்டு அவர்கள மிகவும கருத்தராய, 'நீ சண்டாளனுகக கடவை' என்று சபிக்க; *அத ராத்ர்யாம வ்யதீதாயாம ராஜா சண்டாளதாங்கத:—நீலவஸ்த்ர தரோ நீல: புருஷோ த்வஸ்தமூர்த்தஜ:—சித்ரமால்யாங்க ராகச்ச ஆயஸாபரணோபவத்* என்கிறபடியே அநந்தரம அவன கர்மசண்டாளனுய்விட்டானிறே. அப்படியே, பாகவதாபசாரம பண்ணினபோதே கர்மசண்டாளனுய, ப்ரஹ்மவர்ச்சஸத்வத்துக குறுப்பாக மார்பிலிட்ட யஜ்ஞோபவீதந்தான சண்டாளவேஷத்துக கடைதத வாராய்விடு மென்கை. அஙகு சாப ஸித்தமாகையாலே ப்ரத்யக்ஷமாய்த்து, இஙகு சாஸ்த்ர ஸித்தமாகையாலே, ஜ்ஞாந த்ருஷ்டி விஷயமாக விருக்கும. *அநாசாராந் துராசாராநஜ்ஞாத்ருந ஹீநஜந்மந:, மத்பக்தாந ச்ரோத்ரியோ நிந்தந் ஸத்யச சண்டாளதாம வ்ரஜேத் * என்னக்கடவதிறே. .... .... (198)

199—200 சண்டாளனோ ஜாதியாகிலும இவனுமொரு காலத்திலே யீடேறுமென்று நினைக்கைக கவகாசமில்லாதபடி, ஜாதி சண்டாளனில கர்மசண்டாளனுககுள்ள தண்மையை யருளிச செய்கிறார் (ஜாதி சண்டாளனுக்கு) என்று தொடஙகி.

**199. ஜாதிசண்டாளனுக்குக் காலாந்தரத்திலே பாகவதனுகைக்கு யோக்யதை யுண்டு, அதுவுமில்லையிவனுக்கு**

அதாவது—ஜாத்யா சண்டாளனுனவனுக்கு தஜ்ஜந்மத்திலேயாதல ஜந்மாந்தரத்திலேயாதல பகவத் கடாக்ஷமுள்ளதொரு காலவிசேஷத்திலே நாமரூபஙகளை யுடையனுய பகவத ஸம்பந்த நிரூபிதனுகைக்கு யோக்யதை யுண்டு, அந்த யோக்யதையுமில்லை பாகவதாபசாரரூப கர்மத்தாலே சண்டாளனுன இப்பாபிஷ்டனுக்கு.

**200. ஆரூடபதிதனுகையாலே.**

200. அதுக்கடி—பாகவதத்வமாகிற உயர்ந்த நிலத்திலே யேறி *பத்மகோடி சதேநாபி நக்ஷமாமி* என்னும்படி அதிக்ரூரமான பகவந் நிக்ரஹத்துக்கு ஹேதுவான பாகவதாபசாரத்தாலே பாறவடியுண்டு அத:பதிதனுகையாலே யென்கை.

201. இதுதான ஜந்மாதிகளாலும ஜ்ஞாநாதிகளாலும அபக்ருஷ்டரானவர்கள உத்க்ருஷ்ட விஷயத்தில பண்ணுமளவிலேயோ, அவற்றா லுத்க்ருஷ்டரானவர்கள அபக்ருஷ்ட விஷயத்தில பண்ணுமளவிலு மொக்குமோவென்ன வருளிச்செய்கிறார் (இது தனக்கு) இத்யாதியாலே.

**201. இது தனக்கு அதிகாரிநியம மில்லை.**

அதாவது—பாகவதாபசாரத்துக்கு அப்படி யிருப்பதோ ரதிகாரிநியதி யில்லை யென்கை. .... .... ... .... .... (201)

202. இது தனக்கு ப்ரமாணமுண்டோ வென்று மாகாங்க்ஷையிலே யருளிச் செய்கிறார் (தமர்களில) என்று தொடங்கி.

202. "தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும்" என்கையாலே.

அதாவது—ஸாங்கமாக ஸகல வேதங்களையும் அத்யயநம் பண்ணி தத்ய ச்ரேஷ்டருமாய் உத்க்ருஷ்ட ஜந்மாக்களுமா யிருந்தார்களேயாகிலும், தேவரீர் திருவடிகளில் ஸம்பந்தைக நிரூபகரான ஸ்ரீவைஷ்ணவர்களை ஜந்மாதிகளை யிட்டு நிந்திப்பர்களாகில், காலாந்தரே தேசாந்தரே யன்றிக்கே அப்போதே யவ்விடந் தன்னிலே யவர்கள் தாங்கள் சண்டாளரும் இவர்களுக்கொரு போலிமாத்ரமென்னும் படி யவர்களிற் காட்டி லதயந்த நீசராவரென்று, தத்வயாதாத்ம்ய தர்சிகளான தொண்டரடிப்பொடியாழ்வா ரருளிச்செய்கையாலே யென்கை. .... (202)

203. இவ்வர்த்தவிஷயமாக இரண்டு ஐதிஹ்யத்தை ஸ்மரிப்பிக்கிறார் (இவ விடத்திலே) என்று தொடங்கி.

203. இவ்விடத்திலே வைநதேயவ்ருத்தாந்தத்தையும் பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது.

(வைநதேய வ்ருத்தாந்தமாவது)—விச்வாமித்ரன்பக்கலிலே வித்யைகளெல்லா மதிகரித்த காலவனென்கிற ப்ராஹ்மணன், குருதக்ஷிணை கொடுத்தாலொழிய நமக்கு இவ்வித்யைகள் நிலைநில்லாது என்று பார்த்து, "நானிங்குத்தைக்கு தக்ஷிணையாகத் தரத்தக்க தேது" என்று கேட்க; "நீ நமக்கொன்றும் செய்யவேண்டா, நாமுன்னுடைய சுச்ரூஷையாலும் பக்தியாலும் மிகவும் ப்ரீதரானோம், இனியுன்னுடைய இஷ்டத்திலே போயிரு" என்று பலகாலும் சொன்னவளவிலும், இவனதுசெய யாதே, ஸர்வதா, என்பக்கலிலே தக்ஷிணை வாங்கிக்கொள்ளவேணும் என்று அதி நிர்ப்பந்தம் பண்ணுகையாலே, *கிஞ்சிதாகத ஸம்ரம்போ விச்வாமித்ரோப்ரவீ திதம்—ஏகதச்ச்யாம காந்நாம சதாந்யஷ்டௌ து தேஹி மே; ஹயாநாம சந்த்ர சுப்ராணாம் கச்ச காலவ மாசிரம்* என்று—அவன் குபிதனாய், இவனைப்பார்த்து, *உடம்பெங்கும் சந்த்ரமண்டலம்போலே வெளுத்து ஒருசெவி பச்சையாயிருக்கும் எண்ணூறு குதிரை நமக்குக் கொண்டுவந்து தா என்ன; இத்தைக் கேட்டு மஹா வ்யாகுலனாய், இதுக் கினிச் செய்வதென்? என்று பஹுமுகமாக விசாரித்து, ஸர்வாபேக்ஷித ப்ரதனான ஸர்வேச்வரனை யுபாஸிப்போம் என்று உத்யோகிக்கிறவளவிலே, முன்பே யிவனுக்கு ஸகாவா யிருக்கிற பெரியதிருவடிநாயனார் இவனுக்கு வந்து முன்னிற்க; அவரை ஸ்தோத்ரம் பண்ணி, இதுக்குச்செய்ய வடுப்பதென்? என்று கேட்க, அவர், உன்னை நானிப்பூமி எங்கும் கொண்டுபோகிறேன் இருவருங்கூட ஆராய்வோம் வா என்று, இவனை இடுக்கிக்கொண்டு திரிகிறவளவிலே, இளைப்பானவாறே, இங்கே யிளைப்பாறிப் போகக்கடவோம் என்று, மேல் ஸமுத்ரத்திலே ருஷபம் என்கிற பர்வதத்தின்மேலே வஸியா நிற்பாளாய ஜ்ஞாநாதிகையா யிருக்கிற சாண்டிலி என்கிற பாகவதையைச் சென்றுகண்டு அபிவாதநாதிகள் பண்ண; அவள் அத்யா தரத்தோடே மிகவும் ஸத்கரிக்க; அநந்தரம், விச்ராந்தராய சயிக்கிறவளவிலே; இப்படி விலக்ஷணையா யிருக்கிற விவள் ஒரு விலக்ஷண தேசங்களிலே வஸிக்கப்

அதாவது—ஹிதபரனன ஆசாரயன ஸவோபதேசாதிகளாலே சிஷயாதம ரக்ஷணம பணணுமிடத்தில, நான ரக்ஷித்துககொணடு போருகிறேன எனகிற ஹங்காரம, ஆசாரய பாரதந்த்ர்யமாகிற தனனதிகார விரோதி, ப்ரியபரனான சிஷயன தரவயாதிகளாலே ஆசார்ய தேஹரக்ஷணம பணணுமிடத்தில, என னுடைய தரவயங களாலும கரணஙகளாலும இபபடி ரக்ஷித்துககொணடு போருகிறேன எனகிற மமகாரம, சரீராத்த ப்ராணாதிகளெலலா மாசார்யசேஷமென றிருககககடவ தனன திகார விரோதி யெனகை. (336)

337. ஆசாரயனுககும சிஷயனுககும தநதாமுடைய தேஹரக்ஷண தசையில பரதிபததி விசேஷஙகளை வகுத தருளிச செயகிறார மேல (ஆசாரயன) என று தொடஙகி

337 ஆசாரயன தனனுடைய தேஹரக்ஷணம தன வஸதுவைககொணடு பண்ணககடவன ; சிஷயன ஸவதேஹரக்ஷணம ஆசாரயனவஸது வைககொணடு பணணககடவன.

(ஆசாரயன தனனுடைய தேஹரக்ஷணம தன வஸதுவைககொணடு பண்ணக கடவன) என றது— *சரீரமர்த்தம பராணஞச ஸத்குருப்யோ நிவேதயேத* எனகிற படியே சிஷய ஸாவஸவமும அடியிலே ஸமாபபிதமாகையாலே ஸவதேஹரக்ஷ ணததுக குறுப்பாக வவன காலோசிதமாக கிஞசிதகரிககுமவறறை, அவனதெனனும நினைவின றிககே தனனதென று வாஙகி வினியோகங கொளளககடவ னெனகை

(சிஷயன ஸவதேஹரக்ஷண மாசார்யன வஸதுவைககொணடு பண்ணக கடவன) என றது—தனககோருடைமை யின றிககே ஸகலமுமாசாரய சேஷமாகை யாலே, ஸவதேஹரக்ஷணததுக குறுபபாக விநியோகங கொளளுமவறறை ஆசாரய னுடைய தென று ப்ரதிபததிபணணி விநியோகங கொளளககடவனெனனகை. (337)

338 ஆசார்ய தேஹரக்ஷணததில வநதால, சிஷயன தனககுளள தலலா மஙகுததை யுடைமையெனனும நினைவாலே கொடுககையும, ஆசாரயனும தாதருச வஸதுவை வாஙகுகையுமொழிய, சிஷயனுடைய மமதா தூஷிதமான வஸதுவை யிருவரும கொளளவும கொடுககவும கடவாகளலல ரெனகிறார் (ஆசாரயன சிஷயன வஸதுவை) என று தொடஙகி.

338. ஆசார்யன் சிஷயனவஸதுவைக கொள்ளககடவனல்லன , சிஷயன தன வஸதுவைக கொடுககக் கடவனலலன

(சிஷயன வஸதுவைக கொளளககடவ னலலன) என றது—இவன மதீயம என றபிமாநிததிருககும வஸதுவை மறநதும அஙகீகரிககக கடவனலல னெனகை. (சிஷயன தன வஸதுவைக கொடுககக கடவனலலன) என றது—ஸவகீயம என றபி மாநிததிருககும வஸதுவை, அஹஙகார மமகார ஸபாசமுளளவை விஷம என று வெருவியிருககும மருது பரகருதியான வாசாரயனுககு, விஷத்தை யிடுமாபோலே ஸமாபபிககககடவனலல னெனகை. (338)

339. அப்படி கொள்ளுதல கொடுத்தல் செய்தால வருவதெனனென்ன வருளிச்செய்கிறார் (கொள்ளில) என்று தொடங்கி.

339. கொள்ளில் மிடியனும், கொடுக்கில் கள்ளனும.

அதாவது—சிஷ்யன என்னது என்றிருக்கும வஸ்துவை சாபலத்தாலே ஸ்வீகரிக்கில, ஈச்வரன அகிலபர நிர்வாஹகனாயப் போருகையாலே நமக்கென்ன குறையுண்டு என்றிருக்கும பரிபூர்ணனை தான தேஹ யாத்ரைக்குங்கூட முதலற்ற தரித்ரனாயவிடும; என்னது என்று புத்திபண்ணி ஒன்றை யாசார்யனுக்குக்கொடுக்கில *சரீரமர்த்தம* இத்யாதிப்படியே அடியிலே ஸமர்ப்பிதமாகையாலே ததீயமாயிருக்கிற வதிலே மதீயத்வ புத்தி பண்ணுகையாலே ஆசார்ய ஸ்வாபஹாரியாய் விடுமெனகை.

340. இவ்வளவேயன்று, ஸம்பந்த ஹாநியும வருமெனகிறார் (கொள கொடை) என்று தொடங்கி.

340. கொள கொடையுண்டாகில் ஸம்பந்தம குலையும்.

அதாவது—சிஷ்யாசார்யத்வமாகிற ஸம்பந்தமுண்டானால, சேஷபூதனான சிஷ்யன *சரீரமாதகம* இத்யாதிப்படியே ஸர்வமும மதீயத்தையத் தென்னும நினைவாலே ஸமர்ப்பிக்கையும, அப்படி ஸமர்ப்பித்தவற்றை சேஷியான வாசார்யன அங்கீகரிக்கையும முறையாயிருக்க, இவன தன்னது என்றபிமானித்தவற்றை ஆசார்யன் ஸ்வீகரிக்கையும, இவன என்னது என்றபிமானித்ததொன்றை ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கையுமாகிற முறைகேடான கொளகொடை யுண்டானபோது, சிஷ்யாசார்யத்வரூப ஸம்பந்தம குலைந்தேவிடு மெனகை. (340)

341. இப்படி தாரித்ரயதரவ்யாபஹாரங்கள வருவதும ஸம்பந்தங் குலைவதும கொளகொடைதா னுண்டாகிலிறே, அதுதானிவர்கள செய்யார்களென்னுமிடத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார (இவன) என்று தொடங்கி.

341. இவன மிடியனாகையாலே கொடான, அவன பூர்ணனாகையாலே கொள்ளான்.

அதாவது—சிஷ்யனான இவன, "ஸகலமு மாசார்ய ஸ்வம, நமமதென்று ஸமர்ப்பிக்கலாவ தொன்றுமில்லை" என்றிருக்கும மிடியனாகையாலே, நாம அங்குத்தைக்கு ஒன்றைக கொடுக்கிறோம என்று கொடான, ஆசார்யனானவன, "ஈச்வரன ஸகலபர நிர்வாஹகனாய நடத்திக்கொண்டு போருகையாலே நமக்கினியென்ன குறையுண்டு" என்றிருக்கும பரிபூர்ணனா யிருக்கையாலே, இவனபிமான துஷ்டமானவை யொன்றையு மங்கீகரியா னெனகை. (341)

342. இந்த பூர்த்தி தாரித்ர்யங்களா லிருவர்க்கும பலித்தவற்றை யருளிச்செய்கிறார் (அவனுக்கு) என்று தொடங்கி

342 அவனுக்குப பூர்த்தியாலே ஸ்வரூபம ஜீவித்தது, இவனுக்கு மிடியாலே ஸ்வரூபம ஜீவித்தது.

அதாவது— ஆசார்யனுக்கு, இவனபிமான துஷ்டமானவை யொன்றையும கொள்ளாமைக்கு உடலான பூர்த்தியாலே ஆசார்யத்வமாகிற ஸ்வரூபம ஜீவித்தது;

சிஷ்யனான இவனுக்கு, ஸ்வகீயத்வ புத்த்யா ஒன்றையும் ஸமர்ப்பிக்கைக்கு யோக்யதையில்லாத ஸகல ததீயத்வ ப்ரதிபத்தி ஸித்த தாரித்ர்யத்தாலே சிஷ்யத்வமாகிற ஸ்வரூபம் ஜீவித்ததென்கை. (342)

343. இனி, சிஷ்யனாசார்யனுக்குப் பண்ணு முபகார மின்னதென்ற ருளிச் செய்வதாக, தத்விஷய ப்ரச்நத்தை யநுவதிக்கிறார் (ஆனால் சிஷ்ய னாசார்யனுக்குப் பண்ணு முபகார மொன்றுமில்லையோ வென்னில்) என்று

343 ஆனால் சிஷ்யன் ஆசார்யனுக்குப் பண்ணுமுபகாரம் ஒன்றுமில்லையோ வென்னில்

அதாவது—இப்படி கொள்கொடைகளுக்கு யோக்யதை இல்லையாகிலும், உபகார ஸ்ம்ருதியுடைய சிஷ்யன் மஹோபகாரகனான ஆசார்யனுக்குப் பண்ணு முபகாரமொன்று மில்லையோவென்னி லென்கை (343)

344. அதுக்குத்தர மருளிச்செய்கிறார் (ஆசார்யன் நினைவாலேயுண்டு) என்று.

344 ஆசார்யன் நினைவாலே யுண்டு.

அதாவது—ஸ்வரூபஜ்ஞனான சிஷ்யன் நினைவா லொருக்காலு மொன்றுமில்லை; ஸ்வக்ருஷிபல ஸந்துஷ்டனான ஆசார்யன் நினைவாலே யுண்டென்கை. (344)

345. அதேதென்ன வருளிச்செய்கிறார் (அதாவது) என்று தொடங்கி.

345. அதாவது ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்கள்

(ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்களாவன) ,ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநமும், தத்நுரூபங்களான உபாய வ்யவஸாயமும், உபேயப்ரேமமும், இவை மூன்றுக்கு மநுரூபமான ஸம்யகநுஷ்டாநமும் இத்தால், திருமந்த்ரத்தில் பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களில் ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேமங்களையும், தத்நுரூபாநுஷ்டாநங்களையுஞ் சொல்லுகிறது. (345)

346. ஆசார்யனுக் குகப்பாக இவன்பண்ணும் கைங்கர்யந்தான் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமா யிருக்கையாலே, ப்ரவ்ருத்தி ரூபமானவற்றை அருளிச்செய்த அநந்தரம், நிவ்ருத்திரூபமானவற்றை யருளிச்செய்கிறார் மேல் (ஆசார்ய ப்ரீத்யர்த்தமாக இவனுக்குத் தவிர வேண்டுவது) என்று தொடங்கி.

346 ஆசார்யப்ரீத்யர்த்தமாக இவனுக்குத் தவிரவேண்டுவது பகவத் த்ரவ்யத்தை யபஹரிக்கையும் பகவத் போஜநத்தை விலக்குகையும் குரு மந்த்ர தேவதா பரிபவமும்.

(பகவத் த்ரவ்யத்தை) இத்யாதியாலே, அவைதன்னை உத்தேசிக்கிறார். (346)

347. இப்படி யுத்தேசித்தவற்றின் ப்ரகாரங்களை யடைவே விசதீகரிக்கிறார் மேல் (பகவத் த்ரவ்யாபஹாரமாவது) என்று தொடங்கி.

347. பகவத் த்ரவ்யாபஹாரமாவது ஸ்வாதந்த்ர்யமும் அந்ய சேஷத்வமும்; பகவத் போஜநத்தை விலக்குகையாவது அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை

(பகவத் த்ரவ்யம்) என்கிறது, "பிறர் நன்பொருள்" என்னும்படி ஸ்ரீகௌஸ்துபம்போலே ஈச்வரனுக்கு ஸ்பருஹணீயமான ஆத்மத்ரவ்யத்தை (ஸ்வாதந்தர்யமாவது), சேஷத்வைக நிரூபணீயமான வற்றைத் தனக்குரித்தாக நினைத்திருக்கை. (அந்ய சேஷத்வமாவது), பகவதேக சேஷமானவற்றை தத்தரசேஷமாக நினைத்திருக்கை. இதுதான மாதா பிதராதி தேவதாந்தரபர்யந்தமா யிருக்கும இவையிரண்டும ப்ரதமாக்ஷரத்தில சதுர்த்தியாலும மத்யமாக்ஷரத்தாலும், கழிக்கப்படுகிறவையிறே. இது தன்னை * ஸ்தேந நகருதம பாபம சோரேணாத்மாபஹாரிணா * என்று, ஸகல பாப மூலமாகச் சொல்லாநின்றதிறே (பகவத்போஜநம்) இத்யாதி ரக்ஷணத்தை பகவத் போஜநமென்கிறது, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷண மவனுக்கு பசித்தவனுக் குணவுபோலே தாரகமாயிருக்கையாலே "மண்ணும் விண்ணுமெல்லா முடனுண்ட" என்கிறவிடத்தில, "ரக்ஷண மவனுக்கு தாரகமாகையாலே 'உண்ட' என்கிறது, இல்லையாகில காக்கும என்னவமையும்" என்றிறே நம்பிள்ளை யருளிச்செய்தது ஏவம பூதமான வவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகையாவது, * அவ-ரக்ஷணே * என்கிற தாதுவாலே நிருபாதிக ஸர்வரக்ஷகனுக்கச் சொல்லப்படுகிற வவனுக்கு ரக்ஷிக்க விட மறும்படி ஸ்வயத்நத்தாலேயாதல பிறராலேயாதல தன்னை ரக்ஷிக்கையிலே ப்ரவருத்தனாகை. இதுதான. பகவதேகரக்ஷ்யத்வ பரதிபாதகமான நமஸ்ஸாலே கழிக்கப் படுகிறதிறே (347)

348 அவன ரக்ஷித்தருளும க்ரமந்தா னென்னென்ன வருளிச்செய்கிறா (அவனுடைய) என்று தொடங்கி.

349 அவனுடைய ரக்ஷகத்வக்ரமம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம குருபரிபவமாவது கேட்டவர்த்தத்தின்படி யனுஷ்ட்டியா தொழிகையும அநதிகாரிகளுக்கு உபதேசிக்கையும, மந்த்ர பரிபவமாவது அர்த்தத்தில விஸ்மருதியும விபரீதார்த்தப்ரதிபத்தியும்; தேவதாபரிபவமாவது கரணத்ரயத்தையும அபராபத விஷயங்களிலே ப்ரவணமாக்குகையும, தத்விஷயத்தில ப்ரவணமாக்கா தொழிகையும.

அதாவது—ஸர்வரக்ஷகனான அவனுடைய ரக்ஷகத்வ க்ரமம், ப்ரபந்நபரித்ராண மென்கிற ப்ரபந்தத்திலே விசதமாகச்சொன்னோம, அங்கே கண்டுகொள்வதென்கை. அதிலே, அவனையொழிந்தா ரடங்கலும அரக்ஷக ரென்னுமத்தை ப்ரதிபாதித்த வநந்தரம "ஈச்வரன மாதாபிதாக்கள கைவிட்ட வவஸ்தையிலும *பின்னும் நின றடியேனுக் குற்றானைய வளர்த்து* என்கிறபடியே தன்னுருக்கெடுத்து வேற்றுருக் கொண்டு தாயமுகங்காட்டி இன்சொல்சொல்லியும" என்று தொடங்கி "இவனே யெல்லார்க்கும ரக்ஷகன" என்கிறதளவாக, அவனுடைய ரக்ஷகத்வ க்ரமத்தை ஸுவ்யக்தமாக வருளிச்செய்தாரிறே.

(குருபரிபவம) இத்யாதி (கேட்டவர்த்தத்தின்படி அநுஷ்டியா தொழிகையாவது), ஸ்வோஜ்ஜீவநார்த்தமாக அவனருளிச்செய்யக்கேட்ட த்யாஜ்யோபாதேய ரூபமான வர்த்தவிசேஷங்களுக்குத் தகுதியா யிருந்துள்ள த்யாகஸ்வீகார ரூபமான வநுஷ்டானத்தைப் பண்ணு தொழிகை. (அநதிகாரிகளுக் குபதேசிக்கையாவது),

தனக்குத் தஞ்சமாக அவனுபதேசித்த ஸாரார்த்தங்களை, நாஸ்திகயாதிகளாலே யிதுக்கதிகாரிக ளல்லாதவர்களுக்கு கயாதிலாபாதிகளை நச்சி உபதேசிக்கை (மந்த்ர பரிபவம்) இத்யாதி. (ஆத்மத்தில விஸ்மருதியாவது) ஆசார்யன் அந்த மந்த்ரத்துக்கு அருளிச்செய்த யதார்த்தங்களைப் பலகாலும் மநுஸந்தித்து போக்கிக்கொண்டு போருகை யன்றிக்கே ஔதாஸீந்யத்தாலே மறந்துவிடுகை. (விபரீதார்த்த ப்ரதிபத்தியாவது), ஆசார்யனருளிச்செய்த ப்ரகார மன்றிக்கே, மந்த்ரத்துக்கு விபரீதமாயிருக்கு மர்த்தங்களை இதுக்கர்த்தமென்று ப்ராந்தியாலே ப்ரதிபத்தி பண்ணியிருக்கை (தேவதா பரிபவம்) இத்யாதி. (கரணத்ரயத்தையும் அபராபத விஷயங்களிலே ப்ரவணமாக்குகையாவது) — *விசித்ரா தேஹ ஸம்பத்தி ரீச்வராய நிவேதிதும்* *மாயவனற்னை வணங்கவைத்த கரணமிவை* என்கிறபடியே—பகவத் பரிசர்யார்த்தமாக ஸ்ருஷ்டங்களாய், *உன்சின்னமும் திருமூர்த்தியுஞ் சிந்தித்தேத்திக் கைதொழவே* என்கிறபடியே—அவனை நினைக்கைக்கும் ஸ்துதிக்கைக்கும் வணங்குகைக்கு முறுப்பான மநோவாக்காயங்களை, ஸ்வரூப ப்ராப்தமல்லாத ஹேயவிஷயங்களிலே, மேட்டில நீர் பள்ளத்திலே விழுமாபோலே ப்ரவணமாம்படி பண்ணுகை (தத்விஷயத்தில் ப்ரவணமாக்கா தொழிகையாவது)—*மாலகொள் சிந்தையராய* *நாத்தழும்பெழ நாரணவென் றழைத்து மெய்த்தழும்பத்தொழுது* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே—ஸ்வரூபப்ராப்தமான வவ்விஷயத்தில் மண்டிவிழும்படி பண்ணுவியாதொழிகை. ஆச, *மந்த்ரே தத் தேவதாயாஞ்ச ததா மந்த்ர ப்ரதே குரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா* என்றும் *மந்த்ரநாதம் குரும் மந்த்ரம் ஸமதவே நாநுபாவயேத்* என்றும்—பூஜ்யமாகச் சொல்லப்படுகிற இம்மூன்று விஷயத்தையும் பரிபவிக்கையாவ திவையாய்த்து. (348)

349. ஆக, இப்படி ஆசார்ய ப்ரீத்யர்த்தமாகச் செய்யவேண்டுமவையும், தவிர வேண்டுமவையு மருளிச்செய்தாராய் நின்றார் கீழ், இன்னமு மிவனுக் கபேக்ஷிதமாயிருப்பதொன்றை அருளிச்செய்கிறார் மேல (இவனுக்கு) என்று தொடங்கி

**349 இவனுக்கு சரீராவஸாநத்தளவும் ஆசார்ய விஷயத்தில் "என்னைத் தீமனம் கெடுத்தாய" "மருவித்தொழும் மனமே தந்தாய" என்று உபகாரஸ்ம்ருதி நடக்கவேணும்.**

அதாவது—இவ்வதிகாரிக்கு, சரீரத்தோடிருக்கும் காலமித்தனையும் மஹோபகாரகனான வாசார்யன் பக்கலில், என்னுடைய தீயமனஸ்ஸைப் போக்கினாய், அநந்ய ப்ரயோஜநமாக வநுகூல வ்ருத்திகளைப் பண்ணும் மநஸ்ஸைத் தந்தாய என்று உபகார ஸ்மருதி யநுவர்த்திக்கவேணுமென்கை (349)

350. மநஸ்ஸுக்குத் தீமையாவ தேதென்னு மாகாங்க்ஷயிலே யருளிச்செய்கிறார் மேல (மநஸ்ஸுக்கு) என்று தொடங்கி.

**350 மநஸ்ஸுக்குத் தீமையாவது ஸ்வகுணத்தையும் பகவத் பாகவத தோஷத்தையும் நினைக்கை**

(ஸ்வகுணத்தை நினைக்கையாவது)—சமதமாத் யாத்ம குணங்கள் தனக்குண்டானாலும் *நிறைவொன்றுமிலேன்* *கலந்தாரெனன்றுமிலேன்* என்கிறபடியே—நமக்கோராத்மகுணமுமில்லை என்று தன் வெறுமையை யநுஸந்திக்க வேண்டியிருக்க, இவையெல்லாம் நமக்கிப்போதுண்டென்று தனக்குண்டான ஸத்குணங்களைப் போரப்பொலிய நினைக்கை (பகவானுடைய தோஷத்தை நினைக்கையாவது), தனக்குப் பரதந்த்ரமான இவ்வாத்ம வஸ்துவைத் தன்னுபேக்ஷையாலே அநாதிகாலம் கர்மத்தை வயாஜமாக்கிக் கைவிட்டிருந்தவன், அவ்வளவு மன்றிக்கே நிர்தயரைப்போலே யதாகர்ம பலதாயியாய் நிரயங்களிலே தள்ளி யறுத்தறுத்துத் தீத்துமவன் கைக்கொண்டாலும் நிரங்குச ஸ்வதந்த்ரனுகையாலே இன்னபோதின்னபடி செய்யும் என்று விச்வஸிக்கவொண்ணாதவன் என்றாப்போலவும், க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்வைர விஹாரங்களையிட்டு தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணப் பிறந்தவனுக்கு இங்ஙன் செய்கை முறைமையா யிருந்ததில்லையீ! என்றாப்போலவும் நினைக்கை அல்லது, ஸமஸ்த கல்யாண குணாத்மகமான விஷயத்தில் நினைக்கலாவதொரு தோஷமில்லையிறே. இனி, (பாகவத தோஷத்தை நினைக்கையாவது), திரு மேனியோடே இருக்கையாலே மேலெழுந்த தோற்றுகிற வாகாரங்களையிட்டு, ப்ரக்ருதி வசயா, அஹங்கார க்ரஸ்தரா என்றாப்போலே நினைக்கை. ஆக, இது ஸ்வகுணத்தையும் பகவத் பாகவத தோஷத்தையும் நினைக்கையாவது (350)

351. ஆனால், தனக்குச் சில குணமுண்டாயிருக்க அது நினைக்கலாகாதென்கிறபோலே, அததலைக்கும் சில தோஷமுண்டாயிருக்க நினைக்கலாகாதென்கிறதோ வென்ன அருளிச்செய்கிறார் (தோஷம் நினையாதொழிகிறது) என்று தொடங்கி.

**351 தோஷம் நினையாதொழிகிறது குணம்போலே யுண்டாயிருக்கவன்று, இல்லாமையாலே.**

அதாவது—பகவத் பாகவத விஷயங்களில் தோஷம் நினையாதொழிகிறது, தனக்கு குணமுண்டாயிருக்க அது நினையாதொழிகிறாப்போலே உண்டாயிருக்க நினையாதொழிகிறதன்று, முதலிலே இவ்விஷயங்களில் அதில்லாமையாலே யென்கை. எங்ஙனே யென்னில்? ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வாராதபடி தானிட்ட கட்டளையிலே அங்கீகரிக்கைக்காக, "ஒன்றி யொன்றி யுலகம் படைத்தான்" என்றும், "எதிர் சூழல்புக்கு" என்றும் சொல்லுகிறபடியே, ஸகலாத்மாக்களுடையவு முஜ்ஜீவநத்துக்கு ஸ்ருஷ்ட்யவதாராதிகளாலே க்ருஷி பண்ணிக்கொண்டு போருகையாலே, அநாதிகால முபேக்ஷகனயக் கைவிட்டிருந்தா னென்னவொண்ணாது, நிர்தயரைப்போலே கர்மாநுகுணமாகத் தண்டிக்கிறதும், மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனய்ச் செய்கையாலே உஜ்ஜீவநத்துக்குடலாமித்தனை, நிரங்குசஸ்வாதந்த்ர்யம் பூர்வம் பந்தஹேதுவாயப் போந்ததேயாகிலும், க்ருபா பரதந்த்ரனய் அங்கீகரித்த பின்பு, நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகளோடு ஸமான போகபாகியாக்குமளவில் நிவாரகரற்ற செய்கைக்குறுப்பா மித்தனை ஆகையாலே, சலாக்யமாமித்தனை; க்ருஷ்ணாவதாரத்தில் ஸ்வைர விஹாரம் *யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத்* என்கிறபடியே தனக்கிந்த போகத்தி லொட்டில்லாமையை வெளியிடுகைக்காகவும், "கோப்ய: காமாத்" என்கிறபடியே அவ்வழியாலே யவர்

களைத் தனபககல ப்ரவணராககி உததரிபபிககைககாகவும செயததாகையாலே, குணமித்தனையலலது குறறமனறு. இனி, பாகவதர்களும "குறறமினறிக குணம பெருககி" எனகிறபடியே, நிர்தோஷராய நிரவதிககுணரா யிருககையாலே, உளளுற வாராயநது பார்த்தால, அவர்கள பககலிலும காணலாவதொரு தோஷமிலலையிறே. மறறுமிபபுடைகளிலே பகவத் பாகவத விஷயஙகளில தோஷஙகள தோறறிறறுகில பரிஹாரஙகள கணடுகொளவது. இததையெலலாம திருவுளளமபறறியாயத்து (இலலாமையாலே) எனறிவ ரருளிசசெயதது. (351)

352. தோஷமிலலை எனறு ஸவபக்ஷததாலே ஸாதித்தார் கீழ, இனி, பர பக்ஷத்தாலே தோஷஸதபாவததை அஙகீகரிததுககொணடு தத்பரிஹாரததை அருளிசசெயகிறார் மேல (தோஷமுணடு) எனறு தொடஙகி

352. தோஷமுணடெனறு நினைககில அது பரதோஷமனறு, ஸவதோஷம.

அதாவது, கீழச சொனனபடியனறிககே பகவத பாகவத விஷயஙகளில தோஷமுணடெனறு நினைககில, அவாகள பககல தனககுத தோறறுகிற தோஷம அவர்கள தோஷமனறு; தத தரஷடாவான தனனுடைய தோஷமெனகை (352)

353 அது ஸவதோஷமானபடியை ஸாதிககைககாக தத்விஷய ப்ரசஙகததை அநுவதிககிறார் (ஸவதோஷமானபடி யெனனெனனில) எனறு.

353. ஸவதோஷமானபடி யென்னெனனில்,

பரகதமாய்த் தோறறுகிறவது ஸவதோஷமானபடி யெஙஙனேயெனனி லெனறபடி. (353)

354. அதுக குத்தர மருளிசசெயகிறார் (ஸவதோஷததாலும) இதயாதியாலே.

354. ஸ்வதோஷததாலும பநததராலும்

அதாவது—காசாதிதுஷட த்ருஷடிமானுககு, சநதர த்விதவாதிகள தோறறு மாப்போலே, நிர்தோஷமான விஷயஙகளிலே தோஷம தோனறுமபடியான துர் வாஸநாதுஷட சித்ததையாகிற ஸவதோஷத்தாலும, பித்ராதிகள தோஷம புதராதி களதாமாப்போலே அவர்களுககுணடான தோஷம தனனதாமபடி அவாகளோடு தனககுண்டான பநத விசேஷத்தாலு மெனகை. (ஸவதோஷததாலும) எனகிற விது, அத்தலையில தோஷாபாவத்தைப பறறச சொலலுகிறது, மறறையது, தோஷ வத்தையை அங்கீகரித்துககொணடு சொல்லுகிறது. (354)

355. ஸவதோஷத்தாலே எனனலாவது தோஷநதானுணடாலெனறே வெனன அருளிசசெயகிறார் (தோஷமிலலையாகில) எனறு தொடஙகி

355 ஸவதோஷமில்லையாகில் குணப்ரதிபததி நடககும.

அதாவது—சநத்ர தவிதவ தாசநஹேதுவான சக்ஷுராதோஷமிலலாதபோது

சந்த்ரைகத்வமே தோற்றுமாப்போலே, தோஷதர்சந ஹேதுவான ஸ்வசித்த தோஷ மில்லாதபோது பகவத பாகவத விஷயங்களில குணப்ரதிபத்தியே நடக்குமெனகை. அது நடவாமையால தோஷமுணடென்று கொள்ளவேணுமென்று கருத்து. (355)

356, நடந்ததில்லையாகில வரும தோஷமெனனென்ன அருளிச்செய்கிறார் (நடநததில்லையாகில) என்று தொடங்கி.

356. நடந்ததில்லையாகில் தோஷஜ்ஞாநமே தோஷமாம்

அதாவது—குணப்ரதிபததி நடவாதொழிந்தால் தோஷ ப்ரதிபத்தியிறே நடப்பது, அந்த தோஷஜ்ஞாநந்தானே இவனுக்கு பகவந் நிக்ரஹஹேதுவான தோஷமாம; இதடியாக வேறொரு தோஷமுண்டாமென்ன வேண்டாவெனகை. இததால, இது அவசயம பரிஹரணீய மெனனுமிடம சொலலிற்றாயதது. (356)

357 இதுதானெல்லாம சொல்லவேண்டுவது இதுதனககு அவகாசமிவனுக குண்டாலுலிறே யெனகிறார மேல (இதுதனக கவஸரமில்லை) என்று.

357. இதுதனக்கு அவஸரமில்லை.

அதாவது—பகவத் பாகவத தோஷசிந்தநமாகிறவிதுதனககு அவஸரந்தானிவனுக்கு முதலிலே யில்லையெனகை. (357)

358. அதெத்தாலேயெனன அருளிச்செய்கிறார் (ஸ்வதோஷததுககும) என்று தொடங்கி.

358. ஸ்வதோஷத்துக்கும் பகவத பாகவத குணங்களுக்குமே காலம போருகையாலே.

அதாவது—"நீசனேன நிறைவொன்றுமிலேன" "பொய்ந்நின்ற ஞானமும பொல்லாவொழுககு மழுக்குடமபு, மிந்நின்ற நீர்மை" "அமர்யாதஃ க்ஷுத்ரஃ" "வித் வேஷமாநமக்ராக விலோப மோஹாதயாஜ்ஞாநபூமிஃ" * அதிக்ராமந் நாஜ்ஞாமதவவிதி நிஷேதேஷூபவதேப்யபிதருஹ்யந வாகதீக்ருதிபிரபி பகதாய ஸததம, அஜ்ஞாநந் ஜ்ஞாநநவா பவதஸஹநீயாகஸி ரதஃ* * ஸ்ரீரங்கேச தவத குணநாமிவாஸமததோஷாணும கஃ பாரதருசவா யதோஹம * இதயாதிகளிற சொலலுகிறபடியே, அநவதிகமான தனனுடைய தோஷாநுஸந்தாநத்துககும, அந்த தோஷததைப பாராம லங்கீகரிததருளின பகவானுடையவும "வேதம வலலார்களைககொணடு" என்றும * போதயநதஃபரஸ்பரமென்றும* அவனடியார் சிறுமாமனிசரா யெனனையாண்டா ரிங்கேதிரிய, நறுமாவிரை நாணமலரடிககீழ புகுதல, உறுமோ" என்றுஞ சொலலுகிறபடியே, புருஷகாரமும உசாததுணையும ப்ராப்யருமான பாகவதாகளுடையவும், * ஸமஸத கல்யாண குணம்ருதோததிஃ* *அஸங்கயேய கல்யாண கணகணௌகமஹார்ணவ" *யதா ரத்நாநி ஜலதே ரஸங்கயேயாநி புத்ரக, ததா குணஹ் யநநதஸய அஸங்கயேயா மஹாத்மநஃ" என்றும, * நாஹம ஸமாததோ பகவத ப்ரியாணாம வக்தும குணாந பத்மபுவோப யகஃயாந * என்றுஞ சொலலுகிறபடியே அஸங்கயேயமாயிருநதுள்ள குணாநுஸந்தாநஙகளுககுமே காலம போநது மறறொன்றுக கவகாசமில்லாமையாலே யெனகை.

(இவற்றுக்கே காலம் போருகையாலே) என்கையாலே, ஸ்வகுண ஸ்மரணத்துக்கு அவகாசமில்லையென்னுமிடமும் அர்த்தாத்ஸித்தமிறே. (358)

359 ஆக, (மநஸ்ஸுக்குத் தீமையாவது) என்று தொடங்கி இவ்வளவும்—பகவத்பாகவத தோஷஸ்மரண மாகாதென்னுமிடமும், அவர்களுடைய நைர்தோஷ்யமும்; தோஷமுண்டென்று நினைக்கில் அது தத்தோஷமன்று ஸ்வதோஷமென்றும், அது ஸ்வதோஷமாகைக்கு நிதாநங்களும், ஸ்வதோஷாபாவசங்கைக்குத்தரமும், தோஷப்ரதிபத்தி நடக்கிலதுதானே இவனுக்கு மஹாதோஷமாமென்றும், ஸ்வதோஷ பகவத்பாகவத குணாநுஸந்தாநத்துக்கே காலம் போருகையால இதுதனக்கு இவனுக்கவஸரமில்லையென்றும் அருளிச்செய்தாகிற்று. இப்படி தனக்கு உத்தேச்யமான பகவத்பாகவத விஷயங்களில் தோஷம் நினையாமலும் நினைத்தானாகிலுமது தன்னுடைய தோஷமாக நினைத்திருக்கவேணுமென்றருளிச்செய்த ப்ரஸங்கத்திலே, ஸம்ஸாரிகள் தோஷவிஷயாநுஸந்தாநமு மின்னபடியாகவேணு மென்கிறாமேல (ஸம்ஸாரிகள்) என்று தொடங்கி.

359. ஸம்ஸாரிகள்தோஷம் ஸ்வதோஷமென்று நினைக்கக் கடவன்

அதாவது—ஸம்ஸாரிகளுக்குண்டான பகவத் வைமுக்யம், அநாத்மந்யாத்மபுத்தி அஸ்வேஸ்வபுத்தி முதலான தோஷங்கண்டால அந்த தோஷங்களையிட்டு அவர்களை யிகழ்ந்து இவர்களுக்கும் நமக்கும் பணியென்னென்றிராதே அவர்களுடைய தோஷமும் தன்னுடைய தோஷமென்றநுஸந்தித்திருக்கக்கடவனென்கை (359)

360. அதுக்கு ஹேது வென்னென்ன அருளிச்செய்கிறார் (அதுக்கு ஹேது பந்தஜ்ஞாநம்) என்று.

360. அதுக்கு ஹேது பந்தஜ்ஞானம்

அதாவது—தனக்கு சேஷிகளான பகவத்பாகவதர்கள் தோஷம் ஸ்வதோஷமாக வநுஸந்திக்கைக்கு ஹேது அவர்களோடு தனக்குண்டான ஸம்பந்தஜ்ஞாநமானாப்போலே, ஸம்ஸாரிகள் தோஷத்தைத் தன்னுடைய தோஷமாக அநுஸந்திக்கைக்கு ஹேது நாராயணத்வ ப்ரயுக்தமான ஸம்பந்தஜ்ஞாநமென்கை எல்லார்க்கு மீச்வரனோடு ஸம்பந்த மொத்திருக்கையாலே அவ்வழியாலே தனக்கு மவர்களுக்கும் ஸம்பந்தமுண்டாகையாலே, தனக்கு அவர்ஜ்ஞீயரான ப்ரக்ருதிபந்துக்களுக்கு வந்த தோஷம் தனக்கு வந்ததாக நினைத்திருக்குமோபாதி, ஸம்ஸாரிகளுக்குண்டான தோஷம் தன்னுடைய தோஷமென்றே நினைக்கக் குறையில்லையிறே (360)

361 இதுதான் வேண்டுவது அவர்கள் தோஷந்தா னிவனுக்குத் தோன்றிலிறே. அதுதான் முதலிலே யிவனுக்குத் தோன்றதென்கிறார் மேல் (இறைப்பொழுது மெண்ணோம்) என்று தொடங்கி

361. ‘இறைப்பொழுது மெண்ணோம்’’ என்கையாலே அதுதான் தோன்றாது.

அதாவது—*கடல் மல்லைத் தலசயனத் துறைவாரை எண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுது மெண்ணோம்* என்று, பரமபதத்திலே நித்யஸூரிகள் பரிந்து

பரிசர்யை பண்ண விருக்கும் பெருமையை யுடையனாய் வைத்து திருக்கடல் மல்லையிலே வந்து தங்களைப் பெறுகைக்குத் தரைக்கிடைகிடக்கிற நீர்மையை யுடையவனை, இதொருநீர்மை யிருக்கும்படியென! என்று அநநீர்மையிலே தோற்று அநவரதாநு ஸந்தாநம் பண்ணவேணுடியிருக்க, அவனிடையாட்டங்கொண்டு காரியமற்று கேவல தேஹபோஷணாதி பரராயிருக்கிற ஸம்ஸாரிகளை க்ஷணகாலமும் நினையோமெனகை யாலே, ஸம்ஸாரிகள் தோஷந்தா னிவ்வதிகாரிக்குத் தோன்றுமென்கை திருமங்கை யாழ்வாரருளிச்செய்தவிது ஸ்ரீவைஷ்ணவர்களெல்லார்க்கு மொக்குமிறே (361)

362. (தோன்றுது) என்னப்போமோ, *சொன்னால் விரோதம்* *ஒருநாயகம்* *கொண்டபெண்டிர்* இத்யாதியிலே ஆழ்வார்க்குமுட்பட ஸம்ஸாரிகள் குற்றம் தோன்றிற்றில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (தோன்றுவது) என்று தொடங்கி.

362. தோன்றுவது நிவர்த்தநார்த்தமாக.

அதாவது—ஸம்ஸாரிகள் தோஷம் தோன்றுவது அந்த தோஷங்களினின்று மவர்களை நிவர்த்திப்பிக்கைக்காக வென்கை. *சொன்னால் விரோதம்* முதலான வற்றால் ஆழ்வாருமதில் திருவுள்ளம்வைத்தது அஸேவ்ய ஸேவாதிகளினின்று மவர் களை நிவர்த்திப்பிக்கைக்காகவிறே, அதெல்லார்க்கு மொக்குமென்று கருத்து (362)

363. ஆக, இவ்வதிகாரி ஸம்ஸாரிகள் தோஷங்கண்டா லநுஸந்திக்கும் ப்ரகாரமும், தத்தோஷந்தா னிவனுக்குத் தோன்று மென்னுமிடமும், தோன்றுவ தின்னதுக்காகவென்று மருளிச்செய்தார் கீழ், இப்படி காதாசித்கமாகத் தோன்றும் ஸம்ஸாரிகள் தோஷங்களை ஸ்வதோஷமாக நினைத்தும் தந்நிவர்த்தகனாயும் போருமள வன்றிக்கே, ஸ்வவிஷயத்திலே குற்றங்களைச் செய்தால் இவனிருக்க வடுக்கும்படி யருளிச்செய்கிறார் மேல் (பிராட்டி) என்று தொடங்கி

363. பிராட்டி, ராக்ஷஸிகள் குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவி யாதாப்போலே தனக்குப் பிறர்செய்த குற்றங்களை பகவத் பாகவத விஷயங்களில் அறிவிக்கக் கடவனல்லன்

அதாவது—ஏகாக்ஷீ ஏககர்ணீ முதலான எழுநூறு ராக்ஷஸிகள் ஏகதிவஸம் போலே பத்து மாஸம் தர்ஜந பர்த்ஸநம் பண்ணவிருந்த பிராட்டி, இவர்களப்படி செய்த குற்றத்தை பகவத் விஷயமான பெருமாளுக்கும் பாகவத விஷயமான திரு வடிக்கு மறிவியாதாப்போலே, தன்விஷயமாகப் பிறர்செய்த குற்றங்களை பகவத் விஷயத்திலாதல் பாகவத விஷயத்திலாதல் மறந்தும் விண்ணப்பஞ்செய்யக்கடவ னல்லனென்கை (அறிவிக்கக்கடவ னல்லன்) என்கிறது, அவர்கள் திருவுள்ளத் திலே புண்பட்டால் பண்டே யழிந்துகிடக்கிற இவர்களுக்கு மிகவும் விநாச ஹேதுவா மென்று நினைத்து (363)

364. இது ஸிம்புநாயாய ஸித்தமாம்படி நசவரன்படியை அருளிச்செய்கிறார் (அறிவிக்க வுரியவன்) என்று தொடங்கி.

364. அறிவிக்க வுரியவனகப்பட வாய்திறவாதே ஸர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்கு மென்னுநின்றதிறே.

அதாவது—"எதிர்சூழல்புக்கு" என்கிறபடியே தம்முடைய சீலஸௌலப்யாதிகளைக் காட்டி ஸம்ஸாரி சேதநரைத் தப்பாமல் கைப்படுத்திக்கொள்ளுவதாக வந்தவதரித்து தமக்கடியார் வேணுமென்றபேக்ஷித்தால் அவர்கள் அப்படி அநுகூலராய்த் தோன்றுதொழிந்தாலும், "இவர்கள் செய்தபடி செய்கிறார்கள், நாமிவர்களுக்கு குறுப்பாகப் பெற்றோமிறே" என்று அதுதானே போக்யமாக விருப்பர், அதுக்குமேலே அவர்கள் வைமுக்க்யம் பண்ணினார்கள் என்று அவர்கள் குற்றத்தைத் தனியிருப்பிலே பிராட்டிக்கும் அருளிச்செய்யாரென்கிற "சூழ்ந்தடியார்" என்கிற பாட்டிலே, சேதநர் செய்த குற்றங்களைத் தன் திருவுள்ளத்துக் குகந்தவர்களுட னறிவிக்கைக்கு ப்ராப்தனான ஸர்வேச்வரனுடைபடத் தன் திருப்பவளம் திறந்தருளிச்செய்யாதே, தானருளிச் செய்யா தொழிந்தாலும் அறியவல்ல ஸர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்குமென்று சொல்லா நின்றதிறே யெனகை இத்தால், அவனுடைய விப்படி மறையாநின்றால் இவனுக்குப் பின்னைச் சொல்லவேணுமோ வென்றபடி. (364)

365. இப்படி உத்தேச்ய விஷயங்களி லறிவியாதிருக்கும் மாத்ரமும் போராது, குற்றஞ் செய்தவர்கள் விஷயமாக க்ஷமாதயாதிகளும் நடக்கவேணு மென்கிறார் மேல் (குற்றஞ் செய்தவர்கள் பக்கல்) என்று தொடங்கி.

365. குற்றம் செய்தவர்கள்பக்கல், பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்.

(பொறையாவது), அவர்கள் செய்த குற்றத்துக்குத் தாமொரு ப்ரதிக்ரியை பண்ணுதல் நெஞ்சிலே கன்றியிருத்தல் செய்யாமையாகிற அபராத ஸஹத்வம். (க்ருபையாவது), நாம் பொறுத்திருந்தோமாகிலும் எம்பெருமா னுசிதத்தண்டம் பண்ணவன்றோ புகுகிறான், ஐயோ! இனி யிதுக்கென் செய்வோம்! என்கிற பரதுஃக காஸஹிஷ்ணுத்வம். (சிரிப்பாவது), அத்ருஷ்ட விரோதமாக விவர்களால் செய்யலாவ தொன்றில்லையிறே, பாருஷ்யாதி முகத்தாலே காயாதிலாபாதித்ருஷ்ட விரோதங்களிறே இவர்களால் செய்யலாவது, அப்படி சிலவற்றைச் செய்தால் தங்களோபாதி நாமுமிவற்றிலே சபலராய் இவற்றினுடைய ஹாநியைப்பற்ற நெஞ்சாறல் பட்டுத் தளர்வுதோமென் றிருந்தார்களாகாதே, இவர்க ளறிவிலித்தன மிருந்தபடியென! என்று பண்ணும் ஹாஸம். (உகப்பாவது), அவர்கள் பண்ணும் பரிபவாதிகளுக்கு விஷயமான சரீரத்தைத் தனக்கு சத்ருவாகவும், அவர்கள் ஹாநிபண்ணும் த்ருஷ்ட பதார்த்தங்கள் தனக்கு ப்ரதிகூலங்களாகவும் நினைத்திருக்கையாலே, தன்னுடைய சத்ரு விஷயமாக வொருவன் பரிபவாதிகளைப் பண்ணுதல் தனக்கு ப்ரதிகூலங்களானவற்றைப் போக்குதல் செய்தா லுகக்குமாபோலே, அவர்க ளளவில பிறக்கும் ப்ரீதி. (உபகார ஸ்ம்ருதியாவது), நம்முடைய தோஷங்களை நாம் மறந்திருக்கும் தசைகளிலே உணர்த்தியும், நமக்கிவ்விருப்பில் நசையறும்படியான செறுப்புக்களைச் செய்தும், இவர்கள் நமக்குப்பண்ணுகிற உபகாரமென்றான்! என்றிருக்கும் கருத

ஜ்ஞரை (நடக்கவேணும்) என்றது, இவை இத்தனையும் குற்றஞ் செய்தவர் விஷயத்திலே இவனுக்கு அவஶ்யமுண்டாய்ப் போரவேணுமென்று தோற்றுகைக்காக.

ஆக இப்ப்ரகரணத்தால், ஹிதோபதேசஸமயத்தில் விப்ரதிபத்திவிசேஷங்களும், தத்ரஹிதமாக உபதேசிக்கவேணுமென்னுமிடமும், உபதேச ஸாக்ஷாத்பலமும் உபதேஷ்டாவினுடைய ஆசார்யத்வம் ஸித்திக்கும் வழிகளும், விப்ரதிபத்தியுடனுபதேசிக்கில் உபயாகரும் ஸ்வரூப ஸித்தியில்லாமையும், உபதேஷ்டாவான ஆசார்யனுக்கு அவஶ்யாபேக்ஷித குணத்வயமும், ஸாக்ஷாதாசார்யத்வமின்ன மந்த்ரத்தை உபதேசித்தவனுக்கு என்றும் சொல்லுகையாலே, ஸதாசார்ய லக்ஷணத்தையும்; ததநந்தரம் ஸச்சிஷ்ய லக்ஷணத்தையும், தது பயருடைய பரிமாற்றங்களையும், சிஷ்யனுக்காசார்ய விஷயத்தில் "தீமனங் கெடுத்தாய்" இத்யாதிப்படியே யாவச்சரீரபாதமுபகாரஸ்ம்ருதி நடக்கவேணுமென்னு மத்தையும், மநஸ்ஸுக்குத்தீமை யின்னதென்னுமிடத்தையும், அதிலுபாதேயாம்சத்தி னுபபாதநத்தையும், தத்ப்ரஸங்கத்திலே மற்று மிவனுக்கபேக்ஷிதமான அர்த்த விசேஷங்களையும் ப்ரதிபாதிக்கையாலே, கீழ்ச் சொல்லிவந்த தவ்யநிஷ்டனான அதிகாரிக்கு தது பதேஷ்டாவான ஆசார்ய விஷயத்திலுண்டாக வேண்டும் ப்ரதிபத்த்யநுவர்த்தந ப்ரகாரங்களும் சொல்லப்பட்டது. (365)

## பகவந் நிர்ஹேதுக விஷயீகார வைபவம்.

366. இனி, (ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது, பகவத் குணாநுஸந்தாநம் அபயஹேது) என்று தொடங்கி, (நிவர்த்யஜ்ஞாநம் பயஹேது, நிவர்த்தகஜ்ஞாநமபயஹேது) என்னுமளவாக, இவ்வதிகாரிக்கநாதிகாலார்ஜித கர்மவிநாசகாரணமாய் அத்வேஷம் முதலாக ப்ராப்திபர்யந்தமாக நடுவுள்ள பேறுகளுக்கெல்லாம் ப்ரதாந ஹேதுவான பகவந்நிர்ஹேதுக க்ருபாவைபவம் சொல்லப்படுகிறது. ஸம்ஸாரிகள் தோஷமும் ஸ்வதோஷமென்று நினைக்கை முதலாக ப்ரஸக்தாநுப்ரஸக்தமாய் வந்த அர்த்தவிசேஷங்களை ப்ரதிபாதித்துத் தலைக்கட்டின அநந்தரம், கீழ் (ஸ்வதோஷத்துக்கும்) இத்யாதி வாக்யத்திலே இவனுக்கு அநவரதகர்த்தவ்யமாகச்சொன்ன ஸ்வதோஷ பகவத்பாகவத குணாநுஸந்தாநங்களில் வைத்துக்கொண்டு, பாகவத குணாநுஸந்தாநம் ப்ரதிபாத்யாம்சத்துக்கு உபயுக்தமல்லாமையாலே அத்தைவிட்டு, அதுக்குபயுக்தமான ஸ்வதோஷ பகவத் குணாநுஸந்தாநங்களை அங்கீகரித்துக்கொண்டு அவை இரண்டுக்கும் ப்ரயோஜநமின்னதென்கிறார்மேல் (ஸ்வதோஷாநுஸந்தாநம்) என்று தொடங்கி.

366. ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத் குணாநுஸந்தாநம் அபயஹேது.

(ஸ்வதோஷமாவது)—அநாத்ம குணாதிகளும்; அதுக்கு மூலமாய் அநாதிகாலமே பிடித்துக் காழ்ப்பேறிக்கிடக்கிற அவித்யாதிகளும்; ஏததநுஸந்தாநம், இது விதுவாக இன்னம் ஸம்ஸரணம் வரில் செய்வதென்! என்னும் பயத்துக்கு ஹேது. (பகவத்குணமாவது), இத்தோஷத்தைப் பார்த்திகழாமல் அங்கீகரித்து இவற்றைப் பொறுத்து இவ்வாத்மாவைத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகைக்குடலான

அவனுடைய தயாக்ஷாந்த்யாதிகள் ; ஏதத நுஸந்தாநம, அநாதிகாலம ஸமஸாரஹேது வாயப்போந்த ஸவதோஷபலத்தைப் பார்த்து இன்னமு மப்படியாகில செயவதென என்கிற பயத்தினுடைய நிவருத்திகது ஹேதுவெனகை * துரந்தஸ்யாநாதே ரபரிஹரணீயஸயமஹதோ நிஹீநாசாரோஹம நருபசு ரசுபஸ யாஸபதமபி, தயாஸிநதோ பநதோ நிரவதிக வாதஸலய ஜலதே தவஸ்மாரம ஸமாரம் குணகணமிதீசசாமி கதபீ:* என்னககடவதிறே (366)

367. இபபடி இவவிடத்திலே பயாபயஹேதுககளான ஸகலதோஷ ஸகல குணஙகளையும சேரச சொலலியிருககசசெயதே, (இழவுககடி காமம, பேறறுககடி கருபை) என்றும, (காம பலமபோலே கருபாபலமு மநுபவிததேபறவேணும) என்றும, காமத்தையும கருபையையுமே இழவுபேறுகளுககு ஹேதுவாகச சொலலிக கொண்டுபோய, (பயஹேது கர்மம, அபயஹேது காருணயம) என்று நிகமித்தது இவையெலலாவற்றிலு மிவனுககு ஸம்ஸார மோக்ஷஙகளுககு ப்ரதாநஹேதுக களவையாகையாலே, இவை இரணடையும பினசெலலும மற்றுள்ளவையும இவை புககவிடத்தே தானே வநது விடுமிறே. இஙஙனன்றிககே, அவனபடியைநினைதது பயமும, தனபடியைநினைத்து அபயமுமாமளவில அறிவிலிததனமே பலிககுமென கிறார் (பயாபயஙக ளிரண்டும) என்று தொடஙகி.

367. பயாபயங்களிரண்டும மாருடில அஜஞதையே ஸித்திக்கும.

அதாவது—கீழசசொன்னபடியன்றிககே, அநாதிகாலம தனககுப பரதநத்ர மான ஆதமவஸ்துவை கர்மவயாஜத்தாலே ஸமஸரிபபித்துப் போநதவனன்றோ! நிரஙகுசஸவதநத்ரனவவ னின்னமும ஸமஸரிபபிககில செய்வதென ; என்று அவனபடியை நினைதது பயப்படுகையும், முனபுபோலன்றிககே நமககிப்போ தாத்ம குணஙகளுண்டாகையால பேற்றில கணணழிவிலலையென்று தனபடியை நினைத்து பயஙகெடுகையுமாமளவில, தானதனககு நாசகனென்று பயபபடுகையும், ஈசவரனே ரக்ஷகனென்று பயஙகெடுகையுமாகிற ஜஞாத்ருத்வவேஷ மிலலாமையாலே அஜ ஞதையே ஸித்தித்துவிடு மெனகை. (367)

368 (அஜஞதையே ஸிததிககும) என்ற விததைத் தளளுகைககாக, ஆழ வாரகள பாசுரஙகளைககொணடு பரத்யவஸதாநம பணணினவர்கள சஙகையை யநு வதிககிறார் (ஆனால) என்று தொடஙகி.

368 ஆனால "நலிவானின்ன மெண்ணுகின்ருய்" "ஆற்றங்கரைவாழ மரம போலஞ்சுகினறேன" எனகிற பாசுரஙகளுக்கு அடியெனனென்னில்.

அதாவது—இப்படியாகில, ததத்வவிதகரேஸரரான ஆழவார்கள, "உணணிலாவிய வைவரால குமைதீற்றி எனனையுன பாதபஙகயம, நணணிலா வகையே நலிவானின்னமெணணுகின்றாய" என்று, "காட்டிபபடுபபாயோ" எனகிறபடியே விஷயஙகளைக காணில முடியுமபடியான வென்னை, உளளே நிரநதரவாஸம பணணுகையாலே ஆநதரசத்ருககளாயிருககிற இநத்ரியஙகளைநதாலும நலிவுணணுமபடி

பண்ணி ப்ராப்தமுமாய் போக்யமுமான உனதிருவடிகளைக் கிட்டாதபடியாகவே, சரணாகதனான பின்னும் ஸம்ஸாரத்திலே வைத்து நலிய வெண்ணுகின்ருயென்றும்; "மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொ லென்றின்ன மாற்றங்கரைவாழ மரமபோ லஞ்சுகின்றேன" என்று—மநுஷ்யர்களுடைய கர்ப்பஸ்தானத்திலே என்னுடைய கர்மாநுகுணமாக வின்னம் ஸம்ஸரிப் பிக்கிருயோவென்றும், இப்போதிப்போது போய்த்து என்னும்படி பயஸ்தானமான ஆற்றங்கரையிலே வர்த்திக்கிற மரம்போலே உன ஸ்வாதந்த்ர்யத்தை நினைத் தஞ்சாநின்றேன என்றும் அருளிச்செய்த பாசுரங்களுக்கு நிதானமென்னென்னி லென்கை .... .... (368)

369. அதுக்குத்தரம அருளிச்செய்கிருர் (பந்தாநுஸந்தானம்) என்று.

369 பந்தாநுஸந்தானம்.

அதாவது—பேறிழவுகளிரண்டு மவனாலே யென்னலாம்படி நிருபாதிக ரக்ஷகனானவனோடு தங்களுக்குண்டான ஸம்பந்தத்தினுடைய அநுஸந்தான மென்கை. (369)

370 பந்தாநுஸந்தானத்தாலே இப்படி தன்னாலவருமவற்றை அவன குறையாகச் சொல்லலாமோ வென்ன; ஆமென்னு மிடத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிருர் (ப்ரஜை) என்று தொடங்கி

370 ப்ரஜை தெருவிலே யிடறித் தாயமுதுகிலே குத்துமாபோலே, நிருபாதிக பந்துவாய் சக்தனுயிருக்கிறவன விலக்காதொழிந்தால் அப்படிச் சொல்ல லாமிறே.

அதாவது—க்ரீடார்த்தமாகத் தெருவிலே ஓடித்திரிகிற ப்ரஜை, அங்கே யிடறிக் கால் நொந்தவாறே அழுதுகொண்டு அகத்திலே வந்து, தனக்கிவ்வேதனை வந்தது தாயாலேயாக நினைத்து, அவள் முதுகிலே குத்துமாப்போலே, ஒருபாதி ப்ரயுக்தமல்லாமையாலே ஒழிக்க ஒழியாத பந்தத்தையுடையவனுமாய், இச்சேதநனுடைய கர்மத்தோடு ப்ரக்ருதி ப்ராக்ருதங்களோடு வாசியற ஸர்வமும் ஸ்வாதீநமாகையாலே கர்மாநுகுணமாக ப்ரக்ருதி ப்ராக்ருதங்களாலே யிவனபடுகிற நலிவைத் தவிர்க்கைக்கு சக்தனுமா யிருக்கிறவன், நலிவுபடவிட்டு விலக்காதொழிந்தால், அவனிவற்றையிட்டு நலிவிக்கிற னென்னலாமிறே யென்கை. ... ... (370)

371. விலக்காதமாத்ரங்கொண்டு அவனே செய்தா னென்னலாமோவென்ன அருளிச்செய்கிருர் (ப்ரஜையை) என்று தொடங்கி.

371 ப்ரஜையைக் கிணற்றின் கரையினின்றும் வாங்காதொழிந்தால் தாயே தள்ளினு ளென்னக்கடவதிறே.

அதாவது—கிணற்றின கரையிலே ப்ரஜை யிருக்கிறபடியைக் கண்ட மாதாவானவள் அப்போதே யோடிச்சென்று கிணற்றின் கரைநின்றும் வாங்காதொழிந்தால், அக்கிணற்றிலே ப்ரஜை விழுந்தவளவில, "தாயப்போதே சென்றெடுத்தாளாகில் ப்ரஜை விழுமோ, கிணற்றின கரையிலிருப்பை யிவளநுமதி பண்ணியிருக்கையாலேயன்றோ விழுந்தது, ஆனபின்பிவளன்றோ தள்ளினுள்" என்று லோகஞ் சொல்லக் கடவதிறே யென்கை. .. .... .. .... (371)

372. ஆனால், * அப்ரதிஷித்தமநுமதம் * என்கிற ந்யாயத்தாலே, விலக்காமையாவது அநுமதியாய்த்தபின்பு, அவனநுமதியோ பின்னை இவனிழவுக்கு ஹேதுவென்ன அருளிச்செய்கிருர் மேல் (இவனுடைய) என்று தொடங்கி.

### 372 இவனுடைய அநுமதி பேறுக்கு ஹேது வல்லாதாப்போலே அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று.

அதாவது—ரக்ஷ்யபூதனான இவனுடைய ரக்ஷ்யத்வாநுமதி அசித்வ்யாவ்ருத்தி வேஷமாகையாலே பகவல்லாபத்துக்கு ஹேதுவல்லாதவோபாதி, ரக்ஷகனான அவனுடைய ஸம்ஸாராநுமதியும ஸ்வாஜ்ஞாரூப சாஸ்த்ர மர்யாதை ஜீவிக்கைக்காக க்ரமேணங்கீகரிக்கிறேனென்று இவன் ருசிபார்த்திருக்கிற விருப்பாகையாலே தத்லாபத்துக்கு ஹேதுவன்றென்கை (372)

373 இவ்வநுமதி த்வயமும் பின்னை யேதாவதென்ன அருளிச்செய்கிறார் (இரண்டும்) என்று தொடங்கி

### 373. இரண்டு மிருவர்க்கும ஸ்வரூபம

(இருவர்க்கும ஸ்வரூபம்) என்றது, பரதந்த்ரராயும ஸ்வதந்த்ரராயு மிருக்கிற இருவர்க்கும ஸ்வாஸாதாரணாகார மென்றபடி அதாவது, பரதந்த்ரனான இவனுக்கு ஸ்வரக்ஷ்யத்வாநுமதி ஸ்வரூபாதிரேகியல்லாமையாலே ஸ்வரூபம்; ஸ்வதந்த்ரனான அவனுக்கு ஸ்வரக்ஷ்யவஸ்து ரக்ஷணத்தில ஸ்வாஜ்ஞாரூப சாஸ்த்ராநுகுண நிர்வஹணார்த்தமான ஸம்ஸாராநுமதி ஸ்வாதந்த்ர்ய வேஷமாகையாலே ஸ்வரூபமென்கை

374. ஆனால் இழவு பேறுகளுக்கடி யேதென்ன அருளிச்செய்கிறார் (இழவுக்கடி) என்று தொடங்கி.

### 374. இழவுக்கடி காமம; பேற்றுக்கடி க்ருபை.

அதாவது—பகவத் விஷயத்தை அநாதிகால மிழக்கைக்கு ஹேது, "முன் செய்த முழுவினை" என்னும்படி அநாதிகால ஸஞ்சிதமான இவனுடைய கர்மம; இப்படி இழந்துகிடக்கிறவிவனவிஷயத்தைப் பெறுகைக்கு ஹேது, "விதிவாய்க்கின்று காப்பாரார்" என்னும்படி இருகரையுமழியப் பெருகும பகவத் க்ருபையென்கை. (374)

375. இங்ஙனன்றிக்கே மாறிச் சொல்லுமளவில வரும்நாத்தத்தை அருளிச்செய்கிறார் மேல (மற்றைப்படி சொல்லில) என்று தொடங்கி

### 375. மற்றைப்படி சொல்லில இழவுக்குறுப்பாம்.

அதாவது—இப்படியன்றிக்கே, (பயாபயங்க ளிரண்டும மாறுடில) என்கிற விடத்திற்போலே, "இழவுக்கடி ஈச்வர ஸ்வாதந்த்ர்யம, பேற்றுக்கடி சேதந ஸத்குணம்" என்று இழவு பேறுகளுக்கு ஹேதுவை மாற்றிச் சொல்லில ஈச்வரன் கைவாங்குகையாலே அவன் திருவடிகளைப் பெறும விழந்து போகைக்குடலாமென்கை. அதவா, (மற்றைப்படி) இதுயாதிகத்து, "இழவுக்கடி சேதந கர்மம, பேற்றுக்கடி ஈச்வர க்ருபை" என்று இழவிவனாலும பேறவனாலுமாகச் சொன்னபடியன்றிக்கே, இழவு பேறுக ளிரண்டுக்குமடி யீச்வர ஸ்வாதந்த்ர்யமென்று அநாதிகால மிழந்ததுக்குமடி அவனென்று சொல்லில அவன் கைவாங்குகையாலே ஒருகாலமு மவனைப் பெறும விழந்து போகைக்குடலாயவிடு மென்னவுமாம. (375)

376. இப்படி சொல்லுமளவில ஈச்வரன் கைவாங்கு மென்னுமத்தை, லௌகிக நயாயத்தை யுபஜீவித்துக்கொண்டு தாசிப்பிக்கிறார் (எடுக்க நினைக்கிறவனை) என்று தொடங்கி.

376 எடுக்க நினைக்கிறவனைத் தள்ளினுயென்கை எடாமைக்குறுப்பிறே.

அதாவது—ஆழந்த கிணற்றில் தன கர்மாநுகுணமாக அநவதாநத்தாலே விழுந்தவனை அருகினின்று ஒரு கருபாவானுனவ னெடுப்பதாக யதநிக்கிறவள விலே, தான விழுகிறபோது அவனுஸந்நனெனகிறமாத்ரததைக்கொண்டு அவன் தன்னைத் தளளினுனக நினைத்து, "இககிணற்றிலே யென்னை த தளளினயும நீயன்றோ" என்று, "நான செய்யாத காரியத்தை இவன சொல்லுவதே!' என்று சீற்றமெழுந்திருந்து எடாமல கைவாங்குகைக குறுபபாமாப்போலே, ஸ்வகர்மத்தாலே ஸமஸாரமாகிற படுகுழியிலே விழுநதுகிடககிற தன்னை யெடுகக நினைககிற கருபா வானுன வீச்வரனை, "இத்தனை காலமுமென்னை ஸமஸாரததிலே தளளிவிட்டு வைத் தாயும நீயே" என்று, சீறிக கைவாங்கி. படடது படுகிறுன என்றிருந்து விடுகைக குறுப்பாமிறே யெனகை. .. ... .... .... (376)

377. இப்படி சொலலுகை ஈச்வரனுககுச் சீற்றததுக குடலென்னுமிது லௌகிகநயாயத்தைககொண்டு சொல்லவேணுமோ, தத்வ தர்சிகளான திருமங்கை யாழ்வார் பூர்வோகதிக கநந்தரத்திலே தாமே அருளிசசெய்தாரிறே யென்கிருர் (சீற்றமுள) என்று தொடங்கி.

377 சீற்றமுளவென்ற வநந்தரத்திலே யிவவர்த்த்தைத் தாமே அருளிச்செய்தாரிறே.

அதாவது-"இன்னம, மககள தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல்" என்று, ஈசவரன் தன ஸ்வாதநத்ர்யத்தாலே ஸம்ஸரிப்பிககிறுனைகச சொனனவிது, கர்மாநு குணமாக ஸமஸரிககிற ஆத்மாவை ஸமஸாரத்தினின்று மெடுக்கைக்கு கருஷி பண்ணிப்போருமவன திருவுள்ளம சீறுகைக் குடலென்று நினைத்து, கீழ விண்ணப் பஞ் செய்த வார்த்தையாலே திருவுள்ளத்துக்குச் சீற்றமுண்டென்ற முதல் வார்த் தைக கநநதரததிலே, இழவுககடி யவனுகச சொல்லுகை நிகரஹ ஜநகமென்னு மிவ் வர்த்தத்தை முன்பப்படி அருளிசசெயத தாமே அருளிச்செய்தாரிறே யெனகை. 377

378. "சீற்றமுள" என்ற பினபும "ஆகிலும் செப்புவன் என்று முன்பு சொனனது தன்னையே சொலலுகைககு ஹேதுவை, ப்ரசநோத்தரரூபேண ப்ரகா சிப்பிககிருர் (சீறறம) என்று தொடஙகி

378. சீற்றமுண்டென்றறிந்தால் சொலலுமபடி யென்னென்னில், அருளும் ஆர்த்தியும அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும்.

அதாவது—கீழச்சொனன வித்தாலே ஈசவரன திருவுளளத்துககுச் சீற்ற முண்டென றறிநதால பினனையு மிவ்வார்த்தையைக கூசாமல் திருமுனபே சொல் லுமபடி யெஙஙனே யெனனில்? அவன் சீறறத்தைத தன ஸந்நிதியில ஜீவிக்க வொட்டாத பரதுஃகாஸஹிஷ்ணுத்வரூபையான கருபையும், சீற்றங்கணடஞ்சி வாய் மூடவொட்டாதபடி கரையழிந்து செலலுகிற ஸமஸாரார்த்தியும், சீறிபெடுத் தெறி யிலுமவேறு புகலிலலாமையாகிற அநந்யகதித்வமும சொலலுமபடி பண்ணுமென்கை. இத்திருமொழியிலே, "அடைய வருளா யெனககுனறனருளே" "துணியேனினி நினனருளலல தெனககு" "தொண்டரானவர்க கினனருள் செயவாய்" என்று பல விடஙகளிலுமவ்வனருளையும, "ஆற்றஙகரை வாழ மரமபோ லஞ்சுகினறேன" "காம்பத திடைப்பட்ட கலவா மனமபோ லாற்றத் துளககாநிற்பன" "பாம்போடொரு கூரை யிலே பயினறாப்போல தாஙகாதுளளந் தளளும" "இருபாடெரி கொள்ளியுனுள்

ளெறும்பேபோ லுருகா நிற்கு மென்னுள்ளம்" "வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே யுள்ளந் துளங்கா நிற்பன்" என்று பல த்ருஷ்டாந்தங்களாலும் தம்முடைய ஆர்த்யநந்யகதித்வங்களையு மருளிச் செய்தாரிறே (378)

379. இப்படி அநந்யகதித்வாதிக ளுண்டானாலும் அவனுக்குச் சீற்றம் பிறக்கும்படி சிலவற்றைச் சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார் (சீறினாலும்) என்று தொடங்கி.

379. சீறினாலும் காலைக் கட்டிக்கொள்ளலாம்படி யிருப்பாளொருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே

அதாவது—சீறின காலத்திலும் சீற்றத்துக்கு விஷயமானவர்களுக்குச் சென்று திருவடிகளைப் பூண்டுகொள்ளலாம்படி பரமக்ருபாவானா யிருப்பானொருவனைப் பெற்றால் நினைத்தபடியெல்லாம் சொல்லலாமிறே யென்கை (379)

380. சீறின தசையிலும் காலைக்கட்டிக் கொள்ளலாயிருக்கும்படிக்கு ப்ரமாணங் காட்டுகிறார் (* க்ருபயா பர்யபாலயத் * "அரிசினத்தால்") என்று.

380 "க்ருபயா பர்யபாலயத்" "அரிசினத்தால்".

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

அதாவது—* ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம், வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் * என்று, அபராதத்தைத் தீரக்கழியச்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காய்ப் புறம்புபுகலற்றவாறே வந்து திருவடிகளிலே விழுந்த காகத்தை, க்ருபையாலே ரக்ஷித்தா ரென்கையாலும், 'அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன்னருள் நினைந்தே யழுங்குழவி யதுவே போன்றிருந்தேன்'" என்று, பெறுகைக்கு வருந்தி வரங்கிடந்து பெற்ற தாயானவள், இது செய்த தீம்பைக்கண்டு அரிந்துபொகடவேண்டும் சீற்றத்தை யுடையளாய்க் கொண்டு கிட்ட வரவொட்டாமல் தள்ளிவிட்டாலும், வேறு போக்கடியற்று, சீறியெடுத்தெறிகிற அவளுடையமுகத் திரக்கத்தையே நினைத்து அழுது காலைத் தழுவிக்கொள்ளும் குழவி போலே, என்னபராதத்தைக்கண்டு அருகுவாராதபடி நீ தள்ளிவிடப் பார்க்கிலும் திருவடிகளல்லது வேறு போக்கடி யற்றிருந்தேன் என்று ஸ்ரீ குலசேகரப் பெருமாளருளிச்செய்கையாலும், (சீறினாலும் காலைக் கட்டிக்கொள்ளலாம்படி யிருப்பாளொருவன்) என்னுமிடம் ஸித்தமென்கை இப்படி, ஆழ்வா ரருளிச்செய்த இவ்வர்த்தத்தை, " நிரஸ்தகஸ்யாபி ந தாவதுத்ஸஹே மஹேச ஹாதும் தவ பாத பங்கஜம், ருஷா நிரஸ்தோபி சிசுஸ்ஸ்தநந்தயோ நஜாதுமாதுச் சரணௌ ஜிஹாஸதி * என்று ஆளவந்தா ரருளிச்செய்தாரிறே. ஆக, இவ்வளவால், (ப்ராப்யங்க ளிரண்டும் மாறுபடில அஜ்ஞதையே ஸித்திக்கும்) என்றதின்மேல் வந்த சங்கா பரிஹாரங்கள் பண்ணப்பட்டது. (380)

த்ருதீய ப்ரகரணம் முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

மங்களாசாஸந ப்ரகரணமான த்ருதீய ப்ரகரணம் ஸம்பூர்ணம்

ளெறும்பேபோ லுருகா நிற்கு மெனனுள்ளம்'' "வெள்ளத்திடைபபட்ட நரியினம போலே யுள்ளந் துளங்கா நிற்பன'' என்று பல தருஷ்டாந்தங்களாலும தமமுடைய ஆர்த்யநந்யகதித்வங்களையு மருளிச் செய்தாரிறே. (378)

379. இப்படி அநந்யகதித்வாதிக ளுண்டானாலும அவனுககுச் சீற்றம பிறக கும்படி சிலவற்றைச சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார் (சீறினாலும) என்று தொடங்கி.

379. சீறினாலும் காலைக் கட்டிக்கொள்ளலாம்படி யிருப்பானொருவனைப் பெறுகல் எல்லாம் சொல்லலாமிறே.

அதாவது—சீறின காலத்திலும சீற்றத்துககு விஷயமானவர்களுங்குச் சென்று திருவடிகளைப் பூண்டுகொள்ளலாம்படி பரமகருபாவானா யிருப்பானொரு வனைப் பெறறால நினைத்தபடியெல்லாம சொல்லலாமிறே யெனகை (379)

380. சீறின தசையிலும காலைககட்டிக கொள்ளலாயிருககும்படிககு ப்ர மாணங் காட்டுகிறார் (* க்ருபயா பர்யபாலயத் * "அரிசினத்தால்") என்று.

380. "க்ருபயா பாயபாலயத்" "அரிசினத்தால்".

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம.

அதாவது—* ஸதம நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம், வதார்ஹமபி காகு த்ஸ்தஃ க்ருபயா பர்யபாலயத் * என்று, அபராதத்தைத் தீரககழியச்செய்து ப்ரஹ்  மாஸ்த்ரத்துக கிலககாய்ப் புறம்புபுகலற்றவாறே வந்து திருவடிகளிலே விழுந்த காகத்தை, க்ருபையாலே ரக்ஷித்தா ரெனகையாலும; "அரிசினத்தா லீன்றதா யகற்றிடினும மற்றவள்த னருள நினைந்தே யழுஙகுழவி யதுவே போனறிருந்தேன''' என்று, பெறுகைககு வருநதி வரஙகிடநது பெற்ற தாயானவள, இது செய்த தீமையைககண்டு அரிநதுபொகடவேணடும சீற்றத்தை யுடையளாயக கொண்டு கிட்ட வரவொட்டாமல் தளளிவிட்டாலும, வேறு போககடியற்று, சீறியெடுததெறிகிற அவளுடையமுகத் திரககததையே நினைதது அழுது காலைத தழுவிககொள்ளும குழவி போலே, என்னபராதத்தைககணடு அருகுவாராதபடி தேவா தளளிவிடப் பார்க கிலும் திருவடிகளலலது வேறு போககடி யற்றிருநதேன என்று ஸ்ரீ குலசேகரப் பெருமாளருளிசசெயகையாலும; (சீறினாலும காலைக கட்டிககொளளலாமபடி யிருப் பானொருவன்) என்னுமிடம ஸித்தமெனகை இப்படி, ஆழ்வா ரருளிசசெய்த இவ வர்த்தத்தை, "நிராஸகஸ்யாபி நதாவதுதஸ்ஹே மஹேசஹாதும தவபாத பஙகஜம, ருஷா நிரஸ்தோபி சிசுஸ்ஸ்தநநதயோ நஜாதுமாதுச சரணௌ ஜிஹாஸதி* என்று ஆளவந்தா ரருளிசசெய்தாரிறே. ஆக, இவ்வளவுமு, (பயாபயஙக ளிரண்டும மாருடில அஜ்ஞதையே ஸித்திககும) என்றதினமேல வநத சஙகா பரிஹாரஙகள பண்ணப் பட்டது. .... .... .... .... (380)

தருதீய ப்ரகரணம் முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம.

மஙகளாசாஸந ப்ரகரணமான த்ருதீய ப்ரகரணம ஸமபூர்ணம

---

னுமபடி அலபமா யிருககும , பரமாகாசத்தில இவனுடைய நித்யமான விபூதி த்ரிபாத் தெனனுமபடி மும்மடஙகா யிருககும. "இந்த விபூதி த்வய விஷயமான பாதசபத மும தரிபாசசப்தமும அலபதவ மஹத்தவஙகளுக குபலக்ஷணமித்தனையொழிய பரிசசேதபர மனறு, லீலாவிபூதியி லணடங்களதானே அஸஙகயாதஙகளாயிறே யிருப்பது" எனறு தீபபரகாசத்திலே ஜீயரருளிசசெயகையாலே, இவவிபூதியில கார்யரூப ப்ரதேசத்தைப்பறற பரமாகாசத்தில நித்யவிபூதி மும்மடஙகா யிருககு மெனனவுமாம. அனறிககே, "திவி' இதி அப்ராகருதம ஸதாநமுசயதே; தரிபாத த்வஞச, அபராகருதைா போகயபோகோபகரண போகஸ்தாந விசேஷைா வா, பூஷணாஸதராதிரூபேண ஜகதநதாகத வஸதவபிமாநிபி நித்யைர் பகவதநுபவ மாத்ர பரைசச நித்யஸித்தைர் முகதைச சாத்மபிராவா ஸமபவதி" எனறு சருதபர காசிகையிலே படடரருளிச செயதபடியே, அபராகருதமா யிருந்துள்ள போகய விசேஷஙகள போகோபகரண விசேஷஙகள போகஸதாந விசேஷஙகளாகிற மூனறமசஙகளோடே கூடியிருககையாலே, அஸத்ர பூஷணாத்யாயததிறபடியே பூஷணாஸதராதி ரூபத்தாலே ஜகதநதர்கத வஸதவபிமாநிகளான நிதயரும, கேவல பகவதநுபவபரரா யிருககும நிதயரும முகதருமா யிப்படி மூனறமசமா யிருககு மாத் மாககளை உடைத்தாகையாலே யாதல தரிபாதமெனனவுமாம. ஆக, இப்படி லீலா விபூதியில அதயநதவயாவருத்தையாகையாலே நிரதிசய ஸுகாவஹையான நிதய விபூதியிலே.

(பரிபூர்ணநுபவம நடவாநிறக) நிதயமுகதரோடே கூடியிருநது ஒரோனறே நிரதிசயாநநத ஜநகமான ஸவரூப ரூபகுண விபூதிகளெலலாவறறையும யுகபதே வாநுபவிககையாகிற பரிபூரணநுபவம அவிசசிநநமாயச செலலாநிறக வெனகை.

(அது உணடாருககாடடாதே) அதாவது—அபபோதபபோது வடிவு இடடு மாறினைபபோலே புதுககணிதது வரப்பணணு மநத வநுபவமொனறும வடிவில தோறறாதே யெனகை

(தேசாநதரகதனை புத்ரன பககலிலே பிதரு ஹருதயங கிடககுமாபபோலே ஸமஸாரிகள பககலிலே திருவுளளம குடி போய) அதாவது—அநேக புதராகளில வைததுககொணடு ஒருவன ஸவகாமாநுகுணமாக தேசாநதரமே போனால, மறறுண டான புதரர்களும தானுமாயிருநது ஜீவியாநிறகசசெயதேயும, 'இவாகளோபாதி அவனுங கூடவிருநது வாழுகைக கிடடுபபிறநது வைத்தும இதனை யிழநது கிடக கிறானே!" எனறு, தேசாநதரகதனை வந்த புதரனபககலிலே பிதாவினுடைய ஹ்ருதயங கிடககுமாபபோலே, நிதய முகதரும தானுங கூடியிருநது வாழசசெயதே "இபபோகததில பராபதியுணடாயிருகக இசசேதநர் இத்தை யிழநது கிடபபதே!" எனறு தேசாந்தரஸதரான ஸமஸாரிகள பககலிலே திருவுளளம நோககபபோ யெனகை.

(இவாகளைப் பிரிநதால ஆறறமாடடாதே) அதாவது ஸமஹருதி ஸமயத்தில [பராபதி யுண்டாயிருகக] நிதய விபூதியிலே இஸஸமஸாரி சேதநரைப பிரிநது தானிருககுமளவில, புதரபௌதராதிகளோடே ஜீவிததவன அவர்களை யிழநது

தனியனுனைப்போலே, * ஸைகாகீ நரமேத* என்கிறபடியே அவ்விழவு ஸஹிக்கமாட்டாதே யெனகை. ஸமஹ்ருதரா யிருககுமளவிலும இவர்களை சரீரமாகக்கொண்டு தான சரீரியா யிருககசெயதேயும், அதனையொரு கலவியாக நினையாதே, கரண களேபர ஸஹிதராய அவர்கள வர்த்திககிற காலத்தில் அந்தராத்மதயா ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை நிர்வஹித்துககொணடிருக்கை முதலானவறறை இவர்களோட்டைக கலவியாகவும், இவர்கள கரணகளேபர விதுரராய், அசிதவிசேஷிதராய்ககிடகக தான் நித்யவிபூதியிலே யிருக்குமிருப்பு இவர்களைப் பிரிந்திருககிற விருப்பாகவும் அவன நினைத்திருககையாலே (இவர்களைப் பிரிந்தால) எனறருளிச்செய்கிறார்

(இவர்களோடே கலநது பரிமாறுகைககு கரணகளேபரங்களைக கொடுத்து) அதாவது—அந்தராத்மதையாலும அவதாரார்ச சாவதாரஙகளாலும் இவர்களோடே கலந்து பரிமாறுகைக குறுப்பாக, *விசிதரா தேஹஸமபத்தி:* இத்யாதிப்படியே, ஸ்வசரணகமல ஸமாச்ரயணோபகரணங்களான கரணகளேபரஙகளை *தயமாந மநா வாய்க் கொடுத தென்கை.

(அவறறைககொண்டு வ்யாபரிககைககீடான சகதிவிசேஷஙகளையுங் கொடுத்து) அதாவது—அந்த கரணகளேபரங்களைக கொண்டு அறியவேண்டுமவற்றை அறிந்து செய்யவேண்டுமவற்றைச செயது தவிரவேண்டுமவற்றைத் தவிர்ந்து இப்படி வயாபரிககைக கீடான சிசசகதி ப்ரவருத்திசகதி நிவருததிசக்திகளாகிற சகதி விசேஷங் களையுங் கொடுததெனகை

(கணகாணநிற்கில ஆணையிடடு விலககுவர்களெனறு கணணுககுத தோற் றுதபடி) அதாவது—இததனையுஞ்செய்து ஸ்வாமிதவ ப்ராபதிதோறற இவர்கள கண் ணுககு விஷயமாய நிறகில, *த்வமமே* எனறால ஸஹியாமல், *அஹமமே* எனனும ஸவதநதரராகையாலே, எங்கள கணமுகப்பிலே நீயொருககாலும நிற்ககடவை யலலை எனறு திருவாணையிட்டு நிஷேதிப்பாகளெனறு நினைத்து, *நசக்ஷுஷா பசயதி கசசநைநம:* *கட்கிலீ* என்கிறபடியே இவாகள கண்ணுககு ஒருகாலமும விஷயமாகாதபடி யெனகை. (உறங்குகிற ப்ரஜையைத தாயமுதுகிலே யணைத்துக கொண்டு கிடககுமாப்போலே, தானறிந்த ஸமபந்தமே ஹேதுவாக விடமாட்டாதே அகவாயிலே யணைதது) அதாவது—தன்னையும தாயையுமறியாதே கிடந்து உறஙகுகிற ப்ரஜையை வத்ஸலையான மாதாவானவள தானறிநத ரக்ஷ்யரக்ஷக ஸமபந்தமடியாக முதுகிலே யணைத்துககொணடு கிடககுமாப்போலே, அநாதிமாயயா ஸுப்தராய் ஸவ பரஸவரூபங்களி லொன்றையு மறியாமல கிடக்கிற விசசேதநரை சேஷியான தானறிந்த ரக்ஷ்யரக்ஷக ஸமபந்தமே ஹேதுவாக விட க்ஷமனனறிககே, *ஆதமநி திஷ்ட்டந *எனகிறபடியே அநதராதமதவேந இவறறை ஸ்பாசித்துககொண டெனகை

(ஆடசியில தொடாசசி நனறெனறுவிடாதே ஸத்தையை நோககி) அதாவது—ஒருவனுடைமையை யொருவ னபஹரித் தாளாநிறக உடையவனுய வைதது உடை மையை யிழநதவன தனனதெனனு மிடந்தோற்றப் பலநாளும் தொடர்நது போந் தால பினபு வயவஹாரததில விஜயஹேதுவாகா நிற்குமிறே, அபபடியே, "அநுபவ விபவாத்" என்கிற சேதநருடைய ஆட்சியிலும மமதெனனுமிடநதோற்ற ஒருதலை

பற்றிக்கொண்டு போருகிற தொடர்ச்சி ப்ரபலமென்று நினைத்து, அந்தராத்மதயா அவஸ்திதனான தானிவர்களை யொருக்காலும் கைவிடாதே தாரகனாய்க்கொண்டு தார்ய பூதரான இவர்கள் ஸத்தை யழியாமல் நோக்கி யெனகை. (உடன் கேடனாய்) அதாவது—இப்படி ஸத்தாதாரகதயா ஸ்வர்க்க நரக ப்ரவேசாதி ஸர்வாவஸ்தையிலு மிவர்களுக்குத் துணையாய்ப் போருகை (உடன்கேடன்) என்பது, இவன்கேடு தன் கேடாயிருக்குமவனையிறே

(இவர்கள் ஸ்தகர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்க மாட்டாதே அநுமதிதா நத்தைப் பண்ணி உதாஸீநரைப்போலே யிருந்து மீட்கைக் கிடம்பார்த்து) அதாவது—*ஆத்தாவீச்வர தத்கயைவ புருஷஸ் ஸ்வாதந்த்ர்ய சகத்யா ஸ்வயம் தத்தத ஜ்ஞாந சிகீர்ஷண ப்ரயத்நாந் யுத்பாதயந் வர்த்ததே* என்கிறபடியே, அடியிலே தான் கொடுத்த ஜ்ஞாத்ருத்வரூப ஸ்வாதந்த்ர்ய சக்தியாலே ஸ்வருசயநுகுணமாக ப்ரவ்ருத்தி களைப் பண்ணிக்கொண்டு போருகைக்கு யோக்யரான இச்சேதநர், துர்வாஸநாபலத் தாலே பாபகர்மங்களிலே ப்ரவர்த்திக்குமளவிலும் அந்தர்யாமியான தான் நினைத் தால் மீட்கலா யிருக்கச் செய்தேயும், அப்படி செய்யுமளவில் ஸ்வாஜ்ஞாரூப சாஸ்த்ர விநியோகமற்று மென்னுமதைப்பற்றவும், ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமென்னு மதைப்பற்றவும் மீட்கமாட்டாதே அநுமதி தாநத்தைப்பண்ணி, உதாஸீநனன் றிக்கே யிருக்கச்செய்தே இவர்க ளென்பட்டால் நல்லதென்றிருக்கு முதாஸீநரைப் போலே யிருந்தும், அதில் நின்று மவர்களை மீட்கைக் குறுப்பாகச் சொல்லிக் கொள் ளத்தக்கதொரு நன்மையாகிற அவகாசம் பார்த்தென்கை

(நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங் காணாதே) அதாவது—(இப்படி இடம் பார்த்துப் போருமளவில் சாஸ்த்ர மர்யாதாநுகுணமாகவாதல் தானறிந்ததாக வாரோபித்துக்கொண்டாதல் இவர்களை அஸத் கர்மத்தினின்றும் மீட்கைக் கவகாச மாயிருப்பதொரு நன்மை காணாதவளவன்றிக்கே. அவ வஸத்கர்மங்கள் தன்னிலே நன்மையென்று பேரிடுக் கொள்ளலாவதொரு தீமைதானு மகப்படக் காணப் பெறாதே யெனகை. (நன்மையென்று பேரிடலாவதொரு தீமையாவது), ப்ரஹ்மஸை செய்து கொண்டு திரியாநிற்கச் செய்தே பகவத் பாகவத விரோதிகளா யிருப்பாரை யாத்ருச்சிகமாக ஹிம்ஸிக்கை விஷய ப்ரவணனாய் பகவத் தாஸிகளைப் பின்பற்றிப் பலகாலும் கோயில்களிலேபுக்குப் புறப்படுகை, பயிர் தின்றப் பசுவைத் தொடர்ந்தவாறே அதொரு கோயிலை வளைய வருமாகில் அதனை அடிக்கையிலுண்டான ஆக்ரஹத் தாலே தானுமதனை வளையவருகை, நிந்தார்த்தமாகத் திருநாமங்களைச் சொல்லுகை முதலானவை. (நெற்றியைக் கொத்திப் பார்த்தா லொருவழியாலும் பசை காணா தொழிந்தால் அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது) அதாவது—ஸர்ப்ப தஷ்டராய் மருந்தகலப்பரானவர்களை மந்த்ராதிகளாலே யெழுப்புகைக்கு ப்ராண ஸ்திதிபரீக்ஷார்த்தமாக நெற்றியைக் கொத்திப்பார்த்தால் ஒரு ப்ரகாரத்தாலும் ரக்தப் பசை காணாதவளவில், இவ்விஷயம் நமக்கினி கைபுகுராதென்று இழவோடே கைவாங்கும் பந்துக்களைப்போலே, நன்மை காணாதவளவில் விடாதே நன்மை யென்று பேரிடலாவதொரு தீமை காணுமண்டோ வென்னுமளவாகப் பார்த்தவளவி லும் ஒரு ப்ரகாரத்தாலு மிவர்கள்பக்கல் பசைகாணாவிட்டால், இவ்விஷயம் நமக்கு ப்ராபிக்கப்படுமதல்ல, இதனை யிழந்தோமென் றழுது கண்ண நீரோடே மீளுவ

தென்கை. அன்றிக்கே, (நன்மையென்று பேரிட லாவதொரு தீமை) என்கிறது, * சயேநேநாபிசரந் யஜேத * என்று ஆஸ்திக்ய ஜநகமாக விஹிதமாகையாலே நன்மையென்று பேரிடலாயிருக்குமதாய், பரஹிம்ஸையாகையாலே தீமையாயிருக்கிற சயேநவித்யநுஷ்டாநத்தையாய், அங்கீகாரத்துக்குடலானதொரு நன்மை காணாத வளவன்றிக்கே சாஸ்த்ர மர்யாதையாலே மேல் தானுகிலு மாக்கிக்கொள்ளுகைக்கு யோக்யமான சாஸ்த்ராஸ்திக்யத்துக் குடலான அதுதானுமுட்பட இவர்கள்பக்கல் காணப்பெறாதே யென்னவுமாம்.

அப்போதைக்கு, (நெறறியைக் கொத்திப்பார்த்தால்) இத்யாதியாலே, ஜ்ஞாத ஸுக்ருதயோக்யதை யில்லாமையாலே அஜ்ஞாத ஸுக்ருதந்தா னுண்டோவென் றாராய்ந்து, அதுவுமில்லாமையாலே ஒருவழியாலு மங்கீகார யோக்யதையற்று இழ வோடே மீளும்படி சொல்லுகிறது.

(தனக்கேற இடம்பெற்றவளவிலே) அதாவது—இப்படி மீண்டாப்போலே மீண்டுவிடுகையன்றிக்கே இவர்களை உஜ்ஜீவிப்பிக்கைக்கிலுண்டான சாபலத்தாலே, பின்னையு மங்கீகரிக்கைக்க் கவகாசம் பார்த்துத் திரியும் தனக்கேற அவகாசம் பெற்ற வளவிலே யென்கை.

(என்னூரைச் சொன்னாய் இத்யாதி, என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு) அதாவது—அவவூர் இவ்வூர் என்று இவன் பல ஊர்களையுஞ் சொல்லா நிற்க, கோயில் திருமலை முதலாகத் தானுகந்த ஊர்களிலே யேதேனுமொன்றைச் சொன்னால், அம் மாத்ரமே பற்றாசாக, என்னுடைய ஊரைச் சொன்னாய் என்றும், அவர் இவர் என் றாப்போலே சொல்லா நிற்க, ஒருவன் பேரைச் சொல்லுகிறதாக திருநாமங்களிலே யொன்றைச் சொன்னால், அவ்வளவே கொண்டு, என் பேரைச் சொன்னாய் என்றும்; சில பாகவதர்கள் காட்டிலே வழி போகா நிற்க அவர்களை ஹிம்ஸித்துக் கையிலுள் ளது பறிப்பதாக வழி பறிக்கா ருத்யோகிக்கிறவளவில், ஸ்வகார்யத்திலே போகிறா னொரு சேவகன் அவர்கள் பின்னே தோன்ற, அவனைத் தத்க்ஷணாத்தமாக வருகிறா னென் நினைத்து அவர்கள் பயப்பட்டுப் பறியாதொழிய, அது பற்றாசாக அந்த சேவ கனை, என்னடியாரை நோக்கினாய் என்றும், ஒருவன் கர்மகாலத்தில் தன் வயல் தீயப்புக்கவாறே நீருள்ளவிடத்தே நின்றும் வயலிலே வர நெடுந்தூரத்திலே துலையிட டிறையா நிற்க. மருபூமியிலே நெடுந்தூரம் நடந்து, இத்தனை ஜலம்பெறில் நம் ப்ராணன் தரிக்கும் என்னும்படி யிளைத்து வருகிறார்கள் சில பாகவதர் அவனறி யாமல் அந்த நீரிலே தங்கள் ஸ்ரீபாதம் முதலானவற்றை விளக்கி இளைப்பாறிப் போனால், அதடியாக, என்னடியார் விடாயைத்தீர்த்தாய் என்றும்; ஒருவன் தனக்குச் சூதுசதுரங்கம் பொருகைக்கும் காற்றபேக்ஷிதமானபோது வந்திருக்கைக்கும் இவற் றுக்காகப் புறந்திண்ணை கட்டிவைக்க, வர்ஷபீடிதராய் அங்கே யொதுங்குவோ மென்று வருகிறார் சில பாகவதர் அங்கே யொதுங்கி இருந்துபோக, தாவந்மாத்ரத் தாலே, என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றும், இப்புடைகளிலே சிலவற்றை அவர்க ளறியாதிருக்கத் தானே யாரோபித தென்கை.

(மடிமாங்காயிட்டு) மடிமாங்கா யிடுகையாவது—மாங்கா யெடாமல வெறுமனே வழி போகிறவன மடியிலே மாங்காயை மறைத்துககொணடு சென றிட்டு, மாஙகாயைக களவுகண்டா யெனகை. இது வலிய ஆரோபிககுமதுககு த்ருஷ்டாநதம.

(பொன் வாணியன இத்யாதி, ஒன று பததாககி நடத்திககொண்டு போரும) அதாவது, பொன வாணியம செயவானொருவன ஆரேனும் பரீக்ஷிககைககுக காட டின பொனனை உரை கலலிலே யுரைத்து ஒன றும சோராதபடி மெழுகாலே யொத்தி யெடுத்து நாளோட்டத்துடனே கால பொனனுயதது, கழஞசு பொன னுய்த்து என று திரட்டுமாபபோலே, ஒரு ஜநம மிரணடு ஜநமத்கள வன்றிககே சேதநருடைய ஜநம பரமபரைகளதோறும, விடாயைத் தீர்த்தாய, ஒதுஙக நிழலைக கொடுத்தாய எனறாப்போலே யுணடாம யாத்ருசசிகம, ஊரைச சொனனுய், பேரைச சொனனுய் எனறாப்போலே வரும பராஸஙகிகம, அடியாரை நோககினுய எனறாப போலேயுண்டா மாநுஷஙகிகம எனகிற ஸுக்ருத விசேஷஙகளை, சாஸ்த்ர விஹித மும சேதந விதிதமுமன றியேயிருககத் தானே கலபித்து, கலபிதமானவைதனனை ஒன்றை அநேகமாககி நடத்திககொணடு போருமெனகை (381)

382 இவ்வஜ்ஞாத ஸுக்ருத மடியாக ஈச்வர னஙகீகரிககுமெனனுமது காணலாமிடமுணடோ வெனன (லலிதா சரிதாதிகளிலே இவவர்ததம சுருகக மொழி யக் காணலாம) எனகிறார்.

382. லலிதா சரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருகக மொழியக் காணலாம.

அதாவது—விதாபபராஜ ஸுதையாய் காசீராஜ மஹிஷியான லலிதை, ஸபத் நிகளான முநநூறு ஸதரீகளிலுங் காட்டில ஆபிரூபயம அதிவசய பர்த்ருமத்தை தேஹதேஜஸஸு ஸர்வகுண ஸமபந்நதை இவை யுடையளாய அஹோராத்ர விபாக மற பகவத் ஸநநிதியிலே அநேகந் திருவிளககேற்றி அதிலே நிரதையாயப் போருகிற படியைக கண்டு, "உனக கிவவாபிரூபயாதிகளுககும தீபாரோபண கைஙகர்ய ப்ரா வண்யத்துக்கும காரணமென" என று ஸபதநிகள கேட்க, அவள ஜாதி ஸமருதி யோடே பிறநதவளாகையாலே, *ததேஷா கதயாமயேதத் யத் வருத்தம மம சோபநா:! * என று தொடஙகி, *ஸௌவீர ராஜஸய புரா மைதரேயோபூத புரோ ஹித:, தேந சாயதநம விஷ்ணோ: காரிதம தேவிகாதடே, அஹநயஹநி சுசரூஷாம புஷ்ப தூபாமபு லேபநை:, தீபதாநாதிபிசசைவ சகரே தத்ரவஸந தவிஜ:" என று ஸௌவீரராஜ புரோஹிதனான மைத்ரேயன, தேவியாறறஙகரையிலே ஓரெமபெரு மான கோயிலையுணடாககி, அஙகே நாளதோறும ஸகல கைஙகாயஙகளையும பணணி வர்ததிததபடியையும; *கார்த்திகே தீபிதோ தீப உபாத்தஸ தேநைகதா, ஆஸீந நிர்வாண பூயிஷ்டோ தேவஸ்ய புரதோ நிசி, தேவ தாயதநேசாஸம தத்ரா ஹமபி மூஷிகா, பரதீபவாததிகரஹணே கருதபுததிர் வராநநா:, கருஹீதாச மயா வர்ததீ ப்ருஷ்தமசோ ரராவச, நஷ்டாசாஹம தகஸதஸய மார்ஜாலஸய பயாநுகா, வகதர பராநதேந சயநதயா ஸதீப: ப்ரேரிதோமயா, ஜஜவால பூரவவத தீபதயா தஸமிந நாயதநேபுந:* என ற, கார்ததிகமாஸத்திலே, அவனநத எமபெருமான ஸநநிதியி லேறறின அத திருவிளககு அவியத்தேடுகிற வளவிலே, அககோயிலிலே யொரு பெண்ணெலியாயககொணடு வர்ததிககிறதான அததிருவிளககில திரியைக கவவிக

அநுவர்த்தநீயரல்லராகவுமிறே இவரருளிச செய்தது. ஆகையால பலததிலும் ஸாதநத்திலும தேவதாந்தரங்களிலும அவர்கள ப்ரதிபத்தியும் இவர் ப்ரதிபத்தியும இரண்டுதலையில பேசிலும தெரியுமெனகை.

ஸகல வேதஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில ப்ரதமபதத்தாலே சேஷத்வைக நிரூபணீயமாக ப்ரதிபாதிக்கப்பட்ட ஆத்மாவுக்கு ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தம சரமபதத்தில சதுர்த்தியால சொல்லப்பட்ட கைங்கர்யமேயாகையாலும், மத்யமபத ப்ரதிபாதிதமான பகவதத்யந்த பாரதந்த்ர்யததுக்கு தநதேகோபாயதவ மொழிய ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவருத்தி சேராமையாலும மதயமாக்ஷரபரதிபாதிதமான பகவத நயார்ஹதவததுக்கு தேவதாந்தராநுவர்த்தநகந்தமும ஸஹியாமையாலும பகவத ப்ராப்திமாத்ரம பலமாகவும, ஸ்வயத்நரூபகாமாதிகள உபாயமாகவும, அஹங்கார யுக்ததேவதைகள பகவத விசேஷணதயா உபாதேயராகவும கொள்ளுமது ஸ்வரூப யாதாத்மய தர்சிகளுக்குப் பரிதயாஜ்யமாயிறே யிருப்பது. ஆனபினபு பலாதித்ர யததில அவர்கள ப்ரதிபததிக்கும இவர் ப்ரதிபத்திக்கும நெடுவாசியுண்டாகையாலே இவ்வழியாலும அவர்களில் இவர் அத்யந்தவயாவ்ருத்தர் என்றதாயிற்று. ... (62)

63. ஆக, தாமவீர்யேத்யாதி (58) வாக்யம் தொடங்கி இவ்வளவும் இப்ப்ரபந்த வக்த்ரு வைலக்ஷண்யத்தை ப்ரதிபாதித்தார் கீழ. இனி இப்ப்ரபந்த வைலக்ஷண்யந் தன்னை ப்ரதிபாதிக்கிறார் மேல்—(ராமாயணமென்று தொடங்கி)

**(மூ.) 63. ராமாயணம் நாராயண கதையென்று தொடங்கி கங்காகாங்கேய ஸம்ப வாத்யஸத் கீர்த்தநம் பண்ணின எச்சில்வாய் சுத்திபண்ணுமல் திருமால வனகவியென்ற வாயோலைப்படியே மாற்றங்களாய்ந்துகொண்டு உரிய சொல்வாய்த்தவிது வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ண வங்களபோலே அருளிச செயலில் ஸாரம்.**

அதாவது—*காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஈத்ருசை: கரவாண்யஹம்* என்று ராம கதையைச சொல்லுவதாக ராமாயணமென்று உபகரமித்து கங்காஸம்பவ ஸுப்ரஹ்மண்யோத்பத்தி புஷ்பகவர்ணநரூப கதைகளைப பரக்கப் பேசுகையாலே அஸத்கீர்த்தநம பண்ணின வாக்சுத்திவந்ததிறே ஸ்ரீ வால்மீகி பகவானுக்கு. *நாராயண கதாமிமாம்* எனகிறபடியே நாராயண கதையென்று உபகரமித்து ஸம்பவ பர்வத் திலே காங்கேயரான ஸ்ரீ பீஷ்மருடைய உத்பத்தி தொடக்கமாக அநேகருடைய உத்பத்திப்ரகாரங்களை விஸ்தரேண ப்ரதிபாதிக்கையாலும், 'பூசல்பட்டோலை' எனனும்படி பாரதயுத்த ப்ரகாராதிகளையே பரக்க நின்று வர்ணித்த படியாலும' அஸத்கீர்த்தநத்திலே மிகவும பரந்து அசுத்தையான வாக்கை, *அஸத் கீர்த்தநகாந்தார பரிவர்த்தநபாமஸுலாம், வாசம் சௌரிகதாலாபகங்கயைவ புநீமஹே* என்று அஸத் கீர்த்தநமாகிற காட்டிலே அலமந்து புழுதி படைத்த வாக்கை பகவத் கதாலாபமாகிற கங்கையாலே சுத்தமாக்குகிறேனென்று சுத்தி பண்ணினானிறே ஸ்ரீ வேதவ்யாஸ பகவான். ஸ்ரீ வால்மீகி பகவான் இப்படி அநுதபித்து வாக்சுத்தி பண்ணிற்றிலனே கிலும இந்த ந்யாய மவனுக்கு மொக்குமென்று நினைத்திறே இவர் கூட்டியெடுத்தது. ஆக இப்படி உபக்ரமித்ததுக்குச் சேராதபடி அஸத்கீர்த்தனததைப் பண்ணி வாக்கை அசுத்தையாக்கி, அதுக்கு சுத்தி பண்ணவேண்டாதபடி, *திருமாலவன கவி யாது கற்றேன* என்று சரியபதியினுடைய கவியென்று அடியில் வாயோலையிட்ட ப்ரகாரத்திலே *மாற்றங்களாய்ந்துகொண்டு* எனகிறபடிறய அங்யபரமான சப்தங் கள ஒன்றும் ஊடுகலசாதபடி சப்தங்களைத் தெரிந்தெடுத்து *உரிய சொல்லாலிசை மாலைகளேத்தி* எனகிறபடியே விஷயத்துக்குத தகுதியான சொல்லாலே சொல்லப் பட்டதாய் *வாய்த்தவாயிரம* என்று வாச்யனான ஸர்வேச்வரனுக்கு வாய்த்த இப்

ப்ரபநதம, *வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்ம சாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத் கீதா புராணேஷு ச வைஷ்ணவம்* என்று வேதஙகளில புருஷ ஸூகதமும, தர்ம சாஸ்தரஙகளில மநுப்ரணீதமும, மஹாபாரததகில் ஸ்ரீ கீதையும, புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணமும் ஸாரமாயிருககு மாபோலே, அங்யகதாகந்த ரஹிதமான அருளிச செயலில ஸாரமாயிருககுமெனகை. இத்தால *தீதிலந்தாதி* என்கிறபடியே கதாந்தர பரஸதாவ தோஷ ராஹித்யத்தாலே ஆர்ஷ ப்ரபந்தங்களில் வயாவ்ருத்த மாய, பகவத் ப்ரதிபாதந ஸாமர்த்யததாலே பகவதேகபரமான மற்றையாழ வாாகள பரபந்தஙகளிலும ஸாரமாயிருககுமெனறு இப்ப்ரபந்த வைலக்ஷண்யம சொலலிற்றுயிற்று. ... .... .... .... .... (63)

64. இனிமேல இப்படி அருளிச் செயலில ஸாரமான இதின ப்ராமாண்யாதிச யத்தை ப்ரகாசிப்பிக்கைககாக ஆழவார்களுடைய ஐககண்ட்யததையும, அவர்களில தலைவரான இவரருளிசசெய்த இப்ப்ரபநதத்தினுடைய ப்ராபலயததையும ப்ரதி பாதியா நின்றுகொண்டு, ஏவம்பூதமான விதுக்குச் சேராத சாஸத்ரங்கள் பரீக்ஷக பரிதயாஜ்யங்களாம படியை அருளிச செய்கிறுர் (குருசிஷ்யேத்யாதியால.)

(மூ.) 64. குருசிஷ்ய க்ரந்தவிரோதங்களைப் பரமதாதிகளாலே பரிஹரியாமல் செஞசொல் செந்தமி ழின்கவி பரவி யழைக்குமென்று அந்யோந்யம் கொண்டாடிப் பேசிற்றே பேசுமேககண்டரில் என்னில்மிகு வென்னு மிவ ருரைகொளின்மொழிகொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்க வேண்டுகையாலே வலங்கொண்ட விதுக்குச் சேராதவை மநு விபரீதஙகள் போலே.

அதாவது—ருஷிகளில் குருசிஷ்யர்களான வயாஸ ஜைமிநிகளில குருவான வ்யாஸனுடைய க்ரந்தமான ப்ரஹ்மஸூதரத்தோடு சிஷ்யனுன ஜைமிநியுடைய க்ரந்தமான கர்மஸூதரததுககு நிரீசவரவாதாதிகளால வந்த விரோததததை, *ஸம்பத்தேரிதி ஜைமிநிः* அந்யார்த்தம் து ஜைமிநி. *பரம ஜைமிநிர் முககயத்வாத் *ப்ராஹ்மேண ஜைமிநி.* இதயாதியான பரஹம ஸூதரங்களாலே ஜைமிநிககு ப்ரஹ்ம ஸ்வரூப ததகுண ததுபாஸந ததபலாதிகளினுடைய அஙகீகார முணடெனனுமிடம தோறறுகையாலும், மஹாபாரதத்திலே ஹயசிர உபாகயாநாதிகளிலே பகவத வ்யாஸோபதேசலப்த பரமாதம ததவஜஞாநமுடையவனுகச் சொல்லுகையாலும், ஸ்ரீவேதவயாஸனும ஜைமிநியும ஏககணடர்கள. இனி தேவதா நிராகரணம் பண்ணினவிது ஈசவரப்ரணீதமாக வேததததைச் சிலர் சொல்லுகையாலே அந்த பௌருஷேயதவமடியாக விப்ரலமபாதி தோஷங்களைக கலபிதது வேதாப்ரா மாண்யம சொலலுவது, வைதிக கர்மஙகளை நிநதிப்பதாகிற பாஹ்யரை நிராகரிதது, வேதப்ராமாண்ய கர்மாவச்ய கர்தகவ்யதைகளை ஸாதிககையிலுண்டான இச்சை யாலே ஸ்வமதமனறியிலேயிருககப் பரமதத்தை அவலமபிததுச் சொனனனென றுதல, அன்றிககே தேவதா நிராகணத்தில தாத்பர்யமிலலை. அசருத வேதாந்தர்க்கு கர்மத்தில அச்ரத்தையை நிவாரிககைககாக கர்மப்ராதாநயம சொலலுகையிலே தாத பர்யமாகையாலே, *நஹி நிநதா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே, நிந்திதாத் இதரத் ப்ரசம்ஸிதும்* என்கிற ந்யாயத்தாலே தேவதாநிராகரணம் பணணின விது காம ப்ரசம்ஸார்த்த மாகையாலே அநயபரமெனறுதல் கொள்ளவேணுமெனறு, இப்படி பரமதாங்ய பரத்வங்களாலே பரிஹரிக்க வேண்டிற்றிறே. அப்படியே யிங்கும அந்யோங்ய வசந விரோதமுண்டாய் அதுக்கு ஒரு பரிஹாரம் பண்ணவேண்டாதபடி, *செஞ் சொற்கவிகாள* எனறும *செந்தமிழ பாடுவார்* என்றும் *இன்கவிபாடும் பரம

கவிகள்* என்றும், *பதியே பரவித்தொழும் தொண்டர்* என்றும் *அரங்கவோ வென்றழைக்கும் தொண்டர்* என்றும் பரஸ்பரம் சலாகித்துக் கொண்டு *பேசிற்றே பேசலல்லால்* என்கிறபடியே ஒருவர் பேசினதே எல்லாரும் பேசுமேக்கண்டரான ஆழ்வார்களில் வைத்துக்கொண்டு, *என்னில் மிகுபுகழார் யாவர்* என்று சேஷிக்கு அதிசயகரராகப் பெற்ற ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே என்னிற்காட்டில் மிக்க புகழையுடையார் ஆரென்னும் ஸர்வாதிகரான இவருடைய *உரைகொளின் மொழி* என்கிற படியே ஸ்ரீராமாயணாதிகளையும் ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஜயிக்கும்படியான உக்திகளைக்கொண்டு வேதத்துபப்ர்மஹணரூப சாஸ்த்ரங்களில் ஸம்சயிதமான அர்த்தங்களை நிர்ணயிக்க வேண்டும்படியாயிருக்கையாலே *வலங்கொண்டவாயிரம்* என்கிற படியே ப்ரதிபாத்ய வஸ்துவை உள்ளபடி ப்ரதிபாதிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடைத்தான இப்ப்ரபந்தத்துக்குச் சேராத சாஸ்த்ரங்கள், *மந்வாத்த விபரீதா து யா ஸம்ருதிஸ் ஸா ந சஸ்யதே* என்று சொல்லப்பட்ட மநுவிபரீதமான ஸம்ருதிகள் போலக் கழிக்கப்படுமெனகை. .... .... ... ... ... (64)

65. இப்படி இதுகொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயித்தவ ராரென்னும் அபேக்ஷையிலே அருளிச்செய்கிறார். (பாஷ்யகாரரித்யாதி).

(மூ.) 65. பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்கவிடுவர்.

அதாவது—பாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யம் பண்ணியருளும்போது ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்தங்களான அர்த்தங்களெல்லாம் இப்ப்ரபந்தத்தில் ஸூக்திகளைக் கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருளுவரெனகை. (65)

66. அவர்தாம் அப்படி அருளிச்செய்தருளுகைக்கு மூலம் ஏதென்னு மபேக்ஷையிலே அருளிச்செய்கிறார்—(அதுக்கு மூலமித்யாதி).

(மூ.) 66. அதுக்கு மூலம் 'விதயச்ச' என்கிற பரமாசார்யவசநம்.

அதாவது—பாஷ்யகாரர் அப்படி செய்தருளுகைக்கடி, *விதயச்ச வைதிகாஸ் த்வதீய கம்பீரமநோநுஸாரிண* என்று 'இதம் குரு' 'இதம் மாகார்ஷீ' என்கிற ஸ்வதந்த்ரமான வைதிக விதிகளும் அநந்யப்ரயோஜநராயாச்ரயித்திருக்கும் த்வதீயருடைய, ஐச்வர்யாதிகளால் கலக்கவொண்ணாதபடி கம்பீரமான மநஸ்ஸைப் பின் செல்லுமென்று—இவ்வாழ்வார்போல்வார் நினைவை சாஸ்த்ரங்கள்தான் பின் செல்லும் தாகப் பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த வசநமெனகை. .... (66)

67. இப்படி அபியுக்தரானவர்கள் இது கொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கும்படி ஸகலவேதோபப்ர்மஹணங்களிலும் அதிப்ரபலமாய், இவ்வளவு மன்றிக்கே கீழ்ச்சொன்னபடியே த்ராவிட வேதமாய்க் கொண்டு வேத ஸமமாயிருக்கிற ஆப்ததமமான இப்ப்ரபந்தத்திலே ஆப்திக்கு உறுப்பாக இவர் வேறே சில விஷயங்களை எடுப்பானென்னென்கிற சங்கையிலே அருளிச் செய்கிறார்—(ஆப்திக்கித்யாதி).

(மூ.) 67. ஆப்திக்கு இவர் கருதி மார்க்கண்டேயன் பார்த்தனென்கிற வை வ்யாஸ மநு ப்ரஹ்மவாதிகளை வேதம் சொல்லுமாபோலே.

அதாவது—இதில் சொல்லுகிற அர்த்தங்களில் ஆப்திக் குறுப்பாக, இவர் *உளன்சுடர்மிகு சுருதியுள்* என்றும், *மார்க்கண்டேயனும் கரியே* என்றும்,

*பார்த்தன் தெளிந்தொழிந்த* என்றும் சுருதியையும் மார்க்கண்டேயனையும் பார்த்தனையும் சொல்லுகிறவை, பரமாப்தமான வேதம், *ஸ ஹோவாச வ்யாஸ: பாராசர்ய:* என்றும், *யத் வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்* என்றும், *ப்ரஹ்மவாதிநோ வதந்தி* என்றும் ஆப்திக்குறுப்பாக வ்யாஸனையும் மநுவையும் ப்ரஹ்மவாதிகளையும் சொல்லுகிறாப்போலே யென்கை. ஆனபின்பு அது தாழ்வல்ல, ஆப்த்யதிசயத்துக்கு உறுப்பென்று கருத்து. இத்தால், கீழ் வேதஸாம்யம் சொன்னவிடத்திலே சொல்ல வேண்டியிருக்க, அநுக்தமாய்க் கிடந்தவற்றை இங்கே அருளிச்செய்தாராயத்து. (67)

68. ஆனால் இத்தை உபப்ர்மஹணமாகச் சொன்ன பக்ஷத்தில் வேதவ்யாக்கயையாமதொழிய *வேதரூபமிதம் க்ருதம் *த்ராவிடம் ப்ரஹ்மஸம்ஹிதாம் *த்ராவிடவேதஸாக்ஷேதத்.* என்று அபியுக்தர் சொல்லுகிற வேதத்வம் இதுக்குக் கூடுமோவென்ன அருளிச் செய்கிறார்—(பாரத கீதைகளினித்யாதியால்).

(மூ.) 68. பாரதகீதைகளின் வேதோபப்ருஹ்மத்த்வம்போலே இதுவும் வ்யாக்க்யையாலும் வேதாஹஸ்யமாம்.

அதாவது—வேதோபப்ர்மஹணமான மஹாபாரதமும், அதில் ஸாரமான ஸ்ரீகீதையும், *வேதாநத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்* என்றும், *பகவத் கீதாஸூபநிஷத்ஸு* என்றும் சொல்லுகிறபடியே வேதமும் உபநிஷத்துமாகிறாப்போலே இது வேதவ்யாக்கயையான உபப்ர்மஹணமானாலும் வேதரஹஸ்யமாமென்கை. வேதரஹஸ்யமாவது வேதத்தில் ரஹஸ்யபாகமான உபநிஷத்து. கீழ் சசாநதோக்ய ஸமமாகவிறே சொல்லிற்று. ஆகையால் இந்தப் பக்ஷத்திலும் இதன் த்ராவிட வேதத்வஹாநி வாராதென்று கருத்து. .. .... .... (68)

69. ஆக இப்படி இப்ப்ரபந்தத்தை வேத ஸமமென்பது ததுபப்ர்மஹண ஸமமென்பதாகா நின்றீர், அவை யிரண்டுக்கும் தத்ததநுரூபமா யிருப்பன சில அலங்காரங்களுண்டிறே, தாத்ருசாலங்காரங்கள் இதுக்குமுண்டோவென்ன, ஸம்ஸ்க்ருதமானவற்றுக்கு தத்ததநுகுணமான அலங்காரங்கள் பலவுமுண்டானாப்போலே த்ராவிடமான இதுக்கும் ஏதததநுகுணமான அலங்காரங்கள் பலவுமுண்டென்கிறா (உதாத்தாதியென்று தொடங்கி).

(மூ.) 69 உதாத்தாதி பத க்ரம ஜடா வாக்ய பஞ்சாதி பாதவ்ருத்த ப்ரசந காண்டாஷ்ட காத்யாயாம்ச பர்வாத்யலங்காரங்களபோலே எழுத்தசை சீர்ப்பந்தமடி தொடை நிரைநிரையோசை தளையினம் யாப்புப் பாத்துறை பண்ணிசை தாளம் பத்துநூ ருயிரம் முதலான செய்கோலம் இதுக்குமுண்டு.

அதாவது—உதாத்தாதியென்கிறவிடத்தில் ஆதிசப்தத்தாலே அநுதாத்த ஸ்வரித ப்ரசயங்களைச் சொல்லுகிறது. இந்த உதாத்தாதிஸ்வர விசேஷங்களும், க்ரமஜடா பஞ்சாதிகளும் ப்ரசநாஷ்டகங்களும் வேதாஸாதாரணம். அம்சபர்வாதிகள் உபப்ர்ம்ஹண ஸாதாரணம். பர்வாதியென்கிறவிடத்தில் ஆதிசப்தத்தால ஸ்கந்தாதிகளைச் சொல்லுகிறது பத வாக்ய பாதவ்ருத்த காண்டாத்யாயங்கள் உபய ஸாதாரணம். ஸ்ரீராமாயணத்தில் ப்ரதாநபரிச்சேதங்களிலும் காண்டவ்யவஹாரமுண்டிறே. கௌஷீதகி முதலான உபநிஷத்துக்களிலே அத்யாயமென்கிற பரிச்சேதவ்யவஹாரம் கண்டுகொள்வது.

ஆக இப்படி வேதத்துக்கும் தத்உபப்ர்மஹணங்களுக்குமுண்டான அலங்காரங்களைச் சொல்லி, அப்படியே இதுக்குமுண்டான அலங்காரங்களையெல்லாம் சொல்லுகிறது மேல்—(எழுத்தித்யாதி) எழுத்தாவது குற்றெழுத்து நெட்டெழுத்து முதலான பதின்மூன்றெழுத்தும். அசையாவது—நேரசை. நிரையசை ஆகிறவிரண்டசையும் சீராவது ஆசிரிய உரிச்சீர் நான்கும், வெண்பாவுரிச்சீர் நான்கும், வஞ்சியுரிச்சீர் நான்கும். பொதுச்சீர் பதினாறும், ஓரசைச்சீரிரண்டும ஆக முப்பது சீரும். பந்தமெனினும் தளையெனினும் ஒக்குமென்று தமிழர் சொல்லுகையாலே பந்தமும் தளையுமொன்றுகையால இங்கே பந்தமென்றும் மேலே தளையென்றும் சொல்லுமளவில புநருக்தமாகையாலே இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணும்.

அடியாவது, குறளடி, சிந்தடி முதலான அடியைந்தும், தொடையாவது மோனை, இயைபு, எதுகை, முரண், அளபெடை என்கிற ஐந்திலும் அடிமோனை முதலாக ஒரொன்றிலே எவ்வெட்டுத் தொடையாக நாற்பதும், அந்தாதித்தொடை, இரட்டைத் தொடை, செந்தொடை யென்கிற மூன்றுமாக நாற்பத்துமூன்று தொடையும், நிரைநிரையாவது, நேர்நிரைநிரை, நிரைநிரைநிரை முதலானவை. ஓசையாவது செப்பலோசை அகவலோசை முதலான நாலோசையும், தளையாவது, நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை முதலான ஏழுதளையும், இனமாவது, "தாழிசை, துறை, விருத்தம்" என்கிற பாக்களினம் மூன்றும். யாப்பாவது ப்ரபந்தரூபமாயிருக்கை. பாவாவது, வெண்பா ஆசிரியப்பா முதலான பாக்கள். துறை என்கிறவிதுவும், இனத்தின் வகையிலொன்றுகையாலே புநருக்தமாம். அர்த்தாந்தரமுண்டாகில கண்டு கொள்வது.

பண்ணாவது முதிரந்த குறிஞ்சி, நட்டபாஷை, நட்டராகம், செந்திரிபியம், தைந்தளும முதலானவை இசையாவது *குரள் துத்தம கைக்கிளை உழையினி விளரிதாரம்* என்கிற பேரால சொல்லப்படுகிற நிஷாதாஷப காந்தாரஷட்ஜ மத்யம தைவத பஞ்சமங்களாகிற ஏழிசையும். தாளமாவது—*கஜகர்ணை சோரகதிர் மகரத்வஜ தாளக: லக்ஷ்மீ கீர்த்தி பாணிபாதௌ கௌரீ பஞ்சாநநஸ் ததா, சதுராம்நாய தாளச்ச தாளோயம் கருடத்வஜ:, ஸங்கீத சாஸ்த்ர விதஜ்ஞைரபி ரேதே தாளா ப்ரகீர்த்திதா* என்கிறபடியே, கஜ கரணம, சோரகதி, மகரத்வஜம முதலான தாளங்கள். பத்தாவது அம்சபர்வாதிகளில அவாந்தர பரிச்சேதங்களான அத்யாயாதிகளைப்போலே நூற்றினுடைய அவாந்தர பரிச்சேதங்களாய, *இப்பத்தும *இவை பத்தும்* என்று சொல்லப்படுகிற திருவாய்மொழிகள்.

நூறாவது—ப்ரதாந பரிச்சேதங்களான அம்ச பர்வ காண்டாதிகளைப்போலே *நூறே சொன்ன* *பத்துநூறு* என்னும்படி நூறுநூறு பாட்டாயிருந்துள்ள ப்ரதாநபரிச்சேதங்கள். ஆயிரமாவது, *சதுர்விம்சதி ஸஹஸ்ராணி ச்லோகாநாம்* என்னும் போலே யிருந்துள்ள மஹாபரிச்சேதம், முதலான வென்கையாலே, முதலிட்டு மூன்று பத்து உத்தரகண்ட விவரணமாய் நடுவிட்டு மூன்று பத்து பூர்வ கண்ட விவரணமாய, மேலிட்டு மூன்று பத்தும அதுக்கு உபயோகியான அர்த்த ப்ரதிபாதகமாய் மேலிலபத்து பலாவாப்தி கதநமாயிருக்கையாலே உண்டான விபாக விசேஷங்களும விவக்ஷிதங்களென்று தோற்றுகிறது: (முதலான செய்கோல மிதுக்குமுண்டு) என்றது *செய்கோலத்தாயிரம* என்று கவிக்குச் சொல்லுகிற அலங்காரங்களால குறைவற்றவாயிர மென்கையாலே ஏவமாதிகளான ஸர்வாலங்காரங்களும் இதுக்குமுண்டென்கை. .... ... .... .... (69)

70. ஆக இதுக்குக் கீழ திவ்யப்ரபந்தத்துக்கு வேத ஸாமயமும் தத்உபப்ர்மஹண ஸாம்யமும உண்டென்னுமிடத்தை அருளிச செய்தார்—இங்ஙனன்றிக்கே

வேதாவிர்ப்பாவ விசேஷமாய் இவ்வாழ்வாராலே நிர்மிதமாக ப்ரஸித்தமாயிருப்ப தொன்றென்று, இதுக்கு இன்னமும் ஒரு யோஜனை பண்ணுகிறார்மேல்—(அதவா வேத வேத்ய ந்யாயத்தாலே என்று தொடங்கி)

(மூ) 70 அதவா, வேதவேத்யந்யாயத்தாலே பரத்வபரமுதுவேதம வ்யூஹ வ்யாபதி அவதரணங்களில ஓதினநீதி கேட்டமனு படுகதைகளாய் ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழானவாறே வேதத்தை த்ராவிடமாகச் செய்தாரென்னும்.

அதாவது—கீழ்ச்சொன்ன உபயப்ரகாரமுமன்றிக்கே, *வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* என்று வேத வேத்யனான பரமபுருஷன் தசரத புத்ரனாயவதரித்தவிடத்தில அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீ வால்மீகி பகவான் பக்கல் ஸ்ரீராமாயண ரூபேண அவதரித்த தென்கிற ந்யாயத்தாலே, *க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே* ஆதித்ய வர்ணம தமஸ: பரஸ்தாத* தத்விஷ்ணோ பரமம பதம ஸதா பச்யந்தி ஸூரய:* யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந், ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ, ப்ரஹ்மணா விபச்சிதா* இத்யாதிகளாலே பலவிடங்களிலும ஈச்வரனுடைய பராவஸ்தையை ப்ரதிபாதிக்கையாலே ப்ரத்வத்திலே நோக்காய், *முதுவேதம* என்கிறபடியே புருஷ புத்திப்ரபவதோஷகந்தமில்லாதபடி அநாதித்வேந பழையதாயிருக்கிற வேதமானது, *ஷாட்குண்யாத வாஸுதேவ: பர இதி ஸ பவாந் முக்தபோக்ய:* என்கிறபடியே ஷாட் குண்ய பரிபூர்ணனாய முக்தபோக்யனாயிருக்கிற அநத பரனானவன், *பலாட்யாத் போதாத் ஸங்கர்ஷணஸ த்வம ஹரஸி விதநுஷே சாஸ்தர மைச்வர்ய வீர்யாத, ப்ரத்யும்நஸ ஸர்கதர்மௌ நயஸி ச பகவந சக்திதேஜோநிருத்தோ பிபராண: பாஸி தத்வம, கமயஸி ச ததா வ்யூஹ்ய* என்கிறபடியே ஸர்காதிநிர்வஹணார்த்தமாக வ்யூஹீ பவித்த அவஸ்த்தையில, *ஸங்கர்ஷணதி ஸதபாவம பஜே லோகஹிதேப்ஸயா, க்ரமச: பரலயோத பத்தி ஸ்திதிபி: ப்ராண்யநுக்ரஹ:, ப்ரயோஜநமதாநயச்ச சாஸ்தர சாஸத்ரார்த்த தத்பரை:, தசாஸ துர்ய ஸுஷுப் தயாத்யாச சதுர்வ்யூஹோபி லக்ஷயே* இத்யாதியாலும, *தத்ர ஜ்ஞாந பலத்வந்த் வாத ரூபம ஸாங்கர்ஷணம ஹரே:, ஐச்வர்ய வீர்ய ஸம்பேதாத ரூபம ப்ராத்யும்ந முச்யதே. சக்திதேஜஸ்ஸமுத்கர்ஷா தாநிருத்த தநுர் ஹரே:, ஏதே சகதிமயா வ்யூஹா குணோத்ரேகமேஷ ஸ்வலக்ஷணா:* இத்யாதியாலும அநத வ்யூஹ விசேஷ தத்குணரூப க்ருத்யாதிகளை விஸ்தரேண ப்ரதிபாதிக்கைக்காக *பஞ்ச ராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்* என்கிறபடியே ஸர்வத்துக்கும் ஆதிவக்தா ஈச்வரனானாகை யாலே, *ஓதினாய் நீதி* என்று சொல்லப்பட்ட பஞ்சராத்ரமாய் ஆவிர்ப்பவித்து,

இப்படி வ்யூஹீபவித்த மாத்ரமன்றிக்கே ஸர்வசப்தவாச்யனாய ஸர்வகர்ம ஸமாராத்யனுமாகக் கொண்டு ஸர்வாந்தர்யாமித்வேந வ்யாபித்து நிற்குமவஸ்த்தையில, *ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நர ஸூநவ:, தா யதஸ்யாயநம பூர்வம தேந நாராயண: ஸ்ம்ருத* இத்யாதியாலும, *ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸ மணீ யஸாம், ருக்மாபம ஸ்வப்நதீகம்யம வித்யாத் து புருஷம பரம. *ஏநமேகே வதந்த்யக்நிம மருதோநயே ப்ரஜாபதிம், இந்த்ரமேகே பரே ப்ராணமபரே ப்ரஹ்ம சாச்வதம்* *ஏஷ ஸர்வாணி பூதாநி பஞ்சபிர் வ்யாப்ய மூர்த்திபி:, ஜந்மவ்ருத்திக்ஷயைர் நித்யம் ஸம்ஸாரயதி சக்ரவத்* இத்யாதியாலும, *ஸ ஆத்மா, அங்காந்யந்யா தேவதா:* என்கிறபடியே ஸர்வதேவதா சரீரதயா ஸர்வ கர்மஸமாராத்யன இவனென்று தோற்றும்படி பூர்வபாகோப ப்ரும்ஹணமாய்க் கொண்டு ஸர்வாந்தர்யாமிதயா வ்யாப்தியை ப்ரதிபாதிக் கைக்காக *கேட்ட மனு* என்கிறபடியே ஆப்தமாகக் கேட்கப்பட்ட மந்வாதி ஸ்ம்ருதியா யாவிர்ப்பவித்து,

அப்படி அதீந்த்ரியனுய நிற்கிறவவன ஸாதுபரித்ராணாதிகளுக்காக ராம க்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணினவவஸ்த்தையில ததததவதார சேஷ்டிதாதிகளை ப்ரதிபாதிக்கைக்காக *படுகதையும* எனகிறபடியே வருததகீர்த்தநரூபமான ஸ்ரீ ராமாயண மஹாபாரதாதீதிஹாஸங்களாய ஆவிர்ப்பவித்து,

அபபடி அவதாரமுகேந முனனின்று ரக்ஷிததருளுமவன, அவதாரத்தில பிற்பாடரும இழவாதபடி, *ஆகமூர்த்தியாயவணண மெனகொல* என்று விசேஷஜ் ஞா ரீடுபடும்படி ஆசரிதஹ்ருதயாநுகுணமாக *தமருகந்ததெவவுருவம* இத்யாதிப படியே தரவயநாமரூபாஸனசயநாதிகளிலும தேசகாலாதிகாராதிகளிலும ஸநாந போஜநாதிகளிலும ஒரு நியமமறபப ஈணிககொணடு அதயநதஸுலபனுயிருக்கும அர்ச்சாவதாரமான அவஸ்த்தையில தத்வைபவ ப்ரதிபாதநார்த்தமாக *சடகோபன பண்ணிய தமிழ* எனனுமபடி பரமேயநதனனைபபோலே தானும ஸர்வஸுலபமாய ஸர்வாதிகாரமாகைக்கு குறுப்பாக த்ராவிடரூபமாயககொணடு ஆழவார் பக்கலிலே ஆவிர்ப்பவிக்கையாலே ஸமஸ்க்ருத ரூபமாயிருக்கிற வேதத்தை த்ராவிடமாகச் செய்தாரெனறு சொலலுவதும ஒரு ப்ரகாரமுணடெனகை. *எயதறகரிய மறைகளை ஆயிரமின தமிழால செய்தற்குலகில வரும சடகோபனை* எனனககடவதிறே இவையெலலாததிலும எலலாம சொலலுமேயாகிலும ஒனறுக்கு ஒன்றிலே நோக்கா யிருக்கையாலிறே இவரிப்படி யருளிச்செய்தது. இததான *பரத்வபரமெனகை யாலே ஸ்பஷ்டமிறே. (70)

71. ஆனால அபௌருஷேயமான வேதம இப்படி அவஸ்ததாந்தரத்தை பஜிததாகில கலுஷமாய அாததபரகாசகத்வம குனருதோவெனன, வக்த்ரு விசேஷத்தாலே அது மறறைப்படியாயததென்னுமதை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறா—(மணணுடின வித்யாதியால).

(மூ) 71. மணணுடின ஸஹ்யஜலம தோதவத்திச்சங்கணி துறையிலே துகில வண்ணத் தெணணீராய அந்தஸ்ஸத்தத்தைக் காட்டுமாபோலே அல்பச்ருதா கலக்கின சருதி நனஞானத்துறை சோந்து தெளிவுற்று ஆழபொருளையறிவித்தது.

அதாவது, உசச ஸ்ததலத்தில நின்றும வேகத்தோடே வந்து பூமியிலே விழு கையாலே மருந்மிச்ரமாயக் கலங்கி ஸஹ்யத்தில நினறும வருகிற ஜலமானது, *தோதவத்தித்தூயமறையோர் துறை* என்றும, *பொருநலசங்கணி துறை* என்றும சொலலுகிற துறைகளிலே வந்தவாறே துறைவாஸியாலே *துகிலவணணத்து நீர்* என்றும, *தெணணீர்ப்பொனனி* என்றும சொலலுகிறபடியே தெளிந்தநீராய தனக்குளளே கிடக்கிற பதார்ததங்களை ப்ரகாசிப்பிக்குமாபோலே, *பிபேத்யல்ப ச்ருதாத் வேதோ மாமயம ப்ரதரிஷ்யதி* எனகிறபடியே வேதந்தான நடுங்கும்படி தத்தப்ப் ராயமறியாமல ப்ரதிபந்நங்களைச சொலலும அல்ப ச்ருதா, ஒரு வாக்யத்துக்காத்தம சொலலப்புக்கால அதுதனனிலே நினறு விப்ரதிபத்திபணணி, த்வைதமெனபார், அத்வைதமெனபார், த்வைதாத்வைத மெனபாராய இப்படி கலக்கக் கலங்கின சருதியானது, *நனஞானத்துறை* எனறு இவர் தாமருளிச செய்தபடியே யதா ஜ்ஞாநத்துக்குத் துறையான இவ்வாழ்வார் பக்கலிலே வந்து சோந்து *தெளிவுற்ற வாயிரம* எனகிறபடியே முனபுததைக் கலக்கம தீரந்து தெளிவையடைந்து *அறிவித்தேனாழபொருளை* எனகிறபடியே அகாதமாய, பரமரஹஸ்யமான அர்த்த விசேஷங்களை யெலலாம தோனறுவித்த தெனகை, (71)

72. ஆனால் வேதத்துக்கு அத்யயந கால நியதியும் அதிகாரி நியதியுமுண்டா யிரா நின்றதே. அந்த வேதாவதாரமான இதுக்கு அவையின்றிக்கே யொழிவானென்ன வென்ன வருளிச்செய்கிறார்—(மேகம் பருகின வித்யாதி).

(மூ.) 72. மேகம்பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவா வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே.

அதாவது—விரஸமாய் தத்தந்தர்க்கதஸத்வங்களுக்கொழியப் புறம்புள்ளார்க்கு உபஜீவ்யமன்றிக்கே பர்வங்களிலொழிய ஸ்பர்சிக்கலாகாதென்கையாலே ஸ்பர்ச கால நியதியையு முடைத்தாயிருக்கிற ஸமுத்ரஜலமானது மேகம் பருகி வர்ஷிக்க அந்த மேக ஸ்பர்சத்தாலே தன் விரஸதை போய் ஸர்வதா ஸர்வஜந போக்யமாமா போலே, *ச்ராவண்யாம் ப்ரௌஷ்ட்டபத்யாம் வா உபாக்ருத்ய யதாவிதி, யுக்தச் சந்தாம்ஸ்யதீயீத மாஸாந் விப்ரோர்த்த பஞ்சமாந். அத ஊர்த்வம் து சந்தாம்ஸி சுக்லேது நியத: படேத், வேதாங்காநி ரஹஸ்யம் ச க்ருஷ்ணபக்ஷேது ஸம்படேத்* என்கிறபடியே அத்யயநகால நியதியையும், த்ரைவர்ணிகாதிகாரத்யா அதிகாரி நியதியையு முடைத்தாயிருந்துள்ள *நூற்கடல்* என்கிற வேதவித்யாஸமுத்ரத்திலவசநம் *இவள வாயனகள்திருந்த* என்கிறபடியே இவருடைய வாக்கதமாய காலநியம அதிகாரிநியம நிரபேக்ஷமான ஆகாரத்தையடைந்து கட்டளைப்பட்டவாறே, *அத்யேதவ்யம த்விஜச்ரேஷ்டை: வேதரூபமிதம் க்ருதம், ஸ்த்ரீபிச சூத்ராதிபிச்சைவ தேஷாம முக்தி: கரே ஸ்திதா* என்கிறபடியே ஒரு கால நியமமின்றிக்கே ஸர்வகாலமும ஸர்வர்க்குமுபஜீவ்யமாமிறே யென்கை. (72)

73. இன்னமும் வேதகார்யமாயிருக்கச் செய்தே காரணமானவதுபோல் அதிக்ருதாதிகாரமன்றியே இது ஸர்வாதிகாரமா யிருக்கக் குறையில்லை யென்னுமிடத்துக்கு ஒரு த்ருஷ்டாந்த விசேஷம் தர்சிப்பிக்கிறார்—(ம்ருத்க்கடமித்யாதி).

(மூ.) 73. ம்ருத்க்கடம்போலன்றே பொற்குடம்.

அதாவது—ம்ருத்கடம தொடுமவர்களே தொடுமித்தனை போக்கி எல்லார்க்கும் தொடவொண்ணாதாயிருக்க, பார்த்திவமா யிராநிற்கச்செய்தே பொற்குடம் எல்லார்க்கும் ஸ்பர்சிக்கலாயிரா நின்றதிறே யென்கை இத்தால் காரணமான வேதம அதிக்ருதாதிகாரமா யிருந்தாலும தத்கார்யமானவிது ஸமஸ்கார விசேஷத்தாலே ஸர்வாதிகாரமாகக் குறையில்லையென்றதாய்த்து. த்ருஷ்டாந்தத்திலே தோற்றுகிற காரணத்கார்யச்லாக்யதாதிகள் தார்ஷ்டாந்திகத்திலும விவக்ஷிதம். ... (73)

74. இனிமேல் இப்படியிருந்துள்ள திருவாய்மொழியும் ஏதத்ப்ரதிபாத்யமான அர்ச்சாவதாரமுமாகிற ப்ரமாண ப்ரமேய சரமங்கள் இவற்றினுடைய பூர்வாவஸ்த்தைகளில் அவகாஹனக்ஷமரல்லாதார்க்கு ஸுலபமாகக் கல்பிதங்களானவையென்று *வேதவேத்ய* (ஸூ. 70) இத்யாதி வாக்யத்திற் சொன்ன ப்ரமாணப்ரமேய சரமங்களை நிகமிக்கிறார்—(பெரும்புறக்கடலென்று தொடங்கி).

(மூ.) 74 பெரும்புறக்கடலும் ச்ருதிஸாகரமும் அலைத்தாழ்ந்தோடு மிடங்களில் அயோக்யர்க்குச் சமைத்த மடுவும் சாய்கரகமும் மாநமேயசரமம்.

அதாவது—எல்லாக்கடலுக்கும் புறம்பாய் தான் பெருத்திருக்கிற கடல் போலே அபரிச்சேத்யமா யிருக்கிற பரவஸ்துவான ப்ரமேயம—ஸமுத்ரம் தரங்கிதமாய் அலைந்து நிற்குமிடம்போலே ஜ்ஞாநாதி ஷட்குண பரிபூர்ணமான தானே

அவற்றிலே இவ்விரண்டு குணங்களை ப்ரகடிப்பித்துக் கொண்டு ஸங்கர்ஷணாதி ரூபேண வ்யூஹித்திருக்குமிடத்திலும், ஸமுத்ரத்தில் நிலைகாண வொண்ணாதபடி ஆழ்ந்திருக்குமிடம்போலே, *யமாத்மா ந வேத* என்றும், *கடகிலீ* என்றும் சொல்லுகிறபடியே அத்ருச்யத்வேந அந்தர்யாமியாய் நிற்குமிடத்திலும், ஸமுத்ரமானது கழிகளாய்க் கொண்டோடுமிடம்போலே, *மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந* *யஸ்யாம ஜாதோ ஜகந்நாதஸ் ஸாக்ஷாத் விஷ்ணுஸ் ஸநாதந* நாகபாயங்களுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் *விஷ்ணு: மாநுஷரூபேண சசார வஸுதாதலே* என்கிறபடியே கண்காண வந்து தோன்றி *ஞாலத்தூடே நடந்து திரிந்த அவதாரமான விடத்திலும், தேசகரணகால விப்ரக்ருஷ்டதைகளாலே கிட்டி யனுபவிக்க யோக்யரல்லாதார்க்கு "அதிலே தேங்கின மடுக்கள்போலே" என்கிறபடியே தேசாதிவிப்ரகர்ஷகந்தமில்லாதபடி கல்பிக்கப்பட்ட அத்யந்த ஸுலபவிஷயம் பரமேயாவிர்ப்பாவபரம்பரையினுடைய சரமாவஸ்த்தையான அர்ச்சாவதாரம்.

*மதிமந்தாநமாவித்ய யேநாஸௌ ச்ருதிஸாகராத்* என்கிறபடியே அபரிச்சேத்யமாய பரத்வபரமான வேதம—ஸமுத்ரதரங்கித ப்ரதேசம்போலே தத்வவ்யூஹப்ரதிபாதகதயா அவஸ்த்தாந்தராபந்நமாய பஞ்சராத்ரமானவிடத்திலும் ஸமுத்ரத்தில் அகாத ஸ்தலம்போலே தந்தர்யாமித்வ ப்ரதிபாதகதயா அவகாஹித்து அர்த்த தர்சநம் பண்ணவரிதாம்படி மந்வாதிஸம்ருதிரூபமான விடத்திலும், ஸமுத்ரம் கழிகளாயோடுமாபோலே தத்வதார ப்ரதிபாதகதயா இதிஹாஸரூபேண விஸ்த்ருதமாய் நடக்கிற விடத்திலும், ஜ்ஞாநசக்த்யாதிஸங்கோசத்தால அவகாஹித்து விடாய் தீரமாட்டாதார்க்கு விடாய்த்தவன் வாயை அங்காந்திருக்கத் தானே தண்ணீர் வந்து குதிக்கும்படி கல்பிதமான சாய்கரகம்போலே அநாயாஸேந உபஜீவிக்கலாம்படி அத்யந்த ஸுலபமான சாஸ்த்ரம் ப்ரமாண பூதமான வேதத்தினுடைய ஆவிர்ப்பாவ பரம்பராசரமாவஸ்தையான திருவாய்மொழியென்கை. இத்தால மடுவும் சாய்கரகமுமென்கையாலே பரமாண பரமேயங்களினுடைய ஒளியும் (?) எளிமையும் இனிமையும் தொடக்கமான ஸத்குண ஸாஹித்யம் சொல்லப்பட்டது. .... (74)

75. இப்படி ப்ரமாண ப்ரமேய வைபவத்தை ப்ரதிபாதித்த வநந்தரம் ப்ரமாத்ரு வைபவத்தை விஸ்தரேண ப்ரதிபாதிக்கிறார் மேல. அதில ப்ரதமத்திலே ப்ரமாண ப்ரமேயங்கள இப்படி விலக்ஷணமாயிருந்ததாகிலும் இப்பரமாண வக்தா வானவர் சதுர்த்த வர்ணரன்றோ வென்ன, பாகவதோத்தமரான இவருடைய ஜந்மநிரூபண தோஷத்தை பரமாண ப்ரமேயங்களில த்ரவ்யபாஷாநிரூபண தோஷம் கீழ்க்கதமன்றிக்கே யிருக்கச்செய்தே அத்தை ஸித்தவத்கரித்து த்ருஷ்டாந்தமாக்கிக் கொண்டருளிச் செய்கிறார்—(வீட்டின்ப மென்று தொடங்கி).

(மூ.) 75. வீட்டின்பவின்பப்பாக்களில் த்ரவ்யபாஷா நிரூபண ஸமம் இன்பமாரியிலாராய்ச்சி.

அதாவது *கனிவார் வீட்டின்பம்* என்கிறபடியே பகவத் விஷயமென்றால உள்ளங்கனிந்திருக்குமவர்களுடைய க்ருஹங்களிலே அவர்களுகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கொண்டிருந்து இன்பத்தை விளைக்கிற அர்ச்சாவதாரத்தில த்ரவ்ய நிரூபணத்தோடும், *அந்தமிழினின்பப்பா* என்கிறபடியே த்ராவிட ரூபமாய் பகவத் குணகண ப்ரதிபாதகதயா விசேஷஜ்ஞர்க்கு ஆநந்தாவஹமாயிருக்கிற திருவாய்மொழியில பாஷாநிரூபணத்தோடும் துல்யதோஷம் *அடியாக்கினபமாரி* என்கிறபடியே ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருவாய்மொழி முகத்தாலே ஆநந்தத்தை வர்ஷிக்கும்மேகமான ஆழ்வார்பக்கல உத்பத்திநிரூபணமுமென்கை.

*விஷ்ணோரர்ச்சாவதாரேஷு லோஹபாவம் கரோதி ய:. யோ குரௌ மாநுஷம் பாவ முபௌ நரக பாதிநௌ* யோ விஷ்ணௌ ப்ரதிமாகாரே லோஹபாவம் கரோதி வை, குரௌச மாநுஷம் பாவமுபௌ நரகபாதிநௌ. *அர்ச்சாவதாரோபாதாநவைஷ்ணவோத்பத்திசிந்தநம், மாத்ரு யோநி பரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிண: *ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம, பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்* கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வ யோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம் * சூத்ரம் வா பகவத் பக்தம் நிஷாதம் சவபசம் ததா, வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நர:* ஏவமாதி சாஸ்த்ர வசனங்களை ஹ்ருதிகரித்திறே இவரிப்படி யருளிச்செய்தது. *அவஜாநந்தி மாமமூடா:* என்கிறபடியே வாசியறியாமல் அவஜ்ஞைபண்ணும் மூடர்க்கும் *பச்யந்தி கேசிதநிசம் த்வதநந்யபாவா:* என்கிறபடியே வாசியறிந்து ஆதரிக்கும் அநந்யபாவர்க்கும் மூன்றிடமும் ஒக்குமிறே. .... .... .... (75)

76. இங்ஙனன்றிக்கே பேச்சிலும், இது சொன்னவர் பிறவியிலும் தாழ்வு பார்த்து இப்ப்ரபந்தத்தை இகழுமவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார்— பேச்சிந்யாதி வாக்யத்வயத்தாலே.

(மூ.) 76. பேச்சுப்பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள் ; பிறவி பார்க்கில் அஞ்சாமோத்தும் அறுமூன்றும் கழிப்பனும்

அதாவது—ஸம்ஸ்க்ருதமாகவுமாம், த்ராவிடமாகவுமாம், பகவத்பரமானது உபாதேயம் ; அந்யபரமானது த்யாஜ்யமென்று கொள்ளாதே பாஷாமாத்ராவதியாக விதிநிஷேதங்களை அங்கீகரித்து த்ராவிட பாஷையாகையாலே இது த்யாஜ்யமென்னப்பார்க்கில், *வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற கள்ள நூல்* என்றும், *பொய்ந்நூலை மெய்ந்நூலென்றென்று மோதி* என்றும் சொல்லுகிற பாஹ்ய சாஸ்த்ராதிகளும் ஸம்ஸ்க்ருத பாஷையானவாகாரத்தாலே உபாதேயமாக வேணும். சதுர்த்தவர்ணோத்பவரென்று வக்தாவானவர் பிறவியைப் பார்த்து இத்தை யிகழுமளவில மத்ஸ்யகந்தாஸுதனான வ்யாஸன் சொன்ன பஞ்சமவேதமான மஹாபாரதமும், கோபஜந்மாவான க்ருஷ்ணன் சொன்ன ஷட்கத்ரயாத்மகமான கீதோபநிஷத்தும் த்யாஜ்யமாக வேணுமென்கை. இத்தால பாஷாமாத்ரத்தையும் வக்த்ரு ஜன்மத்தையும் பார்த்து இப்ப்ரபந்தத்தை இகழுமளவில் வரும் விரோதம் காட்டப்பட்டது.

அதவா, பாஷா வக்த்ருஜந்மமாத்ர்யங்கள் நிரூபிக்கலாகாதென்று கீழ்ச் சொன்னபடியன்றிக்கே ஸம்ஸ்க்ருத பாஷையாயுள்ளதும், ஜந்மகௌரவமுடையார் சொல்லுமதுவுமே உபாதேயமென்று கொள்ளுமவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார் — பேச்சுப்பார்க்கிலித்யாதி வாக்யத்வயத்தாலே. அதாவது — பகவத் பரத்வாந்யபரத்வங்களைப் பரிக்ராஹ்ய பரித்யாஜ்யத்வங்களுக்கு ஹேதுவாக்காதே ஸம்ஸ்க்ருத பாஷையானது உபாதேயமென்று பேச்சினுடைய கௌரவமாத்ரத்தைப் பார்க்கில், *கள்ள நூல்* *பொய்ந்நூல்* என்று கழிக்கப்பட்ட பாஹ்ய சாஸ்த்ராதிகளும் பரிக்ராஹ்யங்களாம். யதாஜ்ஞானர் சொன்னது உபாதேயம், அயதாஜ்ஞானர் சொன்னது த்யாஜ்யமென்று கொள்ளாதே ஜந்மகௌரவமுடையார் சொன்னதே உபாதேயம்; அல்லாதார் சொன்னது த்யாஜ்யமென்று பிறவி மாத்ரத்தையே பார்க்கில் மத்ஸ்யகந்தாஸுதனான வ்யாஸன் சொன்ன பஞ்சம வேதமும், கோபஜந்மாவான க்ருஷ்ணன் சொன்ன கீதோபநிஷத்தும் த்யாஜ்யமாக வேணுமென்கை இத்தாலே பேச்சில் கௌரவமும், சொல்லுமவர்கள் பிறவியில் கௌரவமும் ப்ரபந்தோபாதேயத்வ ஹேதுவாகச் சொல்லுமளவில் வருமநிஷ்டம் காட்டப்பட்டது. .... .... .... .... .... (76)

77. இவ்வாழ்வாருடைய உத்பத்தியை வ்யாஸ க்ருஷ்ணோத்பத்தி ஸமமாக வருளிச்செய்தார் கீழ். அவற்றில் இதுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச் செய்கிறார் மேல்—(க்ருஷ்ண க்ருஷ்ணேத்யாதியால்.)

(மூ.) 77. க்ருஷ்ண க்ருஷ்ணத்வைபாயநோத்பத்திகள் போலன்றே க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வஜந்மம்.

அதாவது *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனான க்ருஷ்ண னுடையவும் கந்யாஸூதனான வ்யாஸனுடையவும் உத்பத்தி போலன்றே *கண்ணன் நீண் மலர்ப்பாதம் பரவிப் பெற்றவராய், *க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம்* என்கிற படியே க்ருஷ்ண விஷயத்ருஷ்ணை தான் ஒரு வடிவு கொண்டாப் போலே யிருக்கிற ஆழ்வாருடைய அவதாரமென்கை. (77)

78. அதெங்ஙனேயென்னு மபேக்ஷையிலே பல ஹேதுக்களாலும் இவர் ஜந்ம வ்யாவ்ருத்தியை ப்ரகாசிப்பிக்கிறார் மேல், அதில் ப்ரதமத்திலே அவர்களைப் பெற்றவர்கள் இவரைப் பெற்றவளுக்கு ஸத்ருசரல்லாமையை இசைவிக்கிறார்—(பெற்று மென்று தொடங்கி.)

(மூ.) 78. பெற்றும் பேறிழந்து(ம்) கன்னிகையானவளும், எல்லாம் பெற்றாளாயும் தத்துக்கொண்டாள் என்பாநின்றாரென்னுமவளும், நெடுங்காலமும் நங்கைமீரென்னுமவளுக்கு நேரன்றே.

அதாவது *திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற* என்கிறபடியே க்ருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச் செய்தேயும் அவனுடைய பால்யரஸம் ஒன்றுமநுபவிக்கப் பெறாமையாலே *திருவிலேனொன்றும் பெற்றிலேன்* என்று பேறிழந்தவளான தேவகியும், *த்வீபே பதரிகாமிச்ரே பாதராயணமச்யுதம், பராசராத் ஸத்யவதீ புத்ரம் லேபே பரந்தபம்* என்கிறபடியே வ்யாஸனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச் செய்தேயும் அவனோடுள்ள ரஸம் ஒன்றுமநுபவிக்கப் பெறாதபடி *புந: கந்யா பவிஷ்யஸி* என்ற பராசரவசனத்தாலே மீளவும் கந்யகையான மத்ஸ்யகந்தையும்; *எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே *என்னும்படி க்ருஷ்ணனுடைய பால சேஷ்டிதாதிகளையெல்லா மநுபவிக்கப் பெற்றிருக்கச் செய்தேயும் *தத்துக் கொண்டாள் கொலோ தானே பெற்றாள் கொலோ* என்றும் *இம்மாயம் வல்ல பிள்ளை நம்பி யுன்னை யென்மகனே யென்பர் நின்றார்* என்றும் அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களடியாகத் தானும் பிறரும் சங்கிக்கும்படியான மாத்ருத்வத்தை யுடைய யசோதையும், *நெடுங்காலமும் கண்ணன் நீண் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற* என்று—ஸக்ருதாச்ரயணமமைந்திருக்க ஆதராதிசயத்தாலே சிரகாலம் ஆச்ரித ஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளை யாச்ரயித்து இவரைப் பெற்றவளாகவும், *நங்கைமீர் நீருமோர் பெண்பெற்று நல்கினீர்* என்று தொடங்கி—பூர்ணைகளான நீங்களும் ஒரு பெண்பிள்ளை பெற்று வளர்த்திகோளிறே, பகவல்லாஞ்சநாதிகளை திவாராத்ர விபாகமற வாய்புலற்றாநின்றுள்ள சபலையான வென் பெண்பிள்ளை படியை எங்ஙனே சொல்லுவேனென்று வாசாமகோசரமான இவருடைய முக்தவசநாதிகளை அநுபவித்தவளாகவும் சொன்ன விவரைப் பெற்றவளுக்கு ஸத்ருசரன்றே யென்கை. .... .... .... ... .... .... (78)

79. இனி மூவருடையவும் உத்பத்திஸ்தல கந்த விசேஷங்களைப் பார்த்தால் மற்றையவை யிரண்டிலும் இவருடைய உத்பத்திஸ்தலத்துக்குண்டான வைபவம் விலக்ஷணமென்னுமிடத்தை முதலிக்கிறார்—(மீனேத் யாதியால்.)

(மூ.) 79. மீந நவநீதங்கள் கந்திக்குமிடமும் வெறிகொள்துழாய்கமழுமிடமும் தன்னிலொக்குமோ.

அதாவது—மீன்வெறி நாறுகிற வ்யாஸோத்பத்தி ஸ்தலமும், வெண்ணெய் முடை நாறுகிற க்ருஷ்ணோத்பத்தி ஸ்தலமும், *வெறிகொள் துழாய் மலர் நாறும் வினையுடையாட்டியேன் பெற்ற* என்றும், *இவளந்தண்டுழாய் கமழ்தல்* என்றும். பகவத் ஸம்பந்த ப்ரகாசகமான திருத்துழாய் மணம் நாறுகிற ஆழ்வாரவதரித்த ஸ்தலத்துக்கு ஸத்ருசமோவென்றபடி. ப்ராக்ருதவிஷய ஸம்ஸர்க்கஜமான ஹேய கந்தங்களிறே அவை, அப்ராக்ருத விஷய ஸம்ஸர்க்கஜமான உபாதேயகந்தமிறே யிது. இத்தால தாத்ருசஸ்தலங்களிலுண்டான அவர்களுடைய உத்பத்தியில் ஈத்ருசஸ்தலத்திலுண்டான விவருடைய உத்பத்தியினேற்றம் காட்டப்பட்டது. (79)

80. இன்னமும் அவர்களுடைய உத்பத்தி ஸ்தலங்களுக்கும் இவருத்பத்தி ஸ்தலத்துக்குமுள்ள வைஷம்யாதிசயத்தைக் காட்டுகிறார்—(ஆற்றிலித்யாதியால்.)

(மூ.) 80. ஆற்றில் துறையில் ஊரிலுள்ள வைஷம்யம் வாசாமகோசரம்.

அதாவது, வ்யாஸோத்பத்திஸ்தலம்—ஆறுதானே அசிஷ்ட பரிக்ரஹமுடைய கங்கையாய், அத்துறை ஓடத்துறையாய், ஊர் வலைச்சேரியாயிருக்கும். க்ருஷ்ணோத்பத்திஸ்தலம்—ஆறானது க்ருஷ்ண ஜலப்ரவாஹதயா தமோமயியான யமுனையாய், துறையும் அதில் காளிய விஷதூஷிதமான துறையாய், ஊர்தானே *அறிவொன்றுமில்லாத வாய்க்குலம்* என்கிறபடியே இடக்கை வலக்கை யறியாதார் வர்த்திக்கிற இடைச்சேரியாயிருக்கும்.

இவ்வாழ்வாருடைய உத்பத்திஸ்தலம்—ஆறு *பவள நன்படர்க்கீழ்ச் சங்குறை பொருநல்* என்கிறபடியே விலக்ஷண பதார்த்தங்களுக்கு ஆகரமுமாய் வாஸஸ்தலமுமாய்க் கொண்டு அதிசலாக்யமாயிருக்கும் தாமரபர்ணியாய், துறை சுத்த ஸ்வபாவமாய் அவதாதமாயிருக்கிற சங்கங்கள் வந்து சேருகிற திருச்சங்கணித்துறையாய், ஊர், *நல்லார் நவில் குருகூர்* என்கிறபடியே ஸகல ஸஜ்ஜநச்லாகநீயமாய், *சயப்புகழார் பலர்வாழும் தடங்குருகூர்* *நல்லார் பலர்வாழ்குருகூர்* என்கிறபடியே ஸம்ஸாரத்தை ஜயித்த புகழையுடையராய் பகவதநுபவம் பண்ணி வாழ்கிற ஜ்ஞாநாதிகரான விலக்ஷணர் பலரும் நிரந்தரவாஸம் பண்ணுகிற திருக்குருகூராயிருக்கும்.

ஆகையால் அந்தவாறுகளையும் துறைகளையும் ஊர்களையும் பற்ற இந்த ஆற்றுக்கும் துறைக்கும் ஊர்க்கும் உண்டான வைஷம்யம் பேசுக்கு அவிஷயமாயிருக்கு மென்கை. ஆக க்ருஷ்ணக்ருஷ்ணத்வைபாயநோத்பத்தியிற் காட்டில் க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வமான இவருத்பத்திக்கு ஏற்றத்துக்குடலாகக் கீழ்விவக்ஷிதமானவற்றை யடைய வெளியிட்டாராய்த்து. .... ... ... (80)

81. எல்லாம் செய்தாலும் பூர்வவர்ணங்களில் பிறவிபோலே சதுர்த்த வர்ணத்தில் பிறவி தேஜஸ்கரமன்றே யென்ன, தாஸ்யரஸஜ்ஞர்க்கு இது தேஜஸ்கரமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார்—(தேவத்வமு மென்று தொடங்கி.)

(மூ.) 81. தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள்போலே ப்ரஹ்ம ஜந்மமும் இழுக்கென்பார்க்குப் பண்டைநாளிற்பிறவி உண்ணாட்டுத் தேசிறே.

அதாவது-ராவணவதாநந்தரம பரஹ்மாதிகள *பவாந நாராயணோ தேவ * என்றது அஸஹ்யமாய, *ஆத்மாநம் மாநுஷம மநயே ராமம தசரதாத்மஜம* எனகையாலும, கோவாததநோததரணநநதரம அநத அதிமாநுஷசேஷடிதம கணடு ஆச்சரியப்படட கோபர், *பாலதவஞ்சாதிவீரயஞச ஜநமசாஸமாஸவசோபநம, சிநதயமாநமமேயாதமந சங்காம கருஷண ப்ரயசசதி, தேவோ வா தாநவோவா தவம யக்ஷோ கநதாவ ஏவ வா* என்று சஙகித துச சொலல, *க்ஷணம பூதவா தவஸௌ தூஷணீம கிஞசித ப்ரணய கோபவாந* எனகிற படியே அது அஸஹ்யமாமென னுமிடம தோன றச சிறிதுபோது வாயதிறவாமலிருந்து பினனை, *நாஹம தேவோ ந கநதாவோ நயக்ஷோ நச தாநவ:, அஹம வோ பாநதவோ ஜாத: நைவ சிநதயமதோநயதா* எனகையாலும, தேவர்ககும தேவனை தான லோகர க்ஷணார்த்தமாக மநுஷயஸஜாதீயனு யவதரிததவளவில தேவனகச சொலலுகையும நினைதயாமபடி புரையறபபிறககும சீலாதிகளுன ஈசவரனுககு *ஸ உ சரேயாந பவதி ஜாயமாந:* எனகிறபடியே *பலபிறபபாயொளிவருமுழுநலம* என்று தாழவிழிநத தனையும கலயாண குணஙகள ஒளிபெறறு வரும ஜநமஙகள போலே *மா ஸ்ம பூதபி மே ஜநம சதுர்முகாதமநா* என்று பராஹ்மணயததுககு எலலைநிலமான ப்ரஹ்மா வாயப பிறககையும சேஷதவவிரோதியான அஹஙகாரஹேதுவாகையாலே ஆதமா வுககு அவதயமென று இகழுமபடி தாஸயரஸமறிநதார்ககு, *பணடைநாள* எனகிற திருவாயமொழியில *பலபடிகால குடிகுடி வழிவநதாட செயயும தொணடர்* உன பொனனடிககடவாதே வழிவருகினறவடியர்* தொலலடிமை வழிவரும் தொண்டர்* என்று சொனனபடியே தாஸயவிரோதியான ஜநமாதயபிமாநமினறிககே கைஙகர் யாநுரூபமான குடிபபிறவி, *ஆழியஙகைப் பேராயறகாளாம பிறப்பு—உண ணுடைத் தேசனறே* எனகிறபடியே பகவத்விமுகபரசுரமாகையாலே புறநாடான லீலாவிபூதி போலனறிககே பகவதாநுகூலயைக போகரஸததிலே நெருங்கி போக விபூதியாய அவனுககநதரஙகமாயிருககிற பரமபதத்தில வாத்திககிற தேஜஸ்ஸை யுடைத்திறேயெனகை . பரமபதததில பகவத் கைஙகர்யாநுகுணமாகப் பரிகர ஹிககும தேஹததோபாதி சேஷவஸதுவான ஆதமாவுககு இதுவும தேஜஸ கரமென று கருத்து. (81)

82. இனி இவரவதாரத்தின பரோபகாரகத்வத்தை ஸநிதர்சநமாக வருளிச் செயகிருர்—(ஜநகேதயாதியால.)

(மூ.) 82. ஜனக தசரத வஸுதேவ குலஙகளுக்கு மூத்தபெண்ணும் நடுவிற பிளளையும கடைக்குட்டியுமபோலே இவரும பிறந்து புகழுமாக்கமுமாககி அஞசிறையுமறுததார்.

அதாவது—ஜநக குலததுககு மூத்த பெணணன பிராட்டி பிறந்து, *ஜநகாநாம குலே கீர்ததிமாஹரிஷயதி மே ஸுதா, ஸீதா பாததாரமாஸாதய ராமம தசரதாத்மஜம* எனகிற படியே தான பிறநத குலததுககுக கீரததியுணடாககினைப்போலேயும், தசரத குலததுககு நடுவிலபிளளையான ஸ்ரீ பரதாழவான பிறநது, *ராஜயஞ்சாஹஞ்ச ராமஸய தர்மம் வகதுமிஹாாஹஸி, கதம் தசரதாஜ்ஜாதோ பவேத ராஜ்யாபஹாரக:* இதயாதியாலே மூத்தாரிருகக இளையார் முடிசூடக கடவரனறெனகிற குலமாயாதையை நடத்தின வளவனறிககே, *ஜடிலம சீரவஸநம பராஞஜலிம பதிதம புவி*என றும, *பஙகதிக்தஸது ஜடிலோ பரதஸ் தவாம பரதீக்ஷதே* என றும சொலலுகிறபடியே ஜயேஷடரான பெருமாளுடைய விசலேஷததில சடைபுனைந்து வறகலையுடுத்துக கணணீராலுண டான சேற்றிலே தரைககிடை கிடநது, குலத்துககு முனபிலலாத வேற்றஙகளை யுண்டாககினைப்போலவும், வஸுதேவ குலத்துககு *மககளறுவரைக கலலிடை மோதவிழந்தவள தன வயிற்றில சிககன வநது பிறந்து நினறுய* எனகிறபடியே

கடைக்குட்டியான க்ருஷ்ணன் பிறந்து *தந்தைகாலில பெருவிலங்கு தாளவிழ* என்கிறபடியே தங்களால விடுவித்துக கொள்ளவொண்ணாத மாதாபிதாககள் கால் கட்டையறுத்தாப்போலவும இவரும திருவவதரித்து *மலிபுகழுவண் குருகூர்* என்னுமபடி தாம்பிறந்தவூாககுப் புகழுண்டாககி *குடிககிடந்தாககம் செய்து* என்கிறபடியே சேஷத்வகுலமர்யாதை தப்பாதபடி நின்றமாத்ரமன்றிக்கே சேஷி விரஹக்லேசாதிசயத்தாலே *காணவாராயென்றென்று கண்ணும் வாயுமதுவர்ந்து, *கண்ணநீர்கைகளாலிறைத்து, *இடடகாலிட்டகையாம்படி நிசசேஷ்டராய், தரைக கிடைகிடந்தப்ரேமவிசேஷத்தாலே இக்குடிககுப் பண்டில்லாத வேற்றத்தையுமுண் டாககி *அறுவர் தம்பிறவியஞ்சிறையே* எனகிறபடியே தம்முடைய ப்ரபந்தாப் யாஸமுகத்தாலே தமமோடனவிதரான இவர்களுடைய ஸம்ஸாரமாகிற அறவைச் சிறையையுமறுத்தாரெனகை த்ருஷ்டாந்தபூதரான மூவர்செய்ததும ஒருத்தரே செயகையாலும். இத்தனையும ஸ்வரூபாநுகூலமாகச் செய்கையாலும இவர் பிறப் பிறே மிகவும பரோபகாரகமாய்த்து. .... ... ... (82)

82 இன்னமும இவருடைய அவதாரத்தாலே லோகத்துக்குண்டான நன்மைகளை யருளிசசெய்கிறார் (ஆதித்யேத்யாதியால்.)

(மு.) 83. ஆதித்ய ராமதிவாகராச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல் வற்றி விகஸியாத போதில் கமலமலர்நதது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே.

அதாவது—*கதிரவன குணதிசைச் சிகரமவந்தணைந்தான் கனவிருளகன்றது* எனனுமபடி பாஹ்யாந்தகாரத்தைப் போக்கிககொண்டு உதிககுமாதித்யனுககுப் போகாத உள்ளிருளான அஜ்ஞாநாந்தகாரம்,*தமோ பாஹ்யம விநச்யேத்து பாவகாதித்யஸந்நிதௌ, பாஹ்யமாப்யந்தரஞ்சைவ விஷ்ணுபகதார்க்க ஸந்நிதௌ* எனகிறபடியே நீங்கி *சரஜாலாமசுமாந் சூர: கபே! ராமதிவாகர:, சத்ருரக்ஷோமயம தோய முபசோஷம் நயிஷ்யதி* என்கிறபடியே சரஜாலங்களாகிறகிரணங் களையுடையனாயககொண்டு சத்ருராக்ஷஸராகிற ஸமுத்ரத்தை வற்றப்பண்ணின ராம திவாகரனுக்குவற்றாத *பிறவியெனனும கடல* என்கிற ஸம்ஸாரஸமுத்ரமவற்றி, *ததோகிலஜகத்பத்ம போதாயாசயுதபாநுநா, தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம மஹாத்மநா* என்று ஜகத்பத்மம விகஸிதமாம்படி தேவகியாகிற பூர்வ ஸந்த்யையிலே ஆவிர்ப்பவித்த அச்யுதபாநுவான கருஷ்ணனுககு விகஸியாத *போதில்கமல வன்னெஞ்சம்* என்கிற ஹ்ருத்பத்மம் விகஸிதமாய்த்து, *யத்கோ ஸஹஸ்ரம் அபஹந்தி தமாம்ஸி புமஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்க சக்ர:, யன்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ் தஸ்மை நமோ வகுளபூஷண பாஸ்கராய* என்று திருவாய் மொழியாயிரமுமாகிற கிரணங்களையுடையராய மஹிஷீ பூஷணாயுத விசிஷ்டனான நாராயணனை *கண்கள சிவந்தில்படியே உள்ளேயுடையராய, வேதவித்துக் களான ஸர்வசிஷ்டர்களும கேட்டபோதே தாமிருந்ததேசத்தை நோக்கி வணங்கும் படியான வைபவத்தையுடையராய் வகுளாபரணராயிருககிற ஆழ்வாராகிற பாஸ்கரனுடைய உதயத்திலேயெனகை.

ஆதித்ய திவாகர பாநு சப்தங்களா லன்றிக்கே பாஸ்கரசப்தத்தாலே இவரைச் சொலலுகையாலே *ஊரும நாடும* இத்யாதிப்படியே ஸ்வஸம்பந்தமுடையாரெல் லார்க்கும் ப்ரகாசத்தைப் பண்ணுமவரென்று தோற்றுகிறது. .... (83)

84. இப்படி பரோபகாரஜனமரானவிவர் வர்ணத்ரயத்திலொன்றிலே அவதரியாதே சதுர்த்தவர்ணத்திலே தாழவிழுவானென்னென்ன, அதுவும் பரரக்ஷணார்த்தமாகவே யென்கிறார்—(வம்சேத்யாதியால்)

(மூ) 84. வம்ச பூமிகளை யுத்தரிக்கக் கீழ்க் குலம் புக்க வராஹ கோபாலரைப் போலே இவரும் நிம்நரை யுயர்த்தத் தாழ விழுந்தார்.

அதாவது—*யயாதி சாபாத் வம்சோயம் ராஜ்யார்ஹோ ஹி ஸாம்ப்ரதம்* என்கிறபடியே யயாதி சாபத்தாலே ராஜ்யார்ஹமல்லாதபடி நிஹீநமான யதுவம்சத்தை *அயம் ஸ கத்யதே ப்ராஜ்ஞை: புராணார்த்தவிசாரதை:, கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி* என்கிறபடியே உத்தரிக்கைக்காக *அநேகோராய்க் குலம்புக்கதும்* என்கிறபடியே கோபகுலத்திலே உள்புக்க கோபாலனான க்ருஷ்ணனைப்போலவும், ஹிரண்யாக்ஷ பலத்தாலே நிலைகுலைந்து ப்ரளயங்கதையான பூமியை *உத்த்ருதாஸி வராஹேண* என்றும், *நமஸ்தஸ்மை வராஹாய லீலயோத்தரதே மஹீம்* என்றும் சொல்லுகிறபடியே உத்தரிக்கைக்காக *கேழலாய்க் கீழ்புக்கு* என்கிறபடியே பாதாளத்திலே தாழவிழுந்த வராஹரூபியைப் போலவும் குலந்தாங்கு மபிமாநத்தாலே ஸம்ஸாரத்தில் நிம்நரானவர்களை அந்நிலையில் நின்றும் பேதித்து *அபிமாநதுங்கன்* என்னுமுயர்த்தியையுடையராக்குகைக்காக அஹங்கார ஹேதுவான வர்ணங்கள் அநர்த்தகரமென்று தோற்றும்படி கத்ரஹீநரான சதுர்த்த வர்ணத்திலே தாழவிழுந்தாரென்கை. இத்தால் – நாம் உத்க்ருஷ்டவர்ணரென்னு மபிமாநத்தாலே ஸம்ஸாரத்திலே அழுந்துகிறவர்கள் அது ஹேயமென்றறிந்து அவ்வபிமாநமற்றுக் கரையேறுகைக்காக, அவர்கள் உத்க்ருஷ்டமாக நினைத்திருக்கும் வர்ணங்களை ஹேயமென்றுவிட்டு நிக்ருஷ்டவர்ணத்திலே தாழ விழுந்தாரென்றதாய்த்து.

ஆக (ஸூ 75) வீட்டின்பமென்று தொடங்கி இவ்வளவும் மந்தமதிகளுடைய சங்காநிராகரணார்த்தமாக ஆழ்வாருடைய உத்பத்தி நிரூபணத்தில் வரும் ப்ரத்யவாயமும், வ்யாஸாதிகளைப்பற்ற இவரவதார வைலக்ஷண்யமும், அவதாரம் பரார்த்தமென்னுமிடமும், மஹாப்ரபாவரானவிவர் தாழவவதரிக்கைக்கு நிதானமுமருளிச் செய்தாராய் நின்றார் .... .... ... .... .... (84)

85. இன்னமும் ஆழ்வாருடைய வைபவத்துக்குறுப்பாக ஸாமாந்யேந பாகவத வைபவத்தைப் பல உதாஹரணங்களாலும் ப்ரகாசிப்பியா நின்றுகொண்டு இவ்வாகாரங்களறிவார்க்கிறே ஜந்மத்திலுத்கர்ஷாபகர்ஷம் தெரிவதென்கிறார் மேலொரு சூர்ணையாலே.

(மூ) 85 மலேசனும் பக்தனுல் சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவு கொடுத்துக் குலதைவத்தோடொக்கப் பூஜை கொண்டு பாவநதீர்த்தப்ரஸாதனு மென்கிற திருமுகப் படியும் விச்வாமித்ர விஷ்ணுசித்த துலஸீப்ருத்யரோடே உள்கலந்து தொழுகுல மானவன் நிலையார் பாடலாலே ப்ராஹ்மண வேள்விக் குறை முடித்தமையும், கீழ்மகன் தலைமகனுக்கு ஸமஸகாவாய்த் தம்பிக்கு முன்பிறந்து வேலும் வில்லும் கொண்டு பின்பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கு இளையோன் ஸத்பாவம் சொல்லும்படி ஏகதல மானமையும், தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய

ஸம்யக் ஸகுண ஸஹபோஜநமும், ஒரு பிறவியிலே இரு பிறவியான திருவாக்கு நர்மஸூநு ஸ்வாமிகள் அக்ர பூஜை கொடுத்தமையும், ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள ஸநதேஹியாமல் ஸஹஜரோடே புரோடாசமாகச செய்த புதரக்ருத்யமும, புஷ்பத்யாக போக மண்டபங் களில் பணிப்பூவு மாலவட்டமும் வீணையும் கையுமான அந்தரங்கரை முடிமனனவனும் வைதிகோததமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்தக்ரம மும், யாகாநுயாகோத்தர வீதிகளில காயாந்நஸ்தலசுததி பண்ணின வ்ருத்தாசாரமும் அறிவார்ககிறே ஜந்மோத்காஷாபகர்ஷங்கள தெரிவது.

(மலேச்சனும பகதனுைல்) *மத்பக்தஜநவாதஸல்யம் பூஜாயாஞசாநுமோதநம், ஸ்வயமப்யாசநஞசைவமதர்ததேடம்பவாஜநம,மத்கதாசரவணேபக்திஃஸவரநேத்ராங்கவிகரியா மமாநுஸ்மரணம நிதயம் யசச மாம் நோபஜீவதி பக்தி ரஷடவிதா ஹ்யேஷா யஸமிந மலேசசேபி வர்த்ததே* என்கிறபடியே மலேசசஜாதீயனுயுள்ளவனும என்னுடைய பகதஜனஙகள பக்கல வாத்ஸலயமும, என்னுடைய ஆராதனத்திலுகப்பும, தானே ஆராதிககையும, எனபககல் டமபமறறிருககையும், என கதையைக கேடகுமிடத்தில பகதியும, பகதி கார்யமான ஸவரநேத்ராஙகங்களில விகாரமும என்னையே எப்போதும நினைககையும, என்னை ப்ரயோஜநாநதரம கொளளாதொழிகையுமென்று அஷடவிதையாக வருளிச செய்த பகதியையுடையனுைல, (சதுர்வேதிகளநுவாததிகக அறிவு கொடுத்து) *ஸ விப்ரேந்த்ரோ முநி ஸ்ரீமாந ஸ யதிஸ் ஸ ச பண்டித, தஸமை தேயம் ததோ க்ராஹ்யம்* என்றும் *பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமாாகள இழிகுலத்தவர்களேனு மெமமடியார்களாகில், தொழுமினீர் கொடுமினகொளமின* என்றும சொலலுகிற படியே ஸர்வோத்க்ருஷடனுய், உத்க்ருஷ்டவர்ணரான சதுர்வேதிகள அபிஜநாத் யபிமாந தூஷிதமான ஸ்வஸவரூபசுத்த்யர்த்தமாக அநுவர்த்திககைககு விஷய மாய், அவர்களுககு ஜ்ஞாநாபேக்ஷையுண்டாகில ஜ்ஞாநப்ரதாநம பண்ணி, (குலதைவத் தோடொக்கப் பூஜை கொண்டு) *ஸச பூஜ்யோ யதாஹ்யஹம்* கினேனேடொகக வழிபட வருளினுயபோல* எனகிற படியே, *மம நாதம, மம குலதைவதம்*என்று குலதைவமாகச சொலலப்படுகிற ஸர்வேசவரனேடொகக, *அவரெஙகள குலதெயவம* எனகிற படியே குலதெயவமாய் அவர்களைப் பூஜை கொண்டு. (பாவநதீர்த்த ப்ரஸாதனுமெனகிற திருமுகப்படியும்) *நதபாதாம்ப்வதுலம் தீர்ததம் ததுசசிஷடம் ஸுபாவநம* என்று அவன திருவடிகள விளககின ஜலம அநுபமமான தீர்த்தம; அவன முதுசெயதசேஷம பரம பாவநம என்கையாலே அஹஙகார மதிராபாநமத்தரான அசுத்தரும இந்த தீர்த்த ப்ரஸாதாநவயத்தாலே சுத்த ஸவரூபராமபடி பாவந தீர்த்த ப்ரஸாதனுமென்றருளிச செய்த பகவதுகதியான திருமுகமும அதின படியெடுபபான ஆழவார பாசுரமும,

(விச்வாமித்ர விஷ்ணுசித்த துளஸீபருத்யரோடே உள்கலந்து தொழுதலமானவன்) அபரராத்ரியிலே சென்றுபாடி நமபியைத திருப்பள்ளியுணர்த்துகையாலே, *கௌஸல் யாஸுப்ரஜாராமபூர்வாஸந்த்யாப்ரவர்த்ததே,உத்திஷ்டநரசார்த்தூலகர்த்தவயப தைவமாஹநிகம என்றும்,*அரவணையாயாயரேறே அமமமுண்ணத் துயிலெழாயே* என்றும*அரஙகத தம்மாபள்ளியெழுந்தருளாயே* என்றும திருப்பள்ளியுணர்த்தின விசவாமிதரன பெரியாழவார் *துளபத தொண்டாய தொணடரடிபபொடியாழவார் ஆகிற இவர்க ளோடே ஸகோதரியாய, வலநதாஙகு சககரத்தணணல மணிவணணற்கா ளென்றுளகலந்தார்* எனகிறபடியே பகவசசேஷதவஜ்ஞாநபூர்வகமாக அநநயப்ர யோஜநவருததியிலே அந்விதனுயுளகலந்து *எமதொழுகுலம* என்று விசேஷஜ்ஞர் ஆதரிககுமேற்றத்தையடைந்த ஜந்மஸிததநைச்யனுன பாகவதன, (நீலையா பாட

லாலே ப்ராஹ்மண வேள்விக்குறை முடித்தமையும்) சரகுலோத்பவனான ஸோம சர்மாவாகிற ப்ராஹ்மணன் உபக்ரமித்த யாகத்தை யதாக்ரமம் அநுஷ்டியாமையாலும், அது ஸமாப்பிப்பதுக்கு முன்னே மரிக்கையாலும் ப்ரஹ்மரக்ஷஸ்ஸாய்ப் பிறந்து திரியா நிற்கச்செய்தே, *த்வம் வை கீதப்ரபாவேந நிஸ்தாரயிதுமர்ஹஸி, ஏவ முக்த்வாத சண்டாலம் ராக்ஷஸச் சரணம் கத:* என்கிறபடியே, நீ உன்னுடைய கீதப்ரபாவத்தாலே என்னை இவ்வாபத்தில் நின்றும் கரையேற்றவேணுமென்று சரணம் புக, *யந் மயா பச்சிமம் கீதம் ஸ்வரம் கைசிகமுத்தமம், பலேந தஸ்ய பத்ரம் தே மோக்ஷயிஷ்யஸி கில்பிஷாத்* என்று நம்பிஸங்கிதியில் பின்பு பாடின *நிலையார் பாடலான கைசிகப்பண்ணாலே, *ஏவம் தத்ர வரம் க்ருஹ்ய ராக்ஷஸோ ப்ரஹ்மஸம்ஜ்ஞித:, யஜ்ஞசாபாத் விநிர்முக்த: ஸோமசர்மா மஹாயசா:* என்னும்படியாக வைகல்யதோஷத்தால் வந்த ரக்ஷஸ்த்வத்தைப் போக்கி உஜ்ஜீவிப்பிக்கையாலே அந்த ப்ராஹ்மணனுடைய யாகத்தில் குறையைத் தலைக்கட்டினபடியும்,

(கீழ்மகன் தலைமகனுக்கு ஸமஸகாவாய்) நிஷாதவம்சஜராகையாலே *ஏழையேதலன் கீழ்மகன்* என்னும்படி ஜந்மவ்ருத்த ஜ்ஞானங்களால் தண்ணியரான ஸ்ரீ குஹப்பெருமாள், அயோத்தியர் கோமானாகையாலே அவையெல்லாத்தாலும் உத்க்ருஷ்டனாயிருக்கிற வளவுமன்றிக்கே தர்மஜ்யைஷ்ட்யத்தாலே *வானோர் தலைமகனாயிருக்கிற சக்ரவர்த்தி திருமகனுக்கு *உகந்த தோழன் நீ* என்கையாலே ஸமனான ஸகாவாய் (தம்பிக்கு முன்பிறந்து) *உம்பியெம்பி* என்கையாலே இவர் தம்பியான இளைய பெருமாளுக்கு முன்பிறந்தவராய், (வேலும் வில்லுங்கொண்டு பின்பிறந்தாரைச் சோதித்து) இப்படி தம்மை அங்கீகரித்தவன்று ராத்ரி பெருமாள் பள்ளி கொண்டருளாநிற்க, அவருடைய ஸௌகுமார்யாநுஸந்தானத்தாலுண்டான பரிவாலே கண்ணுறக்கமற்று கையும் வில்லுமாய்க் காத்துக்கொண்டு நிற்கிற இளைய பெருமாளை அதிசங்கை பண்ணி, *கூரணிந்த வேல்வலவன்* என்றும் *ததஸ்த்வஹஞ்சோத்தமபாணசாபத்ருத் ஸ்திதோபவம் தத்ர ஸ யத்ர லக்ஷ்மண:* என்றும் சொல்லுகிறபடியே ஸாயுதராய்க்கொண்டு இவர் மேலே கண்ணாய் நின்று அவர் நினைவு சோதித்தது, (தமையனுக்கிளையோன் ஸத்பாவம் சொல்லும்படி ஏககுலமானமையும்) *ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:, பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர:* என்கிறபடியே ராமவிரஹக்லிஷ்டனாய்த் திருச்சித்ரகூடத்தேறப்போவதாக வந்த தமையனான ஸ்ரீ பரதாழ்வானுக்கு, தம்பியான இளையபெருமாளுடைய *பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:* என்றும், *பரவாநஸ்மி* என்றும் சொல்லுகிறபடியே பெருமாள் பக்கல் ப்ரேமபாரதந்த்ர்யங்களே நிரூபகமாம்படியிருக்கையாகிற ஸத்தையோடே வ்யாப்தமான ஸ்வபாவத்தைச் சொல்லும்படி இக்ஷ்வாகுவம்சயரோடு ஏககுலமானபடியும்;

(தூதுமொழிந்தித்யாதி) *முன்னோர் தூதுவானரத்தின் வாயில் மொழிந்து* என்று பிராட்டிக்கு தூதுவாக்கியத்தைத் திருவடி வாயிலே சொல்லிவிட்ட சக்ரவர்த்தி திருமகன், *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:* என்கிறபடியே ஸ்ரீ சபரிகையால் பண்ணின ஸமயக்போஜநமும், *குடைமன்னரிடை நடந்த தூதா* என்னும்படி பாண்டவர்களுக்காகத் தூது போன க்ருஷ்ணன் பீஷ்ம த்ரோணாதி க்ருஹங்களை விட்டு, *விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச* என்கிறபடியே பாவநத்வ போக்யத்வங்களைக் கண்டு உகந்து ஸ்ரீ விதுரர் திருமாளிகையில் பண்ணின ஸகுண போஜநமும், *தூதுவந்த குரங்கு* என்கிற திருவடி, *த்ருஷ்டா ஸீதா* என்ற ப்ரீதியாலே, *உபகாராய ஸுக்ரீவோ ராஜ்ய காங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம்* என்று திருவுள்ளம்பற்றி, *கோதில்வாய்மையினாயொடுமுடனே யுண்பன் நான்* என்று பெருமாளோடு பண்ணின ஸஹபோஜநமும்,

(ஒருபிறவியிலே இத்யாதி) யது குலத்திலே பிறந்து கோபகுலத்திலே ஸஜாதீயத்வேந வளருகையாலே ஒருபிறவியிலே இருபிறவியான க்ருஷ்ணனுக்கு தர்மபுத்ரர்

தம்முடைய யாகத்திலே அக்ரபூஜை கொடுத்தமையும், ருஷிபுத்ரராய்ப்பிறந்துபோய் மற்றோரிடத்திலே தஜ்ஜாதீயராய வளருகையாலே ஒருபிறவியிலே இருபிறவியான திருமழிசைப்பிரானுக்குப் பெரும்புலியூரடிகள் தம்முடைய யாகத்திலே அக்ர பூஜை கொடுத்தமையும்;

(ஜ்ஞவரிஷ்ட்யாதி) பாண்டவர்களைவரில் ப்ரதாநரான தர்மபுத்ரர் ஸ்ரீவிதுரர்க்கு ஜ்ஞாநாதிக்யத்தையும் அசரீரிவாக்யத்தையுங்கொண்டு ஸந்தேஹியாமல் செய்த புத்ரக்ருத்யமும், தசரதாத்மஜர் நால்வரில் ப்ரதாநரான பெருமாள், *ஸௌமித்ரே ஹர காஷ்டாநி நிர்மதிஷ்யாமி பாவகம், க்ருத்ரராஜம் திதக்ஷாமி மத்க்ருதே நிதநம் கதம்* என்று ஸஹஜரான இளைய பெருமாளும் கூடநிற்கச்செய்தே அவர்கையிலுங்காட்டாமல், *ஏவமுக்த்வா சிதாம் தீப்தாமாரோப்ய பதகேச்வரம், ததாஹ ராமோ தர்மாத்மா ஸ்வபந்துமிவ து:கித:* என்கிறபடியே பெரியவுடையாருக்குச் செய்த புத்ர க்ருத்யமும், பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரியதிருமலைநம்பி என்று ஸப்ரஹ்மசாரிகளாயக் கொண்டு ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவிக்கையாலும், உடையவர்க்கு ஆசார்யர்களாகை யாலும் ப்ரஸித்தரான நம்பிகள் மூவரிலும் ப்ரதாநரான பெரிய நம்பி மாறனேரி நம்பிக்கு "புரோடாசத்தை நாய்க்கிடாதே கொள்ளும்" என்று அவர் அருளிச் செய்துபோனபடியே புரோடாசமாக நினைத்துச்செய்த புத்ரக்ருத்யமும்;

(புஷ்பத்யாகேத்யாதி) *சிந்து பூமகிழும் திருவேங்கடம்* என்கிறபடியே புஷ்ப மண்டபமான திருமலையில் பணிப்பூவும் கையுமாய் திருவுள்ளமறிப்பரிமாறுகையாலே திருவேங்கடமுடையானுக்கந்தரங்கரான குறும்பறுத்தநம்பியை, *தூளங்குநீண் முடியரசர்தம் குரிசில் தொண்டை மன்னவன்* என்கிற அபிஷிக்தக்ஷத்ரியாகர்யரான தொண்டைமான் சக்ரவர்த்தி அநுவர்த்தித்த க்ரமமும், *வேகவத்யுத்தரே தீரே புண்ய கோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வபூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிறபடியே த்யாகமண்டபமான பெருமாள்கோயிலில் திருவாலவட்டமும் கையுமாய்ப் பெருமா ளுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதிகோத்தமரான உடையவர் அநுவர்த்தித்த க்ரமமும், *தெண்ணீர்ப் பொன்னிதிரைக்கையாலடிவருடப் பள்ளி கொள்ளும்* என்கிறபடியே போகமண்டபமான கோயிலில் வீணையும் கையுமாய்ப் பெரிய பெருமாளுக்கந்தரங்கராய் வர்த்தித்த திருப்பாணாழ்வாரை லோகஸாரங்க மஹாமுனிகள் அநுவர்த்தித்த க்ரமமும்.

(யாகாநுயாகேத்யாதி) *யஜ-தேவபூஜாயாம்* என்கையாலே யாகசப்தவாச்யமான திருவாராதநத்தில் பிள்ளையுறங்காவில்லிதாஸர் ஸ்பர்சத்தாலே காயசுத்தி பண்ணின உடையவரும், பகவதாராதநாநந்தரம் ததீஸமாராதநம் பண்ணப்படுமதாகை யாலே அநுயாக சப்தவாச்யமான ப்ரஸாதஸ்வீகாரத்தில் பிள்ளையேறுதிருவுடை யார் தாஸர் கரஸ்பர்சத்தாலே அங்கசுத்தி பண்ணின நம்பிள்ளையும், உத்தரவீதிகுடி புகுருகிறபோது பிள்ளைவானமாமலைதாஸர்ஸஞ்சரணத்தாலே ஸ்தலசுத்திபண் ணின நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டருமாகிற ஜ்ஞாந வ்ருத்தர்களுடைய ஆசாரமும், (அறிவார்க்கிறே ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது) இப்படி கீழ்ச்சொன்ன விவை யெல்லாமறிவார்க்கிறே 'இன்ன ஜந்மம் உத்க்ருஷ்டம், இன்ன ஜந்மம் அபக்ருஷ்டம், என்று ஜந்மத்தினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் தோன்றுவதென்றபடி.

இத்தால் ஜந்மாத்யபக்ருஷ்டர் பகவத்பக்தர்களானார்களாகில் உத்க்ருஷ்டவர் ணரால் அநுவர்த்தநீயராய், அவர்களுக்கு ஜ்ஞாநப்ரதராய், ஈச்வரனோபாதி அவர் களுக்குப் பூஜ்யராய், ஸ்வதீர்த்தப்ரஸாதங்களாலே ஸர்வரையும் சுத்தராக்குமவர் களாம்படியையும், பாபமகரான உத்க்ருஷ்டவர்ணர்க்கும் ஸ்வஸம்பந்தத்தாலே உத்தாரகராம்படியையும், அவர்களளவில் பகவத்ததீயர்களுடைய ஆதராநுவர்த்தந ப்ரகாரங்களையும் அவர்களுடைய ஸ்பர்சமே பரமபாவநமென்னுமத்தையும், ப்ரமேய

பூதனான ஈச்வரனுடையவும் ப்ரமாத்ருபூதரான ருஷிகளுடையவும் வசனாநுஷ்டானங்களாலே மந்தமதிகளுமறியும்படி ப்ரகாசிப்பித்தாராய்த்து ... (85)

86 'ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது' என்றவிடத்தில் சொன்ன உத்கர்ஷாபகர்ஷங்களுக்கு உடலாக விவக்ஷிதமானவற்றை மேலிரண்டு வாக்யத்தாலே வெளியிடுகிறார். அதில் ப்ரதமத்திலே அபக்ருஷ்டஜந்மம் இன்னதென்று தோற்றும்படி பகவத்ஜ்ஞாநரஹிதமான வர்ணாச்ரமிகளின் ஹேயத்வத்தை ஸப்ரமாணமாக தர்சிப்பிக்கிறார்— (அஜ்ஞரென்று தொடங்கி).

(மூ) 86 அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரமவித்யாவ்ருத்தங்களை கர்தபஜந்மம் சண்டாளதாம் சில்பநைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்காரமென்று கழிப்பர்கள்.

அதாவது, பகவத்தாஸ்யமே ஆத்மாவுக்கு நிரூபகமென்றும் நிரூபகர்ஷித்தது குணமாக ஹேயோபாதேய விபாகம் பண்ணத்தக்க ஜ்ஞானமில்லாதவர்கள் பகவத்விஷயரஹிததயா அபக்ருஷ்டராயிருக்க, உத்தமவர்ணம், உத்தமாச்ரமம், ஸத்வித்யை, ஸத்வ்ருத்தம் என்று உத்க்ருஷ்டமாக ப்ரமிக்கிற வர்ணாதிகளையும், *சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் நவிந்ததி, வேதபாரபராக்ராந்தஸ் ஸவை ப்ராஹ்மணகர்தப:* என்று நாலு வேதங்களையுமதிகரித்துவைத்தே *ஸர்வே வேதா யத்பதமாமநந்தி* *வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:* என்கிறபடியே ஸகலவேத ப்ரதிபாத்யனான ஸர்வேச்வரனை யறியாதவனை குங்குமம் சுமந்த கழுதைபோலே தான் பரித்துக் கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத ப்ராஹ்மணகழுதையென்றும், *ச்வபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:* என்று சராசரமியாகிலும் பகவத்பக்திஹீனனானவனை சண்டாளனிற்காட்டில் தண்ணியனென்றும், *தத்கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்* என்று பகவத்பரதயா மோக்ஷார்த்தமானதுவே வித்யை, அல்லாதது செருப்புக்குத்தக்கற்றவோபாதியென்றும், *ஆம்நாயாத்யயநாந்யரண்யருதிதம் வேதவ்ரதாந்யந்வஹம் மேதச்சேதபலாநி பூர்த்தவிதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி, தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நாநம் விநா யத்பதத்வந்த்வாம்போருஹஸம்ஸ்ம்ருதி விஜயதே தேவஸ் ஸ நாராயண:* என்று பகவத்ஸ்ம்ருதியில்லாதவர்களுடைய கர்மாநுஷ்டானம் பஸ்மாஹுதிவத் நிஷ்ப்ரயோஜநமென்றும், *யஸ்யாகிலாமீவஹபிஸ் ஸுமங்களைர் வாசோ விமிச்ரா குணகர்மஜந்மபி:, ப்ராணந்தி சும்பந்தி புநந்தி வை ஜகத் யாஸ் தத்விரக்தாச் சவசோபநா மதா:* *விஷ்ணுபக்திவிஹீநஸ்ய வேதச் சாஸ்த்ரம் ஜபஸ் தப:, அப்ராணஸ்யைவ தேஹஸ்ய மண்டநம் லோகரஞ்ஜநம்* என்று பகவத்விஷயரஹிதோக்திகளும் பகவத்பக்திஹீனனுடைய வித்யாவ்ருத்தங்களும் சவாலங்காரகல்பமென்றும், *ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா ஜாத்யா வ்ருத்தைரபி ச குணைஸ் தாத்ருசோ நாத்ர கர்ஹா, கிந்து ஸ்ரீமத்புவநபவநத்ராணதோந்யேஷு வித்யாவ்ருத்தப்ராயோ பவதி விதவாகல்பகல்ப: ப்ரகாச:* என்று பகவதநந்விதருடைய வித்யாவ்ருத்த பாஹுள்யமாகிற உத்கர்ஷம் பகவத்ஸம்பந்தஜ்ஞான ரூபஸௌமங்கல்யாபாவத்தாலே விதவாலங்காரஸமமென்றும் ஜ்ஞானிகளானவர்கள் இகழுவர்களென்கை. ஆக இப்படி பகவத்விஷய ஸ்பர்சமற்ற வர்ணாச்ரமங்களும் ஜ்ஞானவ்ருத்தங்களும் ஹேயமென்கையாலே கீழ் அபக்ருஷ்டஜந்மதயா விவக்ஷிதமானது இன்னதெனுமிடமறிவித்தாராய்த்து. ... (86)

ஆசார்யஹ்ருதய வ்யாக்யானத்தில் முதல் ப்ரகரணம் முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஆசார்ய ஹ்ருதய வியாக்க்யானத்தில்

## இரண்டாம் பிரகரணம்

---

87. இனிமேல் ஆத்மநிரூபக சேஷத்வாநுகூல ஜந்மமே உத்க்ருஷ்ட ஜந்மமென்னுமத்தை அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரும் முமுக்ஷுக்களுமான மஹாத்மாக்களாதரமுகேந ப்ரகாசிப்பிக்கிறார்—(அணையவென்று தொடங்கி)

**(மூ) 87. அணையவூரப்புனைய அடியும் பொடியும்படப் பர்வத பவநங்களிலே ஏதேனுமாக ஜநிக்கப் பெறுகிற திர்யக்ஸ்தாவர ஜந்மங்களைப் பெருமக்களும் பெரியோரும் பரிக்ரஹித்து ப்ரார்த்திப்பர்கள்**

அதாவது, *அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது* என்று பிராட்டி திருமேனிஸ்பர்சத்தோடொக்க விகல்பிக்கலாம்படி அத்யந்தஸுகஸ்பர்சமாய், சைத்யமார்தவ ஸௌரப்யங்களை ப்ரக்ருதியாக வுடைத்தாய்க்கொண்டு ச்ரிய:பதியானவன் கண்வளர்ந்தருளுகைக்குப் பாங்காயிருக்கும் திருவரவணையாயும், *ஊருமபுள்* என்கிறபடியே ஆர்த்தரக்ஷணத்துக்கும் அநுகூலரை அநுபவிப்பிக்கைக்கும் தன் உகப்புத்தனக்குமாக அவன் பலகாலும் மேற்கொண்டு நடத்துகைக்கு வாஹனமான கருளப்புள்ளாயும், *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடி மேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய்* என்கிறபடியே அவனுதரித்துச் சாத்துகைக்கு அர்ஹமான திருத்துழாயாயுமிருக்கும் திர்யக்ஸ்தாவர ஜந்மங்களை *பெருமக்களுள்ளவர்* என்கிறபடியே *அஹ்ருதஸஹஜதாஸ்யராகையாலே *அஸந்நேவ* என்பது *ஸந்தமேநம்* என்பதாக வேண்டாதபடி என்றுமொக்க வுளராயிருக்கிற மஹாத்மாக்களான நித்யஸூரிகள் பகவத் கைங்கர்யேச்சையாலே பரிக்ரஹித்தார்கள்.

*பத்யு: ப்ரஜாநாமைச்வர்யம் பசூநாம் வா ந காமயே, அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநாதடே* என்று ப்ரஜாபதிபசுபதிகளுடைய ஐச்வர்யத்தையும் வேண்டேன்; *பூத்தநீள்கடம்பேறி* என்றும் *பூங்குருந்தேறியிருந்து* என்றும் சொல்லுகிறபடியே யமுனைக்கரையில் அவன் திருவடிகளால் மிதித்தேறின கடம்பாதல், குருந்தாதலாவேனாக வேணுமென்றும் *ஆஸாமஹோ சரணரேணு ஜுஷாமஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்மலதௌஷதீநாம். யா துஸ்த்யஜம் ஸ்வஜநமார்யபதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம்* என்று ச்ருதிகளாலே தேடப்படுமதான க்ருஷ்ணன் போனவழியைஸ்வஜநாதிகளையும் அதிக்ரமித்து யாவர்சில பெண்கள் பின்தொடர்ந்தார்கள், அவர்களுடைய பாத ரேணுவை பஜித்திருப்பனவாய ப்ருந்தாவனத்திலிருக்கும் சிறுசெடிகள் கொடிகள் ஓஷதிகளில் வைத்துக்கொண்டு ஏதேனுமொன்றாவேனாக வேணுமென்றும்; *கோனேரிவாழும் குருகாய்ப்பிறப்பேனே* *மீனாய்ப்பிறக்கும்விதியுடையேனாவேனே* *செண்பகமாய் நிற்கும் திருவுடையேனாவேனே* *தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேனே* *எம்பெருமான் பொன்மலைமேலேதேனுமாவேனே* என்று திருமலையாழ்வாரோட்டை ஸம்பந்தமுடைய திர்யக்ஸ்தாவர ஜந்மங்களில் ஏதேனுமொன்றாகப் பெறுவேனாகவேணுமென்றும், *தவ தாஸ்யஸுகைகஸங்கிநாம் பவநேஷ்வஸ்த்வபி

கீடஜந்ம மே* என்று தேவரீருடைய தாஸ்யஸுகமொன்றிலுமே ஸங்கத்தையுடைய ரான ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகைகளிலே உத்பத்தி விநாசங்களிரண்டும் அங்கேயாம் படியான கீடஜந்மமே எனக்குண்டாகவேணுமென்றும், இப்படி அவனடிபடவும், அவனையணைந்தாரடியிலபொடி படவும், அவனுகந்தருளின நிலத்திலேயாதல், அவனடியார் அபிமாநமுள்ள நிலத்திலேயாதல வாத்திககவுமீடாக ஜநிக்கப்பெறுகிற திர்யக்ஸ்தாவர ஜந்மங்களை *பேராளன் பேரோதும் பெரியோரான ஸ்ரீசுகப்ரஹ்மர்ஷி (உத்தவர்) ஸ்ரீகுலசேகரப்பெருமாள் பெரியமுதலியார் முதலான முமுக்ஷுக்கள் ப்ரார்த்தித்தார்களென்றபடி.

இத்தால் *வாசிகை: பக்ஷி ம்ருகதாம் மாநஸை ரந்த்யஜாதிதாம், சரீரஜை: கர்ம தோஷைர் யாதி ஸ்தாவரதாம் நர:* என்று இந்தவிபூதியில் திர்யக்ஸ்தாவரஜந்மங்கள் வாசிக காயிக பாபபலங்களாக சாஸ்த்ரம் சொல்லாநிற்க, அப்படியன்றிக்கே பகவத் விநியோகார்ஹமாக இந்தஜந்மங்களை நித்யஸூரிகள் ஸ்வேச்சையாலே ஏறிட்டுக் கொள்ளுவர்களென்றும், தாஸ்ய ரஸஜ்ஞரான முமுக்ஷுக்கள் தத்ஸம்பந்த ததீய ஸம்பந்தமுள்ள திர்யக்ஸ்தாவரஜந்மங்களை ப்ரார்த்திப்பர்களென்றும் சொல்லுகை யாலே தாஸ்யாநுகுணஜந்மமே உத்க்ருஷ்டமென்றதாய்த்து. ... (87)

88. பகவத் விநியோகார்ஹமாகையாலே திர்யக ஸ்தாவர ஜந்மங்களை நித்ய ஸூரிகள் பரிக்ரஹிக்கை ப்ராப்தம்; அங்ஙனன்றிக்கே முமுக்ஷுக்களான இவர்கள் பகவத் பாகவத சேஷத்வ வாஞ்சையாலே திர்யக ஸ்தாவர ஜந்மங்களை ப்ரார்த்தித் தார்களாகிலும், உத்க்ருஷ்டதயா சாஸ்த்ரஸித்தமான வர்ணத்தை இப்படி கழிக்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (சேஷத்வே த்யாதி.)

(மூ) 88. சேஷத்வ பஹிர்பூத ஜ்ஞாநாநந்தமயனையும் ஸஹியாதார் த்யாஜ்யோ பாதியை ஆதரியார்களே.

அதாவது—*நதேஹம் நப்ராணாந் நச ஸுக மசேஷாபிலஷிதம் நசாத்மாநம் நாந்யத் கிமபி தவசேஷத்வவிபவாத், பஹிர்ப்பூதம் நாத க்ஷணமபி ஸஹே யாது சததா விநாசம் தத் ஸத்யம் மதுமதந! விஜ்ஞாபநமிதம்* என்று தேவரீருடைய சேஷத்வத் துக்குப் புறம்பான தேஹாதிகளொன்றையும் க்ஷணமும் ஸஹியேன். அவ்வள வன்றியே ஜ்ஞாநாநந்த மயமான ஆத்மவஸ்துவையும் ஸஹியேன், அது சததாவாக விநாசத்தையடைவதாக, இந்த விண்ணப்பம் அஹ்ருதய மன்று ஸத்யம், நீரு முன்பே பொய் சொன்னேனாகில் தேவரீர்க்குப் பொய்யனென மதுபட்டது படுகிறே னென்கையாலே, சேஷத்வத்துக்குப் புறம்பானபோது *ஜ்ஞாநாநந்த மயஸ்த் வாத்மா* என்று ஜ்ஞாநாநந்த மயத்வத்தாலே சலாக்யமாயிருக்கு மாத்மாவையும் ஸஹியாதவர்கள் சேஷத்வ விரோதி பூத அஹங்கார ஹேதுவாகையாலே த்யாஜ்ய மாய் கர்மநிபந்தனமாகையாலே ஔபாதிகமாயிருக்கிற வர்ணத்தை ஆதரிப்பர் களோவென்கை. ஔபாதிகமான வித்தை உபாதியென்றது கார்யே காரணோப சாரம். .. .. .. .... .... .... (88)

89 வர்ணத்தினுடைய ஔபாதிகத்வந்தன்னை உதாஹரண முகேந தெளிவிக்கிறார்மேல் (இதினௌபாதிகத்வம் ஒரு ராஜாவென்று தொடங்கி.)

(மூ.) 89 இதின ஔபாதிகத்வம ஒரு ராஜா தன்னை மறைமுனிவனுக்கினவன் நீசனுக்குவித்த ராஜாவை வாரே உறுப்பாக யஜிப்பித்து ஸ்வர்க்க மேற்றினபோதே தெரியும்.

அதாவது, இவ்வர்ணத்தினுடைய ஔபாதிகத்வம் குசிகவம்சயனாய் ராஜாவான விச்வாமித்ரன் ப்ரஹ்மர்ஷித்வகாமனாய், நெடுங்காலம் தபஸ்ஸு பண்ணின ப்ரஹ்மர்ஷியாக்கின சக்தி தன்னை *மந்திரங்கொள் மறைமுனிவன்* என்னும்படி ப்ரஹ்மர்ஷியாக்கின சக்தி மானான வஸிஷ்டன் தன் வார்த்தை கேளாமல் தன்னை அவமதி பண்ணிப்போனது கொண்டு ஸ்வபுத்ரர்கள் பண்ணின சாபத்தாலே மார்பிலிட்ட யஜ்ஞோபவீதமே வாராய்ப்படி சண்டாளனாக்குவித்த இக்ஷ்வாகு வம்ச்யனாயிருந்துள்ள த்ரிசங்குவாகிற ராஜாவை அந்த வார்த்தானே யஜ்ஞோபவீதமான உறப்புத்தோலாகக்கொண்டு தன்னுடைய தபோபலத்தாலே யஜிப்பித்து ஸ்வர்க்காரோஹணம் பண்ணுவித்த போதே ஸுஸ்பஷ்டமென்கை.

இத்தால், ஒரு க்ஷத்ரியன் ஸுக்ருதவிசேஷத்தாலே அந்த சரீரந்தன்னோடே ப்ரஹ்மர்ஷியாகையாலும், ஒரு க்ஷத்ரியன் துஷ்க்ருத விசேஷத்தாலே அந்த சரீரந் தன்னோடே சண்டாளனாகையாலும், க்ஷத்ரியத்வம் போய ப்ரஹ்மர்ஷியானவன் தான் ப்ரஹ்மர்ஷியாவதுக்கு முன்பே க்ஷத்ரியவேஷம் போய சண்டாளவேஷமாய் நிற்கிறவனை அந்த வேஷந்தன்னோடே யஜிப்பித்து ஸ்வர்க்கத்திலே யேற்றுகை யாலும் வர்ணத்தின் கர்மோபாதிகத்வம் எல்லார்க்கும் தோன்றுமென்ற ... (89) தாய்த்து.

90 இனிமேல் ப்ராகரணிகமாய் வருகிற ப்ரமாத்ருவைபவ ஸ்தாபநத்துக்கு உறுப்பாக ப்ரமாண ப்ரமேயங்களையும் கூட்டிக்கொண்டு மூன்றிலும் த்யாஜ்யோபாதேயாம்சங்களுண்டென்னுமிடத்தை விபஜித்துச் சொல்லி இவ்விசேஷமறிவார் பெறும்பேற்றையும், இதறியாமல் பாகவத ஜன்ம நிரூபணம் பண்ணுவார் அதபதிக்கும்படியையும் அருளிச்செய்கிறார் (மாவுருவிலித்யாதியாலே).

(மூ) 90. மாவுருவில் கள்ளவேடம், திருநந்து வேதமலமான மானிடம் பாடல்,
ஸர்வவர்ண சூத்ரத்வம், காடுவாழ்சாதியில் கடல்வண்ணன் வேடம்,
தென்னுரையில் ஹரிகீர்த்தி, ச்வபசரில் பத்திபாசனமுமறிவார் ஆரார
மரென்ன வேற அறியாதார் சாதியந்தணர்களேலும் தகரவிழுவா.

அதாவது, *எம்மாவுருவும் வேண்டுமாற்றாலாவாய்* என்கிறபடியே எல்லா ரூபமும் அப்ராக்ருதமாகையாலே ச்லாக்யமுமாய் இச்சாக்ருஹீதமுமாயிருக்கும் பகவதவதார விக்ரஹங்களிலே வைத்துக்கொண்டு வேதாப்ராமாண்யத்தை உபபாதித்து வைதிகருசியைக் குலைக்கைக்காக *யதாஹி சோரஸ் ஸ ததாஹி புத்த:* என்கிறபடியே *கள்ளவேடத்தைக் கொண்டு* என்னும்படி பரிக்ரஹித்த புத்த முனியான விக்ரஹமும், பகவத் ஸ்வரூபாதிகளை யதாவாக ப்ரதிபாதிக்கையாலே கட்டளைப்பட்டிருந்துள்ள வேதத்தில *நஸ்மர்த்தவ்யோ விசேஷேண வேத மந்த்ரோப்யவைஷ்ணவ:* என்கிறபடியே ஸ்மரிக்கவுமாகாதபடி மலாமசமான *மானிடம் பாடலென்னாவது* என்கிறபடியே க்ஷேத்ரஜ்ஞரை ப்ரசம்ஸிக்கிற வாக்யங்களும், *நசூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ்ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யேஹ்யபக்தா ஜநார்தநே* என்று எல்லாவர்ணங்களிலும் பகவத்பக்தரல்லாதார் சூத்ரத்வமாகிற — ப்ரமேயத்திலும் ப்ரமாணத்திலும் ப்ரமாதாக்களிலுமுண்டான த்யாஜ்யாம்சங்களும்,

*காடுவாழ் சாதியுமாகப் பெற்றான்* என்று ஊர்மனையில் வஸியாமல் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுள்ள காடுகளிலே வர்த்திக்கையாலே *காடுவாழ் சாதி* என்கிற கோபஜாதியிலே ஸஜாதீயனாய் வந்தவதரித்து நிற்கிற க்ருஷ்ணனுடைய *காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்* என்று தாமநுபவித்துப் பிறர்க்கு

மழைத்துககாட்டுமபடி பசுமேய்த்து வருகிறபோதை யலங்காரத்தோடே கூடியிருக்கிற விக்ரஹமம. *தென னுரையில கேட்ட றிவதுணடு* எனகிறபடியே தக்ஷிண திகவர்த்தி யானதுகொணடு தென னுரை என்று சொலலபபடுகிற தராவிட பாஷையான ப்ரபந் தங்களில *ஹரிகீர்த்திம விநைவாங்யத்* இத்யாதிப்படியே பகவத்ப்ரதிபாதகமானவை யும, *சவபசோபி மஹீபால விஷ்ணுபக்தோ தவிஜாதிக:* எனகிறபடியே ச்வபசரில் *பெறறகரியனனபாத பத்தியானபாசனம* என்று ஸ்வயத்நத்தால பெறுதறகரிதா யிருநதுளள பகவத் பாத கமல பகதியாகிற தனமுடையவாகளுமாகிற-ப்ரமேயாதித்ர யததிலுபாதேயாமசஙகளுமான இவவிபாகமறிவார் *ஆராரமரா* எனகிறபடியே ஏதே னும ஜந்ம வருத்தஙகளையுடையரேயாகிலும ஸூரிஸமரென னுமபடி சலாகயராய *இலஙகுவான யாவரு மேறுவர்* எனகிறபடியே அத்யுஜ்ஜ்வலமான பரமபதத்தை ப்ராபிகக, இபப்ரமேயாதி தரயத்திலும கீழசசொனனவாசி யறியாதாராயககொணடு பாகவத ஜநமநிருபணம பணணுவார் *அமரவோரஙகமாறுய* எனகிற பாட்டில 'ஸாஙகமாக ஸகலவேதஙகளையும அத்யயனம பணணி ததிய சரேஷ்டருமாய உத கருஷட ஜநமாககளுமா யிருநதாககளேயாகிலும தேவரீர்திருவடிகளின ஸமபந்தைக நிருபணீயரான ஸ்ரீவைஷ்ணவாகளை ஜநமாதிகளையிட்டு நிநதிப்பர்களாகில காலாந தரே தேசாநதரே யனறிககே அபபோதே அவவிடநதனனிலே அவர்கள தாஙகள சண்டாளராவாகள' எனகிறபடியே உத்க்ருஷ்ட ஜநமாககளே யாகிலும கர்மசண் டாளராய் இனியொருகாலமும கரையேற யோகயதையிலலை யெனனுமபடி அத: பதிப்பர்களெனகை. *அநாசாராந் துராசாராந அஜ்ஞாத்ரூந ஹீநஜந்மந:, மதபகதாந் சரோத்ரியோ நிநதந் ஸத்யச சண்டாளதாம வரஜேத்* எனனககடவதிறே.

ஆக (ஸூ. 75) *வீட்டினப விதயாதி வாகயந தொடஙகி (ஸூ. 84) *நிமகநரை உயர்த்தத தாழ விழிநதார்* என னுமளவும ஆழவாருடைய வைபவத்தை ப்ரதி பாதிதது ததஸதாபநார்த்தமாக *மலேசசனுமபகதனுலை* என்று தொடஙகி, மேலெலலாம ஸாமாநயேந பாகவத வைபவததை விஸதரேண ப்ரகாசிப்பித்து உபகரம வாக்யத்திறபோலே ப்ரமாணப்ரமேயஙகளுடனே சேர்த்து ப்ரமாத்ரு வைபவத்தை நிகமிததாராயத்து. (90)

91. இபபடி பாகவதத்வ ஸாமாநய ப்ரயுகத வைபவ மாத்ரமனறிககே *ஜநக தசரத* இத்யாதி (82) வாகயநதொடஙகி மூனறு வாகயத்தாலே கீழச் சொனன வைபவவிசேஷ த்யோதகமான ப்ரமாணமேதெனனு மாகாஙகைஷயிலே யருளிச செய்கிறுர்மேல (தமிழ மாமுனி யெனறு தொடஙகி).

(மூ.) 91. தமிழமாமுனிதிக்கு சரண்யமென்றவாகளாலே கவசித்கவசித்தென்று இவராவிாபபாவம கலியும கெடும்போலே ஸூசிதம்.

(தமிழமாமுனிதிககு சரண்யமெனறவர்களாலே) *தக்ஷிண திக கருதா யேந சரண்யா புணயகர்மணு* எனறு *வணதமிழ மாமுனி* எனகிறபடியே தராவிட சாஸதர ப்ரவர்த்தகனை அகஸத்யனிருககிற திககு ஸர்வாககும புகலிடமெனற மஹர்ஷிகளாலே. இபபோது இது சொலலிறறு-வைதிகரான ருஷிகள தராவிட ப்ரபந்த வகதாவானவிவரை இபபடி பஹுமதி பணணிச சொலலககூடுமோவெனறு சஙகிப்பார்ககு ஒரு த்ராவிட ஜனனலே தக்ஷிணதிககுககு நனமை சொனனவர்கள த்ராவிடப்ரபநத முகேந லோகோஜ ஜீவநகரரான இவரையும இபபடி பஹுமாநம பண்ணிச சொலலக குறையிலலையெனறு தோறறுகைககாக.

(கவசித்கவசித்தெனறு இவராவிர்ப்பாவம) *க்ருதாதிஷு நரா ராஜந கலா விச்சநதி ஸமபவம, கலௌ கலு பவிஷயநதி நாராயண பராயணு:, கவசித்கவசித

மஹாராஜ த்ராவிடேஷு ச பூயச:, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ, யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர, தேஷாம் நாராயணே பக்திர்பூயஸீ நிருபத்ரவா* என்று ஜ்ஞாதாக்கள் வந்து ஆவிர்ப்பவிக்கும் ஸ்தலவிசேஷங்களை தத்தந்நதீ விசேஷங்களாலே ப்ரகாசிப்பித்து அந்த நதீவிசேஷங்களில் ஜலத்தைப் பானம் பண்ணுமவர்களுக்கு பகவத் பக்தி அதிசயிக்கும்படியையும் சொல்லுகிறவளவில் ப்ரதமத்திலே *தாம்ரபர்ணீ நதீ யத்ர* என்று இவராவிர்ப்பாவ ஸ்தலத்தைச் சொல்லுகையாலே இவ்வாழ்வாருடைய ஆவிர்ப்பாவமானது.-(கலியும் கெடும் போலே ஸூசிதம்) இவர் தாம் மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே *கலியும் கெடும்* என்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்து கலியுகஸ்வபாவம் கழியுமென்று மேல்வருமர்த்தத்தை தர்சித்தருளிச் செய்தாப்போலே த்ரிகாலஜ்ஞரான ஸ்ரீ சுகாதிகளாலே ஸூசிப்பிக்கப்பட்டதென்கை.

*க்ருதே கலியுகே ப்ராப்தே நாஸ்திகை: கலுஷீக்ருதே, விஷ்ணோரம்சாம்சஸம்பூதோ வேத வேதார்த்த தத்வவித், ஸ்தோத்ரம் வேதமயம் கர்த்தும் த்ராவிட்யாபி ச பாஷயா, ஜநிஷ்யதி ஸ்தாம் ச ச்ரேஷ்டோ லோகாநாம் ஹிதகாம்யயா* இத்யாதிவசநங்களும் இவராவிர்ப்பாவ ஸூசகங்களாகையாலே இவ்விடத்திலே விவக்ஷிதங்கள். கேவல ஜந்மவாசக சப்தங்களிலொன்றைச் சொல்லாதே அவதார சப்தபர்யாயமான ஆவிர்ப்பாவ சப்தத்தைச் சொல்லிற்று இவர் பிறப்பும் ஈச்வரன் பிறப்போபாதி ப்ராரர்த்தமென்று தோற்றுகைக்காக. இத்தால் இவர் ஓரவதார விசேஷமென்றதாயிற்று. (91)

92. இப்படி அவதரித்தவிவர் தாம் ஆரென்னு மாகாங்க்ஷையிலே பேரளவுடையாரும் இவரை இன்னாரென்று அளவிடமாட்டாமை அதிசங்கை பண்ணும்படியை அருளிச் செய்கிறார் மேல் (அத்ரியென்று தொடங்கி).

(மூ.) 92. அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸு நந்த ஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ? வ்யாஸாதிவதாவேசமோ? ஸூதுவா க்கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற அனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோவென்று சங்கிப்பார்கள்.

அதாவது-க்ருத யுகத்திலே அத்ரியும் ஜமதக்நியுமாகிற ப்ராஹ்மணோத்தமர்களுக்குப் பிள்ளையாய்க்கொண்டு தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய், த்ரேதா யுகத்திலே க்ஷத்ரியனான தசரத சக்ரவர்த்திக்குப் பிள்ளையாய் த்வாபர யுகத்திலே யயாதி சாபத்தாலே அபிஷேக ப்ராப்தியற்ற யதுகுலோத்பவராகையாலே க்ஷத்ரியரில் தண்ணியராய் வைச்யப்ராயராயிருக்கிற வஸுதேவர்க்கும் *க்ருஷி கோரக்ஷ்வாணிஜ்யம் வைச்யம் கர்ம ஸ்வபாவஜம்* என்கிறபடியே கோரக்ஷணாதி தர்மத்தையுடைய ஸாக்ஷாத் வைச்யரான ஸ்ரீ நந்தகோபர்க்கும் புத்ரனாய், இப்படி க்ருதாதி யுகக்ரமத்திலே ப்ராஹ்மணாதி வர்ணக்ரமேண அவதரித்துவந்த ஸர்வேச்வரன் சதுர்த்தமான கலியுகத்திலே சதுர்த்த வர்ணத்திலே வந்தவதரித்தபடியோ வென்கை.

பூர்வ யுகத்ரயத்திலும் அடைவே வர்ணத்ரயத்திலும் அவதரித்து வருகையாலும், *கலௌ புந: பாபராதாபிபூதே ஸ உத்பபூவாசரித வத்ஸலத்வாத், பக்தாத்மநா ஸர்வஜநாந் ஸுகோபதும் விச்வாதிகோ விச்வமயோஹி விஷ்ணு:* என்று கலியுகத்திலே ஸர்வேச்வரன் பக்தரூபேண அவதரித்தானென்று ருஷிகள் சொல்லுகையாலும் இவர் வைபவம் கண்டவர்களுக்கு இப்படி சங்கிக்க யோக்யதை யுண்டிறே.

(வ்யாஸாதிவதாவேசமோ) அதாவது *க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்* என்றும் *ஸோயம் நாராயண: ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹா-

முநி:* என்றும் சொல்லுகிறபடியே வேதங்களை வ்யஸிக்கை முதலான கார்யங்களை நிர்வஹிக்கைக்காக வ்யாஸாதிகள் பக்கல் ஆவேசித்தாப்போலே இவரைக்கொண்டு த்ராவிட வேதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்காக இவர் பக்கல் ஆவேசித்தானோ வென்கை. இவரைக்கொண்டு லோகத்தைத் திருத்துகைக்காக இவர் பக்கலிலே ஆவேசித்து நிற்கவும் கூடுமாகையாலே இப்படியும் சங்கிக்கலாமிறே.

(முதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ) அதாவது-*விண்ணுளாட்டவர் மூதுவர்* என்று பரமபதத்துக்கு நிலத்தாளிகளான நித்யஸூரிகளிலே இவ்விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வர நியோகத்தாலே அவதரித்தார் ஒருவரோ?' அன்றிக்கே *கரை கண்டோர்* என்று ஸம்ஸாரத்தைக் கடந்து அக்கரைப்பட்டிருக்கும் முக்தரிலே ஸம்ஸாரிகளைத் திருத்துவதாக பகவந்நிதேசத்தால் அவதரித்தார் ஒருவரோ? அன்றிக்கே, *முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் ச்வேதத்வீபநிவாஸிநாம்* என்கிறபடியே முக்தப்ராயராய், *பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்* என்கிற ச்வேதத்வீப வாஸிகளிலே இவ்வருத்துள்ளாரைத் திருத்துகைக்காக ஈச்வரேச்சையாலே அவதரித்தா ரொருவரோவென்கை. இவருடைய வைபவம் பார்த்தால் எல்லாப்படியும் சொல்லலாம்படியிருக்கையாலே இப்படியும் தனித்தனியே சங்கிப்பார்க்கு சங்கிக்கலாமிறே *பின்னை கொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்* என்கிறபடியே பிராட்டிமாரோடு சேர்த்துப் பார்க்கும்போதும் தனித்தனியே சங்கிக்கலாம்படியிறே யிருப்பது; மற்றுள்ள ததீயருடன் பின்னை சொல்லவேண்டாவிறே.

(முன்னம்நோற்ற அநந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோ) அதாவது—கீழ்ச்சொன்னவர்கள் ஒருவருமன்றிக்கே ஸம்ஸாரிகள் தன்னிலே *முன்னம்நோற்ற விதி கொலோ* என்கிறபடியே ஜந்மாந்தர ஸஹஸ்ரஸஞ்சிதமான தம்முடைய ஸுக்ருத பலமாய்க்கொண்டு இப்படி திருந்தினாரொருவரோ? அன்றிக்கே, *அநந்தன் மேல்கிடந்த வெம்புண்ணியா* என்று நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே நித்ய ஸம்ஸாரியை நித்ய ஸூரிகல்பமாக்கவல்ல அநந்தசாயியான ஸநாதநபுண்யம் முழு நோக்காக பலித்து இப்படி திருந்தினார் ஒருவரோவென்று சங்கிப்பர்கள். அதாவது—இப்படிக் கீழ்ச்சொன்ன வகைகளாலே இவரை இன்னாரென்று நிச்சயிக்கமாட்டாமல் பேரளவுடையாரும் சங்கியாநிற்பர்களென்றபடி. ... ... .... (92)

93 இப்படி இவரை ஜ்ஞாநிகளானவர்கள் சங்கிக்கைக்கு ஹேதுவேதென்னுமாகாங்க்ஷையிலே இதுக்குமூலம் இவருடைய ப்ரபாவமென்கிறார்மேல்.

(மூ.) 93. **இதுக்குமூலம்—யான் நீ என்று மறுதலைத்து வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றி நிலையிடம் தெரியாதே தெய்வத்தின் மொருவகைக் கோப்பாக இனத்தலைவன் அந்தாமத்தன்பு செய்யச் சோந்தமைக் கடையாளமுளவாக உகந்துகந்து திமிர்கொண்டாலொத்து நாட்டியல் வொழிந்து சடரையோட்டி மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு நடாவிய கூற்றமாய்த் தீயனமருங்குவாராமல் கலியுகம் நீங்கிக் கிதயுகம் பற்றிப் பட்டெழுபோதறியாதிருந்த ப்ரபாவம்.**

இதுக்குமூலம்—அதாவது, இவரைக்கண்ட ஜ்ஞாநாதிகர் 'இவர் இன்னார்' என்று நிர்ணயிக்கமாட்டாமை இங்ஙன் சங்கிக்கைக்கு ஹேது (யான் நீ யென்று மறுதலைத்து) *புவியுமிருவிசும்பும்* என்று தொடங்கி உபய விபூதியும் உன் ஸங்கல்பத்திலே கிடக்கின்றன; ஏவம்பூதனை நீ என்னுடைய சரோத்ரேந்த்ரியத்வாரா புகுந்து விசேஷித் மின்றிக்கே என் ஹ்ருதயத்திலே உளையாகாநின்றாய இப்படி

யான பினபு விபூதியையுடைய நீயோ விபூதிமானையுடைய நானோ பெரியாராரென றறிவாரார். அபரிஹத சகதியான நீதான இததை நிருபித்தறிநது காண என று உபயவிபூதியுகதனோடே மறுதலைககிற வைபவத்தையுடையராய.

(வானதது மணமிசை மாறும நிகருமினறி) *யாவர் நிகரகல வானத்தே* எனறும *மாறுளதோ விமமணணினமிசையே* எனறும அவனுடைய உபயவிபூதி யோகத்துககும ஸௌகுமாரயததுககும தகுதியாமபடியாகவும ஸர்வேசவரனை அவாப்த ஸமஸதகாமனாய ஒன றுககும விகருதனாகாதவன, தமமுடைய உகதிசரவண ஹர்ஷப்ரகாஷத்தாலே தெகுடாடுமபடியாகவும, திருவாயமொழிபாடுகிற நாவீறுடைமையாலே உபயவிபூதியிலும உபமாந ரஹிதராய், (நிலையிடம தெரியாதே) கலவியும பிரிவும கலசி நடககையாலே கலவியால வநத ரஸமேயாயச செலலும் அஙகுளளார் படியுமனறி, பகவத்குணகதாரகதையாலே அநந பாநாதிகளால தரிககுமிங குளளார படியுமனறி இபபடி உபயவிபூதியிலும அடங்காமையாலே *வைகுந்தமோ வையமோ நுமநிலையிடம* என று வாஸஸதலம தெரியாதபடியாய,

(தெய்வத்தின மொருவகைக கொபபாக) *தெயவத்தினமோரனையீர்களாய்* என று ஒருவரிருவரனறிககே நிதயஸூரிகளெலலாரும கூடினாலும தமககு ஒரு வகைக கொப்பாமபடியாய (இனததலைவன அநதாமத தனபுசெயய) *வானோரினத் தலைவன் *என று அனநத ஸூரிஸஙகநிர்வாஹகனான ஸர்வேசவரன *அநதாமத தனபுசெயது* என று அழகிய தாமமான பரமபதத்தில பணணும வயாமோஹத்தை யடையத் தம பககலிலே ஒரு மடைகொளளப்பணண, (சோநதமைககு அடையாளமுளவாக) *திருவருளகளும சேர்நதமைக கடையாளம திருநதவுள* என று மேன் மேலும அவன விஷயீகாரஙகளைப பெறறமைககு ஸூவயகதலாஞசநமான ராகம வாயகரையிலே தோன்றுகை முதலான கலவிககுறிகளுணடாயச செலல.

(உகநதுகந்து திமிர்கொணடாலொதது) *உகநதுகநதுள மகிழ்ந்து குழையும* என்றும, *திமிர்கொணடா லொதது நிறகும்* என றும், அவன ஸௌநதரயசீலாதிகளை அநுஸநதிதது உததரோததரம விளைகிற பாஹ்யாபயநதர ஹர்ஷததாலே சிதிலராவது, *ஸதபதோஸயுத நமாதேசமப்ராக்ஷ்யః* எனகிறபடியே ஸர்வநியாமக பரபரஹ்மஸாக்ஷாதகாரமபிறநதாரைப் போலே ஸதிமிதராவகாய (நாடடியல வொழிநது) *நாடடாரோடியல வொழிந்து* என று-*உணடியே உடையே யுகநதோடி *யானே யென றனதே* என று அஹஙகார மமகார வசயராயிருககிற லௌகிகரோடு ஸமபநதமறறு, (சடரை யோடடி) சடகோபராகையாலே *வேதசாஸ்த்ராவிரோதிநா* எனகிறபடியே ப்ரமாணாநுகூலதர்ககஙகளாலே மதயஸதமாகவர்ததததை ஸாதிககை யனறிககே ஸவபுதத்யா கலபிதகுஷகதாககஙகளாலே ஸவஸவ மதஸதாபனம பணணும பாஹயகுதருஷடிகளாகிற சடரை சருதயநத தாத்பர்யமான ஸவோகதி விசேஷஙகளாலே ஸவஸநநிதானத்தில நிலலாதபடி துறத்தி. (மதாவலிப்தர்க்கு அஙகுசமிடடு) பராங்குசராகையாலே *வித்யாமதோ தநமத ஸத்ருதீயோ பிஜநோ மதஃ, ஏதே மதாவலிபதாநாம* என று மதஹஸதிபோலே அபிஜநவிதயாதி மததராயாவலிபதராயத் திரியு மவர்களுககு நிர்மதராயததலைவணககுமபடி உபதேசரூபாஙகுசமிடடு. (நடாவிய கூறறமாய) *பறவையின பாகன மதன செங்கோல நடாவிய கூறறம* என று வேதவேதயதவ தயோதகமாமபடி வேதமய கருடவாஹநனான ஸர்வேசவரன விஷயததிலே *நினகணவேடகை யெழுவிப்பன* என று எலலார்ககும பகதியை யுணடாககி நடததாநின றுகொணடு தமதர்சநததிலகபபடடவர்களின் ஸமஸாரததுககு மருநதுவாய், (தீயனமருஙகுவாராமல) *கொனறுயிருண்ணும் விசாதி பகை பசிதீயனவெலலாம* என று சரீரத்தை முடித்து ப்ராணனை அபஹரிககக கடவதான வயாதி சாதரவ க்ஷுதாதி தோஷங்களும, ஸாமஸாரிக ஸகலதுஃகஹேதுவான பாபஙகளும *வனதுயரை—மருஙகு—கண்டிலமால* எனனும்படி அருகும வாராதபடியாய், (கலியுகம நீங்கிக கிதயுகம பறறி) *திரியும்

கலியுகம் நீங்கி* என்று *பவிஷ்யத்யதரோத்தரம* என்கிறபடியே பதார்த்தஸ்வ பாவங்கள் மாறும்படி பண்ணுவதாய், *கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வ ஸ்ரஷ்டாரமீச்வரம், நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா:* என்கிற படியே பகவத்ருசி விரோதியான கலியுகம்போய், *பெரிய கிதயுகம்பற்றி* என்கிற படியே கேவல வைஷ்ணவதாமமே நடக்கும்தாய், யுகாந்தரவ்யவதாநமின்றிக்கே ஒரு போகியான க்ருதயுகம் ப்ரவேசிக்கும்படியாக, (பட்டெழு போதறியாதிருந்த ப்ரபாவம்) *பட்டபோதெழு போதறியாள் விரை மட்டலர் தண்டுழா யென்னும்* என்று பகவத்விஷயத்தில் போக்யதாநுஸந்தானத்தாலே *நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ* என்று ஆதித்யோதயத்திலே வந்தவாறே த்ரவ்யார்ஜந காலம் வந்ததென்று உகப்பர்கள், அவன் அஸ்தமித்தவாறே அபிமதவிஷயங்களோடே ரமிக்கைக்குக் காலம் வந்ததென்று உகப்பர்களென்றும், *ப்ராதர் மூத்ரபுரீஷாப்யாம் மத்யாஹ்நே க்ஷுத்பிபாஸயா, ஸாயம் காமேந பாத்யந்தே ஜந்தவோ நிசி நித்ரயா* என்றும் சொல்லுகிறபடியே நாட்டார்க்குப் புறம்பே காலக்ஷேபத்துக்குடலாய்ச் செல்லுகிற திவாராத்ர விபாகமுமறியாதே அகாலகால்யமான தேசத்திற் போலே பகவதநுபவைகபரரா யிருந்த ப்ரபாவம் [இதுக்குமூலம்—இப்படியிருந்த ப்ரபாவம்] என்று வாக்யஸம்பந்தம். இத்தால் கீழ்ச்சொன்ன சங்கைக்குக் காரண மின்னதென்று எல்லாரு மறியும்படி அருளிச் செய்தாராய்த்து. ... (93)

94. இவர்க்கு இந்த ப்ரபாவத்துக்கு அடியேதென்னுமாகாங்க்ஷையிலே இதுக்கு ஹேது—பகவந்நிர்ஹேதுக கடாக்ஷமென்கிறார் மேல். இப்படிக் கடாக்ஷித்தது தான் இந்த லோகத்தை இவரைக்கொண்டு திருத்துகைக்காக வென்னுமத்தையும், இவர் தம்முடைய பூர்வாவஸ்தையையும், இவரைக் கடாக்ஷித்த ப்ரகாரத்தையும் விசதமாகச் சொல்லுகிறது இச்சூர்ணையாலே.

(மூ) 94. இதுக்குஹேது—ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப் பொருளேறவி
மகிழ்ந்து முற்றுமாய்நின்று நூலுரைத்து யோகுபுணர்ந்து கண்கரண
வந்து ஆளாக்கிறவன் உலகினதியல்வை நலவீடுசெய்ய இணக்குப்
பாவைதேடிக் கழலலர் ஞானமுருவின முழுதுமோட்டின பெருங்கண்
எங்குமிலக்கற்று அன்பொடு நோக்கான திசையிலே ஆக்கையில்
புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறவர் மேலேபட்ட பக்கநோக்கறப்
பண்ணின விசேஷகடாக்ஷம்.

(இதுக்குஹேது) இவருடைய இந்த ப்ரபாவத்துக்கு ஹேது. (ஊழிதோறும் சோம்பாதொன்றிப் பொருளென்றளிமகிழ்ந்து) *ஊழிதோறும் தன்னுள்ளே படைத்து* என்றும், *சோம்பாதிப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த* என்றும் சொல்லுகிறபடியே, பண்ணின க்ருஷிகள் தப்பினாலும் சோம்பிக் கைவாங்காதே பின்னையும் க்ருஷிதன்னையே பண்ணும் கர்ஷகனைப்போலே கல்பந்தோறும் ஸ்ருஷ்டிக்கச் செய்தே ஸபலமாகாதிருக்கக் கூசியாதே மிகவுமொருப்பட்டு, என்றேனுமொரு நாள் ப்ரயோஜனப்படுமென்று க்ருஷியை யுகந்து ஜகத் ஸ்ருஷ்டியைப்பண்ணி.

(முற்றுமாய்நின்று) *நிலநீரெரிகால் விண்ணுயிரென்றிவைதான் முதலா முற்றுமாய் நின்ற* என்று *தத் ஸ்ருஷ்ட்வா, ததேவாநு ப்ராவிசத்* இத்யாதிப் படியே ஸ்ருஷ்டமான ஜகத்திலே இவற்றினுடைய வஸ்துத்வ நாம பாகத்வங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி சக்திகளுக்குமாக அநுப்ரவேசித்து இவற்றைச் சொல்லும் வாசகசப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி ப்ரகாரியாய் நின்று (நூலுரைத்து) *அன்ன மதாயிருந்தங்கற நூலுரைத்த* என்கிறபடியே கேட்பார் உபஸத்தி பண்ண மாட்டாமையாலே இழக்கவேண்டாதபடி திர்யக்ரூபேண தன்னைத் தாழவிட்டுநின்று ஜ்ஞாதவ்ய தர்மப்ரகாசகமான சாஸ்த்ரத்தை உபதேசித்து (யோகுபுணர்ந்து)

*குறைவில தடங்கடல் கோளரவேறித்தன கோலச் செந்தாமரைக்கண், உறைபவன போலவோர் யோகுபுணர்ந்த வொளிமணி வண்ணன* என்கிறபடியே திருப்பாற் கடலிலே திருவனந்தாழ்வானமேலே யேறிப் படுக்கைவாய்ப்பாலே கண்வளர்ந்தருளுகிறாப் போலே ஜகத்ரக்ஷணோபாய சிந்தைபண்ணிக் கண்வளர்ந்து, (கண்காணவந்து) சிந்திதோபாயாநுகுணமாக *துயரிலமலியும் மனிசர்பிறவியில தோன்றிக் கண்காண வந்து* என்கிறபடியே *சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்* என்றும், *நமாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம* என்றும் *கட்கண்ணால் காணுதவவ்வுரு* என்றும் சொல்லப்படுகிற தான துஃககோததரமான மநுஷ்யருடைய பிறவியிலே ஆவிர்ப்பவித்தருளி, அவர்கள மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமாம்படி வந்து. (ஆளபார்க்கிறவன) இப்படி அவதாராதிகளாலே *ஆளபார்த்து உழிதருவாய* என்கிறபடியே 'எனக்கடிமையாவாருணடோ' என்று இதுவே வேளாண்மையாகத் தேடித்திரிகிறவன.

(உலகினதியலவை நல்வீடுசெய்ய) *ஓ ஓ உலகினதியல்வே* என்று தத்வவித்துக்கள கண்டால ஸஹிக்கமாட்டாமல் விஷண்ணராம்படி *பெற்றதாயிருக்க மணை வெந்நீராட்டுவாரைப்போலே—உத்பாதகனாய் ஸர்வப்ரகார ரக்ஷகனாய்ப் போருகிற பரதேவதையான தன்னைவிட்டு, கிடந்தவிடம் தெரியாதபடி அப்ரஸித்தமான க்ஷுத்ரதேவதைகளை ஆட்டையறுத்தல ப்ரஜையை அறுத்தல, அதயந்தநிஷித்தமான மதிராதிகளை நிவேதித்தலாகிற பரஹிம்ஸாதிஸாதந முகத்தாலே பஜித்து தத்பலமாக துக்கமிச்ரமான ஸுகத்தைத் தருமவையாய், அநாதியாய் துஸ்தரமாயிருக்கிற ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமான ஜந்மங்களினின்றும ஒருகாலும நீங்காமைக குறிப்பாய், பலவகைப்படுத் தப்பவரிதாயிருந்துள்ள சப்தாதி விஷயங்களிலே துஃகப்பட்டழுந்துகிற லோகஸ்வபாவத்தை *யாதானுமபற்றி நீங்கும் விரதத்தை நலவீடுசெய்யும* என்று, அநாதிவாஸனையாலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் ஏதேனுமொன்றை அவலம்பித்துத் தன்னைவிடடகலுகையே ஸ்வபாவமான ஸம்ஸாரி சேதனன வரத்தத்தை நன்றாக விடுவிக்கு மென்கிறபடியே ஸவாஸநமாகப் போக்குகைக்காக. (இணைக்குப் பார்வைதேடி) மருகபக்ஷிகளைப் பிடிப்பார் ஸஜாதீயபுத்தியாலே தன்னோடே இணைக்கவற்றான மருகபக்ஷிகளைப் பார்வையாக வைத்துப் பிடிப்பாரைப்போலே பார்வைவைத் திணக்குவதாக, அதுக்காவார் ஆரென்று தேடி (கழலலர் ஞானமுருவின முழுதுமோடடின பெருங்கண்) *கழறலம* என்று தொடங்கி ஒரு திருவடிதத்தலமே பூமி யடையத் தானாயிற்று, ஒரு திருவடி பூமியிலே இடமில்லாமையாலேபோய், ஸர்வர்க்கும ஸர்வகாலத்திலும் இஸ்ஸம்பந்தத்தை நினைத்துத் தன்னிழலில் ஒதுங்கலாம்படி நிழலைக் கொடுக்கைக்காக ஊர்த்வலோகங்களெல்லாத்திலும் நிறைந்தது. பரப்பையுடைத்தான அவ்வண்டத்தையடையப்புக் குழறுகையாலே விகஸிதமாயிருந்துள்ள ஜ்ஞாநமாகிற ப்ரகாசரூபமான தீபத்தையுடையனா யென்கிறபடியே கழலதலமும், உழறலர் ஞானமும மறுபாடுருவின பரப்பெங்கு மோட்டிப் பார்த்த *அழறலர் தாமரைபோன்ற செவ்வியையுடைய *பெருங்கண்மலர்* என்கிற பெரிய திருக்கண்களானவை (எங்குமிலக்கற்று) ஓரிடத்திலும் அதுக்கு ஆவாரைக் காணமல ஒரு விஷயத்தை அப்படிக் காக்குவதாகப் பார்க்கிற வளவிலே, (அன்பொடு நோக்கான திசையிலே ஆக்கையில் புக்குழன்று மாறிப் படிந்து துளங்குகிறவர் மேலேபட) *அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்* என்று ஸ்ரீ விபீஷணாழ்வான விஷயமாக எப்போதும் ஸஸ்நேஹமாகப் பார்த்துக்கொண்டு கிடக்கையாலே தனக்குப் பள்ளமடையான தக்ஷிண திக்கிலே *யாதானுமோ ராக்கையில்புக்கு* என்றும் *ஆக்கையின் வழியுழலவேன்* என்றும, *மாறிமாறிப் பல பிறப்பும பிறந்து* என்றும், *பலபிறவியில படிகின்ற யான* என்றும *பிறவிக்கடலுள் நின்றுநான துளங்க* என்றும் சொலலுகிறபடியே ஜாதிநியமமாதல் வர்ணநியமமாதலின்றிக்கே கர்மாநுகுணமாக ஏதேனுமொரு சரீரத்திலே ப்ரவேசித்து அந்த சரீரத்தின் வழியேபோய் ஜந்மபரம்பரைகளிலே தோள்மாறி

அவ்வவர்த்தத்தில வெறுப்பினறிககே அதிலே அவகாஹித்துத் தரை காண வொண்ணுத ஸம்ஸாரஸாகர மதயஸ்தராயக கொணடு நடுஙகுகிற விவர்மேலேபட, (பககநோககறப பணணின விசேஷகடாக்ஷம) இபபடி இவாமேலே படடவிததை *நமமேலொருநகே பிறழவைததார்* எனகிறபடியே ஒருமடைப்படுத்தி *பககநோக கறியான* எனறு நாசசிமார திருமூலத தடத்தாலே நெருககி யணைததாலும புரிந்து பார்கக வறியானெனனுமபடி *நாஸௌ புருஷகாரேண நசாபயநயேந ஹேதுநா, கேவலம ஸ்வேசசயைவாஹம ப்ரேக்ஷே கஞ்சித கதாசந* எனறும, *நிர்ஹேதுக கடாக்ஷேண மதீயேந மஹாமதே, ஆசாரய விஷயீகாராத ப்ராபநுவநதி பராம கதிம* எனறும சொலலுகிறபடியே ஸவேசசையாலே நிர்ஹேதுகமாகப பணணப் படட விசேஷ கடாக்ஷம [இதுககு ஹேது—இபபடிப பணணின விசேஷ கடாக்ஷம] எனறு வாகயாநவயம. ஆகக கீழுகதமான இவருடைய ப்ரபாவத்துககு ஹேது ஸபஷடமாக பரதிபாதிதமாயிறறு இத்தாலே சஙகாவாகயத்திற் சொனன சஙகைகளெலலாம கிடகக *அனநதனமேல புணணியஙகள பலித்தவர் இவரெனறு நிர்ணீதமாயவிடடது. (94)

95. நித்யஸம்ஸாரியாய்ப் போந்தாரொருவர்கு பகவத கடாக்ஷ விஷயமான வளவிலே நிகில பாபஙகளும நீங்கி இப்ப்ரபாவமெல்லா முணடாகக கூடுமோ வெனகிற சஙகையிலே பகவத கடாக்ஷ வைபவததை அருளிசசெயகிறார். (சரமணீ யெனறு தொடஙகி).

(மூ). 95. சரமணீ விதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷனநெடு நோககு சாபமிழிந்தென்னப் பணணுமிறே.

அதாவது—*சரமணீம தர்மநிபுணு மபிகசச* எனறு கபநதன் சொனன வநந்தரம *ஸோபயகசசத மஹாதேஜாச சபரீம* எனகிறபடியே ஸவயமேவ சென்று விஷயீகரிதத வேடுவிச்சியான சரமணியை *சக்ஷுஷா தவ ஸௌமயேந பூதாஸமி ரகுநநதந. பாதமூலம கமிஷயாமி யாநஹம பாயசாரிஷம* எனறு—தேவரீருடைய அழகிய திருககணபார்வையாலே எனனுடைய ப்ராப்தி ப்ரதிபநதகஙகளெலலாம போயப் பரிசுததையானேனெனறு சொலலுமபடி யாகவும, வெள்ளமானது பள்ளத் திலே தானே சென்று விழுமாபோலே அபிஜநாதயஹஙகார யோகயதையு மிலலாமையாலே *நிவாஸாய யயௌவேசம விதுரஸய மஹாத்மநஃ* என்று தானே சென்று கருஹத்திலே புகக *விதுநாநாநி புபுஜே சுசீநி குணவநதிச* எனறு தமமுடைய ஸபாசமுளளவறறை விருமபி அமுது செயயப்பெறற ஸ்ரீ விதுரரை *பீஷம த்ரோணாவதிகரமய மாஞ்சைவ மதுஸூதந, கிமர்ததம புணடரீகாக்ஷ! புகதம வருஷலபோஜனம* எனறு எதிரியானவன சீறிசசொலலச செயதேயும *புணடரீகாக்ஷ* எனனுமபடி அழகிய திருககணகளின கடாக்ஷததாலே ஸகல ஸாம் ஸாரிக தோஷஙகளும போயப் பரிசுததராமபடியாகவும, *வோத்துப் பசிதது வயிற சைநது வேண்டடிசிலுண்ணுமபோது ஈதெனறு பாரத்திருநது நெடுநோககுக கொளளுகிறபோதை நெடுநோககாலே பகதவிலோசனததில ருஷிபதநிகளிலே ஒருததியை *தத்ரைகா விதருதா பர்த்ரா பகவநதம யதாசருதம. ஹருதோபகூஹய விஜஹௌ தேஹம காம நிபநதநம* எனறு ஸ்வவிஷயப்ராவண்யத்தாலே அப்போதே ஸம்ஸாரந் முகதையாமபடியாகவும, அலலாதாரை க்ஷீணபாபராய முகத்யர்ஹராமபடி பரிசுத்தராகவும பணணின ஸாவேசவரனுடைய கடாக்ஷ மானது *அஙகணிரண்டுங கொணடெஙகளமேல நோககுதியேல எங்களமேல் சாபமிழிந்து* எனறு அழகிய திருககணகளாலே எஙகளைப பார்த்தருளினுயாகில சாபோபஹதரைபபோலே அநுபவிததாலலலது நசியாத வெஙகள பாபம போய விடுமெனகிறபடியே அநுபவ விநாசயமான ஸகல பாபஙகளும நிவருத்தமாமபடி

பண்ணுமிறேயெனகை. பகவத் கடாக்ஷந்தான ஸகல பாபக்ஷபண நிபுணமாகை யாலே பட்டவிடம *அமலங்களாக* என னுமபடி நிர்தோஷமாமிறே. .... (95)

96. இப்படி இவரை ஈசவரன நிர்ஹேதுகமாக விசேஷகடாக்ஷம பண்ணிறறு ஏதுககாக? விசேஷகடாக்ஷ வேஷந்தானேது? இவர்தாம பின்புஆனபடி எங்ஙனே யெனனுமபேக்ஷையிலே அருளிசசெயகிறாமேல (கோவருத்திகெனறு தொடங்கி)

(மூ) 96. கோவருத்திககு நெரிஞ்சியைப புல்லாககினவன் ஜகத்திதார்த்தமாக எனககே நல்லவருளகளெனனும்படி ஸாவஸௌஹார்த ப்ரஸாதத்தை ஒருமடை செயது இவரைத் தனனுகக லோகமாகத் தமமைப்போல ஆக்குமபடியானு.

அதாவது—*திவததிலும பசுநிரைமேயப்புவததி* என்று பரமபதத்திற் காட்டிலும பசுநிரைமேயக்கையை விருமபியிருககுமவனாகையாலே *ப்ருநதாவநம் பகவதா கருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா, சுபேந மநஸா த்யாதம கவாம வருத்திமபீபஸதா* எனகிறபடியே கோரக்ஷணத்துககாக நெரிஞ்சிககாட்டை *உதபநந நவசஷபாடயா* எனகிறபடியே தத்போக்யமான புலலாமபடி பரஸமருத்த்யேக ப்ரயோஜநமான திருவுள்ளத்தாலே ஸங்கலபித்த ஸர்வசகதியானவன், *நமோ ப்ரஹ்மணய தேவாய கோ ப்ராஹ்மணஹிதாயச, ஜகத்திதாய கருஷ்ணாய கோவிந்தாய நமோநம:* எனகிறபடியே கோரக்ஷணத்தோபாதி ஜகதரக்ஷணத்துககும கடவன தானேயாகையாலே ஜகத்தினுடைய ஹிதார்த்தமாக, *எனைத்தோர் பிறப்பும—எதிர்சூழல புககு—எனககே யருளகள செயய—அமமானதிரிவிக்கிரமனை—விதி சூழ்ந்தது* என்று அநேக ஜநமஙகள நான பிறநத ஜந்மஙகளுககு எதிரே பிறநது வந்து எனககே தன ப்ரஸாதங்களைப பணணுமபடி ஸர்வேசவரனை கருபை கால கட்டிறறெனறும், *நலலவருளகள நமககே தநதருள செயவான்* எனறும இத்தலையில குறறமாதல, (அஜ்ஞத்வமாதல,) தன ஸார்வஜ்ஞ்யமாதல பாராதே தன பேறாகப் பணணுமதானவருளகளை நமககே அஸாதாரணமாகத் தநதருளுகிறவனெனறும இவர்பேசுமபடி *ஸுஹ்ருதம ஸர்வபூதாநாம* எனகிறபடியே ஸர்வபூதஙகளின பககலிலும நடககிற தனனுடைய ஸௌஹார்தபலமான ப்ரஸாதமாகிற கருபையை இவரொருவர் விஷயமாகவும ஒரு மடைபபடுத்தி, *எனனைத் தனனாககி* என்கிற படியே அஜ்ஞாந சகதிகளுககு எலலையாயிருககிற இவரைத் தன்னோடொத்த ஜ்ஞானசகதிகளையுடையராமபடி பணண, இபபடி அவனாலே திருநதினவிவர் *ஊரும் நாடுமுலகமும தனனைபபோலவனுடைய பேருமதார்களுமே பிதற்றி* எனகிறபடியே தமமோடநவயித்த லோகத்திலுளளவர்களை யெலலாம தமமைப்போலே பகவத்தேக பராகப பணணுமபடியானுரெனகை. (96)

97. தனனுககுகையாவ தெனனெனன வருளிசசெயகிறார் (அதாவதித்யாதி).

(மூ) 97. அதாவது மயர்வறமதிநலமருளுகை.

அதெனறு—தனனுககவெனறததைப பராமர்சிககிறது. *மயர்வறமதிநல மருளுகையாவது—அஜ்ஞாநத்தை ஸவாஸநமாகப்போககி பகதிரூபாபநந ஜ்ஞாநத்தைக கொடுககை. .... ... ... ... ... (97)

98. அதுதனனை விசதமாகவருளிச செயகிறார்மேல (இருள் துயககென்று தொடங்கி).

(மூ). 98. இருள் துயக்கு மயக்கு மறபபெனகிற அநுதய ஸம்சய விபர்யய விஸம்ருதிகளறறு மலாமிசை யெழுகிற ஞானத்தைக் காதலனபு வேட்கை அவாவெனனும ஸங்க காமாநுராக ஸநேஹாதயவஸ்தா நாமஙகளோடே பரமபக்திதசையாககுகை.

மயர்வறமதிநல மருளுகையாகிறதுதான *இருள தருமாஞாலம* *இருள தீர்ந்திவ்வையம் மகிழ* என்று இருள என்கிற சப்தத்தால சொல்லப்படும் ஜ்ஞாநாநுதயமும், *துயக்கன மயக்கன* இத்யாதிஸ்தலங்களில *துயக்கு* என்கிற சப்தத்தால சொல்லப்படும "ஸதாணுர்வா புருஷோவா" என்கிறபடியே கராஹ்யவஸ்துவை இன்னதென்று நிச்சயிக்கமாட்டாத ஸம்சயமும *மயக்கு* என்கிற சப்தத்தால சொல்லப்படும ரஜ்ஜு சுகத்யாதிவிஷய ஸர்ப்பரூப்யாதி புத்திபோலே அதஸ்மிந் தத்புத்தியாகிற விபர்யயமும, *மறப்பும் ஞானமும* *மறப்பறவென்னுள்ளே மன்னினன* இத்யாதிகளிற்போலே மறப்பு என்கிற சப்தத்தால் சொல்லப்படும பூர்வாநுபூதவிஷயமாய அநுபவஸம்ஸ்கார மாத்ரஜமான ஜ்ஞாநத்தினுடைய அபாவமாகிற விஸ்ம்ருதியுமான சதுர்விதஸங்கோசாவஸ்தையுமற்று, *மனனகமல மற மலர்மிசை யெழுதரும* என்கிறபடியே மந: பரிசுத்தியாலே விகஸிதமாய்க் கொழுந்துவிட்டு *தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கும* என்கிறபடியே ப்ராப்தவிஷயமான தன்னை நோக்கிக்கிளருகிற ஜ்ஞாநத்தை *உளப்பெருங்காதல* *நேரிய காதல* *காணக்கழி காதல* *கழியமிக்கதோர் காதல்* *காதல் கடல் புரைய* *காதல கடலில மிகப்பெரிதால* *காதலுரைக்கில—நீளவிசும்பும கழியப் பெரிதால* *மெய்யமர் காதல்* என்றும், *அன்புகூடிய* *அன்பிலின்பு* *அன்பே பெருகுமமிக* *ஆராவன்பு* என்றும, *வேவாராவேட்கை நோய* *பெருகுமால வேட்கையும* *ஆவியின பரமல்லவேட்கை* என்றும *அவா வொருக்கா வினை யொடும* *காண்பானவாவுவன* *சூடுதற்கவா* *அதனில் பெரிய வென்னவா* என்றும, இப்படிப் பலவிடங்களிலும் காதல, அன்பு, வேட்கை, அவா என்று சொல்லப்படுகிற விஷயதர்சநத்தில ப்ரதமபாவியாய் ஸ்நேஹாங்குரமான ஸங்கமும், *ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:* என்கிறபடியே ததநந்தரஜாதமாய் அவ்விஷயத்தை அநுபவித்தல்லது நிற்கவொண்ணாதபடியிருக்கும தத்விபாகதசையான காமமும் தத்கார்யமாய் அநுபாவ்யவிஷய ராகாவிச்சேதரூபமான அநுராகமும, ததநந்தரம் அவ்விஷயத்தை உத்தரோத்தரமநுபவிக்கு மதொழிய விட்டுப் பிடிக்கப் பற்றாதபடி விளையும ஸ்நேஹமும முதலான அவஸ்தைகளுக்கு அநுரூபமான நாமங்களை யுடைத்தாய்க்கொண்டு பரமபக்தி தசாபர்யந்தமாமபடி பண்ணுகை யென்கை. காதல், அன்பு, வேட்கை, அவா என்னுமிவை ஸங்காத்யுத்தரோத்தராவஸ்தைகளுக்கு வாசகமாயிருக்க, முன்பின் கலந்துவந்ததேயாகிலும எல்லாவவஸ்தைகளும் இவர்க்கு எப்போதும ப்ரகாசித்திருக்கையாலே அப்போதப்போது தம்முடைய ஆற்றாமைக்கீடாகப் பேசுகிறதாகையாலே விரோதமில்லை.

ஆக இத்தால் சொல்லிற்றாய்த்து, மயர்வற மதிநல மருளுகையாவது—அஜ்ஞாந பிதையாக சாஸ்த்ரஸித்தமான அநுதயாதி சதுர்வித ஸங்கோசாவஸ்தையுமற்று விகஸிதமாய்க் கொழுந்துவிட்டு விஷயோந்முகமாய்க் கிளருகிற ஜ்ஞாநத்தை ஸ்நேஹ ப்ரதமாங்குரமான ஸங்கம முதலான உத்தரோத்தர விபாகரூபாவஸ்தைகளுக்கு அநுரூபமான காதலித்யாதி நாமங்களை பஜித்து ப்ரேமஸீமாபூமியான பரமபக்தி தசாபந்நமாமபடி பண்ணுகை யென்றதாய்த்து.

ஆக, கீழ (அத்ரிஜமதக்நி—92) இத்யாதி வாக்யத்திற சொன்ன சங்கைக்கு மூலம இவர் ப்ரபாவமென்றும, அதுதனக்கு ஹேது பகவந்நிர்ஹேதுக கடாக்ஷ மென்று—கடாக்ஷத்தினுடைய சக்தியும், இவரை இப்படி கடாக்ஷித்தது. லோக ஹிதார்த்தமாக வென்றும, கடாக்ஷிக்கையாவது—மயர்வற மதிநலமருளுகை யென்றும, அதுதன்னின் ப்ரகாரமும் சொல்லப்பட்டது. .... ... (98)

99. இனிமேல் இவருடைய இந்த பக்திதான கர்மஜ்ஞாந ஸாத்யையாய் பகவத்ப்ராப்தி ஸாதநபூதையாயிருக்கு முபாஸகர் பக்தியிலும ப்ரபந்நர் பகவான் பக்கல் அர்த்தித்துப் பெறும் கைங்கர்யோபகரண பக்தியிலும் வயாவ்ருத்தை யென்னு

மிடம் அறிவிக்கைக்காக ப்ரதம ஸாதநபக்தி வேஷத்தை தர்சிப்பிக்கிறார் (ஜந்மாந்தரே த்யாதி) சூர்ணையாலே.

மூ. 99. ஜந்மாந்தர ஸஹஸ்ர நல் தவங்களாலே க்யாதகுலங்களிலே பிறந்து எழுதி வாசித்து தத்வஜ்ஞராய்க் குளித்து ஓதி உருவெண்ணும் மந்தி ஐவேள்வி அறுதொழில்களால் மிக்கு ஊன்வாட்டப் பொருப்பிடைத் தாம் வருந்தித் துன்ப வினைகளை விடுத்து விவேக சமாதிகள் வளர எட்டுநீக்கி எட்டுமிட்டு எட்டினைய பேதப் பூவில் சாந்தொடு தேவ காரியம் செய்து உள்ளம் தூயராய் வாரிப் புலன் புலவகத்தினுள் இளைப்பினையடைவே விளக்கினைக் கண்டு யோகநீதி நண்ணி அறம் தீக்குமறையோர் மனந்தன்னுள் அமர்ந்துறையும் அரும்பெரும் சுடரைக் கண்கள் சிவந்திறப்படியே மனவுடகொண்டு நிரந்தரம் மறவாமை தொடக்கரு ஸ்ம்ருதியாய் கனவில் மிக்க தர்சந ஸமமாய் ஆகத்துப் புக்கு மத்யாத்தப்ரியமாய் வைகும் சிறப்புவிட்டுக் குறைவிலென்னுதை அநந்ய ப்ரயோஜநமாய் வேதநோபாஸந த்யாநாதிகளென்று சொல்லுமது ஸாத்யஸாதநபக்தியாக சாஸ்த்ர ஸித்தம்.

(ஜந்மாந்தரஸஹஸ்ர நற்றவங்களாலே) *ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோ ஜ்ஞாந ஸமாதிபி:, நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே* என்றும் *ஒன்றினின்று நற்றவம்செய்து ஊழியூழிதோறெலாம்* என்றும் சொல்லுகிறபடியே ஜந்மாந்தர ஸஹஸ்ரங்களிலே த்ரிவிதபரித்யாக பூர்வகமாக பகவத் ஸமாராதந ரூபேண அநுஷ்டிதங்களான ஸத்கர்மங்களாலே, (க்யாதகுலங்களிலே பிறந்து) *சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே, அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம்* என்றும், *ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்யாதயசஸாம் சுசீநாம் யுக்தாநாம் குணபுருஷதத்வஸ்திதி விதாம்* என்றும் சொல்லுகிறபடியே தத்வ வித்துக்களாய், பரமயோகிகளென்று ஜகத்ப்ரஸித்தரானவர்களுடைய குலங்களிலே பிறந்து, (எழுதிவாசித்து தத்வஜ்ஞராய்) *தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும்* என்கிறபடியே பகவத்விஷயத்தை அநுஸந்தித்து தத்விஷயமான சப்தங்களை லிகிப்பது, வாசிப்பது, பிறர்சொல்லக் கேட்பதாய்க் கொண்டு இந்த சாஸ்த்ராப்யாஸமூலகமாக பிறந்த தத்வஜ்ஞானத்தையுடையராய், (குளித்தோதி யுருவெண்ணும் அந்தியை வேள்வியறுதொழில்களால் மிக்கு) *குளித்து மூன்றனலை யோம்பும்* என்கிறபடியே உபாஸநாங்கமான நித்யகர்மாநுஷ்டாநோபயுக்தமாய் இருந்துள்ள காயசுத்த்யர்த்தமான ஸ்நாநத்தைப்பண்ணி *ஓதியுருவெண்ணுமந்தி* என்றும், *ஐவேள்வி* என்றும், *அறுதொழில்* என்றும் சொல்லுகிற ஸந்த்யாவந்தந காயத்ரீ ஜபமென்ன, தேவயஜ்ஞ பித்ருயஜ்ஞ பூதயஜ்ஞ மநுஷ்ய யஜ்ஞ ப்ரஹ்மயஜ்ஞங்களாகிற பஞ்ச மஹாயஜ்ஞமென்ன, அத்யயந அத்யாபந யஜந யாஜந தாநப்ரதிக்ரஹங்களாகிற ஷட்கர்மங்களென்ன. இப்படியிருந்துள்ள நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானங்களால் பரிபூர்ணராய், (ஊன்வாட்டப் பொருப்பிடைத் தாம் வருந்தி) *ஊன்வாட வுண்ணாது உயிர்காவலிட்டு* என்றும், *பொருப்பிடையே நின்றும் புனல்குளித்துமைந்து நெருப்பிடையே நிற்கவும்* என்றும், *வீழ்கனியு மூழிலையு மெண்ணும் இவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி* என்றும் சொல்லுகிற படியே நித்ய கர்மாதிகளை அவிகலமாக அநுஷ்டிக்கையாலே தபச்சர்யாயோக்யதை பிறந்தவாறே காயசோஷணார்த்தமாக அசநத்தைக் குறைத்து ப்ராணதாரணத்துக்குத் தக்கவளவாக்கி, உஷ்ண காலங்களில் பர்வதாக்ரத்திலும் பஞ்சாக்நி மத்யத்திலும் நின்றும், சீதகாலங்களில் அகாதமான தடாகத்திலே மூழ்கிக் கிடந்தும் ஜீர்ண பர்ணபலாசநராயும், இப்படி தபச்சர்யையாலே சரீரத்தை சோஷிப்

பித்து, (துனபவினைகளை விடுத்து) கீழ்ச்சொன்ன கர்மாநுஷ்டானத்தாலே, *மேவு துன்பவினைகளை விடுத்து* என்கிறபடியே திலதைலாதிவத ஆத்மாவோடே பிரிகக வொண்ணுதபடி பொருநதிககிடககிற துஃகஹேதுவான பாபஙகளை *தர்மேண பாப மபநுததி* என்கிறபடியே போக்கி, (விவேக சமாதிகள வளர) இப்படி பரதிபநதக பாபநிவருததியாலே மனசசுததி ஹேதுவான விவேகாதி ஸபதகமும், *சமதமநிய தாத்மா ஸர்வபூதாநுகமபீ* இத்யாதயுகதசமதமாதிகளும அபிவருத்தமாக.

இதில விவேகமாவது—*ஜாதயாசரய நிமித்தாதுஷடாதந்நாத காயசுத்திர் விவேகஃ* என்கிறபடியே ஜாதிதுஷடமும ஆசரயதுஷடமும நிமித்ததுஷடமுமன றிககே யிருககுள்ள அனனததாலுண்டான காயசுத்தி. ஜாதிதுஷடஙகளாவன—களஞ்ஜகருஞ்ஜநாதிகள ஆச்ரயதுஷடமாவது—அபிசஸத பதித சணடாளாதி களுடைய த்ரவயம ஆசரயமென்று—தரவயஸவாமியான புருஷனைச சொலலுகிறது. நிமித்ததுஷடமாவது—உசசிஷட கேசாத்யுபஹதமானது இநத தரிவித தோஷமு மிலலாத ஆஹாரத்தின விவேசந பலமான காயசுத்தியிலே விவேகசபதம உபசா ரேணுகதம அனறிககே, விவிகதாஹார'ஸேவையாலே ராஜஸ தாமஸாஹார-ஆப் யாயித தேஹததிறகாடடில ஸ்வதேஹத்தினுடைய விவேசனம விவேகமென்னவு மாம சுததியாவது—அசுத்தேபயோ விவேசநமிறே, *காயசுததிஃ* என்கிறவிடத்தில காயசப்தததால அநதஃகரணத்தைச சொலலுகிறது *ஆஹாரசுத்தெள ஸதவ சுத்திஃ* என்றிறே சருதி சொலலிற்று ஸதவமாவது—அநதஃகரணமிறே. *அபயம ஸத்வஸம்சுததிஃ* என்றும *ஸதவாநுரூபா ஸர்வஸய சரததா பவதி* என்றும சொலலுகிறவிடஙகளில ஸத்வம—அநதஃகரணமென்று ஸத்வசபதம அநதஃகரண வாசியாக பாஷயகார ரருளிசசெய்தாரிறே. ஆகையிறே விவேகமாவது—*ஆஹார சுத்தெள ஸத்வசுத்திஃ* என்கிறபடியே அநதஃகரணசுததிககடியான அங்கசுத்தி யென்று ஆசசானபிள்ளை யருளிசசெயதது.

விமோகமாவது—*விமோகஃ காமாநபிஷவஙகஃ* என்கிறபடியே காமத்தில அநபிஷவஙகம யாதொரு விகாரத்தாலே விஷயத்தை புஜியாமல நிறகமாட்டான. அநத விகாரம—அபிஷவஙகம. அதிலலாமை—அநபிஷ்வஙகம. *காமாத கரோ தோபிஜாயதே* இதயாதி வசநததாலே கரோதாதயபாவமும இவவிடததிலே பலிதம. அப்யாஸமாவது—*ஆரமபணஸமசீலநம புநஃபுநரபயாஸஃ* என்கிற படியே தயாநாலமபநமான வஸதுவிலே பலகாலும பரிசீலனம பணணுகை. ஆரமபணமென்றது—ஆலமபனமென்றபடி. இவவிடத்தில ஆலமபனமாவது—சுபாசரயம. கரியையாவது—*பஞச மஹாயஜ்ஞாத்யநுஷடாநம சகதிதஃ கரியா* என்கிறபடியே பஞசமஹாயஜ்ஞாதி நிதயகாமஙகளை வலலவளவும அநுஷடிககை.

கலயாணமாவது—*ஸத்யார்ஜவ தயா தாநாஹிம்ஸாநபித்யாஃ கலயாணநி* என்கிறபடியே ஸதயம, ஆர்ஜவம, தயை, தானம, அஹிமஸை, அநபித்யை ஆகிற விவை. இவற்றில, ஸத்யம—பூதஹிதம, ஆர்ஜவம்—மநோவாககாயாநாமைகருப்யம. தயை—ஸவாாததநிரபேக்ஷ பரதுஃககாஸஹிஷ்ணுதவம, தாநம—லோபராஹிதயம, அஹிமஸை—கரணதரயேண பரபீடாநிவருத்திஃ அபித்யை—பரகீயே ஸவதவபுததிஃ. அனறிககே நிஷபல சிநதை யாதல, பரகருதாபகார சிநதையாதலாகவுமாம. அதிலலாமை—அநபித்யை'

அநவஸாதமாவது-*தேசகால வைகுண்யாத் சோகவஸ்த்வாத்யநுஸமருதேசச தஜ்ஜம தைநயமபாஸவரதவம மநஸோவஸாதஃ* என்கிறபடியே தேசகாலங் களுடைய வைகுணயததாலும, சோகஹேதுவாயும பயஹேதுவாயுமுள்ள வஸதுக களின அநுஸமருதியாலுமுண்டான தைந்யமாகிற மநஸஸினுடைய அபாஸவரதவம அவஸாதமாகையாலே, அதினுடைய விபர்யயம. சோகவஸது வென்றது சோக

நிமித்தவஸ்து வென்றபடி. அதாவது அதீதமான புத்ரமரணாதி. ஆதிசப்தத்தாலே பயநிமித்தமான ஆகாமிவஸ்து விவக்ஷிதம். சோகம்—அதீதவிஷயமாய், பயம—ஆகாமிவிஷயமாயிறே யிருப்பது. அபாஸ்வரத்வ மெனகிறவிது—தைந்ய சப்த விவரணம. தைந்யமாவது—அபீஷ்டகார்ய ப்ரவ்ருத்த்யக்ஷமத்வம். பாஸ்வரத்வ விரோதியென்று தைந்யவிசேஷணமாகவுமாம். அநுத்தர்ஷமாவது—*தத்விபர்யயஜா துஷ்டிருத்தர்ஷ:* என்கிறபடியே தேசகால ஸாத்குண்யததாலும ப்ரியவஸ்த்வாதயநுஸ்மருதியாலுமுண்டான துஷ்டி உத்தர்ஷமாகையாலே, அதினுடைய விபர்யயம; அதாவது—ஹர்ஷஹேதுககளுண்டானாலும அதிப்ரீதனாகாதொழிகை.

இனி—சமாதிகளில. சமமாவது—அந்த:கரணநியமநம. தமமாவது—பாஹ்ய கரணநியமநம். *சமச் சித்தப்ரசாந்திஸ் ஸ்யாத தமசசேந்தரியநிக்ரஹ:* என்னக் கடவதிறே. *க்ஷமா ஸத்யம தமச் சம:* என்கிறவிடத்தில *தமோ பாஹ்யகரணாநாமநர்த்த விஷயேப்யோ நியமநம; சம:—அந்த:கரணஸ்ய ததாவிதநியமநம்* என்றிறே பாஷ்யகாரரருளிச செய்தது. மாறிசசொலலுமிடஙகளுமுணடு. ஆதம குணஙகளில ப்ரதானங்களிறே இவை. *சாந்தோ தாநத உபரதஸ் திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா ஆதமநயே வாத்மாநம பச்யேத்* எனகையாலே உபாஸநததிலிழியுமவனுககு ப்ரதமாபேக்ஷிதஙகள் இவையாகவிறே சருதியும சொலலிற்று. மற்றுமுண்டான ஆத்மகுணஙகளுககும யதாயோகம அர்த்தம கணடுகொளவது. ஆக இப்படியிருநதுளள விவேகாதிகளும சமாதிகளும மேன்மேலும அபிவருததமாய் வளர (எட்டுநீககி) *ஈனமாயவெட்டு நீககி* என்று--ஜ்ஞாநஸங்கோசகதயா ஆதமாவுககுக குறையான அவிதயாதிகளைந்தும, சரீரஸமபநத ப்ரயுகதமான தாபதரயங்களுமாகிற எட்டையும போககி. (துன்பவினைகளை விடுத்து) என்று கீழேயும கர்மவிமோசநம் சொல்லிற்றேயென்னில; அங்குச் சொல்லிற்று—ஜ்ஞாநோதபத்தி விரோதி ப்ராசீந கர்மமாத்ரமாகையால் விரோதமிலலை: அன்றிககே ஆதமாவுககுப் பொல்லாங்கைப் பண்ணுவதான காம க்ரோத லோப மோஹ மத மாதஸர்யாஜ்ஞாநாஸூயைகளாகிற எட்டையும போககியென்னவுமாம.

காமமாவது—அர்த்தித்த பதார்த்தம் அநுபவித்தலலது நிற்கவொண்ணாத தசை. க்ரோதமாவது—அதினகார்யமாய அர்த்திதத பதார்த்தாலாபததில் ஸந்நிஹிதர் பக்கல் பிறககும சீற்றம். லோபமாவது—ஸந்நிஹிதபதார்ததத்திலதிப்ராவண்யம். மோஹமாவது கர்த்தவ்யாகர்ததவ்யஙகளை விவேகிககமாட்டாதொழிகை. மதமாவது—அர்த்திதார்ததலாபததால வரும் களிப்பு. மாதஸர்யமாவது—பரஸமருத்தி பொறாமையை அநுஷ்டாநபர்யந்தமாக நடததுகை. அஜ்ஞானமாவது—இவற்றால் மேலவருமனர்த்தம நிரூபியாமை. அஸூயையாவது—குணஙகளிலே தோஷத்தை ஆவிஷ்கரிக்கை. ஏவம பூதஙகளானவிவற்றைப் போககியென்றபடி. (எட்டுமிட்டு) *இனமலரெட்டுமிட்டு* என்றும *கந்தமாமலரெட்டுமிட்டு* என்றும சொல்லுகிற படியே ஓரோவக்ஷரங்கள பரிமளோததரமான புஷ்பமபோலே அவனுககு போகயமாம்படி யிருககையாலே அஷ்டவிதமான புஷபததை ஸமர்ப்பிப்பாரைப்போலே திருமந்தரத்தை யநுஸநதிதது. *அவன பெயரெட்டெழுத்து மோதுவார்கள வல்லர் வானமாளவே* என்றும் *ஆர்வமோடிறைஞ்சி நின்றவன் பெயரெட்டெழுத்தும வாரமாக வோதுவார்கள் வலலர் வானமாளவே* என்றும சொல்லககடவதிறே. அன்றிககே *அஹிமஸா ப்ரதமம் புஷ்பம புஷ்பமிந்த்ரியநிக்ரஹ:, ஸர்வபூததயா புஷபம க்ஷமாபுஷ்பம விசேஷத:, ஜ்ஞாநம புஷ்பம தப: புஷ்பம த்யாநம புஷ்பம் ததைவச, ஸத்ய மஷ்டவிதம புஷ்பம விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்* எனகிறபடியே அஹிம்ஸாத்யஷ்டவித புஷ்பஙகளையுமிடடென்றுமாம. கீழே *விவேகசமாதிகள* என்றதிலந்தர்ப்பூதஙகளானவை இதிலேயும வந்ததாகிலும் ஈசவரனுககு இவற்றை போகயத்வேந அநுஸந்தித்து அநுஷ்டிககையைச சொலலுகிறதாகையாலே விரோதமிலலை. ஆகையிறே இவற்றைப் புஷ்பஸமர்ப்பணமாகச் சொல்லுகிறது.

(எட்டினுய பேதபபூவில சாநதொடு தேவகாரியம செயது) *எட்டினுய பேத மோடிறைஞசி* எனகிறபடியே *மநோபுதத்யபிமாநேந ஸஹ ந்யஸய தராதலே, கூர்மவசசதுரः பாதாந் சிரஸ தத்ரைவ பஞசமம* என்கிறபடியே பகநாபிமாநனுய் விழுகையும, மநோபுததிகளுககு ஈசவரனே விஷயமாகையும, பாதத்வயஙகளும கரதவயஙகளும சிரஸஸும பூமியிலே பொருந்துகையுமாகிற அஷ்டாஙக ப்ரணமத்தைப் பணணி *பூவில புகையும விளககும சாந்தமும நீரும மலிந்து* *சாந்தொடு விளககம தூபம தாமரை மலர்கள நலலவாயநது கொணடு* எனகிறபடியே புஷபாங்கராகாதிகளான ஸமாராதநோபகரணஙகளை பலஸஙக கர்த்ருத்வங்களாகிற தூராலும மயிரும புழுவும படாதபடி ஆராயநது மிகவும ஸமபாதித்துககொண்டு *தேவகாரியம செயது* எனகிறபடியே பகவத்ஸமாராதநத்தைச செயது.

(உளளம தூயராய) *ஒன்றிநின்று நற்றவம் செய்து ஊழியூழிதோறெலாம் நினறுநினறவன குணஙகளுளளியுளளம தூயராய்* என்கிறபடியே நித்ய காமாநுஷ்டாநம தொடஙகி பகவதாராதந பர்யநதமாகப் பண்ணும தரிவித பரித்யாக பூர்வகமான காமாநுஷடாநததாலும பகவத்குணநுஸநதாநத்தாலும, *கஷாயே கர்மபிः பகவே ததோ ஜ்ஞாநம ப்ரவர்த்ததே* எனகிறபடியே ஜ்ஞாநயோகார்ஹமாம்படியே மருதித கஷாயராகையாலே பரிசுத்தாநதःகரணராய்.

(வாரிபபுனபுலவகததினுளிளைப்பினையடைவே விளககினைககணடு) *பரநீர்ணே விஷயாரணயே பரதாவநதம் பரமாதிநம, ஜ்ஞாநாஙகுசேந குருஹ்ணீயாத வசய மிநத்ரிய தந்திநம* எனறு விஸதீர்ணமான விஷயாடவியிலே ஓடாநிற்பதாய, அகப்பட்டாரைக கொலலுமதான இந்த்ரியமாகிறவானையை த்யாஜ்யோபாதேய விவேக ஜ்ஞாநமாகிற அஙகுசத்தாலே வசயமாகப் பண்ணுவானெனகிறபடியே. *வாரிசுருககி மதககளிறைநதினையும சேரிதிரியாமற் செந்நிறீஇ* எனறு—மதித்தவானைகளைத் தண்ணீரிலே செறுப்பிககுமாபோலே இந்த்ரியஙகளாகிற மதஹஸ்திகளை விஷயாநுபவமாகிற போகத்தைக குலைத்து. அவவளவுமனறிககே விஷயங்கள நடையாடுமிடத்தில் போகாதே ப்ரத்யகவஸதுவிஷயமாகையாகிற செவவையிலே நிறுத்தியெனறும, *புனபுல வழியடைத்தரககிலச்சினை செய்து நனபுலவழி திறநது ஞான நற்சுடர் கொளீஇ* எனறு அலபாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமான க்ஷுத்ரவிஷயஙகளைப் பறறிப்போகிற இந்த்ரிய மார்ககத்தை நிரோதித்து, அவறறினுடைய க்ஷுத்ர தாநுஸநதாநததாலே வாஸநா நுவ்ருததியுமறுமபடி அத்தை உறைபபித்து, விலக்ஷண விஷயததில இநத்ரிய மார்ககததை ப்ரகாசிப்பித்து நன்ரான ஜ்ஞாந ப்ரபையை மிகவுமுணடாககியெனறும், *ஐம்புலனகத்தினுள செறுத்து* என்று—ச்ரோத்ராதீநதரியஙகள சப்தாதி விஷயங்களிற் போகாமே உள்ளேயடககியெனறும சொலலுகிறபடியே நிகருஹீதேந்த்ரியகராமராய, *இளப்பினை யியககம் நீககி* எனகிற பாட்டில சொலலுகிறவடைவிலே *அவித்யாஸ்மிதாராகதவேஷாபிநிவேசாः பஞச கலேசாः* எனறும சொலலுகிற கலேசங்களுடைய ஸஞசாரத்தைத் தவிர்த்து, *நாத்யுசசரிதம நாதிநீசம* இத்யாதியில சொலலுகிறபடியே ஓராஸநத்தேயிருந்து *ஸமப்ரேக்ஷய நாஸிகாகரம ஸவம திசசசாநவலோகயந்* என்னுமபடியே நாஸாகரந்யஸத லோசநராய், ஓரளவில்நிலலாத இந்த்ரியங்களை ப்ரத்யககாககி, த்யேயமான பகவத விஷயததிலே ஸ்நேஹத்தை வைத்து விடாம லநுஸந்திதது, சுடர் விடடுத தோனறுகிற ஜ்ஞாநததாலே ஸவயமப்ரகாசமான ஆதமஸ்வரூபத்தை சாஸதரோகத ப்ரகாரத்தாலே ஸாக்ஷாதகரிதது ஸதகர்மாநுஷ்டாநத்தாலே க்ஷீண பாபனுய், நிர்மலாந்தःகரணனுனவனுககு பகவதஸாக்ஷாதகாரத்துக்குறுப்பாக விளையும யோகஜந்யஜ்ஞாநந்தான் ப்ரதமம் ஆதம ஸ்வரூபத்தை தர்சித்துக் கொண்டிறே மேலபோவது.

*விளக்கினை விதியிற் காண்பார்* என்கிறவிது பகவத்ஸாக்ஷாத்காரமாக பூர்வர்கள் வ்யாக்யாநம் பண்ணிவைத்தார்களாகிலும், இவர் ஆத்மபரமாகவே அருளிச்செய்தாரென்று கொள்ளவேணும், பகவத்த்யாந தசைகளை மேலே சொல்லுகையாலே. "விதியிற் காணும் ப்ரதம மத்யம தசைகளை" யென்று ஆத்மபரமாகவிறே கீழும் இவரருளிச்செய்தது. யோஜநாபேதங்களுண்டா யிருக்குமிறே

(யோகநீதி நண்ணி) *யோகநீதி நண்ணுவார்கள்* என்கிறபடியே யோகமாகிற உபாயத்தாலே கிட்டி. (அறத்திகழ் மறையோர் மனந்தனுள்மாந்துறையும் அரும்பெருஞ் சுடரைக் கண்கள்சிவந்திலபடியே மனவுட்கொண்டு) *மறந்திகழ் மனமொழித்து வஞ்சமாற்றி வன்புலன்களடக்கி யிடர்ப்பாரத் துன்பம் துறந்து இரும்பொழுதேத்தி யெல்லையில்லாத தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான அறந்திகழ் மனத்தவர்தம் கதியை* என்று—கொலையும் சினமும் கொடுமையுமாகிற மறத்தால் விளங்கா நின்றுள்ள மநஸ்ஸை வாஸனையோடே போக்கி, பொய்யைத் தவிர்ந்து, வன்புலச்சேக்கைகளைப் பட்டிபுகாமே கட்டி மிக்க து:க்கத்தை விளைப்பதான *பாரமாய பழவினையைப் பற்றறுத்து* சலாக்யமாயிருந்துள்ள ஆதிநடுவந்தியாகிற மூன்றுபொழுதிலுமேத்தி அளவிறந்த பழைய மார்யாதையிலே சிலவரால் கலக்கவொண்ணாதபடி நிலைநின்ற வைஷ்ணவர்களான ஆந்ருசம்ஸ்யோஜ்ஜ்வல சித்தர்க்குப் பரமப்ராப்யனானவனை யென்றும், *மறையோர் மனந்தனுள் விண்ணுளார் பெருமானை* என்று ப்ராஹ்மணருடைய ஹ்ருதயங்களைத் தனக்கு வாஸஸ்தாநமாக வுடையனாயிருக்கும் அயர்வறுமமரர்களதிபதியை என்றும், *மந்தவமானவா தங்கள் சிந்தையமர்ந்துறைகின்ற வெந்தை* என்று மஹாதபஸ்ஸையுடையராயிருக்கும் மனுஷ்யர்களுடைய ஹ்ருதயங்களிலே அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமியென்றும் சொல்லுகிறபடியே பரிசுத்தாந்த:கரணரான பரமயோகிகள் ஹ்ருதயங்களிலே *ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ் சுடரொன்றினைச் சேரும் நெஞ்சினர்* என்னும்படி ஆபரணத்யலங்க்ருதமாய அத்யுஜ்ஜ்வலமான விக்ரஹத்தோடே யெழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரனை *கண்கள் சிவந்து* என்கிற பாட்டில் சொல்லுகிறபடியே அவயவசோபை ஆபரணசோபை ஆயுதசோபைகளோடே கூடி காளமேக நிபச்யாமமாயிருந்துள்ள திவ்யவிக்ரஹத்துடனே *கற்றவர் தந்தம் மனவுட்கொண்டு* என்று அறிவுடையரான யோகிகளானவர்கள் தந்தாமுடைய ஹ்ருதயத்திலே கொண்டு-என்கிறபடியே ஹ்ருதய கமலத்திலே த்யாநம் பண்ணி (நிரந்தரம் மறவாமை துடக்கற்ற ஸ்ம்ருதியாய) *நிரந்தரம் நினைப்பதாக* என்றும், *மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாய்* என்றும் சொல்லுகிறபடியே அந்த த்யாநத்துக்கு விச்சேதமும் விஸ்ம்ருதியுமற்று *சோர்விலாத காதலால் துடக்கறுமனத்தராய்* என்று ஸர்வகாலமும் விஷயாந்தரங்களால் அபஹ்ருதமாகாத ப்ரேமத்தையுடையராகையாலே தத்ஸம்ச்லேஷ வியோகைக ஸுகது:கராம்படி *ஸத்வ சுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி:* என்கிறபடியே த்யேய வஸ்துவில் துடக்கறுமல் நடக்கும் த்ருவாநுஸ்ம்ருதியாய. (கனவில் மிக்க தர்சன ஸமமாய) *கனவில் மிக்கக்கண்டேன்* என்று இந்த்ரியங்களால் கலக்கவொண்ணாதபடி மாநஸ ஜ்ஞாநத்தாலே அழகிதாகக் கண்டேனென்னலாம்படி *ஸா ச ஸ்ம்ருதிர் தர்சநஸமாநாகாரா* என்கிறபடியே அதுதான் ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய (ஆகத்துப் புலக்கும் அத்யர்த்தப்ரியமாய்) அப்படி தர்சநஸமமானவதுதான், *நாடோறும் ஞானத்தாலகத்தணைப்பார்க்கு* *ஆகத்தணைப்பாரணைவரே* *எல்லையிலன்னலம்புலக்கு* *ஆவம் புரிய பரிசினால் புலக்கில்* என்னும்படி அங்கநாபரிஷ்வங்கம்போலே *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோ த்யர்த்தமஹம்* என்கிற ஸ்மர்த்தவ்ய விஷயஸாரஸ்யத்தாலேதானும் அத்யர்த்தப்ரியமாய. (வைகும் சிறப்புவிடுக் குறைவறவென்னுதை அநந்யப்ரயோஜநமாய்) *நின்புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு வைகுந்தமென்றருளும்வான்* என்று உன்னுடைய கல்யாண குணங்களிலே விச்சேத

மின்றியே செல்லுகிற சிந்தையிலும் காட்டில் இனிதோ நீ அவர்க்கு நன்றாகச் சொல்லிக் கொடுக்கும் பரமபதமென்றும், *உலகு படைத்தித்யாதி—அமுதவெள்ளத் தானும் சிறப்புவிட்டு ஒருபொருட்கசைவோரசைக நலவீடு பெறினும் கொள்வ தெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பு* என்று பரத்வஸௌலப்யாதிகளால் பரிபூர்ண ஞன ஸர்வேச்வரனுடைய நிரதிசய போக்யமான திருவடிகளை அநுபவிக்கையி லுண்டான அபிநிவேசத்தாலே த்ரவீபூதமாய ஒரவயவியாகக் காணவொண்ணாதபடி மங்கின ஆத்மவஸ்துவிலே அந்த ஆதரமடியாகப் பிறந்த விலக்ஷணமான ஸங்க காமாத்யவஸ்தைகளையுடைய பக்தியால் விளைகிற நிரதிசயரஸத்திலே உள்ளுகையாகிற லாபத்தைவிட்டு க்ஷுத்ர புருஷார்த்தங்களுக்கு க்லேசப்படுவார் அங்ஙனே க்லேசப் படுக, சலாக்யமான ஐச்வர்யம், அதில் விலக்ஷணமான ஆத்மாநுபவம், அவ்வளவன் றிக்கே பரமபுருஷார்த்த லக்ஷணமான மோக்ஷம், இவற்றைப் பெறுமளவானாலும் ஸாராஸாரவிவேகஜ்ஞானவான்களுடைய ஹ்ருதயத்தில் அவற்றை ஸ்வீகரிக்கவும் நினைவுண்டோவென்றும், *உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன் மேலால் பிறப்பின்மை பெற்றடிக்கீழ்க் குற்றேவலன்று மறப்பின்மையான் வேண்டும் மாடு* என்று உன்னுடைய ஸமர்யமாண தசையே தொடங்கி இனிதான குணங்களிலே பழுத்தொழிந்தேன்: பின்பு ஒருகால் பிறவாமை பெற்று திருவடிகளில் நித்ய கைங்கர்யம் பண்ணுகையன்று எனக்கு வேண்டுவது, பிறந்த ஜ்ஞானத்துக்கு மறப் பில்லாமை எனக்கு வேண்டும் தனமானது—என்றும் சொல்லுகிறபடியே இவ்வநு ஸந்தானத்தாலே தேசவிசேஷத்திலநுபவத்தையுபேக்ஷிக்கும்படி தானே பரம ப்ரயோஜநமாம்படி ரஸிக்கையாலே அநந்யப்ரயோஜனமாய்.

(வேதநோபாஸந ஸேவா த்யாநாதிகளென்று சொல்லும் அது ஸாத்யஸாதந பக்தியாக சாஸ்த்ரஸித்தம்) வேதநமென்றும் உபாஸனமென்றும் ஸேவையென்றும் த்யாநமென்றும் ஏவமாதி சப்தங்களாற் சொல்லப்படுகிற பக்தியானது *உபய பரிகாமித ஸ்வாந்தஸ்ய* என்கிறபடியே காமஜ்ஞாந ஸம்ஸ்க்ருதாந்தஃகரணனுக்குப் பிறக்கும்தொன்றாகையாலே சேதநஸாத்யமாய பகவத்ப்ராப்த்யோபாயதயா தத்ப்ராப்திஸாதநமான பக்தியாக ஸோபப்ரும்ஹண வேதாந்த சாஸ்த்ரத்திலே சொல்லப்பட்டதென்கை. .... (99)

100. இப்படி உபாஸநரூபமாய் (உபாயமுமாயும்) இருந்துள்ள வித்துபோலன் றிக்கே உபேயபூத கைங்கர்யோபகரணமாக ப்ரபந்நா பகவான்பக்கல் அபேக்ஷித்துப் பெறும் பக்திவிசேஷத்தை ப்ரதிபாதிக்கிறார் (ஸ்வீகருதேத்யாதியால்).

(மூ) 100. ஸ்வீக்ருத ஸித்த ஸாதநா இத்தை ஸாத்யமாக இரக்க ப்ராப்திக்கு முன்னே ஸித்திக்கும்.

அதாவது—*த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே* என்றும், *த்வத்பாதார விந்த யுகளம் சரணமஹம் ப்ரபத்யே* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வீகரிக்கப் பட்ட ஸித்த ஸாதநத்தையுடையவர்கள், இந்த பக்தியை போஜநத்துக்கு க்ஷுத்துப் போலே கைங்கர்யத்துக்கு உபகரணமாகையாலே ப்ராப்யமான கைங்கர்யத்தோபாதி இதுவும் நமக்கு ப்ராப்யமென்று புத்திபண்ணி *பகவந் பக்திமபி ப்ரயச்ச மே* என்றும், *ஸ்தாநத்ரயோதித பரபக்தி யுக்தம் மாம் குருஷ்வ பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யேகஸ்வபாவம் மாம் குருஷ்வ* என்றும் சொல்லுகிறபடியே பகவான் பக்கலிலே அர்த்திக்க *இமாம் ப்ரக்ருதிம் ஸ்தூல ஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய ததாநீமேவ* இத்யாதியில் சொல்லுகிறபடியே சரீரவியோகஸமநந்தரம் பகவத் ப்ராப்தி பண்ணுவதற்கு முன்னே ஸித்திக்கு மென்கை ... (100)

101. இனி இவ்வாழ்வாருடைய பக்திவிசேஷமிருக்கும்படியை அறிவிக்கிறார் (இதுவென்று தொடங்கி)

**(மூ.) 101. இது உபயமுமன்றிக்கே அறியாக்காலத்தே ஒக்கப் பிறந்து தழுவி நின்று கட்டமே நோயாயுலாத்தி வீழ்ந்தலப்பாய் த்யாகஸ்வீகார நிஷ்டா ஹாநிகளாக்கி ஸத்தாபோக வ்ருத்த்யுபகரணமாவதொன்று.**

அதாவது—கீழ்ச்சொன்ன விவ்வாழ்வாருடைய பக்தி ஸ்வயத்ந ஸாத்யையாய் உபாயபூதையாயிருக்கும் பக்தியும், உபாயபரிகரஹாநந்தர மபேக்ஷிக்க உபாய பலமாய் வரும் பக்தியுமாகிற நடுவிற் சொல்லுகிற விரண்டு மன்றிக்கே *அறியாக் காலத்துள்ளே யடிமைக்கண்ணன்பு செய்வித்து* என்று *பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த* என்கிறபடியே அறிவுக்கு ஸம்பாவனையில்லாத பால்யத்திலே ப்ராப்திபலமானவடிமையிலே அதிப்ராவண்யத்தைப் பிறப்பித்தென்னும்படி திருத்துழாயக்கு மணம்போலே ஒக்கப்பிறந்து *தழுவிநின்ற காதல்* என்று விடுவேனென்றாலும் விடவொண்ணாதபடி உடன்வந்தியாய *கட்டமே காதல்* *வேட்கைநோய்கூர* என்று அநுபாவ்ய விஷயத்தை யதாமநோரத மநுபவிக்கப் பெறாதபோது, போஜ்ய பெறாததசையில் பசிபோலே கஷ்டமென்பது, வ்யாதியென்பதாம்படி வெறுப்பை விளைத்து, *வேவாரா வேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த* என்றும் *உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து* என்றும் *உன்னைக் காண்பான் நானலப்பாய்* என்றும் சொல்லுகிறபடியே அசோஷ்யமான ஆத்மவஸ்துவைக் குருத்துவறும்படி சோஷிப்பித்துக் கடலிலே விழுந்தாப்போலே கரையேறவொண்ணாதபடி அபிநிவேச ரூபமான தன்னுள்ளே யாழ்ந்து போக்யமான அவ்விஷயத்தைக் காணவேணுமென்று அலமாக்கப்பண்ணி, *உன்னாலல்லால் யாவராலுமொன்றும் குறைவேண்டேன்* என்கிறபடியே இதரோபாயபரித்யாக பூர்வகமாக அவனே உபாயமென்று துணிவிட்டிருக்கு மிவரை *குதிரியாய் மடலூர்தும்* *யாமடலூர்ந்து மெம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய்மலர்கொண்டு சூடுவோம்* என்னும்படி த்யஜித்த உபாயத்திலே மூட்டுகையாலே த்யாகநிஷ்டா ஹாநியையும், *ஆறெனக்கு நின் பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்* *கழல்களவையே சரணாகக் கொண்ட* *அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்* *நாகணை மிசை நம்பிரான் சரணே சரண்* *அடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்று அடுத்தடுத்து ப்ரபத்தி பண்ணும்படி யாக்குகையாலே *ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம்* *ஸக்ருதேவ ப்ரபந்நாய* இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஸக்ருத் கர்த்தவ்யமான ஸ்வீகாரத்தில் நிஷ்டாஹாநியையுமுண்டாக்கி பகவத் விஷயத்தை நினையாமை யென்றும் ஸத்தாஹாநி யென்றும் இரண்டில்லை யென்றிருக்கு மிவர்க்கு அநவரத தத்விஷயஸ்மரண ஹேதுவாகையாலே ஸத்தைக்கும் *எல்லாம் கண்ணன்* என்றிருக்குமிவர்க்கு தத்விஷயாநுபூதையை மேன்மேலும் விளைக்கையாலே போகத்துக்கும், *வழுவிலாவடிமை செய்ய வேண்டும்* என்றிருக்குமிவர்க்கு அசேஷ சேஷவ்ருத்திக்கு கூடலாகையாலே வ்ருத்திக்கும் உபகரணமாயிருக்கு மென்கை.

அன்றிக்கே, ஸத்தாபோகேத்யாதிக்கு *நாகிஞ்சித்குர்வதச் சேஷத்வம்* என்று கிஞ்சித்கரியாத வஸ்துவுக்கு சேஷத்வமில்லை யென்கையாலே சேஷத்வைக நிரூபணீயனான இவனுடைய ஸத்தை கிஞ்சித்காரத்தாலே யாதலால் இவனுக்கு ஸத்தாஹேதுவாய், *தனக்கேயாக* *உன்றன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும்* *கதா ப்ரஹர்ஷயிஷ்யாமி* இத்யாதிகளிற்படியே இதுதான் பரமப்ரயோஜநமாகப் பண்ணுமதாகையாலே அவனுக்கு போகமாயிருக்குமதான கைங்கர்ய வ்ருத்திக்கு உபகரணமாயிருப்பதொன்றென்னவுமாம்.

ஆகக் கீழ்ச் செய்ததாயிற்றது, இவருடைய பக்தி—ஸாதித்துப் பெற்றது மன்று, அபேக்ஷித்துப் பெற்றதுமன்று. ஸஹஜையாய் ஸத்தாதிகளுக்கு உபகரணமாயிருப்பதொன்றென்றதாயத்து. ... ... .... .... (101)

104. இங்ஙனன்றிக்கே, இவருடைய இந்தப் பரமபக்தி—காமஜ்ஞானபக்தி களாகிற ஸாதநத்ரயத்தையும் இஜ்ஜந்மத்திலே அநுஷ்டிக்கையாலேயாதல், பூர்வ ஜந்மங்களிலப்யாஸத்தாலாதல் உண்டானதாலோவென்கிற சங்கையிலே இரண்டுபடியாலும் வந்ததன்றென்னுமிடத்தை இவர் தம்முடைய உக்திகளாலே ஸாதிக்கிறார் (இடகிலேனென்று தொடங்கி)

(மு.) 104. இடகிலேன நோன்பறிவிலேன கீறபன் கீழநாளகளெனகையாலே ஸாதந்த்ரய பூர்வாபயாஸஜமலல.

அதாவது—*இடகிலேன்* இத்யாதியாலே—பசித்தார்க்குச் சோறுமிடுதல், தாஹித்தார்க்குத் தண்ணீர் வார்த்தல் செய்தேனாகில் *யஜ்ஞோ தாநம் தப: கர்ம* என்கிறபடியே தாநமும் கர்மயோகாந்தர்பூதமாகையாலே கர்மயோகத்திலே நிவேசிப்பிக்கலாம் அதுசெய்ய மாட்டுகிறிலேன். இந்த்ரியங்களை விஷயங்களில் போகாதபடி நியமித்தேனாகில் ஜ்ஞாநயோகத்திலே நிவேசிப்பிக்கலாம்; அதுவும் செய்யமாட்டுகிறிலேன் நியதனாய்க்கொண்டு சாஸ்த்ரோக்தமான காலங்களிலே புஷ்பாத்யுபகரணங்களை ஸம்பாதித்து ஆராதித்து ஸ்துதித்தேனாகில் பக்திசரீரத்திலே நிவேசிப்பிக்கலாம், அதுவும் செய்ய மாட்டுகிறிலேனென்றும், *நோற்றநோன்பி லேன் நுண்ணறிவிலேன்* என்று பலவ்யாப்தமாம்படி அநுஷ்டிதமான கர்மயோக முடையேனல்லேன் அதிலல்லாமையாலே ஸூக்ஷ்மரூபமான ஜீவபரவிஷயஜ்ஞாந யோகத்தையுமுடையேனல்லேன் ஆகையாலே உபயஸாத்யையான பக்தியில்லை என்னுமிடம் ஆத்ததாஸித்தமென்று மருளிச்செய்கையாலே வர்த்தமானஜந்மத்தில கர்மஜ்ஞாந பக்திகளாகிற ஸாதநத்ரயாநுஷ்டானத்தாலுண்டானதல்ல. *கீறபன் கிலலே னென்றிலன் முன்னாளால்* என்று—முன்புண்டான காலமெல்லாம் *க்ரியாத்* என்று நன்மைசெய்யவடுக்குமென்றுல வல்லேனென்று இசைந்திலேன். *நக்ரியாத்* என்று தீமைசெய்யலாகாதென்றுல மாட்டேனென்று தவிர்ந்திலேன். இப்படி விஹிதத்தைச் செய்யாமல் நிஷித்தத்தைச் செய்து போந்தேனென்றும், *தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் ஆழியங்கையம்மானை யேத்தா தயாதது—வாளாவிருந்தொழிந்தேன் கீழநாளகளெல்லாம்* என்று பகவத்விஷ யத்தை ஆராயும் ஜ்ஞாநமொன்று மில்லாமையாலே பகவதநுபவ யோக்யமான காலத்தைப் பாழேபோக்கின பாவியான நான், பிராட்டிசொன்னது செய்தல்லது நிற்கமாட்டாமையாலே மாயாம்ருகத்தை அன்று பின்பற்றிப்போன—அருகாழியைத் திருக்கையிலேயுடைய ஸர்வேச்வரனை மங்களாசாஸநம் பண்ணப்பெறாதே அறிவு கெட்டு வ்யர்த்தமேயிருந்துவிட்டேன் கீழுள்ளகாலமெல்லாமென்று மருளிச்செய்கை யாலே பூர்வஜந்மங்களிலப்யாஸத்தாலுண்டானதுமல்லவென்கை (102)

103. இன்னமும் இவர் தம்முடையதொரு திவ்யஸூக்தி விசேஷத்தாலே இத்தனை வ்யக்தீகரிக்கிறார் (இப்பிறப்பேயித்யாதியால்).

(மு) 103 இப்பிறப்பே சிலநாளிலென்றபோதே இரண்டும் கழியும்

அதாவது—*குறிக்கொள்ஞானங்களாலெனையூழி செய்தவமும் கிறிக்கொண் டிப்பிறப்பே சிலநாளிலெய்தினன்யான்* என்று யமநியமாத்யஷ்டாங்கயுக்தராய்க்கொண்டு ஸம்பாதிக்க வேண்டும்வேதந த்யாநோபாஸநாத்யவஸ்தா விசேஷங்களான ஜ்ஞாநங்களாலே அநேககல்பம்கூடி சரவணமாய் மநநமாய் த்ருவாநுஸ்ம்ருதியாய் வரக்கடவ பக்தியோகமாகிற தபஸ்ஸினுடைய பலத்தை ஒருயத்நமு மின்றிக்கே யிருக்க, நல்விரகான்வவனாலே இஜ்ஜந்மத்திலே அத்தனையும் அல்பகாலத்திலே பெற்றேனென்கையாலே ஜந்மாந்தராப்யாஸஜமென்னும், இஜ்ஜந்மந்தன்னிலே ஸாதநத்ரயாநுஷ்டானஜமென்னும் சொல்லுகிற விரண்டும் போமென்றபடி *இப் பிறப்பே* என்றும், *சிலநாளில்* என்றுமிரண்டுமருளிச்செய்தது, ஜந்மாந்தரங்களி

லப்யாஸத்தையும இஜ்ஜந்மந்தனனிலே சிரகாலஸாத்யமானவவற்றிலந்வயத்தையும் வ்யாவர்த்திககைககாகவிறே.

அன்றிககே (இடகிலேன) இத்யாதிவாகயத்திலே யெடுத்த சங்கைகளெலலாத் தாலும பூர்வஜந்மஸித்தமான ஸாதநத்ரயாப்யாஸ பலமல்லாமையை ஸாதித்ததாய், அதிலலையாகில இஜஜனமந்தனனிலே அவறறையப்யஸித்து வந்ததானலோ வெனகிற சஙகைவர பூர்வஜந்மததிலும இஜஜனமத்திலும இவர்கக அவறறி லந்வயமிலலை யென்னுமிடத்தை *இப்பிறபபே* இத்யாதியான விவருடைய ஸூகதி விசேஷத்தாலே தர்சிப்பியா நினறுகொணடு உபயசங்கையையும சேரத் தளளுகிறு ரெனறு இஙஙனே யோஜிககவுமாம. இநத யோஜனையைபபறறவும பூர்வ யோஜனையே இதனுடைய படடோலையான பெரியபடிககுச் சேருவது. (103)

104. ஆனுல இவர்கக இந்த பகதியுண்டாகைககு ஹேதுவென? எனனு மாகாங்க்ஷையிலே பலபோகதாவான ஈசவரன கருஷிபல மெனனுமததை க்ஷேதர மும கர்ஷகனும கருஷியும ததபலமுமாக ரூபித்துககொணடு அருளிசசெய்கிறுர் (பெருமபாழிலிதயாதி சூர்ணையாலே).

(மூ.) 104. பெரும்பாழில க்ஷேத்ரஜஞனபெருமசெய் — கலியாரேவ ஆளும் வனகுறும்பர் குடியேறிப் பெருங்குடியும தங்கள கருததுளளேயாக்கிப் படிநதுண்ணும போகததே தூராதே பொறுக்கொணுப் போகததுககுக் காவல் செயது குமைத்துத் திரிதது வீழ்ததி ஊலிததெற்றி அருவி யறுத்துக கடனுயின இறுபபிக்கப் பாழ்தத விதியானவாறே தன்பால் மனம் வைபபிப்பதாகத் தேயந்தறமன்னி ஒளவாளுருவி வீனைத் தூற்றை வேரறுவித்துத தீக்கொளீஇக் கவ்வை யெருவிட்டு அமுத வாறுதலைப்பறறி ஈரியாயக் கசிந்ததிலே ஈரநெல்விததி எழுநாற்றுககளை யையும் வேர் முதல மாயததுப் பட்டிச்சேவதககி மீது கொளளாமல் குறிககொளவித்துக் கடல்புரைய விளைந்து தலைவணககினவாறே நாளுநாள் கோட்குறையாக நினருரறியாமல் குநதஙகொண்டு ஆராமை யுணடு காலக்கழிவாலே நிலததுகாமல் பற்றறுத்துத் தண்டாலடிததுப பதரறுததுப் போரதததோல் வீடுதது ஸூக்ஷம வொடடும் நீரிலே கழுவி வேருே கலத்திட்டுப பைநதொடி மடநதையரைக கொணடு ஷடகுண ரஸாநநமாக்கி வானுேரகஃந ஆராவமுதானவாறே முற்று முண்ண முன்னம பாரித்து உழுவதோர் நாஞசில் கொண்டு பெருக முயலும பததியுழவன க்ருஷி பலமிறே.

(பெருமபாழில் க்ஷேத்ரஜஞன பெருமசெய) *மூடிவில பெருமபாழ* எனறு நித்யமாய் அபரிசசேத்யமாய சேதனர்கக போகமோக்ஷங்களை விளைததுககொளள லாம நிலமான பரகருதிதத்வத்தில க்ஷேதரஜஞனகிற பத்தசேதநனுடைய *நெஞ்சப் பெருமசெய* எனறு பகதிககு விளைநிலமான மனஸஸானது. (பாழுததவிதியான வாறே) எனறத்தோடு இதுககு ஸமபநதம். பாழபடுகைககுஅடி சொலலுகிறது நடுவுள்ள தடஙகளும.

(கலியாரேவ ஆளும வனகுறுமபர் குடியேறி) *ஏவினுர்கலியார் நலிகவெனறு எனமேல* எனகிறபடியே கலியுகமாகிற வனனியன "இவனை நலியுஙகோள்" எனறு ஏவ, *மனமாளுமோரைவர் வனகுறுமபர்* எனகிறபடியே சேதநசேஷமான மனஸ்ஸைத் தஙகளுகக சேஷமாககிககொண்டு நடத்துமவர்களாய் முனகை

மிடுககராய அதவிதீயராயிருநதுளள இநதரியஙகளாகிற குறுமபர் *கோவாயைவ ரென மெயகுடியேறி* ஒனகிறபடியே இசசேதநனுககு நியாமகராயககொண்டு தேஹததிலே குடிபுகுநது (கலியாரேவ) எனறது—இந்தரியஙகளினுடைய நலி வுககுக கலிகாலம ப்ரவாத்தகமாகையாலே, (கலியார்) எனறும, (ஐவா) எனறும சேதநஸமாதியாலே சொலலுகிறது—தனககெனன ஆகரஹமுடையாரைப்போலே நலிகிற கொடுமையைபபறற கலியாரெனறு ரேபாநதமாக ஆழவாரருளிச செயதது கலிகாலததுககு அஞசினபடியாலேயிறே

(பெருஙகுடியும தஙகள கருததுளளேயாககி) முனனினறு முறைபோககும பெருஙகுடிபோலே தஙகளுக்கு ப்ரதாநமான மனஸஸையும *ஐமபுலன கருதும கருததுளே திருததினேன மனததை* எனகிறபடியே தாஙகள நினைததவழியே ஒழுகுமபடியாகப பணணி (படிநதுணணும போகததேதூராதே பொறுககொணைப போகததுககுக காவலசெயது) *புலன படிநதுணணும போகம* எனறு விஷயங களிலே அவகாஹித்து புஜிககிறபோகததிலே *தூராககுழி* எனகிறபடியே ஒரு காலும பூரணமாகாதே *பொறுத்துககொணடிருநதால பொறுககொணைப்போகமே நுகர்வான* எனகிறபடியே இவறறால வநதநலிவை ஆறறியிருப்போமெனறால ஆறறவொணணாதபடியான விஷயபோகஙகளை புஜிககவேணுமெனறு *கடியார காளையரைவா புகுநது காவலசெயத* எனகிறபடியே கரூரராய நலியநலிய இளகிப பதியாநினற பருவததையுடையராய்ககொணடு இவனைச சிறைசெயது

(குமைததுத்திரித்தி வீழததிவலித்தெறறி யருவியறுததுக கடலுயினவிறுப பிககக) *கூறைசோறிவை தாவெனறு குமைததுப்போகார்* *செககிலிடடுத் திரிககுமைவர்* *கொடு வன குழியினில வீழககுமைவர்* *ஐவர்திசைதிசை வலித் தெறறுகினறனா* *ஐவா—அருவிததினறிட* *ஐவரறுத்துததினறிட* எனகிற படியே தனககபீஷடமானவறறைத தாவெனறு துகைத்திழுத்து, சரீரமாகிற செககிலேயிடடுச சுழறறி கரூரமாய கரையேற வொண்ணாதபடியாயிருககும விஷயங களாகிற படுகுழியிலேதளளி, அவைதான அனேகஙகளாகையாலே ஸவஸவவிஷயங களிலே கொடுபோகைககாக நாலுதிககிலுமிழுத்து நலிநது அருவிததினனுமா போலவும, அறுததுததினனுமாபோலவும. ‘என விஷயததைக காடடு, என விஷயத்தைக காடடு’ எனறு நெருககி, இபபடி பஹுவிதமாக தண்டிதது *பொரு ளினபமென விரணடுமிறுததேன ஐமபுலனகட கடலுயின* எனறு சரோத்ராதி களுககு ப்ராப்தமாயிருககிற அாத்தகாமஙகளெனறு சொலலப்படுகிற விரண்டையும கடமையிறுப்பாரைபபோல அவறறாலே பரிபூதனுயக கொடுததுப போநதேனென னுமபடி தஙகளுககு ப்ராப்த கரஙகளை யிறுப்பிததுககொளள.

(பாழததவிதியானவாறே) இப்படியாகையாலே *வாழத்தியவனடியைப பூப புனைநது நினதலையைத் தாழதது இருகைகூபபெனறால கூபபாத பாழத்தவிதி* எனகிறபடியே வகுத்த சேஷியானவனை வாழத்தி ஆராதித்து வணஙகிக குமபி டுகைகளாகிற இவறறிலொனறிலும அந்வயியாமையாலே ததஙகீகாரப்பறறாசான ஸுகருத கநதமறறு மனஸஸு பாழபடடவாறே. (தனபால மனம வைப்பிப்பதாகத் தேய்நதறமனனி) *தனபால மனமவைககததிருத்தி* எனகிறபடியே இநத்ரியவச யதையாலே இபபடிபபாழபடட மனஸஸைப பயிர்படுமபடி தனபககலிலே வைககப் பண்ணுகைககாக *எனதேழை நெஞசாளும திருநதாதவோரைவரைத் தேயந்தற மனனி இருநதான* எனகிறபடியே கணடதெலலாததிலும சபலமாயிருககிற மனஸஸை அதுவே பற்றாசாகபபொதியெடுதது ஆளாகிறபாராய், எத்தனையேனும பலவானகள திருத்தப்புககாலும திருந்தாதே இனி இப்படி ஒரைவரிலலை யெனனும படியிருககிற இநதரியஙகளாகிற ஐவர் க்ஷயிதது முடிநதுபோமபடி ஆஸநபலத்தாலே குறுமபரை அழிககும ராஜாககளைப்போலே ஸதாவரபரதிஷடையாயிருநது.

(ஔவாளுருவி வினைத்தூற்றை வேரறுவித்து) *நீபணித்தவருளென்னும் மொள்வாளுருவி* என்கிறபடியே *மாமேகம் சரணம் வ்ரஜ* என்று என்னுடைய ப்ரஸாதத்தையே உனக்கு உஜ்ஜீவந ஹேதுவாக அத்யவஸியென்ன, *ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ:* என்னும்படி ஸகலஸந்தேஹங்களையும் துணித்துப்போகட்டவற்றாய் *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்று அருளிச்செய்தபடியே ஸர்வபாபங்களையும் சேதிக்கைக்கு ஸமர்த்தமுமான ஒண்மையையுடைய க்ருபையாகிற வாளை அப்ரதிஹதமாகக் பக்தியாகிற பயிருக்கு விளைநிலமாகக் கல்பிதமாயிருந்துள்ள மனஸ்ஸாகிற பாழேகிடந்துபோம்படி *கொடுவினைத்தூறு* என்கிறபடியே இவனுலடிகாணவும் அறுக்கவுமொண்ணாதபடி மூடின பாபமாகிற தூற்றை*வினைகளைவேரற* என்றும் *வல்வினைத்தொடர்களை முதலரிந்து* என்றும் சொல்லுகிறபடியே மறுகிளையுண்டாகாதபடி வாஸநாருசிகளாகிற ஊசிவேரோடும் பக்கவேரோடும் அறுப்பித்து. வினைத்தூற்றை வேரறுத்தென்னாதே 'வேரறுவித்து' என்கையாலே நிஜர்த்தமும் தோற்றுகிறது; வினையறுக்கையில் ப்ரயோஜககர்த்ருத்வம் ஈச்வரனுக்கும் ஸாக்ஷாத்கர்த்ருத்வம் க்ருபைக்குமாகலாமிறே.

(தீக்கொளீஇ) வெட்டினகாட்டைச் சுட்டுப்போகடுமாபோலே *மோக்ஷயிஷ்யாமி* என்கிற க்ருபாப்ரயுக்த ஸங்கல்பத்தாலே முந்துற அடியறுத்தவற்றை *இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்* என்று இவ்வாத்மாவை மூடிக்கிற கர்மஸந்தாநம் நெருப்புக்கொளுந்தி வேகாநின்றதென்னும்படி *யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத; ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே* என்கிறபடியே உருமாய்ந்து போம்படி தக்தமாக்கி. (கவ்வையெருவிட்டு) *ஊரவர்கவ்வை எருவிட்டு* என்கிறபடியே பகவதபிமுக்யம் பிறந்தவளவிலே இவன் பாகவதனானென்று ஸம்ஸாரிகள் சொல்லும் பழிமொழியை பக்தியாகிற பயிருக்கு வர்த்தகமான எருவாக விட்டு; (அமுதவாறு தலைப்பற்றி) *அறிவையென்னும் அமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டது* என்கிறபடியே ஜ்ஞாநமாகிற அம்ருத நதியை வாய்தலாய்த் தலைக்கு மேலே போம்படி பெருகப்பண்ணி. (ஈரியாய்க் கசிந்ததிலே) *கண்ணநுக்கென்னீரியா யிருப்பாள்* *கசிந்த நெஞ்சினளாய்* என்று சொல்லுகிறபடியே அந்த ஜ்ஞாநவாரியாலே நலத்துக்கண்டால் அவனுக்கென்னும் அநுஸந்தாநத்தாலே ஆர்த்ரதை விளையும்படி நெஞ்சு பதம்செய்து செவ்வி வாய்த்தவாறே அந்நெஞ்சிலே (நாற்செல்வித்தி) ஸங்கமாகிற நெல்லை விரைத்து (எழுநாற்றுக்களையையும் வேர்முதலமாய்த்து) *செய்த்தலையெழுநாற்று* என்கிறபடியே ததப்ரத்யாஸந்நமாய ததேகபரதந்த்ரமாய் ததேகபோக்யமாய் வளருகிற இப்பயிரில் கர்த்ருத்வபோக்த்ருத்வ புத்தியை விளைக்கும் அஹங்கார மமகாரங்களாகிற களையையும், *நீர்நுமதென்றிவை வேர்முதல மாய்த்து* என்கிறபடியே ஊசிவேரோடே பறித்துப்போகட்டு. (பட்டிசேவதக்கி) களை பறித்தாலும் போராதே, பட்டிபுகாமல் நோக்கினாலிறே பயிர் தலைப்பெற்றுச் செல்லுவது. ஆகையாலே *வன்புலச்சேவை அதக்கி* என்கிறபடியே விஷயாந்தரங்களில் ப்ரவணமாய் பகவத்பக்தியைத் தலையழிக்கையாலே பக்தியாகிற இப்பயிருக்குப் பட்டியான இந்த்ரியங்களாகிற சேக்களினுடைய ஸ்வைரஸஞ்சார ஹேதுவான கர்வத்தைப்போக்கி.

(மீதுகொள்ளாமல் காறிக்கொள்வித்து) பயிர் பலபர்யந்தமானாலும் பலிதாம்சத்தை ராத்ரிசரரபஹரிக்க யோக்யதையுண்டாகையாலே ரக்ஷைபண்ணிவைக்க வேணுமாய்த்து; அப்படியே *விளைந்ததானியமு மிராக்கதர் மீதுகொள்ளகிலார்கள்* என்கிறபடியே அநர்ஹமாம்படி *அரக்கரசுரர் பிறந்தீருளரேல்* என்று ராக்ஷஸப்ரக்ருதிகளும் ஆஸுரப்ரக்ருதிகளுமாகச் சொல்லலாம்படியான அபாகவத ஜநங்கள் 'எங்களுக்கு இவன் ஸ்நேஹி' என்றிருக்கும் வழியாலே இத்தை அபஹரிக்கைக்கு அவகாசமற பக்தியாகிற பயிர்விளைந்துகிடக்கிற நெஞ்சுக்கு *பள்ளியறைகுறிக்கொள்மின்* என்கிறபடியே காவலடைத்து, கடலபுரைய விளைந்து

தலைவணக்கினவாறே *காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி* என்கிற படியே, ஏருவும் நீருமுண்டானாலும் மேல் வர்ஷமில்லாதபோது பயிர்த்தலை குளிர்ந்து வளராதென்று காளமேகநிபச்யாமமான வடிவழகை வர்ஷித்து வளர்க்கையாலே அந்த பக்தியாகிற பயிர் கடல்போலே அபரிச்சேத்யமாம்படி பலித்து *வரம்புற்ற கதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும்* என்கிறபடியே பலித்த பயிரானது பரிபக்வமாய்த் தலைவணக்குமாபோலே பலிதமான அதனுடைய பரிபாகநிபந்தனமான ஆர்த்தியால் வரும் பாரவச்யம் பிறந்தவாறே (நாளுநாள் கோட்குறையாக நின்றூறறியாமல் குத்தங்கொண்டு ஆராமையுண்டு) பக்திபரிணாமம் சொன்னவித்தால பலித்தது—ததாச்ரயமான ஆத்மவஸ்து பகவத்போக்யமாம்படி திருந்தினமையிறே ஆகையால *நாளுநாள் வந்தென்னை முற்றவும் தானுண்டான* *கோட்குறைபட்டதென்னுருவி* *நின்றூறறியாவண்ணம் என்னெஞ்சு ஞூபிருமவை யுண்டு* என்கிற படியே ஒருநாள் புஜித்து விடுகையன்றிக்கே நாடோறும் வந்து புஜியாநிற்கச் செய்தே பின்னையும் பர்யாப்தனன்றிக்கே படுகிற அலமாப்புக்கண்டு இத்தலையிலே சிறிது தொங்கிற்றுண்டென்று நிரூபித்தறியவேண்டும்படியாக இப்பரிமாற்றத்தில தலைநின்ற பிராட்டி, திருவடி திருவனந்தாழ்வான் முதலானாருமறியமாட்டாதபடி, பெரும்பசியரானவர்கள் விளைந்தநெல்லைச் சேரவறுத்துக்கொண்டுபோய் புஜிக்கப் பற்றாமே முற்றின வளவுகளைக் குத்தங்கொண்டு புஜிக்குமாபோலே முகந்தனை வாறே பின்னைச்சேர புஜிக்கப்பற்றாத தன் அபிநிவேசத்தாலே இச்சரீரத்தோடே யிருக்கச் செய்தே விளைந்தபரிபாகாநுகுணமாக *மனக்காரமைமன்னியுண்டிட்டாய்* என்கிறபடியே மனஸ்ஸுக்கு ஒருகாலும் த்ருப்தி பிறவாதே மேன்மேலும் விரும்பி புஜித்து. (கால்கழிவாலே நிலத்துகாமல பற்றறுத்து) *கால்கழிவுசெய்யேல்* என்றும், *மனனும் வறுநிலத்துவாளாக்குத்ததுபோல* என்றும் சொல்லுகிற படியே பரிபக்வமான விவஸ்து காலக்ஷேபத்தாலே தரைப்பட்டு மங்கிப்போகாமல *வினைபற்றறுக்கும்* என்கிறபடியே ப்ராப்திவிரோதியான கர்மங்களையறுத்து. (தண்டாலடித்துப் பதராறுத்து) அறுத்தநெற்கதிரைத் தடியாலேயடித்துப் பதரும் மணியும் பிரிக்குமாபோலே *அருளென்னும் தண்டாலடித்து* என்கிறபடியே தன்னுடைய கருணையாகிற த்ருடகரஸாதனத்தாலே கெலேரைகோடக்க விளைந்திருப்பதாய் அஸாரமான பதர்போலேயிருக்கிற அதமாநுபவத்தில ருசியையறுத்து, (போர்த்ததோலவிடுத்து) அந்நெல்லில் உமியை விடுவிக்குமாபோலே *போர்த்த பிறப்பொடுநோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்து* என்கிறபடியே ஆத்மாவைப் பொதிந்துகொண்டு கிடப்பதாய் ஆவிர்பாவத்துக்கும் ஷட்பாவ விகாரங்களுக்கும் அடியான ஸ்தூலதேஹத்தினுடைய விமோசனத்தைப் பண்ணி.

(ஸூக்ஷ்மவொட்டும் நீரிலேகழுவி) அநந்தரம் தண்டுலத்தைத் தவிடறக் கழுவுமாபோலே ஸ்தூலதேஹம் போனாலும் தான் போகக்கடவதன்றிக்கே ஸம்ஸரணஹேதுவாய்க்கொண்டு போந்ததாய் பகவதநுபவ விரோதியுமாயிருக்கச் செய்தே விரஜாபர்யந்தகமந ஸாதநமாய்க்கிடந்த ஸூக்ஷ்மசரீரத்தையும் *தத்தோய ஸ்பர்சமாத்ரேண* என்கிறபடியே விரஜாஜலஸ்பர்சத்தாலே வாஸநாரேணுக்களோடே போக்கி. "கர்மஸம்பந்த மறுகையாலே ஸூக்ஷ்மசரீரமிருக்கைக்கு ஹேதுவில்லாமையால் இங்கேகழிந்துவிடலாயிருக்கச் செய்தே விரஜாபர்யந்தம் இவனுக்கு கமநஸாதநமாக ஈச்வரன் தன்னிச்சையாலேவைத்து விரஜையிலே உள்புக்கவாறே கழித்துவிடும்" என்றிறே நம்மாசார்யர்களருளிச்செய்வது. ஸூக்ஷ்மப்ரக்ருதி ஸம்பந்தம் கிடக்குமளவும் வாஸநாரேணுவும் கிடக்கையாலே அதுவும் அப்போதாய்த்து நிவ்ருத்தமாவது "விரஜையைச் சென்று கிட்டி அனேசேறறலைனலையும் வாஸநாரேணுவையும் கழுவி" என்றாரிறே (வேரோர் கலத்திட்டு, *சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை வேரார்நுதல மடவாள் வேறோர்கலத்திட்டு* என்கிறபடியே

ஸ்தூலஸூக்ஷ்மரூபையான ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து வாங்கின இவ்வாத்ம வஸ்துவை அமாநவகரஸ்பர்சத்தாலே அப்ராக்ருத தேஹத்திலே ப்ரவேசிப்பித்து.

(பைந்தொடி மடந்தையரைக் கொண்டு ஷட்குண ரஸாந்நமாக்கி) *அணைவர் போயமருலகில் பைந்தொடி மடந்தையர்தம் வேய்மருதோளிணை* என்கிறபடியே *தம் பஞ்சசதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி சதம் மாலாஹஸ்தா:* இத்யாதிப்ரகாரேண வந்தெதிர்கொண்டு *தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி* என்று தங்கள் கையாலே இவ்வாத்மவஸ்துவுக்கு ப்ரஹ்மாலங்காரத்தைப் பண்ணி ஸத்கரிக்கும் திவ்யாப்ஸரஸ்ஸூக்களைக்கொண்டு தன்னுடைய போகத்துக்கர்ஹமாம்படி அலங்கரிப்பியா நின்று கொண்டு *ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே* என்கிறபடியே ஸ்வரூபாவிர்ப்பாவம் பிறந்து முன்பு திரோஹிதமாய்க் கிடந்த ஆத்மகுணங்களெல்லாம் ப்ரகாசிக்கப்பெற்றிருக்கிற இவ்வஸ்துவை ஜ்ஞாநாதி ஷட்குணங்களாகிற ஷட்ரஸயுக்தமாய *அஹமந்நம்* என்கிற அந்நமாம்படி அவர்கள் கரஸ்பர்சத்தாலே பக்வமாக்கி சேஷவஸ்துகதமான ஜ்ஞாநசக்த்யாதி ஷட்குணங்களும், சேஷிவிநியோகத்துக்கு உறுப்பாகையாலே இக்குணங்களோடே கூடி *அஹமந்நம்* என்றிருக்கு மிவ்வஸ்து அவனுக்கு அறுசுவையடிசிலாயிறே யிருப்பது.

(வானோர்க்காராவமுதானவாறே) *வானோர்க்காராவமுதே* என்கிறபடியே *வைகுந்தன் தமரெமரெமதிடம் புகுது* என்பது, *விதிவகை புகுந்தனர்* என்பதாய், *பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்* இத்யாதிப்படியே ஆதரிக்கும் நித்யஸூரிகளுக்குப் பரமபோக்யமாம்படியானவாறே (முற்றும் முன்னம் பாரித்து) *என்னை முற்றுமுயிருண்டு* என்கிறபடியே இவ்வாத்மவஸ்துவை முழுக்க புஜிப்பதாக *என்னில் முன்னம் பாரித்து* என்கிறபடியே இவ்வாத்மாவுக்கு ருசிபிறப்பதற்கு முன்னே பிடித்தும் பாரித்து.

(உழுவதோர் நாஞ்சில் கொண்டு பெருகமுயலும் பத்தியுழவன் க்ருஷிபலமிறே) *உழுவதோர் படையும்* *ஒற்றைக்குழையும் நாஞ்சிலும்* என்கிறபடியே இவன் கர்ஷகனென்று தோற்றும்படி க்ருஷிஸாதநத்தைக் கையிலே கொண்டு *அரியதெளிநாகுமாற்றலால் மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்றால்* என்கிறபடியே அரிதான தன் திருவடிகளில் ப்ராப்தியு மெளிதாம்படி இவ்வாத்மோஜ்ஜீவநத்துக்கு மிகவும் யத்நியாநிற்கும் ஸ்வபாவனாய், *பத்தியுழவன்* என்கிறபடியே, இவ்வாத்மாவுக்கு ஸ்வவிஷய பக்தியை விளைக்கைக்கு க்ருஷிபண்ணித்திரியும் ஸர்வேச்வரனுடைய க்ருஷி பலமிறே இவ்வாழ்வாருக்குண்டான இந்த பக்தியென்றபடி. இத்தால இவருடைய பக்த்யுத்பத்திகாரணம் பகவத்க்ருஷியென்றதாயத்து.(104)

105. இப்படி இத்தலையிலொரு நன்மையற்றிருக்கச்செய்தே ஈச்வரக்ருஷி பலிக்கக் கண்டவிடமுண்டோவென்ன வருளிச்செய்கிறார்மேல் (கோஸலேத்யாதி).

(மூ) 105. கோஸல கோகுல சராசரம் செய்யும்குணமொன்றின்றியே அற்புத மென்னக் கண்டோம்.

அதாவது—*த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்தே ஜ்ஞாநக்ரியாபஜநலப்யமலப்யமந்யை:, ஏதேஷு கேந, வரதோத்தரகோஸலஸ்தா: பூர்வம ஸதூர்வமபஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம்* என்கிறபடியே *அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்—ஒன்றின்றியே நற்பாலுக்குய்த்தனன்* என்று திருவயோத்யாதி கோஸலதேசவர்த்திகளான சராசரங்களெல்லாம் நிர்ஹேதுகமாக *ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:, ராமபூதம் ஜகத்பூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி* *அபிவ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குரகோரகா, விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்சிதா: உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச, பரிசுஷ்க பலாசாநி வநாந்யுபவநாநி ச.* *அகால பலிநோ வ்ருக்ஷா: ஸர்வேசாபி மதுஸ்ரவா:* இத்யாதிப்

படியே, ஸ்வஸமசலேஷவிசலேஷைக ஸுக துஃககஙகளாகையாகிற நலலஸவபாவத்தை யுடைததாமபடி நடததினனெனறும, கோகுலததிலுண்டான சராசரஙகளெலலாம, *அவனொருவன குழலூதினபோது மரஙகள நினறு மதுதாரைகள பாயும மலர்கள வீழும வளாகொமபுகள தாழும இரஙகும கூமபும திருமால நினறநினறபககம நோககி யவை செயயும குணமே* *மருணடுமானகணஙகள மேயகைமறநது மேயநத புலலும கடைவாய வழிசோர, இரணடுபாடும துலுஙகா புடைபெயரா வெழுது சிததிரஙகள போல நினறனவே* *பறவையின கணஙகள கூடுதுறநதுவநது சூழநது படுகாடு கிடபப, கறவையின கணஙகள காலபரபபிட்டுக கவிழநதிறஙகிச செவியாட்டகில லாவே* *கோவலா சிறுமியரிளஙகொஙகை குதுகலிபபவுடலுள்விழநதெஙகும காவலும கடநது கயிறு மாலையாகிவந்து கவிழநது நினறனரே* எனகிறபடியே சைதநய பரஸரண மிலலாத வருக்ஷஙகளோடு சைதநயலேச முளள திரயககுககளோடு, சைதநயவிசேஷாஹமநுஷய ஜாதீயரான சிறுபெணகளோடு வாசியற நிர்ஹேதுக மாக பகவதபராவணய பரவசஙகளானமை கணடு, *நஙகலகமீர்களிதோரறபுதம கேளீர்* எனறு விசேஷஜ்ஞா விததராயச சொலலும்படியாகக கணடோமெனகை. இததால பகவநநிர்ஹேதுகவிஷயீகாரம இபபடி பலிககககாணகையாலே ஆழவா ருடைய பகதியும பகவநநிர்ஹேதுக கருஷிபலமெனனத தட்டிலலை யெனறதாயத்து.

106 ஆனால இபபடி நிர்ஹேதுகமாக விஷயீகரிககுமளவில எலலாரையும விஷயீகரிககலாயிருகக, இஙஙனே இவரொருவரை விஷயீகரிககைககு அடியென னெனனுமபேக்ஷயிலே நிரஙகுச ஸவதநதரனானவன ஈசவரதவச செருக்காலே செயயுமவறறுககு அடி ஆராயபபடா தெனனுமதததை லௌகிகதருஷ்டாநதத்தாலே தாசிபபிககிறார் (பட்டத்துககுரியவானையும அரசும செயயுமவையாராயாது) எனறு.

(மு) 106 பட்டததுக்குரிய வானையு மரசும செயயுமவை ஆராயாது

அதாவது—அராஜகமான தேசததிலே பட்டத்துககுரிய ஆனையைக கணணைக கட்டிவிட்டால அவவானை யெடுததவனொருவன ராஜாவாமளவில அலலாதாரெலலாம கிடகக, இவனை இப படி இது எடுககைககடி யெனனெனறும, ராஜாவானவன தன செருககாலே ஒருததியைத தனககு மஹிஷியாகப பரிகரஹிககு மளவில இஙங னொதத ஸதரீகள பலருமுணடாயிருகக இவளை இபபடி இவன பரிகரஹிககைககடி யெனனெனறும ஆராயவாரிலலை யெனறபடி

இததால சொலலிறறாயிறறு, *ஸவாதநதாய மைசவர மபாயநுயோஜய மாஹுஃ* எனகிறபடியே பாயநுயோஜயமலலாத ஐசவர ஸவாதநதாயயுகதனாய *பவ மோக்ஷணயோஸ தவயைவ ஜநதுஃ கரியதே* எனகிறபடியே ஸவாதீநபநதமோக்ஷனாய வேணடினபோது வேணடின வஸதுவை வேணடினபடியாகக வலலனுமான ஸாவேச வரன, அஹேதுகமாயிருகக ஆதரவிஷயமாமபடி பட்டத்துககுரிய வானையும அரசும செயயுமவைபோலே ஸவாதீனமுமாய ஸவாாததமுமான ஆதமவஸதுக்களிலே ஒரொனறை ஈசவரதவச செருககடியான ஸவேசசையாலே ஸவவிஷயோகாஹமாம படி விஷயீகரிததால, அலலாத ஆத்மவஸதுககளெலலாம கிடகக இவவஸதுவை இவனிபபடி விஷயீகரிபபானெனனெனறு இதுககடி ஆராயபபடாதெனகை (106)

107 இஙஙன சொலலுவானெனன? இவா தமககு ஜ்ஞாதஸுகருதஙகளனறோ விலலை யெனறது, யாதருசசிகாதயஜ்ஞாதஸுகருதஙகளடியாக அஙகீகரிததானு னலோ வெனனவருளிசசெயகிறார (முநநீரெனறு தொடஙகி)

(மு) 107. முநநீா வாழநதாா சூட்டும கோவையாழி யெனகிற ஸாக்ஷாத்கருத ஸவபரவருததாநதாககு யாதருசசிநாதிகளுணடாகில தோனறும.

அதாவது—*முந்நீர்ஞாலம் படைத்த வெம்முகில வண்ணனே* என்று தொடங்கி ஸாவேசவரான *விசித்ரா தேஹஸம்பத்தி:* இத்யாதிப்படியே ஸ்வசரண கமல ஸமாச்ரயணோபகரணமான கரண களேபரங்களை இவ்வாத்மாவுக்குண்டாக்கி உஜ்ஜீவிப்பிக்கைக்கே ப்ரயோஜநமாக ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ண, நான் அவன் தந்த சரீரத்தைக் கொண்டு அவனை ஆச்ரயிக்கையன்றிக்கே அதின் வழியே யொழுகி ஸம்ஸரித்துப் போந்தேனென்று ஸ்வவருத்தாநத்தையும், *வாழ்ந்தார்கள்* என்று தொடங்கி—முன்பு ஜீவித்தவர்கள் ஜீவித்த ப்ரகாரம் மஹாவர்ஷ ஜலபுத்புதம் போலே நசித்து நசித்து அத:பதித்தார்களென்னுமதொழிய, ஸ்ருஷ்டிகாலம் தொடங்கி இன்றளவும் வர ஜீவித்தவர்கள் ஒருபடிப்பட ஜீவித்தே போந்தார்களென்னுமிவ்வர்த்தந்தானில்லை யென்று ஐச்வர்யவான்களாய் முன்பு ஜீவித்துப் போந்தவர்கள் வருத்தாந்தத்தையும், *சூட்டு நன்மாலைகள்* என்று தொடங்கி—பரமபதவாஸிகள் ஸமாராதநோபகரணங்களை தரித்துக்கொண்டு ஸமாராதநம் பண்ணுகிறபடி செய்யத்தே அதனையுபேக்ஷித்து திருவாய்ப்பாடியில் வெண்ணெயை விரும்பி வந்தவதரித்தமை சொல்லுகையாலே பரமபதத்திலுள்ளார் வருத்தாந்தத்தையும், *கோவை வாயாள் பொருட்டு* என்று தொடங்கி—தேசகால விப்ரக்ருஷ்டங்களான ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் விரோதிநிரஸநாபதாநங்களை தத்தத்தேசகாலங்களிற் போலே தரித்து, நீ இப்படி விரோதிநிரஸநம் பண்ணுகிற தசைகளிலே உதவி சிசிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனாகிலும், என்னுடைய ஹ்ருத்யாதிகளே உனக்கு போகோபகரணமாம்படி என்பக்கலிலே வ்யாமுக்தனானவனே! யென்கையாலும், *ஆழியெழ* என்று தொடங்கி—த்ரைவிக்ரமக்ரமணம், ஸமுத்ரமதநம், ஸமுத்ர தரணம், ஜகந்நிகரணம், பாரதஸமர நிர்வஹணம். ஹிரண்யநிரஸநம், ராவணவதம், பாணகர சேதநம், ஜகத்ஸ்ருஷ்டி, கோவர்த்தநோத்தரண மாகிற பூர்வசரிதங்களைப் பத்தும் பத்தாகப் பேசுகையாலும், ஈச்வரவ்ருத்தாந்தங்களையும் ஒரு உபாதியற ஒருபோகியாக ஸாக்ஷாத்கரித் தருளிச் செய்கிற விவர்க்கு அஜ்ஞாதமான தொன்றில்லாமையாலே தம்மை ஈச்வரனங்கீகரிக்கைக்கடியான யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்களுண்டாகில் அல்லாதவற்றோபாதி ப்ரகாசிக்குமிறே யென்றபடி. இத்தால், ப்ரகாசித்ததாகில் அருளிச்செய்வர், அப்படி யருளிச்செய்யக் காணாமையாலும், கேவல நிர்ஹேதுகப்ரஸாத ப்ரகாசகவசநங்கள் பலவுமருளிச் செய்கமை காண்கையாலும் அவையும் இவர்க்கில்லை யென்றதாயத்து (107)

108. இப்படி அங்கீகார ஹேதுவாயிருப்பதொரு ஸுக்ருதமில்லையே யாகிலும் அத்வேஷாபிமுக்யங்கள் ஸுக்ருதமடியாக வாணலோ வென்ன வருளிச்செய்கிறார் மேல் (செய்தநன்றிதேடிக்காணாதே) என்று தொடங்கி.

(மூ) 108. செய்தநன்றி தேடிக காணாதே கெடுத்தாய தந்தாயென்ற அத்வேஷாபிமுக்யங்களும் ஸத்கர்மத்தாலல்ல.

அதாவது—*வாட்டாற்றெம்பெருமான் நின்றி செய்தேனவனெஞ்சில் திகழுவதுவே* என்று ஸாவேசவரான தம்மை விஷயீகரிக்கைக்கு உடலாகத் தாம் செய்த ஸுக்ருதமேதேனுமுண்டோவென்று—தேடிக்காணாதே, *என்னைத் தீமனம் கெடுத்தாய்* *மருவித் தொழும் மனமேதந்தாய்* என்று தீமனம் போகையாகிற அத்வேஷமும், மருவித்தொழும் மனமுண்டாகையாகிற ஆபிமுக்யமும், இரண்டும் அவனாலே உண்டாய்த்தென்று தாமே நிஷ்கர்ஷிக்கையாலே அத்வேஷாபிமுக்யங்களும் ஸத்கர்மமடியாக வந்ததன்றென்கை (108)

109. ஆனால் பரமபக்திக்கு முகம்காட்டுமோபாதி, பரிக்ஷணைக்கும் முகம்காட்டுமென்றாரிறே இவர்தாமே; அந்தப் பரிக்ஷணைதான் இவர்க்குண்டாய்த்தாணலோ வென்னவருளிச் செய்கிறார் (எண்ணிலும் வரும் கண்ணைக் கெணதானுமில்லை) என்று.

(மூ.) 109 எண்ணிலும் வரும் கண்ணீக்கு எண்டானுமில்லை.

அதாவது—*எண்ணிலும் வருமென்னினி வேண்டுவம்* என்றது—ஈசவர குணதிகயம் சொன்ன விதத்தை போக்கி அந்த பரிகணனைக்குத் தம்மோடு அந்வய மில்லாமைகண்டு *நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று ஓரெண்டானு மின்றியே வந்தி யலுமாறு—கண்டாயே* என்று காரியங்கள் பலிக்கு மிடத்தில *எண்ணிலும் வரும்* என்றது தான் மிகையாமபடி ஓரெண்தானுமின்றி யிருக்கச் செய்தே பலித்துக்கொடு நிற்கிறபடி கண்டாயே யென்று தம் திருவுள்ளத்துக்கு மூதலிக்கையாலே அதுவும் இவாக்கில்லையென்கை. ... ... ... ... (109)

110. அதுதான வேணுமோ? தமக்கு அநுமதீச்சைகளுண்டாக வருளிச் செய்தாரே? அவைதான ஹேதுவாலுலோவென்ன, அவையும் அவனாலேயுண்டான தென்கிறார் (மதியாலிசைந்தோமென்று தொடங்கி)

(மூ.) 110. மதியால இசைந்தோ மென்னும் அநுமதீச்சைகள் இருத்துவ மென்றத வென்னை இசைவித்த என்னிசைவினது.

அதாவது—*வைத்தேன மதியா லெனதுள்ளத்தகத்தே* என்று அநுமதி மாதரத்தாலே அவனை என்னெஞ்சுக்குள்ளே வைத்தேனென்றும், *யானுமென னெஞ்சுமிசைந் தொழிந்தோம்* என்று விரோதியைப் போக்கும்படியாக நானு மென்னெஞ்சுமிசைந்தோமென்றும் தமக்குண்டாகச்சொன்ன அநுமதியும் இச்சை யும், *யாதொடியென னுள்ளிருத்துவமென்றிலன* என்று அவன் தம்முள்ளே புகுந் திருப்பதாகக் கேட்டவளவில் நான இசைந்து என்னுடைய ஹ்ருதயத்திலே இருத் துவோ மென்றிலேனென்றபடியே அவனை உள்ளேயிருத்துவோமென்றிசையாத தம்மை *இசைவித்தென்னை* என்கிறபடியே வருந்தி இசையப்பண்ணி *என்னிசை வினை* என்று நானல்லேனென்று அகலாதபடி என்னிசைவுதாயைப்புகுந்தவனை யென்னும்படி யதனித்த ஈசவரனுடைய கருஷிபலமென்கை. அநுமதீச்சைகள் தமக்குமுன்னே உண்டாயிருந்ததாகில் *இருத்துவமென்றிலன* என்றும், *இசை வித்தென்னை* என்று மருளிச்செய்யக்கூடாதிறே. (110)

111. இவையொன்றுமில்லையாகிலும் *மாதவன* என்றும், *திருமாலிருஞ் சோலைமலை* என்றும் சொன்ன உக்திமாதரங்களைப் பற்றாசாகக்கொண்டு விஷயீ கரித்தாக வருளிச்செய்கையால, அவைதானுண்டேயென்ன, அவை பேற்றுக் கடியாகச் சொல்லத் தக்கவையன்றென்னுமிடத்தை மற்றுமிவற்றோடு ஸஹபடி தங்களாகத் தக்கவற்றையும் கூட்டிக்கொண்டருளிச் செய்கிறார் (மாதவன மலைநீர் நிழலென்றேறிடுமதென்று தொடங்கி).

(மூ.) 111. மாதவன மலை நீர் நிழலென்று ஏறிடுமது—வயாவ்ருத்தயுக்தி அந்யாரத்தம அபுத்தி பூர்வகம் அவிஹிதம் பலவிஸதருசம பலாந்தரஹேது.

அதாவது—*மாதவனென்றதே கொண்டென்னை யினியிப்பாறபட்டது யாத வங்களும் சேர்கொடேனென்று என்னுள புகுந்திருந்து* என்று அந்தஃபுரவாஸிகள் சொல்லும் *மாதவன* என்கிற திருநாமத்தை அஹருதயமாகச் சொன்னவளவிலே அத்தையே குவாலாகக்கொண்டு அல்லாததிருநாமங்களுக்கும் இதுக்கும் வாசியறியாத வென்னை விஷயீகரித்து என்னுள்ளே புகுந்திருந்து ஸகலகாமங்களையும் போக்கினு னென்றும், *திருமாலிருஞ் சோலைமலை யென்றேனென்னத் திருமாலவந்தென் னெஞ்சு நிறையப் புகுந்தான* என்று ஓரோதேசங்களில் மலைகளைச் சொல்லாநின்றால, ஓரோ

விசேஷங்களை யிட்டுச் சொல்லுமோபாதி யாத்ருச்சிகமாக *திருமாலிருஞ்சோலைமலை யென்றேன்* என்னுங்காட்டில் தானுகந்தருளின திருமலையின்பேரை விரும்பிச் சொன்னேனாகக் கொண்டு நிரபேக்ஷனான தான் பிராட்டியோடே கூடவந்து என்னுள்ளே பரிபூர்ணமாகப் புகுந்தானென்றும் சொல்லும்படி, மாதவனென்று நம் பேரைச் சொன்னார், திருமாலிருஞ்சோலை யென்று நம்மூரைச் சொன்னாரென்றும் ஏறிடுகிறவை-ஈச்வரனுகந்த திருநாமமென்றும் அவன் உகந்துவர்த்திக்கிற திருமலை யென்றும் சொன்னவையல்ல, பேருக்கும் பேருக்கும் மலைக்கும் மலைக்கும் வ்யாவ்ருத்தி சொன்னமாத்ரம்.

மற்றுமிவற்றோடு ஸஹபடிதமாய்ப் போருமவையான "என்னடியார் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய்" என்றேறிடுகிறவை— தன்பயிர் தீயாமைக்காக நீருள்ளவிடத்திலின்றும் நெடுமதகுலையிட்டு இறைக்கிறதும், தனக்குச் சூதுசதுரங்கம்பொருகைக்கும் காற்றுவரவுக்கிருக்கைக்குமாக விரிவுண்டாகப் புறந்திண்ணை கட்டிவைக்கிறதுமொழிய, பாகவதர்கள் விடாயைத் தீர்க்கைக்கும் அவர்களுக்கொதுங்க நிழலாகைக்கும் செய்கிறதல்லாமையாலே அந்யார்த்தம். இவைதான் இத்தனையும் இத்தலையில் நினைவின்றியிருக்க, அவன் அடித்தேறிடுகிறவையாகையாலே புத்தி பூர்வகமுமல்ல. இவைதான் பலஹேதுதயா சாஸ்த்ரவிஹிதங்களுமன்று. பகவத்விஷயீகாரமாகிற மஹாபலத்துக்கு இவை ஸத்ருசமுமல்ல. இவையுண்டாய்த்தாகில் இவ்வருகே சில அல்பப்ரயோஜநங்களுக்கு ஹேதுவாமித்தனையென்கை. ஆகையால் இவை பகவதங்கீகார ஹேதுவாகமாட்டாதென்று கருத்து.

கீழே *யாத்ருச்சிகாதிகளுண்டாகில் தோன்றும்* (ஸூ. 107) என்றதுவும், இங்கே *மாதவனித்யாதியாலே அவனேறிட்டத்தக்கவை சிலவுண்டாக இவர் தம்முடைய உக்தியாலே கண்டெடுத்துக் கழிக்கிறவிதுவும் தன்னில் சேரும்படி யெங்ஙனே யென்னில், யாத்ருச்சிகாதிகள்தான் பலவுமுண்டாகையாலே அத்யுத்கடங்களாய் மஹாபலத்துக்குறுப்பாய் வந்துவிழுமவையும் ஆபாஸங்களாயிருக்குமவையுமுண்டாகையால் அத்யுத்கடங்களாய் அவனுக்கு ஹேதுவாகக் கொள்ளலாம்படி யிருக்குமவற்றைக் கீழே சொல்லிற்றாக்கி, ஆபாஸங்களாய் அவனாரோபித்துக்கொள்ளத் தக்கவற்றை இங்கே சொல்லிற்றென்று விபஜித்துக் கொள்ளுமளவில் விரோதமில்லை. ... ... ... ... ... ... (111)

112. ஆனால் இவரை இப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரிக்கவேண்டுவானென் னென்னுமபேக்ஷையிலே அருளிச்செய்கிறார்மேல் *இவன் நடுவேயென்று தொடங்கி*.

(மூ) 112. இவன் நடுவே அடியானென்று ஓலைப்பட்ட ப்ரமாணம் பக்ஷபாதி ஸாக்ஷிகளவனுபவமாக இந்த்ர ஜாலங்கள் காட்டிக் கொள்ளக் காப்பாரற்று விதி சூழ்ந்தது.

அதாவது—இப்படி ஒன்றை ஆரோபித்தாகிலும் விஷயீகரிக்குமிவன், *நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதன்* என்கிறபடியே நாதனாகையாலே நிர்ஹேதுகமாக வந்து, *அடியானிவனென்றெனக் காரருள் செய்யும்* என்று *த்வம் மே* என்கிறபடியே இவன் என்னடியானென்று பிடிக்க, *அஹம் மே* என்கிறபடியே அதுக்கு இவர் இசையாமல் 'என்னை நீ உன்னடியானென்றது எத்தாலே' என்ன; *இதம் வேத மூலப்ரமாணாத்* என்கிறபடியே இவரை இசைவிக்கைக்காக, *பதிம் விச்வஸ்ய* *ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞபதி:* *க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* இத்யாதிகளாலே சேதநாசேதநங்களுடைய தனக்கு சேஷமென்னுமிடத்தை ப்ரதிபாதிக்கிற வேதத்தை ப்ரமாணமாகக் காட்ட, அது எழுதாமறையாகையாலே அது ஓலைப்படா ப்ரமாணமென்று இவர் அத்தை அநாதரித்துத் தம்முடைய அநாத்யநுபவத்தை ப்ரபலமாகக் கொண்டு

நிற்கையாலே, ஆடசியிலும் ப்ரபலமானதொடர்ச்சியை முன்னிடடவளவில், அதுக்கும் ஸாக்ஷிஆரெனறு கேட்டவாறே *ஸுதீஸஸ்யாத* எனகிறபடியே தத்வதர்சிகளான ஜ்ஞாநிகளை ஸாக்ஷியாகக காடட, *தவதுபக்ஷபாதீ ஸ:* என்கிறபடியே அவர்கள உனககுப் பக்ஷபாதிகளென்று அதுககும இவர் கண்ணழிவு சொல்லுகையாலே *வனகளவன* எனறு விஷயீகாராநநதரம அநாதிகாலம தாம *அஹம மம* என றிருந்து போநதவநுபவம ஆதமாபஹாரமாகிற வலிய களவாலே வநததெனறு இவர் அநுதபிககும்படி *இநதிர ஞாலஙகள் காடடிபிவவேழுலகுஙகொணட* எனறு இநத்ரஜாலஙகள போலே தருஷ்டிசிததாபஹாரிகளான வடிவழகையும சீலத்தையும சேஷ்டிதத்தையும காடடி வாய்மாளப்பணணி, ஆஸுரப்ரகருதியான மஹாபலி 'எனனது' எனறிருநத லோகத்தைத் தனனதாககிக கொண்டாபபோலே இவரை யும வடிவழகையும சீலாதிகளையும காடடி வாய்மாளப்பண்ணி இவர் 'எனனது' என்றிருந்த ஆத்மாவைத தனனதாககிக கொள்ளுமபடியாக *விதிவாயக கினறு காப்பாரார்* எனறு கருபாஜநிகையான இவள காககவோ? கருபாபரதந த்ரனை நீ காககவோ? கருபாபாத்ரமான நான காககவோ வெனனுமபடி ஒருவரால நிவாரிககவொண்ணாதபடி பெருகுவதாய ஸ்வதந்தரனை தனனையும தப்பவொண் ணாதபடியிருககையாலே விதிசபதவாசயையா யிருந்துள்ள கருபை, *எனைத்தோர் பிறப்பும—எதிர்சூழலபுககு எனக்கே யருளகள் செய்ய—அம்மான் திரிவிகரமனை— விதிசூழநதது* எனறு அநேக ஜநமங்கள நான பிறநத பிறளிககு எதிராகப் பிறந்து கொடுவநது, எனககொருவனுககுமே தன ப்ரஸாதஙகளைப் பணணுமபடியாக ஸர்வேசவரனை வைதது த்ரிவிகரமாபதாந முகததாலே எலலார் தலையிலும திருவடி களை வைத்த ஸுசீலனை கருபை சூழ்ந்ததெனனுமபடி இவரை அஙகீகரித்தலலது நிறக வொணணாதபடி வளைந்து கொண்டதெனகை. காட்டிககொளள வெனகிற விடததில (காட்டி) எனகிறவிது *ப்ரமாணமகாட்டி, ஸாக்ஷி காடடி, இநதிரஞாலங்கள காடடி* எனறு ஸாவதராநவிதமாய்க கிடககிறது. .... .... (112)

113. எலலாம செய்தாலும், ஏவமபூதகருபைதான அநாதிகாலம இவவாத்ம விஷயமாகப் பெருகாமல இனறு பெருகுமளவில இதுககு ஓரடிவேண்டுகையாலே இதுககு உடலாகக கற்பிககலாவதொரு ஸுகருதமிலலையோ வெனன, அருளிச செய்கிறார் (வரவாறென்றுதொடஙகி).

(மு) 113. வரவாறில்லை வெறிதே என்றறுதியிட்டபின் வாழுமுதலெனகிற ஸுக்ருத மொழியக கற்பிக்கலாவதில்லை.

அதாவது—*வரவாறொன்றிலலையால வாழவினிதால* எனறு இது வநதவழி இன்ன தெனறு இதுககுச சொலலலாவதொரு ஹேதுவிலலை, பேறும மிகவும இனிதாயிராநிறகுமெனறும, *வெறிதேயருள செயவர் செய்வார்கட்கு* எனறு— தாம செயயநினைததவர்களுககு நிர்ஹேதுகமாக கருபை பணணுவரெனறும, இப்படி விஷயீகாரம நிர்ஹேதுகமெனறு தாமே அறுதியிடடபினபு, *தனியேன வாழ முதலே* என்று ஸமஸாரததிலொருதுணையினறிககே யிருககிற வெனனுடைய அநுபவததுககு ப்ரதமஸுகருதமானவனே! எனறு தமமுடைய பேறறுககு மூலஸுகருதமாக இவரருளிச்செய்த அவனதனனையொழிய வேறு கறபிககலாவ தொரு ஸுகருதயிலலை யெனகை.

அனறிககே, *யாதருசசிகாதிகளுண்டாகில தோனறும* எனறு அஜ்ஞாத ஸுகருதமும இவாககு இலலை யென்றவாறே இப்படி நேராககககழிககவேணுமோ? அநாதிகாலம அஙகீகரியாதவன இனறு செயகையாலும, அலௌதவாதமாகக ளெல லாம் கிடகக இவரை இப்படி விஷயீகரிக்கையாலும, இதுககுடலானது ஏதேனு மொரு ஸுகருதம இவர்ககுண்டாகக கூடுமென்று கார்யத்தையிட்டு அநுமித்

தாகிலும் கல்பிக்கலாவதொன்றில்லையோவென்ன; அப்படி கல்பிக்கலாவதில்லை யென்னுமிடத்தை விஸ்தரேண ப்ரதிபாதிக்கிறுரென்று ஸங்கதியாக்கி *செய்தநன்றி தேடிக்காணுதே* (ஸூ. 103) என்று தொடங்கி *வெறிதேயென்றறுதியிட்டபின* என்னுமளவும் ஏகவாக்யமாகக் கொண்டு இவ்வாழ்வார் கருத்தைச் சொல்லிக்கொண்டு செல்லுகிறதாய், *எந்நன்றி செய்தேனே* என்று பகவதங்கீகாரத்துக்குடலாகத் தாம் செய்த ஸுக்ருதமுண்டோ வென்று தேடிக் காணுதே அங்கீகாரத்துக்குடலான தில்லையாகில அத்வேஷாபிமுக்யங்களுக்குத் தக்கதுதானுண்டோவென்னில், அவை யும் அவனாலேவந்தது, ஸத்கர்மத்தாலே வந்ததல்ல. *எண்ணிலுமவரும்* என்ற பரிகணனைதானுண்டோவென்னில், அதுக்கு *எண்டானுமில்லை* *வைத்தேன மதியால்* *யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம்* என்கிற அநுமதீச்சைகள் தானுண்டோவென்னில், அவையும் அவனுண்டாக்கினது; *மாதவனென்றதே கொண்டு* *திருமாலிருஞ் சோலைமலையென்றேனென்ன* இத்யாதிகளால ஈச்வரன் வலியவேறிடுகிறவை-வ்யாவ்ருத்தயுக்த்யாதிகள். இவன் நடுவேவந்து அடியானென்று பிடித்து ப்ரமாணஸாக்ஷிகள் காட்டி, அவை கார்யகரமாகாதவளவில் வடிவழகைக் காட்டி இப்படி இவ்வஸ்துவை ஸ்வாதீனமாக்கிக்கொள்ளும்படி இவனை நிவாரகரற்ற க்ருபை சூழ்ந்தது. இவ்விஷயீகாரத்துக்கு *வரவாறொன்றில்லை; *வெறிதேயருள் செய்தவிதத்தை—என்று இவர்தாமே அறுதியிட்டபின்பு *தனியேன் வாழ்முதலே* என்று தம்பேற்றுக்கு மூலஸுக்ருதமாக இவரருளிச்செய்த ஈச்வரன் தன்னை யொழிய இவர்க்கு வேறு கல்பிக்கலாவதொரு ஸுக்ருதமில்லை யென்று இங்ஙனே யோஜிக்கவுமாம்; இந்தயோஜனை இதின் படடோலையான க்ரந்தத்தில் இவரருளிச் செய்த மர்யாதைக்குச் சேரும்.

ஆக இதுக்குக்கீழ் இவர்ப்ரபாவத்தையும், அதுக்கடி பகவந்நிர்ஹேதுக கடாக்ஷமென்னுமதையும், அதனால், இவர்க்குண்டான பக்தியின் வ்யாவ்ருத்தியை யும், அது தான கர்மஜ்ஞாநஸாத்யை யல்லாமையையும், இவரை ஈச்வரனங்கீகரித்த துக்கு கேவல க்ருபையொழிய ஹேத்வந்தர மில்லாமையையும் சொல்லிற்றாய்த்து.(113)

114. இப்படி நிர்ஹேதுகவிஷயீகாரபாத்ரபூதரான இவருடைய பக்தி பகவத்க்ருபைகல்ப்யையாயிருந்ததாகிலும் உபாஸகனுக்கு கர்மஜ்ஞாநஜநிதையான பக்தியோபாதி இவர்க்கு ப்ராப்திஸாதநமிதுவோவென்ன வருளிச்செய்கிறுர்மேல் (நலமருளினனென்று தொடங்கி).

(மூ.) 114. நலமருளினன் என்கோலென்று ஆமூலசூடம் அருளால் மன்னு மிவர்க்கு அன்புக் கடியானதுவே அடிசேருகைக்கும் ஸாதநம்.

அதாவது—*மயர்வறமதிநல மருளினன்* என்று தம்முடைய பக்த்யுத்பத்தி காரணம் கேவல பகவத்க்ருபையென்று உபக்ரமித்து *என்கோலம்மான் திருவருள் கள்* என்னுமளவாக ஜ்ஞாநதசையோடு (வரணதசையோடு) ப்ராப்திதசையோடு வாசியற, ஆமூலசூடம் *மாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்* என்று—பிடி தோறும் நெய்யொழியச் செல்லாத ஸுகுமாரரைப்போலே நின்றநிலைதோறும் அவனருளகொண்டே தரிக்கவேண்டும் ஸ்வபாவரானவிவர்க்கு *ஆராவன்பிலடியே னுன்னடிசேர் வண்ணமருளாய்* என்கையாலே *நலமருளினன்* என்று பக்தி காரணமாகச் சொன்ன க்ருபையே அடிசேருகையாகிற ப்ராப்திக்கும் ஸாதந மென்றபடி. .... ... ... .... ... (114)

115. இப்படி ப்ராப்திஸாதநம் க்ருபையேயாகில *இங்கின்றநீர்மையினியா முருமை* என்றபோதே இவரபேக்ஷிதம் செய்துவிடலாயிருக்க, இவரை வைத்து ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஜ்ஞாநபக்திகளை வளர்த்தது ஏதுக்காகவென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறுர் (புணர்தொறுமென்று தொடங்கி).

**(மு.) 115. புணர்தொறு மெனனக கலநது பிரிநது ஜ்ஞாந பகதிகளை வளாததது கனஙகுழையிடக் காதுபெருககுதலும மாஸோபவாஸிபோஜநப் புறப் பூசசும போலே ஆறறநலல மாபோகசசிரமமாக.**

அதாவது—*புணர்தொறும புணர்சசிககாரா* இதயாதியாலே ஸமசலேஷிக குந்தோறும ஸமசலேஷத்துககுத்தகக வளவலலாத ஸுகஸாகரமானது அபரிச சேத்யமான ஆகாசத்தையும கடநது அவவருககுபபடடு, விபூதிதவயததையும விளாக குலை கொளளவலலவறிவையும முழுததுமபடி பெருகி, இபபடி பெருகினவிது—விசலேஷபரஸஙகத்திலே, பெருககாறுவறறி அடிசுடுமாபோலே ஸவப்நகல்ப மெனனலாமபடி வறறிபபோய, அததசையிலே பராணஸதாநமான ஹருதயததில் பூர்வஸமசலேஷத்தாலுணடான புடைதோறுமுளளே புகுநது ஆசரயமான ஆதமாவுககுப் பொறுககவொணணாதபடி அபிநிவேசம பெருகிவாராநினறதென்று சொலலுமபடியாகக கலப்பது பிரிவதாய் கலவியாலே ஜ்ஞாநததையும பிரிவாலே பகதியையும வளர்த்தது, கனதத பணியிடுகைக கிடமாமபடி. நூலிடடுத் திரியிட்டுக குதம்பையிட்டுக் காது பெருககுமாபோலவும, மாஸோபவாஸிகளுககு பரதமததிலே போஜனத்தையிடில பொருதெனறு சோறறையரைதது உடமபிலே பூசிப் பொரிக கஞ்சி கொடுத்துப் பொரிககூழகொடுதது ஒநிககததிலே போஜநம பொறுப்பிககுமா போலவும.

*ஆறறநலலவகைகாடடுமமமான* என்று எனககுப் பொறுககப்பொறுககத தன குணசேஷடிதாதிகளைககாடடி, அவவழியாலே எனனை யடிமைகொணடவ னெனனுமபடி பகவதநுபவம கஞககணடறியாதவிவாககு *எமமாவீடு* எனறும, *கட்டெழில வானவர்போகம* எனறும சொலலுகிறபடியே எவவகையாலும விலக்ஷணமாயக கொணடு கடடடஙக நனருயிருப்பதாய அபரிசசிநந ஜ்ஞாநசகதி கரான நிதயஸூரிகளநுபவிககிற போகத்தை முதலிலே கொடுககில ஸாதமியா தென்றுகருதி, அது ஸாதமிககைககாகச சிரமம செயவித்தபடியெனகை.

ஆனபின்பு ஜ்ஞாநபகதிகளை வளாத்தது பராபதி ஸாதநதயாவன றெனறு கருதது. மாஸோபவாஸிககுப் புறபபூசசு மாதரத்தால போஜநம பொருமையாலே புறபபூசசுச சொனனவிது மறறைபவறறுககு மூபலக்ஷணம. *மாபோகம* என்றது—*மாவீடு* *வானவாபோகம* எனகிற சநதைகளிலாதயநதஙகளைச சேர்ததுச சொனனபடி. ... ... .. ... .... (115)

116 ஆனால ஜ்ஞாநபகதிகளை வளர்ததது அதுககாகிறது, *மூனியேநான மூகனளவும மாநஸாநுபவ மொழிய ப்ரதயக்ஷாநுபவமிலலாதவிவர்ககு இவறறை வளாககைகக குறுப்பாக வரும ஸம்ச்லேஷவிச்லேஷங்களாகிறவை எவையெனன அருளிசசெயகிறார்மேல (இவறறுலெனறு தொடஙகி)

**(மு.) 116. இவறறுல் வரும ஸமசலேஷ விசலேஷஙகளாகிறன—நீ எளியனுய நிறகுமரியனுய எயதாளென்கிற தாசந ஸமமான மாநஸாநுஸந் தானமும திணகொளளப் பெருத மநசசைதிலயமும.**

அதாவது—கீழசசொனன இககாரியஙகளடியாக வரும ஸமசலேஷமும் விசலேஷமுமாகிறன—*கருததுககு நனறு மெளியனுய* *நிறகுமுனனேவநது* எனறு—நெஞ்சுக்குமிகவும விசததமாநுபவ விஷயமாயககொணடு என் முனனே வந்துநிறகுமெனறும *கண்கள காணடறகரியனுய* *கைகக மெயதான* என்று கணணுககு அவிஷயமாய்சகொணடு கையாலணைகைககு எடடுகிறிலனெனறும சொலலுகிற ப்ரதயக்ஷதுலயமான மாநஸாநுஸநதாநமும, *கணகடகுத திணகொளள

வொருநாளருளாயுன திருவுரு* என்று அபேக்ஷிதமான பாஹ்யாநுபவம் பெறுகை யாலே ஆந்தராநுபவமும் அடிமணடியோடே கலங்கும்படி பிறந்த அந்தஃகரண சைதில்யமுமெனகை. .... ... .... .... .... (116)

117. ஆனால் அபிமதவிஷய ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் புண்யபாபநிபந்தந மாகவன்றோ லோகத்தார்க்கு வருவது. லோகவ்யாவ்ருத்தரான இவர்க்கு இவை வருகைக்கு நிதானமேதென்னுமபேக்ஷையிலே யருளிச்செய்கிறார் (புண்ணியமென்று தொடங்கி).

(மூ) 117. புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை அவை சரிதத்தவர்க்கு ப்ரிய ஹிதபரன் தான் துளக்கற வெங்கும் தழைக்க நடத்தும்.

அதாவது—*புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்*என்கிறபடியே நாட்டார்க்குப் புண்யபாபபலமாய்க்கொண்டு வருகிற ஸம்ச்லேஷவிச்லேஷங்களை, *சார்ந்தவிருவல்வினைகளும் சரித்து* என்று *த்ஸ்தைலவத் தாருவஹ்நிவத்* என்கிற படியே ஆத்மாவோடே பிரிக்கவொண்ணாதபடி பொருந்திக்கிடக்கிற புண்யபாப ரூபமான பரபலகாமங்களை விரகர் நெருஞ்சுவா தளளுமாபோலே தான் போக்கு கையாலே அவை யிரண்டு மற்றிருக்கிறவிவர்க்கு ப்ரியபரனும் ஹிதபரனுமான ஈச்வரன் தான் ஜ்ஞாநபக்திகளை வளர்க்கையில் நினைவாலே *துளக்கற்றமுதமா யெங்கும் பக்கநோக்கறியான் என் பைந்தாமரைக்கண்ணன்* என்று விபூதி ரக்ஷணத்தைப்பற்ற வருமநயபரதை கலசாதபடி அததை ஒருங்கவிட்டுக்கொண்டு வந்து இனிப்போராதபடி என்னுள்ளே புகுந்து அத்தாலே விகஸிதஸஹஸ்ரஜ்ஞஸார்வஜ்ஞ யனுமாய, *விஜ்வர:* என்கிறபடியே உளநடுக்கமும் தீர்ந்து எனக்கு நிரதிசய போகயனுமாய நாயச்சிமாரையும் புரிந்து பாராமல் என்னையே பார்த்துக்கொண்டு, இதனாலே திருக்கண்களும் செவ்விபெற்று இப்படி என்னோடே கலந்திருந்தா னென்று இவர் அதிப்ரீதராமபடியாகவும், *தழைநல்லவின்பம் தலைப்பெய்தெங்கும் தழைக்க* என்று விச்லேஷவ்யஸனத்தாலே நானமுடியாகின்றேன்; இனி என் துஃக்கமகாணமையாலே லோகமெல்லாமவிஸ்தீர்ணமாய நன்றான ஸுகத்தைப் பெற்று ஸம்ருத்தமாக்கக்கடவதென்னுமபடி அதிமாத்ர துஃக்க நிமக்நராமபடியாகவும் நடத்திக்கொண்டு போருமென்றபடி. ... ... ... (117)

118. இப்படி ஈச்வரன் வளர்த்துக்கொண்டு போருகிற ஜ்ஞாநப்ரேமங்களை யுடையரான இவருடைய ஜ்ஞாநதசையிலும் ப்ரேமதசையிலுமுண்டான பேச்சுக் களிருக்கும்படி எங்ஙனே யென்னவருளிச்செய்கிறார்மேல (ஜ்ஞாநத்திலித்யாதி).

(மூ.) 118. ஜ்ஞாநத்தில் தம்பேச்சு, ப்ரேமத்தில் பெண்பேச்சு.

அதாவது—ஜ்ஞாநதசையில் தாமானதன்மையிலே நின்றுபேசுவர், ப்ரேம தசையில் அவஸ்தாந்தராபந்நராய்ப் பெண்பேச்சாகப் பேசுவரென்கை. ... (118)

119. இப்படி தெளிவும் கலக்கமுமான இத்தசைகளில், பேச்சில் பேத மொழிய ஸ்வரூபத்திலும் பேதமுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (தேறுமகலங்கி) என்று தொடங்கி.

(மூ) 119. தேறும் கலங்கியென்று தேறியும் தேருதும் ஸ்வரூபம் குலையாது.

அதாவது—*தேறுமகைகூப்பும்* *கலங்கிக்கைதொழும்* என்று தெளிந்த தசையிலும் கலங்கின தசையிலும் சேஷத்வப்ரகாசகமான அஞ்ஜலி மாறாமையாலே பிண்டத்வ கடத்வ கபாலத்வ சூர்ணத்வங்களாகிற அவஸ்தாந்தரங்களை பஜித்தாலும்

மருத்தானவாகாரத்துக்கு அழிவில்லாதாப்போலே *தேறியும் தேறாதும் மாயோன் திறத்தனளே இத்திருவே* என்கிறபடியே தெளிந்த தசையோடு கலங்கின தசையோடுவாசியற உபயாவஸ்தையிலும் சேஷத்வரூபமான ஸ்வரூபம் நிலைகுலையாதென்றபடி. .... .... ... .. .... (119)

120. ஆனால் இவர்க்கு அவஸ்தாந்தரமாவதேதென்னுமபேக்ஷையிலே அருளிச் செய்கிறார் (அடியோமித்யாதி).

(மூ.) 120. அடியோம் தொடர்ந்து குற்றேவல் அடிச்சியோ மடிக்கீழ் குற்றேவலாகை அவஸ்தாந்தரம்.

அதாவது—*அடியோமபோற்றியோவாதே* *தொடர்ந்து குற்றேவல் செய்து* என்று தாமான தன்மையில் சொல்லுமோபாதி *அடிச்சியோம் தலைமிசைநீயணியாய்* *திருவடிக்கீழ் குற்றேவலமுன்செய்ய* என்று சொல்லுகையாலே ஸ்வரூபத்திலும் ஸ்வரூபாநுரூபவ்ருத்தி ப்ரார்த்தனையிலும் பேதமில்லை பிராட்டியான பாவனையாலே தம்பேச்சானவிதுபோய் பெண்பேச்சாகை இவர்க்கு அவஸ்தாந்தரமாவதென்றபடி. 'அடியோம் தொடர்ந்து குற்றேவல்' என்று தம்பேச்சாலே சொல்லுகிறவிது— 'அடிச்சியோம் அடிக்கீழ்குற்றேவல்' என்று பெண்பேச்சாகை இவர்க்கு அவஸ்தாந்தரமாவதென்று வாக்யத்துக்குச் சொல்லப்படுத்தும் க்ரமம். (120)

121. ஆனால் இவர்க்குத் தம் பேச்சன்றோ ஸ்வாபாவிகம்; பிராட்டிமார் தசையை ப்ராபித்துப்பேசும் பெண்பேச்சு வந்தேறியன்றோ வென்ன; பகவதேக பரதந்த்ரமுமாய் பகவதேகபோகமுமாயிருக்கு மாத்மவஸ்துவுக்கு ஸ்த்ரீ ஸாதாம்யம் ஸ்வரூபாநுபந்தி யாகையாலே தத்ப்ரயுக்தமான பேச்சு இவர்க்கு வந்தேறியன்றென்னுமிடத்தை ரூபகத்வேந வருளிச்செய்கிறார் மேலொரு சூர்ணையாலே.

(மூ) 121. வித்யை தாயாகப் பெற்றுப் பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள்போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல் விச்வபதி லோகபர்த்தா வென்னும் மணவாளரை நாலிரண்டிழை கொண்டு முப்புரியான ப்ரஹ்ம ஸூத்ர பந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன் கைக் கொண்டபின் சதுர்த்தி யுள்புக்கு இடையீடு நடுக்கிடக்கும் நாள்கழித்து ஜந்மபூமியை விட்டகன்று சூழ்விசும்பிற்படியே உடன் சென்று குடைந்து நீராடி வியன் துழாய் அஞ்சனத்தின் நீறு நானப்பொடி பீதகவாடை பல் கலன்கொண்டு நோக்கியர் அலங்கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய நிறைகுடவிளக்கமேந்தி இளமங்கையர் எதிர்கொள்ள வைகுந்தம் புக்கிருந்து வாயமடுத்துப் பெருங்களிச்சியாக வானவர் போகமுண்டு கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மீதித்து ஆரோஹித்து பரதா கரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகு மார்பிலே குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று.

அதாவது—(வித்யை தாயாகப்பெற்று) *ஸஹி வித்யாதஸ் தம் ஜநயதி* என்கிறபடியே ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞாநத்தை யுண்டாக்கினபோது இவ்வாத்மஸத்பாவமாகையாலே, வித்யையை மாதாவாகக்கொண்டு இவ்வாத்ம வஸ்துவை ஜநிப்பித்து. (பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள் போல வளர்த்த) *தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமம்* என்கிற போக்யபதார்த்த

மான திருமந்த்ரததாலே *திருமகளபோலவளர்த்தேன* என்கிறபடியே அநந்யார்ஹ சேஷத்வாதிகளாலே லக்ஷ்மீஸதருசமாக வளர்த்துககொண்டுபோந்த.

(தஞ்சமாகியதந்தை) தேஹோத்பாதகனாய் *ஸ பித்ரா ச* இத்யாதிப்படியே ஆபத்தசைகளிலே கைவிடும பிதாவைப் போலனறிககே *பூதாநாம் யோவ்யயஃ பிதா* என்கிறபடியே ஸமபந்தம் கண்ணழிவற்றிருககை, *பவமோக்ஷணயோஸ் த்வயைவ ஜந்து: க்ரியதே* எனனுமபடி ஸமஸாரமோக்ஷங்களிரண்டுககும பொதுவாயிருக்கும் பிதாவைப்போலு மனறிககே; ஸவரூபோதபாதகனாய் ஒரு தசையிலும் கைவிடாதே ஹிதைஷியாய், உஜ்ஜீவனைகபரனாய்க் கொண்டு மோக்ஷகஹேதுவாயிருக்கையாலே ஆபத்ரக்ஷகனான ஆசார்யனாகிற பிதா. (மறறொருவர்ககுப் பேச்சுப்படாமல) *மற்றொருவர்கரு என்னைப் பேசலொட்டேன்* *மானிடவர்க்கென்று பேச்சுப்படில்* எனகிற அந்யசேஷத்வப்ரஸஙகம் வாராதபடி—(விச்வபதி லோகபர்ததாவெனனும் மணவாளரை) *பதிம் விச்வஸய* *கௌஸல்யா லோகபர்த்தாரம்* என்று பதிசப்தத்தாலும் பர்த்ருசப்தததாலும ஸர்வலோகநாயகராகச் சொலலப்படுகிற *பணவாளரவணைப் பற்பலகாலமும பள்ளிகொளளும மணவாளரை, (நாலிரண்டிழை கொண்டு முப்பிரியான ப்ரஹ்மஸூதர பந்தத்தோடே வரிப்பிக்க) *எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மஙகளஸூத்ரமபோலே, எட்டக்ஷரமாய் மூனறு பதமாய் ஈச்வர ஸம்பந்தப்ரகாசகமானதிருமந்தரமாகிற மங்கள ஸூதரபந்தத்தோடே *பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா* எனகிறபடியே வரிககுமபடிபண்ண, (பரமபுருடன்கைககொணடபின) *பரம புருடா நீ எனனைக கைககொண்டபின்* எனகிறபடியே பரம புருஷரான மணவாளர் பரிகரஹிததவனந்தரம, (சதுர்த்திபுள்புககு) விவாஹாநந்தரம சேஷஹோமபர்யந்தமான சதுர்திவஸத்திலும அகலுதலு மணுகுதலுமற்று, அநந்யார்ஹசேஷதவாநுகுணமான பரிமாறறத்துககு அர்ஹமென்னுமளவை ப்ரகாசிப்பித்துக கொண்டிருககுமோபாதி, ப்ரணவோகதமான அநந்யார்ஹசேஷத்வத்தில கண்ணழிவற அங்கீகரிககையாலும், ததநுகுணமாகக கிட்டிப் பரிமாறப் பெருமையாலும், அகலுதலுமணுகுதலுமற்று, கைஙகர்யப்ரார்த்தனையோடே செலலும சரமசதுர்ததியிலே உளபுககு. (இடையீடு நடுககிடககும நாள் கழித்து) தமபதிகளிருவரும் ஏகசயயையிலே வர்ததிககச செய்தே அந்யோந்ய ஸ்பர்சயோக்யதை யிலலாதபடி இடையீடான ஸோமாதிகள நடுவே கிடககும நாளபோலே, சேஷத்வஜ்ஞாநமும சேஷவருததி ப்ரார்ததனையுமுண்டாகையாலே இரண்டு தலைககும் அண்ணிமை யுண்டாயிருககவும சேர்நது பரிமாற வொண்ணாதபடி *நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடமபிலிட்டு* என்கிறபடியே அநுபவவிரோதியாய் இடையீடான சரீரம நடுவேகிடககிற நாலுநாளையும *நாள கடலைக கழிமின்* எனகிறபடியே கழிதது. (ஜநமபூமியை விடடகனறு) *முற்றிலும் பைஙகிளியும பந்துமூசலும பேசுகின்ற சிறறில மெனபூவையும விடடகன்ற செழுங்கோதை* என்கிறபடியே ஒருவராலும விடவரிதான ஜநமபூமியான ஸம்ஸார விபூதியை முன்பு ஆதரணீயமாய்ப்போந்த வஸதுககளோடே கூட புரிந்துபாராமல விடடுநீங்கி. அனறிககே *அன்றுநான பிறநதிலேன்* என்னும்படி கிடந்த தனககு, ஆசார்யன் திருமந்த்ரத்தினாலுண்டாக்கின ஜந்மமபெற்றது இஙகேயாகையாலே ஜந்மபூமியான இவ்விபூதியை, பகவதநுபவ ப்ராவண்யத்தாலே *முற்றிலும் பைங்கிளியும* இத்யாதிப்படியே முனபு ஆதரணீயமாய்ப்போநத வஸ்துககளோடே கூட விட்டகன்றென்னவுமாம்; பிறந்தகத்தைவிட்டுப் புககககததுக்குப் போகிறதாகச் சொல்லுகிற இந்த ரூபகத்துககு இது மிகவும் சேருமிறே.

(சூழ்விசும்பிற்படியே உடன்சென்று) *சூழ்விசும்பு* என்கிற திருவாய்மொழியில் சொலலுகிறபடியே அர்ச்சிராதி மார்ககத்தாலே வழியிலுள்ளாரடைய ஸத்கரிக்க, *அங்கவனொடு முடன்சென்று* என்கிறபடியே *சுபாமி* என்கிற நாயகன் முன்னே போக, பின்னேபோய். (குடைந்துநீராடி) *குள்ளக்குளிரக்குடைந்து நீராடி* என்கிற

படியே பர்த்ருக்ருஹத்துக்குப் போகிற பெண் அவ்வூரெல்லையிலே சென்றவாறே அவர்கள் குளிப்பாட்டக் குளிக்குமாபோலே அம்ருதவாஹிநியான விரஜையிலே இப்பாலுள்ள அழுக்கறும்படி நீராடி.

(வியன்துழாயஞ்சனத்தின்நீறு நானப்பொடி பீதகவாடை பல்கலன் கொண்டு நோக்கியலங்கரித்து) குளித்தேறின பெண்ணை பர்த்ரு பந்துக்களான ஸ்த்ரீகள் வந்து அலங்கரிக்குமாபோலே *வியன்துழாய் கற்பென்று சூடும்* *ஆராயிர்வேற் கணஞ்சனத்தின் நீறணிந்து* *மெய்திமிருநானப்பொடி* *உடுத்துக்களைந்தநின்பீதக வாடை* *பல்கலனும்யாமணிவோம்* என்கிறபடியே அலங்காரோபகரணங்களான திவ்யமால்ய திவ்யாஞ்ஜந திவ்யசூர்ண திவ்யவஸ்த்ர திவ்யாபரணங்களை *தம் பஞ்ச ஶதாந்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி ஶதம் மாலாஹஸ்தா:, ஶதமஞ்ஜநஹஸ்தா:, ஶதம் சூர்ண ஹஸ்தா:, ஶதம் வாஸோஹஸ்தா:, ஶதம் பூஷணஹஸ்தா:* என்கிறபடியே ஏந்திக்கொண்டு, *மானேய நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரேவந்து *தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி* என்கிறபடியே போகத்ருபூதராசவர போக்யமாம்படி அலங்கரித்து.

(பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய) *தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வரேழையரே* என்கிறபடியே இவ்விஷயத்தில் கிஞ்சித்கரிக்கையிலுண்டான சாபலம் தோற்றத் திரள்நின்று மங்களாசாஸநம் பண்ணி சாமரம் பணிமாற. (நிறைகுடம் விளக்கமேந்தி இளமங்கையரெதிர் கொள்ள) அலங்க்ருதையாய் உபலாலநத்தோடே செல்லுகிற பெண் பர்த்ருக்ருஹத்தை அணுகச் சென்றவாறே அங்குள்ள ஸ்த்ரீகள் மங்கள தீபாதிகளை யேந்திக்கொண்டு எதிரே வந்து ஸத்கரிக்குமாபோலே *நிதியும் நற் சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் மதிமுகமடந்தையரேந்தினர்* என்கிறபடியே மங்களாவஹமான பூர்ணகும்பதீபாதிகளை தரித்துக்கொண்டு, *கதிரிளமங்கையர் தாம் வந்தெதிர்கொள்ள* என்கிறபடியே நித்யயௌவந ஸ்வபாவைகளான வேறு சில திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிர்கொள்ள.

(வைகுந்தம் புகக்கிருந்து) உபலாலநத்தோடே சென்ற பெண் பர்த்ருக்ருஹத்திலே புகுருமாபோலே *மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பார்* என்கிற படியே ஶ்ரிய:பதியானவனுக்கு போகஸ்தாநமான ஸ்ரீவைகுண்டத்தை ப்ராபித்து அவனோடே கூடியிருந்து (வாயமடுத்துப் பெருங்களிச்சியாக வானவர்போகமுண்டு) பர்த்ருக்ருஹத்திலே பெண்வந்தபின்பு தம்பதிகளும் மற்றுமுள்ள பந்துக்களும் கூடியிருந்து பெருங்களிச்சியுண்ணுமாபோலே *அடியார்கள் குழாங்களும் அவனுமாக விருக்கிற சேர்த்தியிலே *அடியேன் வாயமடுத்துப் பருகிக்களித்தேனே* என்று பெருங்களிச்சியாக முழுமிடறுசெய்து, *கடலெழில் வானவர்போக முண்பாரே* என்கிறபடியே நித்யஸூரிகள் புஜிக்கிற போகத்தை *ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா* என்கிறபடியே புஜித்து (கோப்புடைய கோட்டுக்காற் கட்டில் மிதித்தாரோஹித்து) பர்த்ருஸம்ஶ்லேஷத்துக்குப் படுக்கையிலே யேறுமா போலே *கோப்புடைய சீரியசிங்காசனம்* என்றும், *கோட்டுக்காற்கட்டில்* என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதியும் தொழிலாக வகுப்புண்டு ஸர்வாஶ்சர்ய மயமான திவ்யபர்யங்கத்திலே *தமேவம்வித் பாதேநாத்யாரோஹதி* என்கிறபடியே பாதபீடத்திலே அடியிட்டேறி (ப்ரதாக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகு மார்விலே) *தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்தஶ்சிரஸ்யாக்ஷி பதம் கதம், அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே* என்றும், *ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே* என்றும், *ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந:* என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீ பரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்தணைத்துக்கொண்ட *மணிமிகுமார்பு* என்று ஸ்ரீ கௌஸ்துபம் நிறம்பெறும்படி அழகிய திருமார்பிலே; (குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு) *குருமாமணிப்பூண்*

என்று ச்லாக்யமாய் ஈச்வரத்வசிஹ்நமான ஸ்ரீ கௌஸ்துபத்தோபாதி போக்யமாய் தேஜஸ்கரமாய்க் கொண்டு அணைகிற ஆத்மவஸ்துவுக்கு.

(மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று) *வண்பூமணிவல்லி* என்று உதாரமாய் போக்யமாய்த் தனக்குத்தானே ஆபரணமாம்படி அழகியதாய், கொள்கொம்பு பெறுவிடில் தலையெடுக்கமாட்டாமை தரைப்பட்டுக் கிடக்கும் கொடிபோன்றவளென் கிற ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமாய வருமபேச்சு வந்தேறியன்று; ஸ்வாபாவிகமென்றபடி. பெண்பேச்சென்ன வமைந்திருக்க மணிவல்லிப்பேச் சென்றது—*மணிமிகுமார்பிலே மணியாயணையும* என்றத்தோடொக்க 'மணிவல்லி' என்றால சொற்கட்டளையால வரும் ரஸமுண்டாகையாலே. இத்தால ஸ்த்ரீத்வம ஆத்மவஸ்துவுக்கு ஸ்வாபாவிக மாகையாலே அத்தை உள்ளபடி தர்சித்தவிவர்க்கு தத்ப்ரயுக்தமான பேச்சு ஸ்வ ாபாவிகமென்று சொல்லிற்றாயத்து. .... .... ... .... (121)

122. இப்படி கேவலம ஸ்த்ரீஸாமயமே யன்றிக்கே *நாரீணாமுத்தமையான பிராட்டியோடே ஸாமயமும பரிசுத்தாத்மஸ்வரூபத்துக்கு உண்டென்னுமத்தை ஸ்பஷ்டமாக வருளிச்செய்கிறார்மேல் (இன்புமன்புமென்று தொடங்கி).

(மூ.) 122. இன்புமன்பும முற்படுவது கொழுநது விடுவதாகிறது கடிமாமலர்ப் பாவையோடுளள ஸாம்ய ஷட்கத்தாலே.

அதாவது—*நமக்கும பூவின்மிசைநங்கைக்கு மின்பனே* என்று இன்றாச்ர யித்த நமக்கும நித்யஸூரிகளுக்கு மவ்வருகாய் ரூபகுணத்தாலும ஆத்மகுணத் தாலும் பூர்ணையாயிருக்கிற பிராட்டிக்கும இன்பனுமிடத்தில, முற்பட இங்கே இன் பனாய், பின்பாயிற்று அவளுக்கு ஸ்நேஹிப்பதென்னுமபடி, பிராட்டிக்குமுன்னே இவர்பக்கல இன்பனாவது, *கோலமலர்ப்பாவைக் கன்பாகிய வென்னன்பே* என்று நிரதிசய போக்யையான பிராட்டிக்கு அன்பனாகையாலே அவள் பரிகரஹ மான என்பக்கலிலும அன்பனானவனேயென்னும்படி அவள்பக்கல் பண்ணின ஸ்நேஹம் இவ்வளவும வளரவருவதாய், இப்படி இன்புமுற்படுவது அன்புகொழுந்து விடுவதாகிறது, *கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்று பரிமளப்ரசுரமானபூவில பிறப்பாலும நிருபாதிகஸ்த்ரீத்வத்தாலும நிரதிசயபோக்ய பூதையான பிராட்டி யோடொக்கச் சொல்லலாமவளென்னுமபடி, பிராட்டியோடு இத்தலைக்குள்ள ஸாம யத்துக்கூடலான அநந்யார்ஹசேஷத்வம், அநந்யசரணத்வம, அநந்யபோக்யத்வம, ஸம்ச்லேஷத்தில்தரிக்கை, விச்லேஷத்தில தரியாமை, தததேகநிர்வாஹ்யத்வமாகிற ஆறுப்ரகாரத்தாலேயென்கை.

'இன்பன்' என்றது—ஸநிகதனென்றபடி, ஆகையால அன்போபாதி இன்பும ஸ்நேஹவாசியாகையாலே, ஸநேஹம முற்படுவது கொழுநதுவிடுவதாகிறதென்றபடி. *இன்பும, அன்பும* என்று இரண்டுபோலச் சொல்லிற்று—முற்படுதலும கொழுநது விடுதலும சொல்லுகிற ஸ்தலங்களில ஸ்நேஹவாசகதயா ப்ரயுக்தசப்தங்கள இவை யாகையாலே இரண்டுசந்தையும தோற்றுகைக்காக. "பிராட்டியோடுள்ள" என்ன வமைந்திருக்க. "கடிமாமலர்ப்பாவையோடுள்ள" என்றது—அந்த சந்தையிலே பிராட்டிஸாமயம முகதகண்டமாகச் சொல்லியிருக்கையாலும, கந்தல் கழிந்த ஸ்வ ரூபத்தையுடையவர்களெல்லாரையும இப்படிச் சொல்லுகிறது—ஸ்வரூபாநுபந்தி யான இஸ்ஸாமய ஷட்கத்தாலே யென்றறிவிக்கைக்காகவும், ஸாமயத்தாலே யென்னாமல், ஸாமயஷட்கத்தாலே யென்றது—நிரூபகத்வம, அநுரூபத்வம, அபி மதத்வம், சேஷத்வஸம்பந்தத்வாரபாவம, புருஷகாரத்வம, ப்ராப்யபூரகத்வம முதலான ஸ்வபாவ விசேஷங்கள தத்ஸாதாரணங்களாகையாலே. .... (122)

123. இப்படி ஆறுப்ரகாரத்தாலே பரிசுத்தாத்ம ஸ்வரூபத்துக்கு தத்ஸாமய முண்டாகையாலே பிராட்டிதசை இவர்க்கு வந்தேறியல்லாமையை ப்ரகாசிப்பித் தாராய் நின்றார்கீழ. ஏவம்பூதாகாரத்தாலே பெரியபிராட்டியாரோடுள்ள ஸாம்யமே

யனறிககே தம்முடைய பாவவிசேஷங்களாலே பகவதபிமத திவ்யமஹிஷிகளான பிராட்டிமார் மூவரோடும இவர்ககுணடான ஸாமயம் இவர்பாசுரஙகளிலே ப்ரகாசிககு மென்கிறார்மேல் (உண்ணுதென்று தொடஙகி).

(மூ.) 123. உண்ணுது கிடந்தோர் மாயையிலு லென்னும் வீறுடைய முடிக்குரியா ரோடு இததிரு மண்ணோரன்ன வொணுனுதல பினனைகொல் என்கிற ஒபபு, தென்பால் நெடுமாடம் கடுஞ்சிலை அம்பெரியூட்டி நீரேழு வெரித்த பெருநதோற்றததாருயிர் காகுததன் ஆதியங் காலம் மண புரை பொன்மாதின் துகளாடி எருதேழுதழீஇச சறையினுரென்னு மவற்றிலே தோன்றும்.

அதாவது—*உண்ணுது றங்காது ஒலிகடலை யூடறுத்துப் பெண்ணுககையாப் புண்டு தாமுற்றபேதெலலாம* எனகிறபடியே ஜநககுலஸுந்தரியான தன்னைப் பிரிநதபோது தீரோதாத்தநாயகனுகையாலே விகாரஹேதுக்களுண்டானுலும் தைர்யத்தாலே புறமதோற்றுமலிருககும் சகரவர்த்திதிருமகனை *நமாம்ஸம ராகவோ புங்க்தே* *அநிதரஸ ஸததம் ராமః* *நைவ தமசாந ந மசகாந்* இத்யாதிப்படியே ஊணுமுறககமு மறறு, கடிததது மூர்ந்தது மறியாதபடி *பண்ணவல்ல வைலக்ஷண்யத்தால் வந்த வீறுடையளாய், ஸர்வேசவர ஸாமராஜயத்தில் அவனேடொகக முடிசூடுகையாலே முடிககுரியளான பெரிய பிராட்டியாரோடும, *கிடந்திருநது நினறளந்து* என்கிற பாட்டினபடியே ஸர்வஜ்ஞனுய அவாப்தஸமஸ்தகாமனுன ஸர்வேசவரனை, பஹுப்ரகாரமாகத் தன்னை அனுபவிததாலும பர்யாப்தனுகாதபடி பிசசேற்றவல்ல வைலக்ஷண்ய ப்ரயுக்தமான வீறுடையளாய் பெரியபிராட்டியா ரோபாதி முடிககுரியளான ஸ்ரீபூமிப்பிராட்டியாரோடும, *ஓர் மாயையினுல* இத்யாதிப்படியே நித்ய ஸூரிகள் ஸமாராதந பரராய் நிற்க அவர்களறியாதபடி அத்தை உபேக்ஷித்து தாழவுக்கெல்லையான இடைககுலத்திலே கருஷ்ணனுய் வந்து பிறந்து தனனைப் பெறுகைக்கு சுலகமாகவிட்ட ம்ருத்யுஸமங்களான ருஷபங்களின கொமபினிடையிலே கருமாறி பாய்ந்தாற்போலே தன்னைப் பேணுமல் சென்று விழுமபடி பண்ணவல்ல வைலக்ஷண்ய வீறுடையளாய், முற்பட்ட மஹிஷிகளோபாதி முடிககுரியளான நப்பின்னைப் பிராட்டியாரோடும்; *மாயோன திறத்தனளே இத்திரு* என்று *அநந்யா ராகவேணுஹம* என்கிறபடியே ஸர்வதசையிலும அவன திறமலலதறியாளா(ன)ய ஸாக்ஷால்லக்ஷ்மியோடு விகல்பிக்கலாம் ஸ்வபாவையானவிவளென்றும், *மண்ணோரன்னவொண்ணுதல்* என்று ஸ்ரீபூமிப்பிராட்டியோடொத்த வைலக்ஷண்யத்தையுடையவளென்றும, *பினனைகொல நிலமாமகளகொல் திருமகளகொல்* என்று *நப்பின்னைப்பிராட்டியோ? ஸ்ரீபூமிப்பிராட்டியோ? பெரியபிராட்டியாரோ? என்றும் சொல்லுமபடி இவர்ககுண்டானஸாம்யம், *தென்பாலிலங்கை வெங்களம் செய்த நம விண்ணோர்பிரானுர்துழாய் துணையாஙகளை மாமைகொளவான் வந்து தோன்றிநலிகின்றதே* என்று சக்ரவர்த்திதிருமகனைப் பிரிந்து பாதகபதார்த்தங்களாலே நோவுபடுவது. *வழாநெடும் துன்பத்தளென்றிரங்காரமமனே இலங்கைக குழாநெடுமாட மிடித்தபிரானுர் கொடுமைகளே* என்று 'ப்ரணயித்வமில்லையானுல் ஸாமாந்யகருபையுமிலலையோ?' என்று கொடுமை சொல்லுவது. *காயும கடுஞ்சிலை யென்காகுத்தனவாராளுல்* என்று எதிரிகளபக்கல் தான் கண்பார்ககிலும் கண் பாராத விலலையுடையகாகுத்தன், இத்தசையில வருகிறிலனென்று வெறுப்பது, *இலஙகைநகர் அமபெரியுய்த்தவர்தாளிணை மேலணி வமபவிழ தண்ணந்துழாய் மலர்ககே இவள நமபும* என்று—இலங்கையை சராககியாலே தக்தமாககினவர் திருவடிகளில திருத்துழாயை ஆசைப்படுவது, *தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினுன் தாளநயந்த யாமுற்ற துறறுயோ* என்று லஙகையையெல்லாம அகநிககு விருந்திட்டவன் திருவடிகளை யாசைப்பட்ட நான் பட்டது பட்டாயோவென்று ஸமதுஃககினைக்

கட்டிக்கொண்டழுவது, *மாறில்போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறுசேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே* என்று எதிரில்லாத போரையுடைய ராவணன் தனக்கு அரணாகவிட்ட மதிளைத் தூளாக்கிப் போகட்ட ப்ரஸித்தமான சேவகத்தையுடையவர்க்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்று சொல்லுங்கோளென்று தூதுவிடுவது. *கிளரரக்கன் நகரெரித்த களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன் கவராத வறிவினால்குறைவிலம்* என்று ஐச்வர்யோத்தனான ராவணனுடைய நகரத்தைத் தக்தமாக்கி முடிசூடி விளையம வைத்திருக்கிறவன் விரும்பாத அறிவினால் என்ன கார்யமுண்டென்று அவனுக்கு உறுப்பல்லாததை உபேக்ஷிப்பது. *காண்பெருந்தோற்றத் தெங்காகுத்த நம்பிக்கு என்பூண்புனைமென்முலை தோற்றது பொற்பே* என்று கண்ணுக்கினிதாய் அபரிச்சேத்ய போக்யமான ஸந்நிவேசத்தையும் குணபூர்த்தியையுமுடைய சக்ரவர்த்தி திருமகனுக்கு இவள் தன்னழகை யிழந்தாளென்னும்படி அவனை ஆசைப்பட்டு அழகழிவது. *என்னாருயிர் காகுத்தன் நின்செய்யவாயொக்கும் வாயன் கண்ணன் கைகாலினன் நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டு நீங்கினான்—சிறு கிளிப்பைதலே இன்குரல் நீ மிழற்றேல்* என்று விச்லேஷத்தில் தரிக்கவொண்ணாதபடி எனக்கு ப்ராணபூதனான சக்ரவர்த்திதிருமகன் என்னோடே கலந்துவைத்துப் பிரிந்தான்; இத்தசையிலே அவனுக்குப் போலியான உன்வடிவாலே நலிகிறதுக்குமேலே பேச்சாலும் நலியாதேகொள் என்றுகிளியைப் பார்த்து நிஷேதிப்பதாகக்கொண்டு பேசினபாசுரங்களிலும், *ஆழியங்காலத்தகலிடம் கீண்டவர் பாதங்களமேலணி பைம்பொற்றுழாயென்றே யோதுமாலெய்தினள்* என்னும்படி வராஹகல்பாதியிலே மஹாப்ருதிவியை அண்டபித்தியிலநின்று ஒட்டுவிடுவித்து எடுத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாயென்றே பலகாலும் சொல்லும்படி பிச்சேறுவது, *மண்புரைவையமிடந்தவராகற்கு—என் கண்புனைகோதை இழந்தது கற்பே* என்னும்படி அவனை ஆசைப்பட்டு அறிவிழப்பது. *ஞாலப் பொன்மாதினமணாளன் துழாய்நங்கள் சூழ்குழற்கே ஏலப்புனைந்தென்னைமார்எம்மை நோக்குவதென்றுகொல்* என்று ஸ்ரீபூமிப்பிராட்டி செவ்விகொள்ள இட்டுப் பிறந்தவன் சூடின திருத்துழாயை பந்துக்களானவர்கள் ஏற்கவே கொண்டுவந்து நம் குழலிலே சூட்டி நம்மை ரக்ஷிப்பதென்றோவென்பது. *ஏனமொன்றாய் மண்துகளாடி வைகுந்தமன்னான குழல்வாய் விரைபோல விண்டுகள்வாரும் மலருளவோ நும் வியலிடத்தே* என்று அத்விதீயவராஹமாய் ப்ரளயங்கதையான பூமியையெடுத்தபோது வடிவில் பெருமையாலே திருவயிற்றில் கிடக்கிற பூமி ஒருதுகள் மாத்ரமென்னும்படிநின்றவனுடைய அபதாநத்தை அநுபவித்திருக்கிறவிவள் போக்யதை உபயவிபூதியிலுமுண்டோவென்று விசேஷஜ்ஞர் சலாகிக்கும்படியை ப்ரகாசிப்பிப்பதாகக்கொண்டு பேசினபாசுரங்களிலும், *ஏருதேழுதழீஇக்கோளியார் கோவலனார் குடக்கூத்தனார் தாளிணைமேலணிதண்ணந்துழாயென்றே நாளுநாள் நைகின்றது* என்னும்படி ஏறுதழுவுகை முதலான அபதாநங்களையுடைய க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டு நாள்தோறும் சைதில்யத்தையடைவது; *கறையினார் துவருடுக்கை கடையாவின் கழிகோற்கைச்சறையினார் கவராத தளிர்நிறத்தால் குறைவிலம்* என்று கோபவேஷதரனாய் ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்காகத் தன்னுடம்புபேணாமல் திரியும் க்ருஷ்ணன் விரும்பாத ஸ்நிக்தமான நிறம் எனக்கு வேண்டாவென்பதாய்ப் பேசின பாசுரங்களிலும் தோன்றுமென்றபடி.

இத்தால் திவ்யமஹிஷிகள் மூவரோடும் இவர்க்குண்டான ஸாம்யம் ஜநககுல ஸுந்தரியான பிராட்டிக்கு அஸாதாரணமான ராமாவதார தத்பதாநங்களிலும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு அஸாதாரணமான வராஹாவதார தத்பதாநங்களிலும், நப்பின்னைப்பிராட்டிக்கு அஸாதாரணமான க்ருஷ்ணாவதார தத்பதாநங்களிலும் அந்தப் பிராட்டிமார் தங்களைப்போலே அதிமாத்ரப்ரவணராயருளிச்செய்த அவ்வவ திவ்யஸூக்திகளிலே அபிவ்யக்தமென்றதாயிற்று. .... .... (123)

124. இப்படி ப்ரதாநமஹிஷிகளான இவர்களோடுள்ள ஸாம்யமேயன்றிக்கே இவர்களை உபேக்ஷித்தும் தங்களையுகக்கும்படி அவனுக்கு அபிமதைகளான திருவாய்ப்பாடியில் பெண்களுடையவும் அவர்களையும் தங்கள் பேச்சழகாலே அவன் மறக்கும்படி பண்ணும் ஸ்ரீ மதுரையில் பெண்களுடையவும், நரகவதாநந்தரம் பரிக்ரஹித்த ஸ்ரீமத் த்வாரகையில் பதினாறாயிரம் தேவிமாருடையவும் பாவங்கள் இவர்க்குண்டென்னுமிடம் இவர்தம் பேச்சிலே தோன்றுமென்கிறார் (இவர்கள் தேடிநிற்க வென்று தொடங்கி).

(மூ) 124 இவர்கள் தேடிநிற்கப் பொய்கை முதுமணல் முல்லைப் பந்தல் முற்றம் மசசொடு மாளிகை அவ்வவ்விடம் புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக் கோயினமை குறும்பு செய்து அல்லல் விளைத்துக் கவரு முகக்கு நல்லவர் மூழுசி ஆவரென்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும் நகரஸ்த்ரீகள், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிர மெண்ணிறந்தார் பாவம்—கடல் ஞாலம் மின்னிடை மல்லிகை வேயமரு பேய்முலை முனிந்து மற்பொரு விறல் கஞ்சனை மங்கநூற்ற வாயும தீர்ப்பாரென்னுமவற்றிலே தோனறும்.

அதாவது—*தேடித்திருமாமகள் மணமகள் நிறக* என்கிறபடியே ப்ரதாந மஹிஷிகளான இவர்கள் தன்னைத்தேடி நிற்கும்படி இவர்களை உபேக்ஷித்து *இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்* *முதுமணல்குன்றேறி* *முல்லையின் பந்தர்நீழல் மன்னியவளைப் புணரப்புக்கு* *முற்றத்தூடு புகுந்து* *மசசொடுமாளிகையேறி* *அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கணுக்கனாய்* என்கிறபடியே இவர்கள் ஜலக்ரீடை பண்ணுமிடம், விளையாடுமிடம், மற்றும் அவர்களிச்சாநுகுணமாகத் திரளவும் தனியவுமிருக்குமிடங்களான பொய்கை, மணற்குன்று, முல்லைப்பந்தல், முற்றம், மசசொடு மாளிகை அவ்வவ ஸ்தலங்களிலே சென்று புக்கு, *துகிலவாரியும் சிற்றில சிதைத்தும்* *பந்துபறித்துத் துகிலபறி* *கசசொடு படைக்கிழித்து* என்கிறபடியே குடைந்துநீராடுகிறவர்கள் கூறைகளை வாரிக்கொள்வது, *இட்டமா விளையாடுகிறவர்களிழைத்த சிற்றிலைச் சிதைப்பது, பந்து கழல முதலான லீலோபகரணங்களைப் பறிப்பது. அவர்களோடே இட்டுக்கொண்டு பட்டுக்கள் கச்சுக்கள் கட்டினவற்றைப்பற்றி வலிந்து கிழிப்பதாய், *கோயினமைசெய்து கன்மமொன்றில்லை* *குறும்புசெய்வானோர் மகனைப் பெற்ற* என்னும்படி நியாமகரற்ற ஸ்வதந்த்ரர் செய்யுமத்தையும், நியாமகர் கீழடங்காமல மூலையடியே நடத்துவார் செய்யுமத்தையும் செய்து, *அல்லலவிளைத்த பெருமான்* என்கிறபடியே பாராவாரம் விளைத்து, *ஆயபாடிகவர்ந்துண்ணும்* என்று திருவாய்ப்பாடியில் பெண்களை யடைய முற்றூட்டாக விரும்பி புஜிக்குமென்கிறபடியே அவன் விரும்பப்படுமவர்களாய், அத்தாலே *நீயுகக்கு நல்லவர்* என்னும்படி அவனுகப்புக்கு விஷயமான வைலக்ஷண்யத்தை யுடையவர்களென்று நிரூபகமாயிருக்கிற திருவாய்ப்பாடியில் பெண்களுடைய பாவம் இவர்க்குண்டென்னுமிடம்—க்ருஷ்ணவிரஹம் மாற்றமாட்டாமல் *துஷ்டகாளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா* *க்ருஷ்ணோஹ மேஷ லலிதம் வ்ரஜாம்யாலோக்யதாம் கதி:* இத்யாதிப்படியே அவர்கள் அநுகரித்தாப்போலே இவர் அவனைப் பிரிந்தாற்றாமையாலே அநுகரித்த *கடல்ஞாலத்திலும், அந்யவிஷயங்களிலே பரப்பறைகையாலே அபேக்ஷித ஸமயத்தில் வாராமல அவன் விளம்பித்து வந்தால் அவர்கள் ஊடுமாபோலே இவர் அவனோடூடின *மின்னிடைமடவாரிலும், பகலெல்லாம் பசு மேய்க்கப்போய் அவற்றுடனே வரும க்ருஷ்ணனை பசுக்களின் முற்கொழுந்தில் காணாதே பிற்கொழுந்திலே வருகிறவன் வரப்பற்றாமல் ஒரு ஸத்தையிலே பஞ்சலக்ஷம் குடியில பெண்களும பாதகபதார்த்தங்களுக்கு இடைந்து கூப்பிட்டாப்போலே இவர் கூப்பிட்ட மாலைப்பூசலான *மல்லிகை கமழ்தென்றலிலும், இரவெல்

லாம் க்ருஷ்ணஸம்ச்லேஷம் பண்ணியிருந்து போதுவிடிந்தவாறே அவன் பசுமேய்க்கப்போகுங்காலமென்னும் நினைவாலே அவனை யணைத்துக்கொண்டிருக்கச் செய்தே போனானாகவே கருதி பாதகபதார்த்தங்களும் ஸம்ச்லேஷதசையில் அவன் பரிமாற்றங்களும் புறம்புமுள்ளனும் நின்று நலிகிறனவிவை அவர்கள் அவனறனக்குச் சொல்லிக் கூப்பிட்டாப்போலே இவர் கூப்பிட்ட காலைப்பூசலான *வேய்மருதோளிணையிலும், தனக்கு பாதகங்களாய் வந்து கிட்டின பூதநா சகட யமளார்ஜுநாதிகள் நினைவை அவைதன்னோடே போக்கித் தன்னை நமக்காக நோக்கித்தந்த வுபகாரகனை நான் கிட்டுவதென்னோ வென்றும், அப்படி செய்த க்ருஷ்ணனாகிற வுபகாரகனுக்கு என் ஸ்த்ரீத்வத்தை யிழந்தேனென்றும் சொன்ன *பேயமுலையுண்டு* *முனிந்துசகடமுதைத்து* என்கிற பாட்டுக்களிலும் தோன்றும்.

ஸ்ரீ மாலாகாரரும் கூனியும் கொடுத்த திருமாலையையும் சாந்தையும் சாத்திக்கொண்டு ராஜமார்க்கத்தாலே யெழுந்தருளி, குவலயாபீடநிரஸநம்பண்ணி நிற்கிறபோது *முழுசிவண்டாடிய* *ஆவரிவைசெய்தறிவார்* என்கிற பாட்டுக்களிற் சொல்லுகிறபடியே ஒப்பனையழகிலும் வடிவழகிலும் குவலயாபீட நிரஸநமாகிற சேஷ்டிதத்திலும் தோற்று *ஸக்ய: பச்யத க்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம், கஜயுத்தக்ருதாயாஸ ஸ்வேதாம்புகணிகாசிதம்* இத்யாதிப்படியே அந்யோந்யம் தங்களிலே பேசுகிற மழறு தேன்மொழி* என்கிறபடியே மழலைத்தேன்போலே இனிதான பேச்சுக்களாலே *மதுராம் ப்ராப்ய கோவிந்த: கதம் கோகுலமேஷ்யதி, நகரஸ்த்ரீகலாலாபமது ச்ரோத்ரேண பாஸ்யதி* என்று சொல்லுகிற பெண்கள் பேசும்படி அவன் கோகுலத்தை மறக்கப்பண்ணும் ஸ்ரீமதுரையில் பெண்களுடைய பாவம் இவர்க்குண்டென்னுமிடம், *மற்பொரு தோளுடை மாயப்பிரானுக்கு என் கற்புடையாட்டி யிழந்தது கட்டே* என்று ப்ரபலரான மல்லரோடே தோளில் சாந்தழியாதபடி மல்லைப்பொருத ஆச்சர்யபூதனான உபகாரகனுக்கு அறிவுடையளா யிருக்கிறவென் பெண் தனக்குள்ள தடங்கலும் இழந்தாளென்றும், *விறல்கஞ்சனை வஞ்சனை செய்தீர் உம்மைத் தஞ்சமென்றிவள் பட்டனவே* என்று பெருமிடுக்கனான கம்ஸனை அவன் வஞ்சனை அவனோடே போம்படி பண்ணினவரே! உம்மையே தனக்குத் தஞ்சமென்றிவள்பட்ட வெள்ளமென்தானென்று தமக்குப் பரிவரானவர்கள் சொன்ன பாசுரத்தாலே மல்லரையும் கம்ஸனையும் நிரஸித்த க்ருஷ்ணனை அச்சுவடோடே அநுபவிக்க ஆசைப்பட்டமையைப் பேசின பாசுரத்திலே தோன்றும்.

*நரகனைத்தொலைத்த கரதலத்த* என்றும் *நரகன்றன்னைச் சூழ்போகிவளைத் தெறிந்து கன்னிமகளிர் தம்மைக்கவர்ந்த* என்றும் சொல்லுகிறபடியே நரகாஸுரன் கந்யகைகளாகக் கொண்டுவந்து திரட்டிவைக்க, அவனை நிரஸித்துப் போகட்டுப் பரிக்ரஹித்தவர்களாய், *பதினாறாமாயிரவர் தேவிமார்* *பல்லாயிரம் பெருந்தேவிமார்* *எண்ணிறந்த பெருந்தேவிமார்* என்கிறபடியே ஆயிரமிரண்டாயிர மல்லாமையாலே பல்லாயிரமென்றும் எண்ணிறந்தவென்றும் சொல்லப்படுவாராய், *ஷோடசஸ்த்ரீஸஹஸ்ராணி* என்று புராணஸித்தரான பதினாறாயிரம் தேவிமார்பாவம் இவர்க்குண்டென்னுமிடம், *நூற்றுவரையன்று மங்க நூற்ற நிகரில் முகில் வண்ணன் நேமியான் என்னெஞ்சம் கவர்ந்தெனை யூழியானே* என்று துர்யோதநாதிகள் மண்ணுண்ணும்படி மந்த்ரித்த க்ருஷ்ணனுக்கு நெஞ்சுபறிகொடுத்தமை சொன்னதிலும், துர்யோதநாதிகளை நிரஸிக்கைக்காக அவனெழுந்தருளினபோது அவர்கள் பிரிவாற்றாமையாலே கண்ணுஞ்சுழலை யிட்டு, *குரரி! விலபஸி த்வம் வீதநித்ரா நசேஷே ஸ்வபிதி ஜகதி ராத்ர்யாமீச்வரக்ரஸ்தபோதே, வயமிவ ஸகி! கச்சித் காடநிர்விண்ணசேதா நளிநநயநஹாஸோதார லீலேக்ஷணேந* இத்யாதிகளாலே ப்ரலாபித்தாப்போலே, நாரை அன்றில் தொடக்கமானவற்றுக்கு வெளுப்பு விரஹக்கூப்பீடு முதலானவை நியதஸ்வபாவமென்றறியாதே தமக்குப்போலே பகவத் விரஹஜமான வைவர்ண்யாதிகளாகக் கருதி, அவற்றுக்குமாகத் தாம் நோவுபட்டு ப்ரலாபித்த *வாயுந்திரையுகளிலும், *தேர்ப்பாகனார்க்கு

இவள் சிந்தைதுழாய திசைக்கின்றதே* என்று ஆசரிதர்க்காக ஸாரத்த்யம்பண்ணின வனை அநுபவிக்கைக்காக இவளந்த:கரணம் கலங்கி அறிவு கெடுகிறதென்று தொடங்கி, *வண்டுவராபதிமன்னனை யேத்துமினேத்துதலும் தொழுதாடுமே* என்று ஸ்ரீமதத்வாரகைக்கு நிர்வாஹகனானவனை மங்களாசாஸநம்பண்ண இவள நோவு பரிஹ்ருதமா மென்று தலைக்கட்டின*தீர்ப்பாரை யாமினியிலும் தோன்று மென்றபடி. .... .. .... .. .... (124)

125. இப்படி ப்ரதாநமஹிஷிகளோடும் மற்றும் பகவத் பரிகரஹமுடையா ரோடும் இவர்க்கு ஸாம்யமுண்டேயாகிலும், அவ்வளவல்லாதாரெல்லாம் இவர்க்கொருவகைக் கொப்பா மித்தனை யாகையாலே, ஸர்வதா ஸாம்யம் ஜநககுல ஸுந்தரியான பிராட்டி யோடே யென்கிறார் மேலொரு சூர்ணையாலே.

(மூ.) 125. இராமனெனில்* நசவாகக் குழைத்தவன பின் தொடர விருந்த வன் சிறையிலும விதித்தன் புணைவனென்று ஜீவிதாதிகளால் குறைவின்றி மாயும் வகை விஷசஸ்தரங்கள் தேடி விலவலவா ஹா வென்று இரக்கமெழாக் கொடுமைகள சங்கித்து என்னையும் ஜீவந்தீ மென்று ஆளவிட்டுச சுடரையடைந்து அகலகில்லா முற்றுவமை பெருமகளோடே.

(இராமனெனில நசவாகக் குழைத்தவன பின்தொடரவிருந்த வன்சிறையிலும்) *நச ஸீதா* இத்யாதி ச்லோகத்திற்படியே ஜலாதுதத்ருதமான மத்ஸ்யம்போலே விச்லேஷத்தில ஸத்தாஹாநி பிறக்கும்படி, *ந்நஸவீ ந்தக்த:* என்று ஜாதிகுணங்கள த்ரவ்யத்துக்கு ப்ரகாரமாய் பிரிக்கவொண்ணாதபடி யிருக்குமாபோலே, பிரிக்கவொண்ணாதபடி ஒருநீராகக் கலந்த சக்ரவர்த்தித்திருமகன *உண்ணாதுறங்காதொலிகடலை யூடறுத்து லங்காத்வாரத்தளவும் பினதொடர்ந்து வரும்படியாக *தனிசசிறையில விளப்புற்ற* என்கிறபடியே 'ஒருத்தி சிறையிருந்து ரக்ஷிக்கும்படியே!' என்று லோகமடையக் கொண்டாடும்படி தேவஸ்த்ரீகள சிறையை விடுவிக்கைக்காகப் பிராட்டி லங்கையிலே தனிப்பட்டுச சிறையிருந்தாப்போலே *மராமரமெய்த மாயவ னென்னுளிராமனெனில பின்னையானெட்டுவேனே* என்று சக்ரவர்த்தி திருமகன் எனபக்கல இரேனென்று அகலுமாகில பின்னை நான் தொங்குவனேவென்று விர ஹத்தில் ஸத்தாஹாநி பிறக்கும்படியாக *இலங்கை செற்றாய—உன்னையென னுளளே குழைத்தவெம்மைந்தா* என்கிறபடியே ஏகதத்வமென்னலாம்படி ஸம்ச்லேஷித் தவன பிரிவில் தம ஆற்றாமை குளப்படியாம்படி கடல்போனறவாற்றாமையோடே விண்ணுலகம் தர விரைந்து தாமிருந்த விடத்தேறவரும்படி *வனசிறையிலவன் வைக்கில்* என்கிறபடியே ஸம்ஸாரிகள சிறையை விடுவிக்கைக்காக அவன ஸம ஸாரத்திலே வைக்கவிருந்த வனசிறையிலும், (விதிதனபுணைவனென்று) அச்சிறை யிருப்பிலேயும் அவள, விமுகனான ராவணனுக்கு *விதித்ஸ் ஸஹி தர்மஜ்ஞ: சரணாகத வத்ஸல:, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி* என்று நீ ப்ராணனோடே யிருக்க வேண்டி யிருந்தாயாகில் சரணாகதிதர்மஜ்ஞருமாய் சரணாகதவத்ஸலருமாக ப்ரஸித்த ராயிருக்கிற பெருமாளோடே உறவுபண்ணென்று ஹிதோபதேசம் பண்ணினாப் போலே இவரும விமுகரான ஸம்ஸாரிகளுக்கு *புணைவன பிறவிக்கடல் நீந்து வார்க்கே* என்று ஸம்ஸார ஸமுத்ர திதீர்ஷுக்களுக்கு தக்நிஸ்தரணோபாயம் அவ னென்று ஹிதோபதேசம பண்ணுகையாலும், (ஜீவிதாதிகளால குறைவினறி) அவள, *நஹி மே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர் நச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம மஹாரதம்* என்று பெருமாளைப் பிரிந்து ராக்ஷஸிகள நடுவேயிருக்கிற வெனக்கு ப்ராணாதிகளா லென்ன ப்ரயோஜந மென்று தத்விநியோகத்திற்குப் புறம் பாமவற்றை உபேக்ஷித்தாப்போலே, இவரும, *மாறாளன்கவராத மணிமாமை குறை விலம* என்று தொடங்கி அத்தலைக்குறுப்பல்லாத ஆத்மாத்மீயங்களை உபேக்ஷிக்

கையாலும், (மாயும்வகை விஷ சஸ்த்ரங்கள் தேடி) அவள், ஆற்றாமையின் அதிசயத்தாலே *விஷஸ்ய தாதா ந ஹி மேஸ்தி கச்சித் சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய* என்று உயிர்க்கொலையாகக் வைத்தவனுடைய க்ருஹத்தில் நற்கொலையாக்குவதித்தனை விஷம் தருவாரில்லையோ? விஷம்போலே சிறிதுபோது நின்று கொல்லுகையன்றிக்கே அப்போதே முடிப்பதொரு சஸ்த்ரம் தருவாரில்லையோவென்று முடியும் வகை தேடினாப்போலே, இவரும், *மாயும்வகையறியேன்* என்று முடியும் வகை தேடுகையாலும், (வில்வல்லவாஹாவென்று) அவள் அதிமாத்ரதுக்கிதையாய் ரக்ஷகரான பெருமாளுடைய சௌர்யாதிகளை நினைத்து *ஹாராம* என்று கூப்பிட்டாப்போலே, இவரும், *புணராநின்ற மரமேழன்றெய்தவொரு வில்வலவா வோ* என்று அவன்வீரப்பாட்டைச் சொல்லிக் கூப்பிடுகையாலும், (இரக்கமெழாக்கொடுமைகள் சங்கித்து) அவள், தன்னுடைய ஆற்றாமைக்கு உதவவந்து முகம் காட்டாமையாலே *க்யாதঃ ப்ராஜ்ஞঃ க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவঃ, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசச் சங்கே* என்று பெருமாளை நிரகருணராகச் சங்கித்தாப்போலே, இவரும் *இரக்கமெழீர்* வழாகெடுந்துன்பத்தளன்றிரங்காரம்மனே! இலங்கைக்குழா நெடுமாடமிடித்தபிரானார் கொடுமைகளே* என்று இத்தசையில் கருணைபண்ணாமலிருக்கிற கொடுமையாலே, *அறிவொன்றும் சங்கிப்பன்* என்கிறபடியே நைர்க்ருண்யசங்கை பண்ணுகையாலும்.

(என்னையும் ஜீவந்தீமென்று ஆள்விட்டு) அவள், *ஜீவந்தீம் மாம் யதா ராமஸ் ஸம்பாவயதி கீர்த்திமாந், தத்த்வயா ஹநுமந் வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி* என்று ஸத்தையோடே கிடக்கிறவென்னை இஸ்ஸங்கை போவதற்கு முன்னே யாதொருபடி பெருமாள் வந்து ரக்ஷிக்கக்கொள்வர் அப்படி அவர்க்கு விண்ணப்பம் செய்யென்று தூது விட்டாப்போலே, இவரும், *ஏறு சேவகனுக்கென்னையுமுளளென்மின்களே* என்று என் ஸத்தைகிடந்தமையை அவர்க்கு அறிவியுங்கோளென்று ஆற்றாமை தோற்றத் தூதுவிடுகையாலும், (சுடரையடைந்து) அவள், *அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா* என்று ஆதித்யனோடு ப்ரபைபோலே நான் பெருமாளோடு அநந்யையாயிருப்பனென்றாப்போலே, இவரும் *அரக்கியை மூக்கரிந்தாயை — சுடரை — அடியேனடைந்தேன் முதல் முன்னமே* என்று அநாதியான ப்ரகாரதயா சேஷத்வத்தாலே அவனோடு தாம் நிதயஸம்யுக்தராகப் பேசுகையாலும்; (அகலகில்லா) அவள், *அகலகில்லேனிறையு மென்றலர்மேல்மங்கையுறைமார்பா* என்கிறபடியே உன்னை க்ஷணகாலமும் அகல சக்தையல்லேனென்னுமாப்போலே, இவரும் *அடியேனுன்பாதமகலகில்லேனிறையும்* என்று உன்னை க்ஷணகாலமும் பிரியசக்தனல்லேனென்கையாலும், (முற்றுவமை பெருமகளோடே) இவருக்கு ஸர்வதா ஸாத்ருச்யம் *பெருமகள் பேதைமங்கை* என்கிற பெரியபிராட்டியாரோடே யென்றபடி. "இராவணனில் நசவாக" என்று தொடங்கி "அகலகில்லா" என்று தலைக்கட்டுகையாலும், ஜீவிதாதிகளால் குறைவறுதி முதலாக ஆள்விடுகைபிறக்க நடுச்சொன்னவையும், விரஹதுঃகாஸஹத்வ கார்யங்களாகையாலும், பிரியில் தரியாமையிறே இச்சூர்ணையிலே ப்ராசுர்யேண ப்ரதிபாதிக்கப்பட்டது. ... .... .... (125)

126. இப்படி பிராட்டியோபாதி பிரியில் தரியாமைக்கு இவரொருவருமேயோ? பின்னையுமுண்டோவென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார் (பிரியில் இலேனுக்கு இளங்கோவும் அக்குளத்தில் மீனிறே) என்று.

(மூ.) 126. பிரியில் இலேனுக்கு இளங்கோவும் அக்குளத்தில் மீனிறே.

அதாவது — நிருபாதிகசேஷியானவனைப் பிரியில் *நின்னலாலிலேன்காண்* என்று இலராகைக்கு *நேரிழையுமிளங்கோவும்பின்புபோக* என்கிறபடியே பிராட்டியோபாதி பின்தொடர்ந்துபோன இளையபெருமாளும், நிறுத்திப்போவதாகப் பெருமாளருளிச்செய்தபோது *ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ, முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ* என்கையாலே அந்த ஜலத்தில் மத்ஸ்யமிறேயென்கை,

இத்தால பிராட்டியைப்போலே பிரியில் முடிகைகக்கு இளையபெருமாளும் இவரும ஒககுமெனறதாய்ததது. ... .... ... .... ... (126)

127. இனிமேல் பகவததநன்யராய் ஸஹஜபககதிகராயிருககும் லக்ஷ்மண பரத சத்ருகநர்களபடியும, பகவத்ப்ரத்யாஸந்நராய தததபககதியுகதரான தசரத யசோதா ப்ரஹலாத விபீஷண மாருதி பார்ததர் படிகளும இவர்பககலிலே உண்டென்னு மததைத் தனிததனியே அடைவே தர்சிப்பிக்கிறார் ஒரு சூர்ணையாலே தருஷடாந்த தார்ஷடாந்திகங்களிரணடுககும தனித்தனியே வாசகமிடாதே இரண்டும் ஒருஸநதர்ப் பத்திலே பலிககுமபடி வாககியததைச் சுருககியருளிச்செயகையாலே த்ருஷடாந்தத் திலாதல தார்ஷ்டாந்திகததிலாதல வசநமிலலாதவற்றுககு ப்ரதிகோடிககு அநுகுண மாகக கூட்டி நிர்வஹிககக கடவது. இநத ந்யாயம இப்ப்ரபந்தத்திலிப்படி வந்த ஸ்தலங்களுககெல்லாமொககும்.

(மூ) 127. அழுநதொழும ஸநேஹபாஷ்பாஞ்ஜலியோடே ருசிரஸாநுககளில் கூவிக்கொளளும பிரியாவடிமைககுச சரணேசரணென்று வாளும் வில்லுஙகொண்டு பந்துவும் பிதாவுமவரே யென்கையும, அன்னை யென செயயிலென் ராஜ்யமும யானேயென்று பெருஞ் செல்வமு மிசசியாமல வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைநது வரு மளவும கண்ணநீர் பஙகமாக நிலம்துழாவிக் குடிக்கிடநத கையற வும், கோதிலடிமை உறுமோ வென்பித்த புலன்கெ:ள் நித்ய சத்ரு விசிந்தநமுமான ப்ராதாக்கள, அப்பொழுதைக்கபபொழுது போறு யென்னும் மாதாபிதாக்கள், செந்தீத தண்காற்று இளநாகம் முதலான பகையறச் சிந்தை செயது எங்கு முளனென்னும் பள்ளிப்பிள்ளை, முற்றவிட்டு மற்றிலே னென்னும் தாமாத்மா, வாளி பொழிந்த நீர்க் குணை விசவாத்மா உளளேயுறைய வீரசரிதம ஊனுகக்கற்பார் பாவம் மற்றிலே னென்னும ராமதாஸன், பல்வகையும கண்டு வெண்சங் கேந்தின ரூபபரனை சவேதன் முதலானார்படிகளும் காணலாம்.

(அழுந்தொழுமிதயாதி). அதாவது—இளையபெருமாள *பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:* என்கிறபடியே பாலயமேதொடங்கிப் பிரியில தரியாத ஸநேஹததாலே *பாஷ்பபர்யாகுலமுக:* எனறும, *ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்திதம்* எனறும சொலலுகிற படியே விசலேஷப்ரஸஙகஜமான சோக வேகததாலே சொரிகிற பாஷ்பததோடே ஸவரூபப்ரகாசகமான அஞ்ஜலியும கையுமாய்க கொண்டு *ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத* எனறும, *பவாமஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரமஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதசச தே* எனறும சொலலுகிறபடியே திருச் சித்திரகூடகிரித் தாழவரை முதலான ருசிரதேசஙகளிலே பிராட்டியோடேகூட தேவரீர் ஸ்வைரமாக வெழுந்தருளியிருககக, ஸர்வவிதகைங்கர்யங்களையும அடியேன் செய்யவேணும்; அதுசெய்யுமிடததில் ஏவிககொண்டருள வேணுமெனறு ப்ரார்த் தித்து அப்படி ஏவிக்கொள்ளச் செய்யப்படுமதாய் *குருஷவ மாமநுசரம* என்கிற படியே விச்சேதமறப் பினதுடர்ந்து செய்யுமடிமைத தொழிலைப் பெறுகைககாக, *ஸ ப்ராதுச்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:, ஸீதாமுவாசாதியசா ராகவஞ்ச மஹாவ்ரதம்* எனகிறபடியே புருஷகாரபூர்வகமாகத் திருவடிகளைக் கட்டிககொண்டு *அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்யே ஸுமத்யமா, ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாமஹ* என்கிறபடியே ஸாயுதராய்ககொண்டு பெருமாளைப் பினசெனறு *ப்ராதா பர்த்தாச பந்துச்ச பிதா ச மம ராகவ:* என்று தமககு ஸர்வவிதபந்துவும் பெருமாளே யென்றாப் போலே, இவரும் *அறியாக்காலத்துளளே அடிமைககணன்புசெய்விதது* என்கிற

படியே பருவம் நிரம்புவதற்கு முன்னே பிரியில் தரியாதபடி பிறந்த ஸ்நேஹத்தாலே *அழும் தொழும்* என்று, விச்லேஷம் பொறாமல் கண்ணும் கண்ணீருமாய் கையும் அஞ்ஜலியுமாய் திருவேங்கடத்தெழில் கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கு— ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டும்* என்று— மொய்த்த சோலையும் மொய்பூந்தடம் தாழ்வரையுமான போகஸ்தலங்களையுடைய திருமலையிலே *அலர்மேல் மங்கையுறை மார்பனுகையாலே பிராட்டியோடே கூடி ரஸோத்தரமாகவிருக்கிற பரமசேஷியானவவனுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலசேஷவ்ருத்திகளையும் பண்ணவேணும். அதுதன்னிலும், *முகப்பே கூவிப் பணிகொள்ளாய்* என்று ஸந்நிதியிலே யேவிக்கொள்ளவும் வேணுமென்று ப்ரார்த்தித்து, அப்படி ஏவிக்கொள்ளப்படுமதாய், *பிரியாவடிமை* என்கிற படியே யாவதாத்மாநுவர்த்தியான கைங்கர்யத்தைப் பெறுகைக்கு உபாயமாக *நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு* என்று புருஷகாரம் முன்னாக அவன் திருவடிகளைப்பற்றி. *வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை* என்று திவ்யாயுதங்களைக் கொண்டு தாம் பின்னே திரியவாசைப்பட்டு, *சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களுமமேலாத் தாய்தந்தையுமவரே* என்று சேஷியான ஸர்வேச்வரனே தமக்கு மாதாபித்ராதி ஸர்வவித பந்துவுமென்கையாலும்;

ஸ்ரீபரதாழ்வான், பெருமாள் திருமுடிசூடியிருக்கத் தாமடிமைசெய்து வாழப் பெறாதபடி அவரைக் காட்டிலே அகல்வடித்துத் தம்மேலே ஸ்வாதந்த்ர்யத்தை ஆரோபித்த கொடுமையாலே *ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்டசாரிணீம்* என்று மாதாவானவளைச் சீறியுபேக்ஷித்து ஸ்வாதந்த்ர்யாஸஹதை தோற்ற *ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய* என்று ராஜ்யமும் நானும் பெருமாளுக்கு சேஷமென்று, *ம்ருதே து தஸ்மிந் பரதோ வஸிஷ்டப்ரமுகைர் த்விஜை:, நியுஜ்யமாநோ ராஜ்யாய நைச்சத் ராஜ்யம் மஹாபல:* என்கிறபடியே வஸிஷ்டாதிபுரோஹிதர் நீ ராஜாவாக வேணுமென்று நியோகியாநிற்க, *இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ் ஸசைலவநகாநநா* என்கிற மஹத்தை ஸ்வாயத்தமாக்கியும் இச்சியாதே பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம் பண்ணுவிக்கையிலே அபேக்ஷை தோன்ற *ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம்* என்கிறபடியே அவர் திருவடிகளிலே சென்று *அயாசத் ப்ராதரம் ராமம்* என்கிறபடியே மீண்டெழுந்தருள வேணுமென்றபேக்ஷித்த விடத்தில் அவர் அதுசெய்யாதே, *பாதுகே சாஸ்ய ராஜ்யாய ந்யாஸம் தத்வா புந: புந:* என்கிறபடியே திருவடிநிலையைக் கொடுத்துவிட, *ததஸ்து சிரஸா க்ருத்வா பாதுகே பரதஸ்ததா, ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்டச் சத்ருக்நேந ஸமந்வித:* என்கிறபடியே அத்திருவடி நிலையை சிரஸாவஹித்துக்கொண்டு ஹ்ருஷ்டராய் மீண்டுபோந்து *சிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா* என்கிற இழவு திருவுள்ளத்திலே கிடக்கையாலே *ந மே ஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணாநி ச, தம் விநா கைகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம், இத ஏவ யதா க்ஷிப்ரம் ப்ரதிகச்சாம தாம் புரீம், அயோத்யா மாகதோ ஹ்யேஷ பந்தா: பரமதுர்கம:* என்று நாம் பிள்ளை பரதனையொழியக் குளித்தலொப்பித்தல் செய்யக்கடவோமல்லோம். சீக்ரமாக நாம் இனி அங்கே செல்லலாம்படி யென்னென்று பெருமாள் த்வரையோடே மீண்டெழுந்தருளுமளவும் *பங்கதிக்தஸ்து ஜடிலோ பரத:* என்கிறபடியே கண்ணீராலுண்டான சேற்றிலே தரைக்கிடை கிடக்கையாலே பங்கதிக்தராய், மூத்தாரிருக்க இளையார் முடிசூடக்கடவரல்லரென்கிற இக்ஷ்வாகுகுலமர்யாதை தப்பாமல் நோக்கிக் கொண்டு *ஸ காம மநவாப்யைவ* என்கிறபடியே தாமாசைப்பட்ட பொருள் கைபுகுராத விழவோடே யிருந்தாப்போலே, இவரும் பகவத்ப்ராவண்யாதிசயத்தாலே வழியல்லா வழியேயாகிலும் கிட்டுமத்தனை யென்கிற த்வரைக்கு இடங்கொடாமல் விலக்கும் மாதாவை சத்ருபக்ஷமாகக் காண்கையாலே *அன்னையென் செய்யிலென்* என்று 'ஜீவிக்கிலென்? முடியிலென?' என்று சீறி உபேக்ஷித்து *யானே யென்றனதே* என்கிற ஸ்வாதந்த்ர்யாஸஹராய்க்கொண்டு *யானே நீ யென்னுடைமையும் நீயே* என்று ஆத்மாத்

மீயங்களிரண்டும் அநந்தைக்குசேஷமென்று *கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு* என்று மேன்மேலும் ஸம்ருத்தமாய்வரும் ராஜ்யைச்வர்யத்தையும் அகிஞ்சனமாகக் கொண்டு *வேங்கடவாணனை வேண்டிச் சென்று* என்று திருச்சித்ரகூடத்திலிருந்தாப்போலே திருமலையிருக்கிறவனை யதாமனோரதம் அநுபவிக்கைக்காக அபேக்ஷித்துச் சென்று தம் அபேக்ஷிதம் அவன் அப்போது செய்யாதே ஒருவைசத்யமுகத்தாலே *திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை* என்று திருவடிகளைத் தந்தாயென்று ஹ்ருஷ்டராம்படி பண்ணிவிட, அப்படி அவன் கொடுத்த திருவடிகளை சிரஸாவஹித்து வீடுதிருத்தப் போனவன் விண்ணுலகம் தரவிரைந்து வருமளவும் *கண்ணநீர் கைகளாலிறைக்கும்* *இருநிலம் கைதுழாவிருக்கும்* என்கிறபடியே கண்ணநீர் வெள்ளத்தாலுண்டான சேற்றிலேயிருந்து ஆற்றாமையாலே நிலந்துழாவி, *குடிக்கிடந்தாக்கம் செய்து* என்கிறபடியே ப்ரபந்ந குலத்தில் செய்து போரும் மர்யாதை தப்பாமல் *காமுற்றகையறவோடு* என்கிறபடியே தாமாசைப்பட்ட பொருள் கைபுகுராத விழவோடே யிருக்கையாலும்; ஸ்ரீசத்ருக்நாழ்வான், *கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநகஃ, சத்ருக்நோ நித்யசத்ருக்நோ நீதஃ ப்ரீதிபுரஸ்க்ருத* என்கிறபடியே பாகவதசேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று ஸ்ரீ பரதாழ்வானுக்கே சேஷபூதராய், அவருடைய பாவநத்வ போக்யத்வங்களிலே கால்தாழ்ந்து *பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்* என்கிறபடியே வயிரவுருக்காய் ஆண்களையும் பெண்ணுடையுடுத்தும் பெருமாளுடைய வடிவழகில் துவக்குண்ணாதே, பரதாநுவ்ருத்தியில் போகாதபடி தன்பக்கலிலே துவக்கவற்றென்னுமத்தாலே தம்முடைய நிஷ்டைக்கு அது நித்யசத்ருவென்றறுதியிட்டிருக்கச் செய்தே ஸ்ரீ பரதாழ்வானுக்கு உகப்பாகையாலே உத்தேச்ய ப்ரீதியென்று புரிந்து பெருமாள்வடிவிலே நெஞ்சுசென்று *வீசிந்தயந்* என்கிறபடியே எப்போதும் அத்தை மநஸ்ஸிலே கொண்டிருக்குமாபோலே, இவரும் *கோதிலடியார்* என்று ப்ரதமாவதியில் நிலைபோலன்றிக்கே ஸ்வரூபத்தினுடைய எல்லைநிலமாகையாலே *கோதிலடிமை* என்று சொல்லப்படுகிற பாகவத சேஷத்வத்தினுடைய ரஸம் *அவனடியார் சிறுமாமனிசராயென்னை யாண்டார்—இங்கேதிரிய, அவர்களைத் தவிர்ந்து செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்புகுதல்—பாவியேனுக்கு—உறுமோ?* என்று சொல்லுவிக்கப்பட்டதாய், ஸர்வேந்த்ரியாபஹார க்ஷமமாகையாலே அந்த பாகவதசேஷத்வநிஷ்டாவிரோதியான பகவத்விக்ரஹத்தை உத்தேசயப்ரீதியென்னுமதைப் பற்ற *திரிதந்தாகிறபடியே மீண்டு, *புலன்கொள்வடிவென்மனத்ததாய்* என்று எப்போதும் தம்மநஸ்ஸுக்கு விஷயமாகக் கொண்டிருக்கையாலும், கீழ்ச்சொன்ன வாகாரங்களை யுடையரான இளைய பெருமாள் ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீசத்ருக்நாழ்வானென்கிற திருத்தம்பிமார் மூவர்படியும் இவர்பக்கலிலே காணலாம்.

வீசிந்தநம் என்கிறவிதுக்கு இப்படி வ்யாக்யாநம் பண்ணிற்று இதின் பட்டோலையானதிலே, *உறுமோவென்று நித்யசத்ருவை வென்று *புலன்கொள்வடிவை விசிந்தயனுயிருக்கும்* என்று *வீசிந்தயந்* என்று ஒரு வசமுண்டாகவுமெடுத்து இப்படி இவர்தாமே அருளிச்செய்துவைக்கையாலே. இவ்விடத்திலும் சிந்தநமென்னுமல் விசிந்தநமென்றது அவ்வசந ஸூசகமாகவிறே. *வீசிந்தயந்* என்கிற வசநம் இன்னவிடத்திலேயென்று த்ருஷ்டமாயத்திலலை; வந்தவிடத்திலே கண்டுகொள்வது.

(அப்பொழுதைக்கித்யாதி) சக்ரவர்த்தி *ந த்ருப்தி ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப* என்கிறபடியே வைத்தகண்வாங்காதே உத்தரோத்தரமநுபவியா நிற்கச் செய்தே ஒருகாலும் த்ருப்தனாகாமல் அநுபுபூக்ஷுவாய்ச் செல்லுமாபோலே இவரும் *எப்பொழுதும் நாள்திங்களாண்டு* இத்யாதிப்படியே யாவத்கால மநுபவியாநின்றாலும், *அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதம்* என்று அநுக்ஷணம் எனக்கு அத்ருப்திகரமான போக்யவஸ்துவென்று, மேன்மேலும் அபிநிவிஷ்ட

ராகையாலும், *யமளார்ஜுநயோர் மத்யே ஜகாம* என்று கருதஸங்கேதமாய் நலிய வந்து நின்ற யமளார்ஜுநங்களின் நடுவே க்ருஷ்ணன் போனபோது யசோதைப் பிராட்டி ஓடிச்சென்று எடுத்துக் கொள்ளாநிற்க, மருதுகளின் பெருமையையும் இவன் மௌக்த்யத்தையும் கண்டு வயிறு எரிகொளுந்தி முகத்தைப் பார்த்து *இப்பெரிய மருதுகளின் நடுவே போனாயே* என்று வெறுத்தாப்போலே, இவரும் அதீதகாலஸ்தமாயிருக்கவும் ஸமகாலத்திற்போல ப்ரகாசிக்கையாலே அப்படி வயிறெரிந்து கொண்டு *போனாய் மாமருதின் நடுவே* என்கையாலும் பிதாவும் மாதாவுமான அவர்களிருவர்படியும் இவர்பக்கலிலே காணலாம்.

ஸ்ரீ ப்ரஹ்லாதன் *நாக்நிர்தஹதி நைவாயம் சஸ்த்ரைச் சிந்நோ நசோரகை:, க்ஷயம் நீதோ நவாதேந நவிஷேண நக்ருத்யயா* *ஸத்வாஸக்தமதி: க்ருஷ்ணே தச்யமாநோ மஹோரகை:, நவிவேதாத்மநோ காத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத ஸம்ஸ்தித:* என்கிறபடியே அக்நி முதலானவை பாதகமாகாதபடி *ஸர்வபூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத:* என்று மித்ராமித்ரகதாவகாசமற ஸர்வமும் பகவதாத்மகதயா அநுகூலமாக அநுஸந்தித்து *எங்குமுளன் கண்ணன்* என்கிறபடியே *உர்வ்யாமஸ்தி* என்று தொடங்கி, *ஸர்வத்ராஸ்தி* என்று பிறர்க்குமுபதேசித்தாப்போலே, இவரும், *அறியும் செந்தீயைத்தழுவியச்சுதனென்னும் மெய்வேவாள், எறியும் தண்காற்றைத்தழுவி யென்னுடைக் கோவிந்தனென்னும்* *போமிளநாகத்தின் பின்போய அவன்கிடக்கையீதென்னும்* என்று—அக்நிமுதலான பாதக பதார்த்தங்கள் பகவதாத்மகத்வேந அநுகூலமாம்படி *என் முன்னைக் கோளரியே—உன்னைச் சிந்தைசெய்து செய்து—என் முன்னைத் தீவினைகள் முழுவேரரிந்தனன் யான—முடியாததென்னெனக்கு* என்று அவனை அநவரதாநுஸந்தானம் பண்ணி *கறந்தசிலிடந்தொறுமிடந்திகழ் பொருடொறும் கரந்தெங்கும் பரந்துளன்* என்று அவனுடைய ஸர்வகதத்வத்தைப் பிறருமறியும்படி அருளிச்செய்கையாலே *பள்ளியிலோதிவந்த தன்சிறுவன்* என்றும், *பிள்ளையைச்சீறி* என்றும் சொல்லப்பட்ட பள்ளிப்பிள்ளையான ப்ரஹ்லாதன்படியும் இவர்பக்கலிலே காணலாம்.

ஸ்ரீ விபீஷணாழ்வான் *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணங்கத:* என்றும், *பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச, பவத்கதம் மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுகாநி வை* என்றும் லங்கையோடேகூட புத்ரதாராதிகளான ஸர்வத்தையும் விட்டு சக்ரவர்த்தி திருமகனையே தமக்கெல்லாமாகப் பற்றினாப்போலே, இவரும் *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு* என்று ஸாமஸாரிகஸகல ஸங்கங்களையும் ஸவாஸநமாகவிட்டு *தயரதற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே* என்று சக்ரவர்த்தி திருமகனையே தமக்கு ஸர்வப்ரகார ரக்ஷகனாகப் பற்றுகையாலே *விபீஷணஸ்து தர்மாத்மா* என்று தர்மபுத்தியுடையவனென்கிற மாத்ரமன்றிக்கே, *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்று சொல்லப்பட்ட தர்மஸ்வரூபனான சக்ரவர்த்தி திருமகனையே தனக்கு தாரகமாகவுடையவனாகையாலே *தர்மாத்மா* என்று விசேஷஜ்ஞர் சொல்லும் ஸ்ரீவிபீஷணாழ்வான்படியும் இவர் பக்கலிலே காணலாம்.

திருவடி, *நிர்குண: பரமாத்மாஸௌ தேஹம் தே வ்யாப்ய திஷ்டதி* என்கிறபடியே விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுக்கையாலே ஏறிட்டநாணி இறங்கிட்டு *பவாந் நாராயணோ தேவ:* என்கையாலே பரமாத்மசப்தவாச்யனாய்க்கொண்டு *விச்வாத்மாநம்* என்கிறபடியே விச்வத்துக்கும் ஆத்மபூதனாயிருக்கிற சக்ரவர்த்தி திருமகனைத் தன்னுள்ளேயுடையனாய் *ஸோத்ரைவ ஹந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவ ஸேவதேஸௌ* என்கிறபடியே சக்ரவர்த்தி திருமகனுடைய வீரசரிதத்தை போக்யமாகவுடையனாய் *ஸ்நேஹோ மே பரமோ ராஜம்ஸ்த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி* என்று குணத்தாலும் சரத்தாலும் அநுகூலரையும்

ப்ரதிகூலரையும் ஜயிக்கும் வீரரான சக்ரவர்த்தி திருமகனளவிலே எப்போதும் ப்ரதிஷ்டிதமாய், இதுக்குமேலில்லை யென்னும்படி யிருக்கிற ஸ்நேஹத்தாலும் நிய்யதையான பக்தியாலும் இவ்விஷயத்தைவிட்டுப் பரத்வத்தில் தன்னெஞ்சு போகாமை சொல்லுகிறவிடத்தில் பரத்வத்தின் பேரும் சொல்லுகை அஸஹ்யமாய் *அந்யதா* என்னும்படி சக்ரவர்த்தி திருமகனையல்லதறியே னென்றிருந்தாப்போலே, இவரும், *செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை உருக்கெட வாளி பொழிந்தவொருவன்—திருக்கடித்தானமு மென்னுடைச் சிந்தையுமொருக்கடுத்துள்ளே யுறையும் பிரான் கண்டீர்* என்று மூலபலம் முதலானபடி சரவர்ஷத்தை வர்ஷித்த ஏகவீரனான சக்ரவர்த்தி திருமகனைத் தம்முள்ளேயுடையராய், *கண்ணாணி லோவாத்தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே ஓவாதவூணாகவுண்* என்கிறபடியே அவனுடைய வீரசரித்தை போக்யமாக வுடையராய், *கற்பாரிராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ?* என்று பரிஹ்ருதங்களைப் பற்ற ஒன்றைக் கற்குமவர்கள் ரமணீயனுமாய் உபகாரகனுமான சக்ரவர்த்தி திருமகனையொழிய *பரத்வாதிகளையும் அவதாராந்தரங்களையும் கற்பரோ வென்று தமக்கு இவ்விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தாலே பரத்வாதிகளைக் கழிக்கிற விடத்தில் அவற்றின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் *மற்றும்* என்னும்படி *தயரதற்குமகன் றன்னை யன்றி மற்றிலேன்* என்றிருக்கையாலே *தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய* என்று ராமதாஸனாயிருக்கும் திருவடியுடைய படியும் இவர்பக்கலிலே காணலாம்.

அர்ஜுனன் *பஶ்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்காந், ப்ரஹ்மாணமீஶம் கமலாஸநஸ்தம் ருஷீம்ஶ்ச ஸர்வாநுரகாம்ஶ்ச திவ்யாந்* என்று விஶ்வரூபம் கண்டவனந்தரம் *அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா பயேந ச ப்ரவ்யதிதம் மநோ மே, ததேவ மே தர்ஶய தேவ ரூபம் ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தமிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ, தேநைவ ரூபேண சதுர்புஜேந ஸஹஸ்ரபாஹோ பவ விஶ்வமூர்த்தே.* என்று திவ்ய சக்ஷுஸ்ஸாலே இப்போது கண்ட விச்வரூபம் அத்ருஷ்ட பூர்வதையாலும் உக்ரதையாலும் ஹர்ஷபயங்களிரண்டையும் விளைக்கையாலே ஸததஹர்ஷஹேதுவாய் பூர்வபரிசிதமுமான ஸௌம்ய ஸ்வரூபத்தைக் காணவாசைப்பட்டு சதுர்புஜமுமாய் சங்கசக்ரகதாதரமுமான திவ்யவிக்ரஹத்தைக் காட்டவேணுமென்று தத்தர்ஶந தத்பரனாயபேக்ஷித்தாப்போலே, இவரும், *நலகுரவும்* என்று தொடங்கி, *பலவகையும் பரந்தபெருமானை—திருவிண்ணகர்க்கண்டேனே* என்று விருத்த விபூதியுக்தனாய்க் கொண்டு விபூதிமுகத்தாலே பலபடியாக விஸ்த்ருதனாயிருக்கிறவனைக் கண்டு *நீராய்நிலனாய்* என்று தொடங்கி *சிவனாய்அயனாய்* என்று கார்யகாரணங்களிரண்டையும் சரீரமாகக்கொண்டு நீ ஜகதாகாரனாயிருக்கிற விருப்பை எனக்குக் காட்டித் தந்தாயாகிலும், இத்தால் நான் பெற்றது உன்னதான வஸ்துக்களை என்னதென்றும் பிறரதென்றுமிருக்கும் விப்ரதிபத்திபோய் உன்னதே ஸகலமு மென்றிருக்கிற மாத்ரம்; இது எனக்கு ஆகாங்க்ஷிதமாய் அநுபாவ்யமாயிருக்கிறதில்லை ஆன்பின்பு, *கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்* என்று சங்க சக்ரதரமான உன் அஸாதாரண விக்ரஹத்தோடே என்முன்னே வரவேணுமென்று அஸாதாரண விக்ரஹாநுபவ தத்பரராய் அபேக்ஷிக்கையாலே *சின்னப்போர்சசுவேதன்* என்று சொல்லப்பட்ட அர்ஜுனன்படியும் இவர்பக்கலிலே காணலாமென்கை.

சவேதனென்றது—சவேதவாஹநனென்றபடி. முதலானாரென்றது — *உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்கிறபடியே எல்லார்க்கும் தம்முடைய ஓரோ வகைகளாலே உபமாந பூமியாயிருக்குமவராகையாலே இன்னமும் ஜ்ஞாநிகளானவர்கள் பலர்படியும் இவர் பக்கலிலே காணலாமென்று தோற்றுகைக்காக; பிராட்டிமாரோடு ஸாம்யம் சொன்னபின்பு ஸ்ரீ கோபிமார் முதலானாரோடு ஸாம்யம் சொன்னவோபாதியிறே, லக்ஷ்மணாதிகளோடே ஸாம்யம் சொன்ன பின்பு தசரதாதிகளோடே இவர்க்குண்டான ஸாம்யம் சொன்னவிதுவும். ... .... (127.)

128, ஆக, இப்படி நித்யஸூரிகளில் தலைவராய், தொடர்ந்தடிமை செய்யப் பிறந்த லக்ஷ்மணுதிகளோடும், நித்ய ஸம்ஸாரிகளிலே அந்யதமராயவைத்து பகவத் ப்ரத்யாஸந்நராகப் பெற்ற தசரதாதிகளோடும் இவர்க்குண்டான ஸாம்யத்தை யருளிச் செய்தார் கீழ். அவர்களிலேவரிலும் இவர்க்குள்ள வேற்றத்தை அருளிச் செய்கிறார் மேல (குழலில் நெஞ்சு மருகலில் சுவையுமான இவர் அவர்களிலவல்லர்) என்று.

(மூ) 128. குழலில் நெஞ்சும் அருகலில் சுவையுமான வீவா அவர்களிலவல்லர்.

அதாவது—*குழற்கோவலா* என்கிற பாட்டில் சொல்லுகிறபடியே பிராட்டிமாரும் நித்யஸூரிகளுமவனுமான திரளிலே பற்றின நெஞ்சையுடையராய், *அருகலிலாய* என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே பிராட்டிமாரோடும் திருவடி திருவனந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளோடும் ஓரோவகையாலே பரிமாறுமவன், அவர்களோடே பரிமாறுமாபோலே ஒருவழியாய் வந்த ரஸத்தைத்தந்து விடுகிறிலன் என்னளவில்; அவர்களெல்லார்பக்கலிலும் பண்ணுமாதரத்தை என்பக்கலிலே பண்ணுநின்றுனென்னும்படி எல்லாவழிகளாலுமுள்ள ஸம்ச்லேஷரஸத்தை அவன் தமக்கு விளைக்கையாலே போகரஸமும் விஞ்சப்பெற்றவரானவிவா, ஓரோ அவதாரமாத்ரத்திலும் கேவலம் அவன்றன்னளவிலும் பற்றின நெஞ்சையுடையராய பகவத்ப்ராவண்யம் காதாசித்கமாய விஷயாந்தர ப்ராவண்யமும் கலசியிருப்பாரும்; இதர விஷய வைராக்ய பூர்வகமாக எப்போதும் நடந்து செல்லும் பகவத்ப்ராவண்யமுண்டாயும், ததீயரும் அவனுமான சேர்த்தியில் ரஸமறியாதாருமான தசரதாதிகளும் பரத்வாவதார விபாகமற அவகாஹித்த நெஞ்சையுடையராயும் ஒருவழியால் வந்த ரஸத்தைப் பெற்றிருக்கும் லக்ஷ்மணுதிகளுமான அவர்களில் அத்யந்தவ்யாவ்ருத்தரென்கை.

ஆக, லக்ஷ்மணுதிகள் தசரதாதிகளோடும் இவர்க்குள்ள ஸாம்யத்தை தர்சிப்பித்தாப்போலே அவர்களில் இவர்க்குண்டான ஆதிக்யத்தையும் தர்சிப்பித்தாராயிற்று. (128)

129. இப்படிப்பட்ட நெஞ்சையும் சுவையையுமுடைய இவர் தமமுடைய அபிநிவேசத்தாலே அவன் பிறவிக்கு அநுகுணமாகப் பிறந்து அநேகாநுவ்ருத்திகளைப் பண்ணும் பிராட்டிமாரையும், அசேஷசேஷதைகரதிகராய அநேகதாபவித்து அநேகவித கைங்கர்யங்களைப் பண்ணும் அநந்தவைநதேயாதிகளையும் அவர்களாமென்னலாம்படி பாவிப்பரென்கிறார் (எற்றைக்குமென்று தொடங்கி.)

மூ. 129. எற்றைக்குமென்றது தோன்றப் பிறந்து ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக் காட்டுக்கு முற்பட்டு தாமம சொல்லிக்கேட்டு சிஷ்யாதாஸீ பக்தைகளாய பாடி வருடி இன்று வந்தேனென்பாரையும். சென்றாலாம் நிவாஸதாஸ பேதம் கொள்வாரையும், தாமவராக பாவிப்பர்.

அதாவது—ஸ்ரீ பூமிப்பிராட்டியவதாரமான ஆண்டாள் ப்ரார்த்தனை மூவர்க்கும் மொக்குமாகையாலே *எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்* என்று அநேகஜந்மங்கள் பிறந்து உன்னோடே சேஷ சேஷிபாவமாகிற உறவையுமுடையோமாய், உனக்கே உகப்பான அடிமைகளை நாங்கள் செய்யவேணுமென்றபேக்ஷித்தமை தோன்ற *தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும்* என்கிறபடியே ஈச்வரன் லோகரக்ஷணார்த்தமாக தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாயவதரிக்குமளவில், அவன் கொண்டவடிவுக்கு அநுரூபமான வடிவுகொண்டு தோற்றுமவளாகையாலே *ராகவத்வேऽபவத் ஸீதா* என்கிறபடியே அவன் சக்ரவர்த்தி திருமகனாயவதரித்தபோது தானும் ஸ்ரீ ஜநகராஜன் திருமகளாயவதரித்து.

*வராஹருதிராபேந சுசீநாச ஸுகந்திநா, அநுலிப்தம பராரத்யேந சந்தநேந பரந்தபம்* என்கிறபடியே திருவபிஷேகார்த்தமாக அலங்கரித்து *ஸீதயா பாரசவத சசாபி வாலவ்யஜநஹஸ்தயா, உபேதம ஸீதயா பூயச சித்ரயா சசிநம யதா* என்கிறபடியே அப்போதருகே ஸேவித்து நின்று திருவெண்சாமரம் பணிமாறி, அநந்தரம் சக்ரவர்த்தி மாளிகைக்கெழுந்தருளுகிறபோது *பதிஸம்மாநிதா ஸீதா பாதத்வாரமஸிதேக்ஷணா, ஆத்வாரமநுவவராஜ மங்களாந்யபித்யுஷீ, பூர்வாம திசம வஜ்ரதரோ தக்ஷிணம பாது தே யமஃ, வருணஃ பச்சிமா மாசாம தநேசஸ்தூத்தராம திசம* என்கிறபடியே பெருமாள் வடிவழகைக் கண்டு இது நமக்குத் தொங்கப் புகுகிறதோ வென்னும் வயிறுபிடியாலே அந்தஃபுரத்வாரத்தளவும் பின்சென்று மங்களாசாஸநம் பண்ணி, தத்நந்தரம் காட்டுக்கெழுந்தருளுகிறபோது *அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குசகண்டகாந்* என்று தானமுற்பட்டு ஸ்ரீதண்டகாரண்யத்தி லெழுந்தருளி யிருக்கிறபோது அவராயுதங்களை தரித்துக்கொண்டு நிற்கிற நிலையைக்கண்டு *நஹி மே ரோசதே வீர கமநம தண்டகாம்ப்ரதி, காரணம் தத்ர வக்ஷ்யாமி வதந்த்யாச சரூயதாம் மம த்வம ஹி பாணதநுஷ்பாணிஃ ப்ராத்ரா ஸஹ வநம் கதஃ, த்ருஷ்ட்வா வநசராந ஸர்வாந கச்சித் குர்யாச சரவ்யயம, க்ஷத்ரியாணாஞ்ச ஹி தநுர்ஹுதாசஸ்யேந்தநாநிச, ஸமீபதஸ்ஸ்திதம தேஜோ பல முச்ச்ரயதே ப்ருசம* என்று—இவர் ஸாயுதராயிருக்கில் ஆரேனையும் மேல்விழுந்து பரமாதம் விளையக்கூடுமென்று பயப்பட்டு *தர்மாதர்த்தஃ ப்ரபவதே தர்மாத ப்ரபவதே ஸுகம்* இத்யாதியாலே ஸர்வத்துக்கும் தர்மமே மூலமென்னுமிடத்தை ஸமர்ப்பித்து, ஆனபின்பு ஆயுதத்தை வைத்து தாபஸவேஷத்தோடே தர்மத்தை அநுஷ்டிக்கவமையுமென்று தாமோபதேசத்தையும் பண்ணின பெரியபிராட்டியாரையும், *அஹம சிஷ்யாச தாஸீச பக்தாச த்வயி மாதவ, மத்கருதே ஸர்வபூதாநாம் லகூபாயம் வத பரபோ* என்று ஸ்ரீவராஹநாயனார் பக்கலிலே பரமார்த்தம் கேட்டு தந்மூலமாக சிஷ்யையும் தாஸியும் பக்தையுமாய், *உன்றன்னைப்பாடி* என்கிறபடியே கவிபாடி, *திருமகளும் புவியும் செம்பொற்றிருவடியின்இணைவருட* என்கிறபடியே பெரியபிராட்டியாரோபாதி அவன் திருவடிகளைப் பிடித்து, *இன்று வந்தித்தனையுமமுது செய்திடப் பெறில் நானொன்று நூறாயிரமாகக்கொடுத்துப் பின்னுமாளும் செய்வன* என்று தன்னைக் கைங்கர்யங்கொண்டால் அதுக்கு ப்ரத்யுபகாரமும் பண்ணுவனென்ற ஸ்ரீபூமிப்பிராட்டியாரையும்

*சென்றால் குடையாம* என்கிற பாட்டிலும், *நிவாஸ சய்யா* இத்யாதி ச்லோகத்திலும் சொல்லுகிறபடியே பகவத்விநியோகாநுகுணமாக சத்ர ஸிம்ஹாஸந பாதுகாம்சுகாதிசரீரபேதம் கொண்டு ஸகலவித கைங்கர்யங்களையும் செய்யும் திருவனந்தாழ்வானையும், *ஊரும் புட்கொடியுமஃதே* என்கிற சந்தையிலும் *தாஸ ஸஸகா* இத்யாதி ச்லோகத்திலும் சொல்லுகிறபடியே வாஹநத்வஜ விதாந வ்யஜநாதி தேஹபேதங்களைக் கொண்டு ஸகலவித கைங்கர்யங்களைச் செய்யும் பெரியதிருவடியையும் போலே, இவரும் *'பிறந்திட்டாள்'* என்கிறபடியே பிறந்து பிராட்டிமார் தசையிலே நின்று பேசும்படியான பலபாவவ்ருத்திகளையும், "ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டு நாம" என்று ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும், உசிதமான ஸகல சேஷவ்ருத்திகளையும், பண்ணவேணுமென்னு மபிநிவேசாதிசயத்தையு முடையராகையாலே, பிராட்டிமாரையும் அநந்தாதிகளான ஸூரிகளையும், அவர்களுக்கும் தமக்குமொரு விசேஷமற அவர்கள் தாமாகவே பாவிப்பரென்றபடி. .... .... .... .... (129)

130. இப்படியிவர்க்கிவ்வவஸ்தை விளையும்படி 'ஈச்வரவிக்ரஹ வைலக்ஷண்யம இவர் பும்ஸ்த்வத்தையழித்து ஸ்த்ரீத்வபாவனையை ஜநிப்பித்ததுக்கும் இத்திருமேனியோடேயிவர்க்கிவ்விஷயத்தில் அநேகவிதாநுவ்ருத்திக ளுண்டானதுக்கும், த்ரௌபதி கௌஸல்யைகள் படிகளை த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாமோ வென்னு மாகாங்க்ஷையிலே இதுக்கவற்றை த்ருஷ்டாந்தமாகுகை ஸ்தூல மென்னுமிடத்தை தர்சிப்பிக்கிறார். (எழுவதோருருவென்று தொடங்கி).

(மூ) 130. எழுவதோருரு அழிகக, செயகிற வழுவிலாவடிமைக்குப் பாஞ்சாலி படுததுமதும கௌஸல்யாநுவ்ருததியு மொப்பாக்குகை பரிசு.

அதாவது—*சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு* என்று தேஜோரா சிமத்யே உந்நேயமாமபடி யிருப்பதாய *புமஸாம த்ருஷ்டி சித்தாபஹாரிணம* எனகிறபடியே வயிரவுருக்காய ஆணகளேயும பெண்ணுடை யுடுத்துமதானவவ னுடைய அப்ராகருதவிகரஹம இவருடைய புமஸத்வத்தை யழித்து ஸத்ரீத்வ பாவனையை விளேத்ததுகரும், நிருபாதிக சேஷியான அவன விஷயத்தில நிரதிசய ப்ரேமத்தாலே *வழுவிலா வடிமை செயய* எனகிறபடியே தமமுடைய பாவவிசேஷங களால் இவர் செயகிற நாநாவிதாநுவருததிகளுககும *பாஞ்சாலயா:பத்மபத்ராக்ஷயா: ஸ்நாயந்த்யா ஜகநம கநம, யாஸஸதரீயோ தருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸா யயு:* எனகிறபடியே பராகருதமாய மாமஸாஸ்ருகாதிமயமான தேஹத்தையுடைய த்ரௌபதி, ஸவதேஹஸௌநதர்யததாலே ஸஜாதீயரை ஸ்த்ரீத்வததை யழிதது புமபாவத்தை யடைவிததததையும *யதாயதா ஹி கௌஸலயா தாஸீவசச ஸகீவச, பார்யாவத் பகிநீவசச மாதருவசசோபதிஷ்டதி* எனகிறபடியே. கௌஸலேயார், ஔபாதிக பர்த்ரு விஷயத்தில அவஸதாநுகுணமாகபபண்ணின பாவவிசேஷ ப்ரயுகத கதிபயாநுவருத்தியையும த்ருஷடாநதமாககுகை ஸ**ஸத்ருசமலலாமையாலே ஸதூலமெனறபடி. இததாலொருபுடை ஒபபுசசொலலுவோமெனறூம இதுககது பற்றுதென்றதாயிற்று. .... .... .... .... (130)

131. இப்படி யவஸதாந்தராபநநராஞலும தாமான தனமையால் செல்லும அபிநிவேசமும், இவர்ககுக குறையாதென்னு மத்தை ஸதருஷடாந்தமாக வருளிச் செயகிறார்மேல (பெருககாறெனறு தொடஙகி).

(மூ) 131. பெருககாறு பலதலேததுக கடலே நோக்குமா போலே நெகககொசிந்து கரைநதலேநதிடிந்து உடையப் பெருகு (மிகு) காதல் கடலிடங கொணட கடலே பஹுமுகமாக அவகாஹிககும.

அதாவது—கிண்ணகமெடுத்தவாறு பலதலேயாயப் பாயந்து செல்லாநிறக தனககொரு குறைவினறியே, *பெயருங கருஙகடலே நோககுமாறு* என்கிறபடியே தனககுப்புகலான கடலே நோககிசசெனறு புகுமாபபோலே *நெககொசிநதுகரை யும* *நீராயலேந்து* *நெஞ்சிடிந்து* *எனமனமுடைவது மவர்ககே* எனறு உடை குலேபபட்டு சிதிலராய் பரவசராய த்ரவீபூதராய நிலேகலஙகி நெஞ்சுகட்டழிநது உருக குலேநது போமபடி *பெருகுமால வேடகை* *கழியமிககதோர் காதல* என்கிறபடியே கரையழியப் பெருதுகிற காதலானது *கடலிடங கொண்ட கடல வண்ணு* எனகிற படியே ஒரு கடலொரு கடலிலே சாய்நதாறபோலே திருப்பாற்கடலிலே கண் வளர்நதருளின சரமஹரமான வடிவையுடைய பெரியபெருமாளாகிற அபரிசசேத்ய வஸதுவைத் தாமான தனமையாலும அவஸதாநதராபத்தியாலுமுண்டான பேதத் தாலே பலமுகமாகச சென்று அவகாஹிககு மென்கை. இத்தால் உகதலக்ஷயமாஞ வஸைதகளுககெலலாமுடலான விவருடைய பகதி வைபவம ப்ரதிபாதிக்கப்பட்டது.

132. இவருடைய பகதிதான சாஸ்த்ரங்களில சொலலுகிறபடியே ஸக்ரம மாய் ஸாத்மயமாய் ஏகமுகமாயிராமலிபபடி அமர்யாதமாய அஸாத்மயமாய் அநேக முகமாய் நடப்பானென்னெனனு மாகாங்க்ஷையிலே அருளிசசெயகிறார் (அச்சேத்ய மெனறு தொடஙகி).

(மூ.) 132. அசசேத்ய மென்னுமது ஈரும வேம ஈரியாயுலர்தத வென்னப்பட, சிததம் சிததாய அல்லேனெனறு நீங்க, கரணங்கள் முடியானே யிலவையாக, உடலமாத்மதர்மம கொள்ள, காற்றுங் கழியும் கட்டி யழக் கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல்வரம்பில்லேயே.

அதாவது —*அச்சேத்யோய மதாஹ்யோய மக்லேத்யோசோஷ்ய ஏவச* என்று சேதந தஹந க்லேதந சோஷணா நர்ஹமாகச் சொல்லப்பட்ட ஆத்மவஸ்து *சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர்திருவாகம் எம்மாவியீரும்* என்று பிராட்டியோடு ருத்ராதிகளோடு வாசியற உடம்பு கொடுக்குமவனுடைய சீலம் ஸ்மாரகமாய் என்னுத்மாவை யீராநின்றதென்றும், *வேமெமதுயிரழல் மெழுகிலுக்கு* என்று என்னுத்மாவானது நெருப்பிலிட்ட மெழுகுபோல உருக்குலைந்து வேவாநின்றதென்றும், *கண்ணனுக்கென்று ஈரியாய* என்று நல்லது கண்டால் க்ருஷ்ணனுக்கென்கிற அநுஸந்தாநத்தாலே ஆர்த்ரதையையடையுமென்றும் *வேட்கை நோய் மெல்லாவி யுள்ளுலர்த்த* என்று ப்ரேமவ்யாதியானது ம்ருதுஸ்வபாவமான ஆத்மாவைக் குருத்துவற்றுக்கவுலர்த்தவென்றும், இப்படி சேதநார்த்யர்ஹமாயிற்றென்று ஸ்வயமேவ சொல்லும்படியாக, *என்னெஞ்சென்னை நின்னிடையே னல்லேனென்று நீங்கி* என்று அசேதநமான சித்தமானது சேதநஸமாதியையடைந்து அவன் விச்லேஷித்துப்போன உனக்குக் கரணமாவேனல்லேனென்று *ஸந்ந்யஸ்தம் மயா* என்கிறபடியே உறவறச் சொல்லித் தம்மைவிட்டு நீங்க, பாஹ்ய கரணங்கள் *முடியானேயிற்படியே சேதநஸமாதியாலே ஒரு கரணத்தினுடைய வ்ருத்தியைக் கரணாந்தரமாசைப்படும்படி விடாய்க்க, *உடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய* என்று பகவத்ப்ரேம பாரவச்யத்தாலே ஆத்மா சிதிலமாய்ப் போகாதபடி கட்டின கரையான சரீரம் த்ரவ்யமிருந்த குழைறயும் உருகுமாபோலே, அன்பும் அதுக்காச்ரயமுமென்றிரண்டின்றியே அன்புதானொரு வடிவு கொண்டாப் போலேயாய், உத்தரோத்தரம் சைதில்யத்தையடைந்து ஆத்மதாமத்தை ஏறிட்டுக் கொள்ள *கடலும் மலையும்* *இருளின் திணிவண்ணம்* இத்யாதிகளிற்படியே காற்றுக்கு ஸத்தகதித்வமும், கழிக்கு ஏறுவது வடிவதாகையும் நியதஸ்வபாவமென்றறியாதே, அவற்றுக்கு அவை பகவத்விரஹக்லேசஜநிதமாகக் கருதி அசேதநமானவற்றைத் தமக்கு ஸமதுக்கிகளாகக் கொண்டு *எம்மாற்றாமை சொல்லியழுவோமை* என்று தாம் அவற்றைக் கட்டிக்கொண்டுகிடந்து கதறும்படியாக *அலர் தூற்றிற்றது முதலாகக் கொண்டவென் காதல்* என்றும் *மயல் பெருங்காதல்* என்றும் சொல்லுகிறபடியே பிறர் பழி சொன்னதுவே எருவாகப் பணைத்துச் செல்லுமதாய் க்ருத்யாக்ருத்யம் தெரியாதபடி அறிவுகேட்டை விளைப்பதுமான அபரிச்சேத்ய பக்திக்கு *ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:* என்கிற தேசவிசேஷத்தில் அநுபவோபகரணபக்திபோலே சென்றபடி கண்டிருக்குமத்தனையல்லது *பத்திமைக்கன்புடையேனாவதே* என்கிறபடியே நூல்பிடித்துப் பரிமாறும்படி வரம்பு கட்டவொண்ணாதிறேயென்கை.

இத்தால், *நிதித்யாஸிதவ்ய:* என்கிற விதிப்ரேரிதையாய் சேதநஸாத்யையாய் க்ரமபரிணாமிநியான பக்தி போலன்றிக்கே அதுக்கெதிர்த்தட்டாய்க் கரையழிந்து செல்லுகிற விதிசாஸ்த்ரமர்யாதையின் கீழ் அடங்காதென்றதாய்த்து. ஆக 'ஞானத்தில் தம் பேச்சு' என்று தொடங்கி இவ்வளவும் ஜ்ஞாநதசையில் தாமான தன்மையாலும், ப்ரேமதசையில் ஸ்த்ரீத்வரூபேணவும் பேசுவரென்றும், ஸ்த்ரீத்வம் ஆத்மாவுக்கு வந்தேறியல்லாமையாலே இவர்க்கு இது ஸ்வாபாவிகமென்றும், அது தான் ஸாமாந்யமன்றிக்கே ஆறு ப்ரகாரத்தாலே லக்ஷ்மீஸமரென்றும், மற்றைப் பிராட்டிமார் பகவத்பரிக்ரஹமுடையாரெல்லாரோடும் ஸாம்ய முடையவரென்றும், ஸர்வதா ஸாம்யம் இவர்க்கு லக்ஷ்மியோடேயென்றும், மற்றும் பகவதநயராயும் பகவத் ப்ரத்யாஸந்நராயுமுள்ள லக்ஷ்மணாதிகள் தசரதாதிகள் படியும் இவர்க்குண்டென்றும், அவர்களில் இவர் வ்யாவ்ருத்தரென்றும், பிராட்டிமாரையும் அநந்தாதிகளையும் அவர்கள் தாமாகவே பாவிப்பரென்றும் இந்த பாவநாஹேதுவான இவருடைய ஸ்த்ரீத்வவரலாற்றுக்கும் அநேக வ்ருத்திகளில் அபிநிவேசத்துக்கும் த்ரௌபதீ கௌஸல்யைகள் படிகளை த்ருஷ்டாந்திக்கை ஸ்தூலமென்றும், இந்த பாவவ்ருத்திகளுக்கு மூலமான பக்திப்ரகாரங்களையும் சொல்லிற்றாய்த்து. .... .... ... (132)

133. ஏவமபூதபகதிதசையில் இவர் பெணபேசசாகப் பேசுமிடத்தில் தோழி தாய் மகள என்று த்ரிவிதமாகப் பேசுகிறவிதுககுக கருதததென னெனனுமபேகைஷயிலேஅத்தை ப்ரகாசிப்பிககிறாமேல (ஸமபநதோபாய பலஙகளில உணர்ததி துணிவு பதறறமாகிற ப்ரஜ்ஞாவஸதைகளுககுத் தோழி தாயார் மகளென்று பேர) என்று.

(மூ) 133. ஸமபநதோபாய பலஙகளில் உணாததி துணிவு பதற்றமாகிற பரஜ்ஞாவஸதைகளுககுத் தோழி தாயாா மகளென்றுபோ.

அதாவது:—தோழியாவாள, நாயக நாயகிகளை இணககிச சேர்ககுமவளாகை யாலே திருமந்த்ரத்தில ப்ரதம பதத்தால ஈச்வரனோடு ஆத்மாவுககுச் சொலலப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வாதி ஸமபந்தஜ்ஞாநமே அவனோடு இவவா தமாசேருகைககு ஹேதுவாகையாலே அநத ஸமபந்தஜ்ஞாநமாகிற ப்ரஜ்ஞாவஸ்த்தையைத் தோழி யென்றும,

தாயாராவாள, பெறறு வளர்த்து பெண்பிளளை ப்ராப்தயௌவனையாய் நாயகவிஷயததில அதிமாத்ரப்ராவணயத்தாலே அவனிருநதவிடத்தேறப் போக வேணுமென்று பதறுமளவிலும அவன்தானே வரககண்டிருககையொழியப் படி கடநது புறப்படுகை குலமர்யாதைககுப் போராதென்று நிஷேதித்துபபோருமவ ளாகையாலே, ஸித்தோபாயத்தைப்பற்றினாககு ப்ராப்திவிளமப ஹேதுவிலலாமை யாலே சீக்ரமாக ப்ராப்யததைப் பெறவேணுமெனகிற அநத த்வரையினுடைய உதபத்த்யாதிகளுககு ப்ரதம ஹேதுவாய அநத தவரை ப்ராபயவைலக்ஷண்யதர்ச நத்தாலே கரமப்ராபதி பற்றாமல முறுகி நடககுமளவில இது ப்ரபந்நகுலமர்யாதைக குச சேராதென்று நிஷேதித்து சேஷியானவன தானேவநது விஷயீகரிககக கண்டிருககவேணுமென்று இதினதுடிப்பை அடககபபாாககிற மத்யமபதப்ரதிபாதி தோபாயாத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸதைதையைத தாயாரென்றும,

தலைமகளாவாள, இயற்கையிலே புணர்நது நாயகன வைலக்ஷண்யத்திலே ஈடுபட்டுக குலமர்யாதைகளையும பாராதே கிட்டியலலது தரியேனென்னும பதறறத் தையுடையளாகையாலே ப்ரதம மத்யம பதஙகளால அறுதியிடப்பட்ட சேஷியாய சரணயனானவனுககு சரமபதப்ரோக்தமான ஸ்வரூபரூப குணவிபூதிகளால வநத வைலக்ஷணயததை யநுஸந்தித்து ததநுபவவிலமபாக்ஷமதவத்தாலே ததேகோ பாயத்வாத்யவஸாயத்தையு மதிகரமிததுககிட்டி அநுபவிததலலது தரியாதபடி நடககிற ப்ராப்யதவரையாகிற ப்ரஜ்ஞாவஸததையை மகளென்றும பேரிட்டுச சொல்லக கடவதெனகை.

ஜ்ஞாநாவஸததைகளென்னுமல ப்ரஜ்ஞாவஸ்த்தைகளென்றது த்ரிவிதா வஸ்த்தையும இவாககு ஸர்வகாலமுமுண்டென்னுமிடம தோற்றுகைககாக *ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா* என்னககடவதிறே. பததரயாாததஜ்ஞாநமும திருவுளளததில எப்போதுமுண்டாயிறேயிருப்பது. .... ... .... (133)

134. இவவவஸதைகள மூன்றும் இவா பேசசிலே தோற்றுமோ வென்னு மபேக்ஷையிலே தோழி தாய மகள பேச்சான திருவாய மொழிகளிலே இவை தெரியுமென்னுமத்தை ஸங்கரஹமாக வரைந்து அருளிச செயகிறார்மேல் (ஸகி யென்று தொடஙகி)

(மூ.) 134. ஸகி வெறிவிலககி ஆசையறுத்து அறததொடு நின்ற மூன்றில் அநந்யாாஹதவமும, வாடி மெலிநது பித்தேறி ஏறப்பேசிக் கட்டிழந்தகன்று சார்வதே வலிததமை ஸாதநமாமோ வென்று மாதா அஞ்சிமுறைப்பட்டு முறையிடுகிற ஏழில அதயவஸாயமும, புதரீ பலகால ஆளவிட்டு ஆற்றாமை சொலலிக் கூவாதவை விட்டு இரைகக மடலெடுததுக் கண புதையப் போக்கற்று உருநெஞ்சுகள் ளொழக் கூடுநாளதேடித் தாழ்த்ததுககு ஊடி உசாததுணையறறுச்

